# இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள்

(விடுதலைக்கு பின்)

பகுதி - II

பதிப்பாசிரியர்கள்

கரு.அழ. குணசேகரன்

தி. மகாலட்சுமி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள்

## (விடுதலைக்குப் பின்)

## பகுதி - 2


*பதிப்பாசிரியர்கள்*

*கரு.அழ. குணசேகரன்*

*தி. மகாலட்சுமி*





**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**

*இரண்டாவது முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப்*
*பயிலக வளாகம், தரமணி, சென்னை - 600 113*

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Irupatām nūrrāṇtut tamilk kaviñarkaḷ (Viṭutalaikkup pin) Part - II |
| Editors | : | Prof. Dr. K.A. Gunasekaran<br>Director<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113<br><br>Dr. T. Mahalakshmi<br>Senior Research Fellow<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Tharamani, Chennai - 600 113<br>Ph: 2254 2992 |
| Publication No. | : | 597 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2009 |
| Paper Used | : | 18.6 Kg. TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | xiv + 338 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 100/- (Rupees One hundred only) |
| Printing | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004. |
| Subject | : | Post-Independence Neo-Tamil poets |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

தேசிய விடுதலைக்கான பாடல்களை எழுதி விழிப்புணர்வு ஊட்டிய பாட்டுக்கொரு புலவன் பாரதியார், மொழிப்பற்று, மூடநம்பிக்கை, தமிழர் முன்னேற்றம் எனக் கருத்துகளைக் கொண்டு சமூக மாற்றத்துக்கான புரட்சி விதைகளைத் தன் கவிதைகளில் தந்த புரட்சிக் கவிஞன் பாரதிதாசன், காந்தீயச் சிந்தனைகளை மக்களிடையே விதைத்திடக் கவிதைகள் எழுதிய நாமக்கல் கவிஞர் இராமலிங்கம்பிள்ளை என 20ஆம் நூற்றாண்டுக் கவிஞர்களுக்கு முன்னேர் பிடித்துச் சால்கள் அமைத்தவர்கள் இவர்கள்.

பாட்டாளி வர்க்கத்தைப் பாடுபொருளாய்க் கொண்டு பாடல்கள் எழுதிய கவிஞர்கள் பாவலர் வரதராஜன், வெ.நா. திருமூர்த்தி, ஜீவா, அறிவொளி, கவிதை என் கை வாள் என வந்த கவிஞர் கே.சி.எஸ். அருணாசலம், தொ.மு.சி. ரகுநாதன் எனப் பட்டியல் நீளும். பசுவய்யா, அபி, விக்கிரமாதித்தன், பிரமிள் போன்ற கவிஞர்களின் கவிதைகளில் இருண்மைத்தன்மை படிமம் என்னும் கூறுகள் பொருந்தியிருந்தன. எழுபதுகளில் தமிழ்க் கவிதை உலகில் பாய்ச்சல் வேகம் கொள்ளக் காண நேர்ந்தது.

**வானம்பாடிகள் நாங்கள்**
**வசந்த மின்னல்கள் நாங்கள்**

என்று 'வானம்பாடி'க் கவிஞர்கள் தோன்றினர். கவிஞர் மீரா, சிற்பி, மு.மேத்தா, அப்துல்ரகுமான் எனப் பல கவிஞர்கள் புதுக் கவிதைகளில் உருவம், உள்ளடக்கம் இவற்றில் புதிய புதிய உத்தி முறைகளைக் கடைப்பிடித்து மரபு, தொன்மம் இவற்றின் வழியே சமூகச் சிந்தனைகளைத் தங்கள் கவிதைகளில் வடித்துத் தந்தனர்.

கவிஞர் பழமலய், தமிழச்சி போன்றோர் இயல்புநிலை வாழ்க்கையைப் புதிய பார்வையில் புதிய மொழிநடையில் தந்து புதிய தடத்தைக் கவிதைத் துறையில் காட்டியவர். ராஜமுருகு பாண்டியன், இந்திரன் போன்றோர் தலித் சிந்தனைகள் கொண்ட கவிதைகள் தருவதில் முனைப்புக் காட்டியவர்கள்.

காசி ஆனந்தன் போன்ற கவிஞர்கள் தமிழர், தமிழ் உணர்வு குறித்த அக்கறை கொண்ட கவிதைகளைப் படைத்து வருகின்றனர். கவிஞர் மீனாட்சி, கிருஷாங்கினி, மாலதி மைத்ரேய் போன்ற பெண் கவிஞர்கள் தம் கவிதையின் மொழி நடையையும், பாடுபொருள்களையும் பலவேறு தளங்களுக்கு எடுத்துச் செல்கின்றனர்.

டாக்டர் அம்பேத்கார் நூற்றாண்டுக்குப் பிறகு படைப்புலகில் தலித் கலை இலக்கியங்கள் முகிழ்க்கத் தொடங்கின. சுகிர்தராணி, உமாதேவி போன்ற தலித் பெண் கவிஞர்கள் ஏனைய பிற பெண் கவிஞர்களிலிருந்து மாறுபட்டுத் தலித் பெண்ணியச் சிந்தனைகளை முன்வைத்துக் கவிதைகள் எழுதி வருகின்றனர்.

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் என்னும் இந்நூலை இரு பகுதிகளாகப் பிரித்து 'விடுதலைக்கு முன்' என்னும் நிலையைப் பகுதி - 1 என்றும், 'விடுதலைக்குப் பின்' என்னும் நிலையைப் பகுதி - 2 என்றும் பகுத்து இந்நிறுவனம் வெளியிடுகிறது. இருப்பினும் குறிப்பிடப்பட வேண்டிய கவிஞர்கள் பலரின் கவிதைகள் குறித்த பதிவுகள் இடம்பெறாமல் போனமை வருத்தமளிக்கின்றது. எனினும் இந்நூலை வாசிக்கும்போது விடுபட்டுப் போன கவிஞர்கள் நம் கவனத்திற்கு வருவார்கள் என்பதில் ஐயமில்லை.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும் **நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக்கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் **மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன்** அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துசாமி இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இந்நிறுவன முன்னாள் இயக்குநரும், தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தருமான முனைவர் ம. இராசேந்திரன் அவர்களுக்கும் என் நன்றி.

'இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள்' என்ற இக்கருத்தரங்கத்தின் பொறுப்பாளர் முனைவர் தி. மகாலட்சுமி அவர்களுக்கும், இந்நூலைச் சிறந்த முறையில் பதிப்பித்துச் செம்மை செய்து, முறைப்படுத்தி, கவிஞர்களின் பிறந்த ஆண்டின் அடிப்படையில் விடுதலைக்கு முன், விடுதலைக்குப் பின் எனப் பகுத்தும் தொகுத்தும் மெய்ப்புத் திருத்தமும் செய்த இந்நிறுவனப் பதிப்பு மேற்பார்வையாளர் முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இக்கருத்தரங்கம் தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள், ஒளியச்சுச் செய்த கணிப்பொறியாளர்கள் மறைந்த திருமதி இரா. வெண்ணிலா, திரு. சு. கண்ணன், திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# பதிப்புரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தேசியக் கருத்தரங்குகள், வாரக் கருத்தரங்குகள், அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் போன்றவற்றை நீண்ட காலமாகத் தொடர்ந்து நடத்தி வருகின்றது. அவ்வகையில் 2004-05 ஆம் ஆண்டுகளில் வெள்ளிக்கிழமை தோறும் **இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்கள்** எனும் தலைப்பில் கட்டுரைகள் படிக்கப்பட்டன. இவை பெரிதும் அறிமுகம் இல்லாத கவிஞர்களை (சுரதா, நாமக்கல் கவிஞர் போன்ற ஓரிருவர் நீங்கலாக) அறிமுகப்படுத்துவதை நோக்காகக் கொண்டமைந்தன. ஆற்றலும், திறமையும், வலிமையும் மிகுந்த அளவில் இருப்பினும் உரிய சூழல் அமையாதவரை அவர்தம் வகைப்பாடுகள் சிறப்பாக வெளியே தெரிய வாய்ப்பு ஏற்படுவ தில்லை. எனவே, காலச் சூழலும், பின்புலமும் சரியாக அமையாததால் தங்களை வெளிக்காட்ட இயலாத கவிஞர்கள் பலர் இருக்கத்தான் செய்கின்றனர். அத்தகையோரை இனங்காண முயலுதல் எனும் நோக்கில் இத்தலைப்பானது தேர்வு செய்யப்பட்டது.

**ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்** என்பது போலத் தமிழ்நாடு முழுமையிலும் மிகப் பரந்த அளவில் இடம் பெற்றுள்ள கவிஞர்களுள் ஐம்பது கவிஞர்கள் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளனர். தங்களுக்குப் பிடித்த கவிஞர்கள், நூல்கள்வழித் தங்களுக்குக் கிடைத்த கவிஞர்கள் என்ற தேர்ந்தெடுப்புதான் இதிலுள்ள கவிஞர்களின் அறிமுகத்திற்கு வழி கோலியிருக்கின்றது. முடிந்தவரை இவர்கள் அடையாளம் காட்டப்படுவதுடன், இவர்களது படைப்புகளிலுள்ள பாடுபொருள், நுட்பம் போன்ற பொருண்மைச் சிறப்புகளும் வெளிக்காட்டப்படுகின்றன. நாவலாசிரியர், சிறுகதையாசிரியர், நாடக ஆசிரியர், விமர்சகர், உடல் நல மருத்துவர், வங்கிப் பணியாளர் போன்ற நிலைகளில் அறியப்பட்ட தமிழறிஞர் களுக்குக் கவிஞர் என்ற முகமும் இருப்பது காட்டப்படுகின்றது.

கவிதைகள் கட்டுப்பாட்டை மீறுபவை; சுதந்திரத்தைக் கோருபவை. இத்தகைய கவிதைகளை உணர்த்தக் கவித்துவம் நிறைந்த மனம் வேண்டும். நிறுவன ஆசிரியர், திட்டப்பணியாளர், முனைவர் பட்ட ஆய்வாளர் ஆகியோர் இக்கவித்துவத்தைத் திறனாய்வுக் கண்ணோட்டத்துடன் உணர்த்த முயன்றுள்ளனர். இவர்களுடைய கட்டுரைகளின் தொகுப்பாக **இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்கள்** எனும் இந்நூல் இருதொகுதிகளாக வெளிவருகின்றது.

வாழும் மானுடம் எதிர்வரும் காலத்தை, கடந்த கால அனுபவத்தோடு, பண்பாட்டோடு எதிர்கொள்ளும். இது உலகப்

பொது மரபு. அவ்வகையில் சங்கச் சான்றோர் தம் முன்னோர்களின் வாய்மொழிப் பாடல்களை ஏட்டில் ஏற்றினர்; அதன்வழி வாழ்வைத் திடமுடன் எதிர்கொண்டனர். அதேபோல் கடந்தகாலப் பண்பாட்டை எடுத்துப் பதிந்து கொள்ளுதல் எனும் முயற்சியே இந்த இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்கள் பற்றிய அறிமுகம். நவீன வாழ்வின் தொடக்கமாக அமைந்த இருபதாம் நூற்றாண்டின் சாரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு இருபத்தொன்றாம் நூற்றாண்டை எதிர்கொள்ள இது வழிவகுக்கும்.

ஒரு காலம் தனக்கு வேண்டியதைத் தேர்வு செய்து கொள்கிறது. அக்காலத்தில் வாழும் சமூகம் தனக்கு வேண்டிய விருப்பு வெறுப்புகளை ஒழுங்குபடுத்திக் கொள்கிறது. இருபதாம் நூற்றாண்டென்பது, தமிழ்க் கவிதை உலகில் விழிப்புணர்வை ஏற்படுத்திய காலம். உலகெங்கும் விடுதலை, சுதந்திரம், இன்ப வாழ்வு என்ற இடிமுழக்கம் கேட்டது. பாரதி, பாரதிதாசன் போன்ற மகாகவிகள் தோன்றி மக்களின் விடுதலை உணர்வைத் தட்டி எழுப்பினர். இந்திய விடுதலையானது மொழி விடுதலை, இன விடுதலை எனப் பிரிந்து இன்று பெண்ணிய, தலித்திய விடுதலைவரை விரிந்துள்ளது. சமூகம், சமத்துவம், சுதந்திரம், சகோதரத்துவம் என்பதில் தொடங்கிய புதுக்கவிதை தனிமனித சுதந்திரம், தனிமனித விருப்பு வெறுப்பு என்பதில் வந்து முடிந்திருக்கிறது. தமிழில் புதுக்கவிதை இயக்கமும் சுதந்திரத்திற்குப் பிறகு வீறுகொண்டு எழுந்தது. இவ்வியக்கங்களிலும் தனிமனித உணர்வுகளான தன்னழிவு, தன்னிரக்கம் என்பன பாடப்பட்டன.

இந்தக் கவிதைகளையும், கவிஞர்களையும் அளந்து காட்டும் அளவுகோல் எது என்று சொல்ல முடியாத நிலையே இருக்கிறது.

பாரதி, பாரதிதாசனைத் தொடர்ந்து, ஈரோடு தமிழன்பன், அப்துல் ரகுமான், இன்குலாப், பிச்சமூர்த்தி, பசுவய்யா, கல்யாண்ஜி, வைரமுத்து, பழமலய், சல்மா போன்றோர் இருபதாம் நூற்றாண்டின் கவிஞர்களாகச் சுட்டப்படுகின்றனர்.

தமிழில் இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளையும், அதன் போக்குகளையும் சுட்டிக் காட்டிய நூல்கள் மிகக் குறைவு. புதுக்கவிதை புதுப்பார்வை (பாலா), தமிழ்ப் புதுக்கவிதை ஒரு திறனாய்வு (சு. அரங்கராசு), கவிதை நயம் (க.கைலாசபதி, இ. முருகையன்), தமிழ்க் கவிதை தோற்றமும் வளர்ச்சியும் (வல்லிக் கண்ணன்) இருபதில் கவிதை (தமிழவன்), தற்காலத்துத் தமிழ்க் கவிதை (ஆ. தசரதன்) போன்ற நூல்கள் ஓரளவு புதுக்கவிதையின் போக்குகளை அறிமுகப்படுத்துகின்றன. படிமம், தமிழ்ப் புதுக்கவிதைகளில் படிமங்கள் என்ற சுதந்திரமுத்து அவர்களின் நூல்கள் புதுக்கவிதையை, அதன் கட்டமைப்பை உணர்த்திக்

காட்டிச் சிறப்புற விளக்குகின்றன. கோவை ஞானியின் மார்க்சியமும் தமிழ் இலக்கியமும் என்ற நூலும், நாகார்ஜுனனின் கலாச்சாரம் அகலாச்சாரம் எதிர் கலாச்சாரம் என்ற நூலும் மேலை நாட்டுக் கவிதைக் கருத்துகளை உள்வாங்கி விளக்குவதைக் காணமுடிகின்றது.

தமிழ்க் கவிஞர்கள் இதழ்களில் அவ்வப்போது எழுதி வரும் கட்டுரைகளும், விமர்சனங்களும் இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளை அறிந்துகொள்ள ஏதுவாக உள்ளன.

இதுபோன்ற பலவகையான திறனாய்வுக் கண்ணோட்டங்கள் வந்திருப்பினும் கவிதை குறித்துப் பொதுவான முடிவிற்கு வரமுடியாத நிலையே நிலவுகிறது.

நல்ல கவிதை என்பது பிரம்மன் படைத்தளித்த அற்புதங்களில் தலைசிறந்தது என்பார் பாரதி. இத்தகு சிறப்பைத் தன்னகத்தே கொண்டுள்ள கவிதையைப் படைக்கும் கவிஞர்க்குப் போதிய படிப்பறிவு, அனுபவம், கவிதையை உள்வாங்கும் கூடுதல் முயற்சி போன்றன இருத்தல் வேண்டும். **கவிதை என்பது சிறந்த எண்ணங்களைச் சிறந்த மொழியில் சீரிய முறையில் வெளியிட்டு நிற்கும் சொற்கலையாக்கம்** என்கிறார் ச அகத்தியலிங்கம். மொழியைப் பேணிப் புத்துயிர் அளித்து என்றும் சக்தியுள்ளதாக்குவது கவிதை என்பார் கைலாசபதி. எனவே, கொக்கு மீனுக்காக நிற்கும் சிரத்தை கவிஞன் வார்த்தைக்காகக் நின்று கவிதையில் வெளிப்படவேண்டும். அழகியல் உணர்வுடன் நவில்தொறும் புதுப்புது நயங்களை வழங்குவதாய்; பயன்தரக்கூடியதாய் இருத்தல் அதன் பண்பு எனலாம்.

சமூக உணர்வுகளையும், மனசாட்சியின் குரலையும் எப்போதும் நினைவுபடுத்திக் கொண்டிருக்கும் இப்புதுக் கவிதைக்கு வடிவமும் யாப்பும் உண்டா என்ற கேள்விகளும் எழுப்பப்படுகின்றன. உருவம் என்று ஒன்று இருந்தால் அதற்கு உறுப்புகள் இருந்துதான் தீரவேண்டும்.

பிற இலக்கியங்களினின்று வேறுபட்டெழுந்த புதுகவிதைக்கெனப் பண்புகள் உள்ளதைக் காணமுடிகிறது. முன்பு இருந்த நிலையில் இருந்து இது மாறுபடுவதால் முன்பு இருந்த யாப்பும் மாறுபடுவது இயல்பே. **முற்பட்ட மரபுகளிலிருந்து விடுபட்டுத் தனித்துவமான முறையில் சுருக்கமான அமைப்பில் எழுதுவதே புதுக்கவிதை. எழுத்தாளரின் பிரதானப் பண்பு எனக் கொண்டால், அது தன்னுணர்ச்சிப் பாடலின் வரைவிலக்கணமாகவும் அமைந்து விடும் என்கிறார்** க. கைலாசபதி (இலக்கியச் சிந்தனைகள், ப.64). எனவே கடந்த கால இலக்கணம்போல் அமையாதிருப்பினும் புதுக்கவிதைக்கும் இலக்கணம் உண்டு என்பது புலனாகும்.

தமிழ்க்கவிதை இரண்டாயிரம் ஆண்டுகாலப் பாரம்பரியத்தை உள்ளடக்கியது. இதில் புதுக்கவிதையானது

எழுபது ஆண்டுகளைக் கடந்து வளர்ந்து கொண்டிருக்கிறது. சுமார் எழுபது ஆண்டுகளை நிறைவு செய்து விட்ட இப்புதுக்கவிதை காலந்தோறும் உருவத்தில் உள்ளடக்கத்தில் மாறுதல்களை ஏற்படுத்தி வளர்ச்சி கண்டுள்ளது.

காதல், வீரம், கொடை, நீதி, பக்தி, குறுநிலமன்னர் புகழ்ச்சி, சிற்றின்ப நிமித்தம், பாடுதல் போன்ற படிநிலை வளர்ச்சியினைக் காலந்தோறும் இலக்கியங்களிலுள்ள பொருண்மைகளில் காண்கிறோம். இப் புதுக்கவிதையும் மரபின் தொடர்ச்சிதான் என்றாலும், மரபிற்கு இல்லாத ஒரு தனிச்சிறப்பை இதில் காணமுடிகிறது.

சுவை புதிது பொருள் புதிது வளம்புதிது
சொற்புதிது சோதிமிக்க நவகவிதை
எந்நாளும் அழியாத மகா கவிதை

என்கிறார் பாரதியார். எனவே நவீனக்கால்க் கவிதையின் தலைமைப் பண்பு புதுமை பற்றியதாக அமைகிறது.

இத்தொகுப்பில் பொருண்மைகளாக, அனுபவம் காரணமாக வெளிப்படும் கருத்துகளும், சில செய்திகள் ஏற்படுத்திய தாக்கத்தால் வெளிப்படுத்தியுள்ள கருத்துகளும் தோற்றம் கொண்டுள்ளன. இவை சமூக அவலங்களுக்குக் குரல் கொடுக்கின்றன; தீய நிகழ்வுகளைத் தூற்றுவதோடு மட்டும் அல்லாமல், நல்ல நிகழ்வுகளைப் போற்றுகின்றன; சமூக அக்கறையுடன் அறிவுரை கூறுகின்றன; அறிவுறுத்துகின்றன; முற்போக்குச் சிந்தனைகளை வெளிப்படுத்துகின்றன; மக்களைச் சிந்திக்க வைக்கின்றன.

அவ்வகையில் இத்தொகுப்பில் சீர்திருத்தம், புரட்சி, பெண்விடுதலை போன்ற பொருண்மைகள் நாட்டுப்பற்று, தமிழ் மொழி, காதல், வீரம், இயற்கை, பெண்கல்வி, தலைவன், தலைவி புகழ் பாடுதல், சமயம், அரசியல், ஆன்மிகம், தத்துவம், அறிவியல், பொருளாதாரம், வேளாண்மை, பகுத்தறிவுச் சிந்தனை, பொது வுடமை நோக்கு, குழந்தைகளுக்கான விழிப்புணர்வு, மனிதநேயம் போன்ற தலைப்புகளிலும் பலவாறான உணர்வு நிலைகளிலும் பாடப்பெற்றுள்ளன.

இவை திராவிடப் பின்புலக் கவிதைகள், வானம்பாடிக் கவிதைகள், மார்க்சிய பின்புலக் கவிதைகள், வடிவத்திலும் உள்ளடக்கத்திலும் முன்முயற்சி செய்த கவிதைகள், குழந்தை களுக்கான கவிதைகள் போன்ற வகைப்பாடுகளில் அமைகின்றன.

எளிமையாகச் சொல்லும் பாங்கு, வார்த்தைகளைத் தன் ஆளுமையில் வைப்பது, நகைச்சுவை, எள்ளல், உருவகம் போன்ற அணிநயம், எதுகை, மோனை நயம், சொல்லாட்சி, ஓசைநயம், பன்முறை அணுகினும் எளிதில் பிடிபடாக் குறியீடு, படிமம், உவமப் படிமம் போன்ற உத்திமுறைகளையும் இக்கவிதைகளில்

காணமுடிகின்றது. இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள ஓரிரு கவிதைகளைக் காண்போம். சில கவிதைகள் அவை எழுந்த காலங்களைக் காட்டி நிற்பதை,

**மேட் இன் ஜப்பானுக்கு**
**ஏக கிராக்கி**
**ஹை கூவிலும்**

என்ற ரவிசுப்ரமணியனின் ஹைகூ, ஹைகூ பிரபலமாகியிருந்த எண்பதுகளைக் காட்டி நிற்கின்றது. கவிதை வடிவமான ஹைகூவில் பேசுவது, ஹைகூவைப் பற்றி, மேலும் ஹைகூ பிறந்த நாடு, பாடுபொருள் எனப் பலநிலைகளை இக்கவிதை சிந்திக்க வைக்கிறது. பூரணியின்,

**அவைகள் மனிதர்கள்**
**அல்ல, அதனால்**
**இணையைப் பிரித்து**
**இஞ்சக்ஷன்**
**செய்து**
**இனத்தைப் பெருக்கி**
**இலாபமடை;**
**நீயோ மனிதன் ஆகையால்**
**கருத்தடை மூலம்**
**குழந்தைகளை ஒழித்து**
**கட்டற்ற**
**கலவியில் திளை**

என்ற கவிதை எழுபதுகளில் வடிவெடுத்திருக்க வேண்டும். இருபதாம் நூற்றாண்டின் தொடக்ககாலக் கவிதைகள் என்பதை,

**பண்மணி தன்னைப் பரிவுடன் போற்றும்**
**பணியென், மனைவியைப் பாதுகாக்கு நனாய்**

என்ற பரிதிமாற் கலைஞரின் கவிதையும்,

**புருடனைக் கண்ட புதுப்பெண் போல**
**தரித்திரம் காமனைப் போல் பார்வையில் எரித்திடும்**

என்ற நாமக்கல்லாரின் கவிதையும் உணர்த்தி நிற்கின்றன. மேலுமிவை உவமைகள் கூறுவதே கவிதையின் உயர்ந்த வேலை என்பதையும், பெண்பற்றிய அவர்களது கண்ணோட்டம் எத்தகையது என்பதையும் காட்டுகின்றன. வடிவத்திலும் பெண்ணிய நோக்கிலும் இவை மிகவும் பின்னால் நிற்கின்றன.

படிமக் கவிதைகள் பல சிறப்புற இடம்பெற்றுள்ளன என்பதை,

**பழம் உதிரும் என்று**
**கிளையை அசைக்க**

மேலிருந்து கூடு
விழுந்தது கீழே
இப்போது
கூடு கலைத்த பாவம் வேறு

என்ற யூமா வாசுகியின் கவிதை காட்டுகிறது. இக்கவிதை வரிகளின் பின்னால் கதறும் மனிதனின் தீனமான குரல் கேட்கிறது. இணையக் கவிஞரான சேவியரின்,

கைத்தடி உடைந்த குருட்டுக்
கிழவன் போல்
தடுமாறி நகரும்
கும்மிருட்டு

என்ற கவிதை இருள் படிமமாவதைக் காட்டுகிறது. இவை போன்று இத்தொகுப்பில் அமைந்துள்ள கவிதைகளால் கவிஞர்களின் புகழ் வெளிக்காட்டப்படுகின்றது. அவர்களின் கவிதைகள் விவரித்து வகைப்படுத்தப்படுகின்றன. இக் கவிதைகளின் சில தன்மைகளை முன்வைத்து இக்கவிஞர்களை அணுகுவதற்கு இத்தொகுப்பு வழிவகுக்கும். இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள கவிதைகள் (நூல்கள்) மேற்கூறிய சிறப்புகளைப் பெற்றிருப்பினும் பரவலாக அறியப்படாதவை. ஒட்டுமொத்தத் தமிழ் உலகினரின் கவனத்திற்கு வராதவை. எம்மாதிரியான பாடு பொருள்கள் பாடப்படுகின்றனவோ அவற்றையே இப்படைப்பு களிலும் காணமுடிகின்றது. சமூக வளர்ச்சிக்கு இலக்கியப் பங்களிப்புச் செய்யவேண்டுமென்ற கோட்பாடும், கொள்கைப் பிடிப்பும் இவற்றில் ஊடுறுவியுள்ளன. இருப்பினும், இவை சரியான முறையில் அடையாளங் காட்டப்படவில்லை. இதற்குரிய சூழலும் பின்புலமும் அமையாததுகூடக் காரணமாக இருக்கலாம்.

பாடுபொருளானது புகழ்பெற்ற கவிஞருக்கு உணர்வின் உச்சநிலையிலும், சில புதுக்கவிஞருக்குச் சமநிலையிலும், இன்னும் சிலருக்கு உணர்வின் தொடக்க நிலையிலும் வெளிப்படுகின்றன. எனவே, உணர்வின் எல்லைகள் குறுகியிருப்பதும் வெளியீட்டு உத்திகள் வலுவற்றிருப்பதும் அடையாளம் காட்டப்படாமைக்குக் காரணமாக இருத்தல் கூடும். மேலும் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள தனிமனித வருத்தம், சமுதாய அவலம், கற்பனையின் சிதறல், காதல், இயற்கை போன்ற பொருண்மைகள் பலராலும் முன்பே கவிதைச் சிறப்புடன் கூறப்பட்டவை. ஏனெனில், புதுமையானதைக் கூறுவது என்பதும் எளிதன்று. மகாகவிகள் சிலர் சிறப்புக்குரியதைப் படைத்துவிட்டுச் செல்லும் ஆற்றலுடையவர்கள். அவற்றினின்றும் உயர்வானவை தோன்ற மற்றோர் யுகமாற்றம்வரை சமூகம் காத்திருக்க வேண்டியிருக்கிறது.

பாரதி, பாரதிதாசன் போன்றோருடைய கவிதைகள் சிறப்புற்று விளங்குவதற்குக் காரணம் அன்றைய சமூகம்

நெருக்கடிமிக்கதாகவும், விடுதலை உணர்வு வேண்டுவதாகவும், வெள்ளையரை வெளியேற்றும் தேவையுடையதாகவும் இருந்தது. அதற்காக மொழி, இன அடையாளங்களை மீட்டெடுக்கும் வரலாற்றுப் பணிகளைச் செய்ய வேண்டிய தேவையும் இருந்தது.

இன்னும் சமூகம் சிக்கல் நிறைந்ததாகத்தான் உள்ளது. எனினும், சமூகம் முழுமைக்குமான தீதும் நன்றும் எதுவெனக் காட்டுவதில் தெளிவற்ற குழப்ப நிலையே நிலவுகின்றது. சமூக நெருக்கடிகளிலிருந்து மெல்ல மெல்ல விடுபடும்போது சமூகக் கூட்டுணர்வு மழுங்கி மறைகிறது. இத்தகைய சூழல்களில் உருவாகும் கவிதைகள் ஆற்றல் மிக்கதாக அமைவதென்பது மிக அரிதான பணியாகும்.

துயர்களைய வேண்டுவதும், கருத்தைச் சொல்லத் துணிந்த அளவிற்கு மாற்றுத் தீர்வைச் சொல்ல முற்படுவதும், தேவையை நிறைவடையச் செய்ய முயல்வதும் இனிவரும் கவிதைப் படைப்புகளில் அமையும்போது அவை காலங்கடந்து நிற்கும் என்பதில். ஐயமில்லை.

இன்று வாழும் கவிஞர்களுள் ஒரு சிலர் சிறந்த கவிஞர்களாகத் தெரிகின்றனர். பலர் தெரிவதில்லை. அதுபோல் ஒருசில கவிதைகளே எழுதியிருப்பினும் கவிஞராகக் கருதப் பட்டவரும் உண்டு. ஓராயிரம் கவிதைகள் எழுதியும் கவிஞராகக் கருதப்படாதவர்களும் உண்டு. முன்னோர் கவிதைகளுள் சிறப்பானவற்றை நாம் இப்போது அடையாளம் கண்டு கொள்கிறோம். அதுபோல் இன்றைய சிறந்த கவிஞர்கள் நாளை அடையாளம் கண்டுகொள்ளப்படுவார்கள்.

புதுக்கவிதை தொடர்பான நூல்கள் அனைத்தும் ஓரிடத்தில் கிடைக்கும் நிலை உருவானால் கவிதை ஆய்வு தரமாக அமையும். பிரபலமான பதிப்பகங்கள் அறிமுகப்படுத்தும் கவிஞர்களே கவிஞர் என்ற மாயை நீங்கிக் கவிதைகளின் வழியாகவே கவிஞர்களின் நிலை முடிவு செய்யப்பட வேண்டும்.

இந்நூல் வெளிவரத் தோன்றாத் துணையாக நின்ற மேனாள் இயக்குநர்கள் முனைவர். சா. கிருட்டினமூர்த்தி மற்றும் முனைவர் ம. ராஜேந்திரன் (முழுக்கூடுதல் பொறுப்பு) அவர்களுக்கும், இயக்குநர் முனைவர் கரு.அழ. குணசேகரன் அவர்களுக்கும், கட்டுரைகளை வழங்கிய நிறுவன ஆசிரியர் களுக்கும், ஆய்வாளர்களுக்கும், இந்நூல் ஆக்கத்திற்குத் துணைநின்ற முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும் மற்றும் முனைவர் பட்ட ஆய்வாளர்கள் கை. சங்கர், மா. பெரியசாமி ஆகியோருக்கும் ஒளியச்சுக் கோர்வை செய்த மறைந்த திருமதி இரா. வெண்ணிலா, திரு.சு.கண்ணன், திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் என் உளம்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

தி. மகாலட்சுமி

## பொருளடக்கம்

# குழ. கதிரேசன்

## கவிஞர் அறிமுகம்

கவிஞர் குழ. கதிரேசனின் பல குழந்தைக் கவிதைகள் அடங்கிய தொகுப்பு நூல்களை ஒட்டு மொத்தமாக அறிமுகப்படுத்துவதற்காக இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது. குழ. கதிரேசனின் பெற்றோர் சு.கதி. குழந்தையன் - செல்லம்மை. இவர் புதுக்கோட்டை மாவட்டம் இராயவரம் ஊரினர். இக்கவிஞரின் பிறந்த நாள் 17 அக்டோபர் 1949. பள்ளிக் கல்வியைச் சொந்த ஊரில் பயின்றார். தமிழில் இளங்கலைப் பட்டத்தை மதுரையில் தியாகராசர் கல்லூரியில் 1971இல் பெற்றார். 28 ஜூன் 1972இல் நாச்சம்மையை மணந்தார். நாகம்மை, விசாலாட்சி எனும் குழந்தைகளுக்கு இவர் தந்தை. சென்னை, தமிழ்ப் புத்தகாலயம் கண. முத்தையாவிடம் ஓராண்டும், மதுரை மீனாட்சி புத்தக நிலையத்தின் சென்னைக் கிளையில் எட்டு ஆண்டுகளும் பயிற்சி பெற்றவர். படிக்கும் காலத்திலும் பணியின் காலத்திலும் தமிழ்ப் புலமை பெற்றிருந்தார். 1984 முதல் சென்னையில் ஐந்திணைப் பதிப்பகத்தைத் தொடங்கி இதுகாறும் நடத்தி வருகிறார்.

குழந்தைக் கவிதைகளைச் சோவியத் நாட்டு நூல்களுக்கு இணையாகப் பெரிய எழுத்துகளில் வண்ணப் படங்களுடன் இவர் வெளியிட்டுள்ளார். மற்றொரு சாதனை - குழந்தைப் பாடல்களை ஒலிப்பேழையில் கொண்டு வந்தது ஆகும். பேராசிரியர் மெ. சுந்தரம் நகரத்தார் பண்பாட்டுக் கழகம் சார்பில் **குழந்தைக் கவிஞர்கோ** என்ற பட்டத்தை வழங்கியுள்ளார். முனைவர் தமிழண்ணல் **மழலைக் கவிஞர்** என்ற பட்டத்தை இவர்க்குச் சூட்டியுள்ளார். சேலம் கே.ஆர்.ஜி. நாகப்பன் விருது, வி.ஜி.பி. விருது ஆகியவற்றை இவர் பெற்றுள்ளார். குழந்தைகளே பாடுவது போன்று பாடிய பாடல்கள் இவர்க்குச் சிறப்புச் சேர்க்கின்றன. தவிர, குழந்தைகளுக்காகவும் பாடல்கள் பல பாடியுள்ளார். தொலைக்காட்சி, வானொலிகளிலும் பங்குபெற்றுள்ளார்.

## கவிதை நூல்கள்

1. எலிகடித்த பூனை (1980), குழ. கதிரேசனின் முதல் குழந்தைக் கவிதை நூல். இது தமிழக அரசின் பரிசு பெற்றது. அழ. வள்ளியப்பாவின் அணிந்துரையைப் பெற்றது.
2. பள்ளிக்கூட வெள்ளாடு (1990)
3. காகிதக் கப்பல் (1990)
4. தொப்பைக் கோழி (1991)
5. பேசும் கிளியே (1991)
6. மழலைப் பூக்கள் (1992)
7. மழலை அரும்பு (1992)
8. பூச்செண்டு (1993)
9. விடுதலைக்கிளி (1994)
10. சிரிக்கும் மழலை (1995)
11. மழலைத் தேன் (1995)
12. மழலையர் தமிழ் (1996)
13. சின்னச் சின்னப் பூக்கள் (1997)
14. பாடுவோம் அறிவியல் (1998)
15. கூட்டாஞ்சோறு (1998)
16. மழலைக் கற்கண்டு (2000)
17. குழந்தைப் பாப்பா (2001)
18. குட்டிப்பாப்பா (2001)
19. மிட்டாய்ப்பாப்பா (2001)
20. டிங்டாங் கடிகாரம் (2001)
21. மழலைப் பாடல்களில் உயிர் – மெய் எழுத்துகள் (2003)
22. தங்கநிற மாம்பழம் (2003)
23. நெருப்புக் கொப்புளம் (1997); (மறுபதிப்பு (2003))

இறுதிக் கவிதைத் தொகுப்பு நூல் சமுதாயப்பாடல்களைக் கொண்டதாகக் குறிப்பிடப்பெற்றுள்ளது. ஆயினும் கவிஞரின் ஏனைய கவிதைகள் குழந்தைக் கவிதைகளாக இருக்கும் நிலையில் இத்தொகுப்பிலும் சில சிறுவர் கவிதைகள் இடம்

பெற்றிருக்கின்றன எனக் கருதி இந்நூலும் இக்கட்டுரைக்கு எடுத்துக் கொள்ளப் பெற்றுள்ளது. வேறு படைப்புகள் எடுத்துக் கொள்ளப் பெறவில்லை.

மேற்குறிப்பிடப்பெற்ற கவிதை நூல்களில் பத்து நூல்கள் ஏ-4 பெரிய அளவில் வண்ணப் படங்களுடன் அச்சிடப் பெற்றுள்ளன. ஏனைய நூல்கள் சிறிய கிரௌன் அளவில் பொது நூலகங்களுக்கு விற்பனைக்கு ஏற்ற வகையில் அச்சிடப் பெற்றுள்ளன. அனைத்து நூல்களும் ஒன்றுக்கு மேற்பட்ட பதிப்புகளைப் பெற்றுள்ளன. இவற்றுள் சில கவிதைகள் பள்ளிகளில் மழலையரும் சிறுவரும் பாடி மகிழப் பாடப் புத்தகங்களில் ஏறியுள்ளன. **மழலைப்பூக்கள், தொப்பைக் கோழி, பேசும் கிளியே** என்னும் கவிதைத் தொகுப்புகள் ஒலிப்பேழைகளாக இவரால் ஆக்கப் பெற்றுள்ளன. ஆர்.எஸ். சொர்ணலதா என்பவர் இசையாக இவற்றைப் பாடியுள்ளார்.

**எலிகடித்த பூனை** எனும் கவிதைத் தொகுப்பு நூலின் சில கவிதைகள் போலிஷ், ருஷ்ய மற்றும் செக் மொழிகளில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளன. வேறு சில கவிதைகள் மலேயா, சிங்கப்பூர் நாடுகளில் உள்ள பள்ளிகளில் பாடமாக வைக்கப் பெற்றுள்ளன. இந்திய மொழிகளில் மலையாளம், கன்னடம், இந்தி, குஜராத்தி, வங்காளம், தெலுங்கு ஆகியவற்றில் சில கவிதைகள் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளன. கவிதைத் தொகுப்புகளில் இடம்பெற்றுள்ள கவிதைகள் பல இதழ்களிலும், வானொலிகளிலும் வெளிவந்தவை.

## கவிஞர் பற்றிய ஆய்வுரைகள்

குழ. கதிரேசனின் கவிதை நூல்களில் அணிந்துரை அல்லது வாழ்த்துரை நல்கியோர் வருமாறு: அழ. வள்ளியப்பா, லா.ச. ராமாமிருதம், தமிழண்ணல், மருதநாயகம், திலகவதி, நாரா. நாச்சியப்பன், இன்குலாப், மின்னூர் சீனிவாசன், மெய்யப்பன், நீதிபதி க. இராசாராம் ஆவர். இவர்களுள் படைப்பாளிகளும், கவிஞர்களும் அடக்கம்.

1999இல், குழ. கதிரேசனின் **குழந்தைப் பாடல்களில் இலக்கிய நயம்** என்ற ஆய்வு நூலை இரா. பத்மநாபன் எழுதியுள்ளார். தமிழில் குழந்தைப் பாடல்கள் தோற்றமும் வளர்ச்சியும், குழந்தைப் பாடல்களில் கதிரேசனின் இடம், வாழ்வும் இலக்கியப் பணியும், பாடற்பொருளும் பாகுபாடும்,

உத்திகள், உவமை நயங்களும் அறிவுரைகளும், மொழி நடை, உவமைகள் எனும் தலைப்புகளில் இந்நூல் எழுதப் பெற்றுள்ளது. ஆய்வு நிறைஞர் பட்டத்துக்காக எழுதப்பெற்ற ஆய்வேட்டை இரா. பத்மநாபன் நூலாக்கம் செய்துள்ளார். குழ. கதிரேசனே வெளியிட்டுள்ளார்.

2002இல் க. கவிதா என்பவர் **கவிஞர் குழ. கதிரேசனின் பாடல்களில் உடல் நலமும் மனநலமும்** என்ற தலைப்பில் நூல் ஒன்றை வெளியிட்டுள்ளார். இதுவும் நூலாசிரியரின் ஆய்வு நிறைஞர் பட்டத்துக்கு எழுதப்பட்ட ஆய்வேட்டின் அச்சுப் பதிப்பு ஆகும். இலக்கியமும் சிறுவர் இலக்கியமும், சிறுவர் இலக்கியத்தின் இன்றியமையாமை, குழந்தைப் பாடல்களும் உளவியலும், குழ. கதிரேசனின் பாடல்களில் உடல் நலக் கருத்துக்கள், குழ. கதிரேசன் பாடல்களில் மனநலக் கருத்துக்கள், நிறைவுரை என இந்நூல் அமைந்துள்ளது. இதையும் குழ. கதிரேசனே வெளியிட்டுள்ளார்.

## கவிதை நூல்களின் தலைப்புகள்

குழ. கதிரேசனைக் குழந்தைக் கவிஞராக அறிமுகம் செய்த கவிதைத் தொகுப்பு **எலிகடித்த பூனை** என்பது இது. ‘குழந்தைகளுக்கும் குழந்தை உள்ளம் கொண்டவர்களுக்கும்’ காணிக்கையாக்கப் பெற்றுள்ளது. குழந்தைப் பாடல்கள் பாட வேண்டுமானால் குழந்தை உள்ளம் வேண்டும் என்பது கவிஞர் கருத்தாகலாம். **எலிகடித்தபூனை** என்ற தொகுப்பின் அணிந்துரையில் (பக். 6) அழ. வள்ளியப்பா கூறுவதாவது:

> எளிய சொற்களில் குழந்தைகளின் உள்ளம் கவரும் வகையில் பெயர் அமைந்தால், அதுவே ஒரு சிறப்பு. இதனை நன்குணர்ந்து ‘எலி கடித்த பூனை’ என இப்புத்தகத்திற்குக் கவர்ச்சியான பெயர் கொடுத்திருக்கிறார், இளங்கவிஞர் திரு. குழ. கதிரேசன்.
>
> பூனைதான் எலியைக் கடிக்கும்; எலி எப்படிப் பூனையைக் கடிக்கும் என்ற கேள்விக் குறியுடன் குழந்தைகள் புத்தகத்தைக் கையில் எடுப்பார்கள்; ஆவலுடன் புரட்டிப் பார்ப்பார்கள். பல பாடல்களுக்கு நடுவே இத்தலைப்புடன் உள்ள பாடலைக் கண்டு பிடிப்பார்கள்; ஆர்வத்துடன் படிப்பார்கள்; துள்ளும் சந்தத்தில் எதிர்பாராத முடிவுடன் கூடிய இக்கதைப் பாடலைப் படித்ததும், குழந்தைகளின் உள்ளத்திலும் மகிழ்ச்சி துள்ளும். மற்ற பாடல்களையும் படிக்க வேண்டுமென்ற ஆவல் எழும்

என்கிறார். குழந்தைப் பாடல்களுக்குத் தலைப்பிடுதல் மற்றும் பாடுபொருள்கள் தேர்ந்தெடுத்தலில் உள்ள உத்தி குழ. கதிரேசனுக்கு நன்கு தெரிந்திருக்கிறது. 'நாய் மனிதனைக் கடித்தது என்பது செய்தி அல்ல; நாயை மனிதன் கடித்தான் என்பதே செய்தி' என இதழாளர் சி.பா. ஆதித்தனார் முன்பு குறிப்பிட்டது இத்தலைப்பைப் பொறுத்த மட்டில் பொருந்துவதாக உள்ளது. பாடல் ஒன்றின் தலைப்பே நூலுக்குத் தலைப்பாக அமைந்துள்ளது இங்கு மட்டுமல்ல; ஏனையப் பல நூல்களிலும் காணப்படுவது தான். ஒரு தொகுப்பு நூலில் வரும் ஒரு சில பாடல்கள் வேறு தொகுப்பிலும் இடம் பெற்றுள்ளன. நூலுக்குத் தலைப்பாகவும் அமைந்துள்ளன. **எலிகடித்த பூனைக்கு** ஒன்பது ஆண்டுகளுக்குப் பின் வந்தது **பள்ளிக்கூட வெள்ளாடு** என்ற கவிதைத் தொகுப்பு நூல். இதன் அணிந்துரையில் லா.ச. ராமாமிருதம் (பக். 18),

> .... நான் கதிரேசனின் முதல் தொகுதியைப் படிக்கையில், கருத்துச் செறிவடங்கிய அவருடைய சொல் சேர்க்கைகளும் சொற்களின் எளிமையும் படிக்கையிலேயே உதடுகளைப் புன்முறுவலில் வளைக்கும் லேசான நகைச்சுவையும் என் கவனத்தை ஈர்த்தன என்பதை ஒப்புக் கொள்கிறேன்.
>
> இந்தத் தொகுதியையும் ஏறக்குறைய அதனுடைய தொடர்ச்சி என்றே சொல்லலாம். இதிலும் கவிதைகள், போதனா முறையிலும் சாட்சிகளின் வர்ணனைகளாகவும் சுலபமாக சொற்கள் சொல்லும் சித்திரத்தில் உடனேயே மனதில் எழுவனவாகவும் இருக்கின்றன

என்கிறார். 'பள்ளிக்கூட வெள்ளாடு' என்ற ஒரு கவிதைத் தலைப்பே நூற் தலைப்பாகவும் அமைந்துள்ளது. இத்தொகுப்பில் 'பேசும் கிளியே இங்கே வா' என்ற கவிதையும், 'தொப்பைக் கோழி' என்ற கவிதையும் 1991ஆம் ஆண்டில் இவருடைய இரு நூல்களுக்குத் தலைப்புகளாக அமைந்தன.

1990இல் வெளிவந்த மற்றொரு கவிதைத் தொகுப்பு **காகிதக்கப்பல்** என்பது. இதன் அணிந்துரையில் திலகவதி ஐபி.எஸ். (பக். 11) அவர்களின் பாராட்டும் மேலை நாட்டுச் சிறுவர் இலக்கியங்களை மேற்கோள் காட்டி டாக்டர் மருதநாயகம் ஆங்கிலத்தில் அளித்துள்ள மதிப்பீடும் குழ. கதிரேசனுக்குப் பெருமை சேர்ப்பதாக உள்ளன. காகிதத்தில் கப்பல் செய்து கார்மழையில் மிதக்க விடாத குழந்தைகள் இருப்பார்களானால் அவர்கள் நீரோட்டம் எதுவுமே இருக்காத இடத்தில் வாழ்வர்

என்பது பொருள். அது மிகவும் அரிது. மழை நம் நாட்டில் மிகவும் இன்றியமையாத ஒன்று. அதில் நனைந்து குளிக்காத சிறுவர் ஒரு சிலரே இருப்பர். மழைநீரில் விளையாடுவதும், குளிப்பதும், அதனால் குழந்தைகளுக்கு ஏற்படும் குதூகலமும் சொல்லி மாளாது. இவற்றையெல்லாம் விவரிக்கும் கவிஞர், இறுதியில் ஓர் எச்சரிக்கையை விடுத்துள்ளார்.

*ஈரம் சொட்ட வீடுசென்றால்*
*என்னை அம்மா திட்டுவாள்!*
*நேரம் கழித்து வந்தாயென்று*
*அப்பா கண்ணை உருட்டுவார்!*

*சட்டை நனைந்து போனது*
*சளி பிடிக்கப் போகுதே!*
*காற்றே எங்கள் சட்டையைக்*
*காய வைப்பாய் சீக்கிரம்!*

மழையில் வெகுநேரம் நனைதல் ஒரு சிலர்க்கு ஒவ்வாது. சிலர்க்கு எளிதில் சளி பிடிக்கும். அதை அறிந்து கொண்டிருக்கிற சிறுவர்கள் காற்று ஈரச்சட்டையைக் காய வைக்கும் எனும் உண்மையையும் அறிந்து கொண்டிருக்கின்றனர் எனக் கவிஞர் கூறியிருப்பது பாராட்டத் தக்கதாகும். இவர் எல்லோரும் அறிந்த ஒன்றைத்தான் இங்குக் கவிதையாக்கியிருக்கிறார். ஆயினும் எல்லோராலும் கவிதை எழுதி விட முடியாது.

விடுதலைக் கிளி (1994) என்ற கவிதைத் தொகுப்பிற்கு டாக்டர் தமிழண்ணல் அணிந்துரை அளித்துள்ளார். கவிஞர் நாரா. நாச்சியப்பன் வாழ்த்துரை வழங்கியுள்ளார். கவிஞர் மின்னூர் சீனிவாசன் பாராட்டுரை தந்துள்ளார். கவிஞர் இன்குலாப்பும் இதில் சில கருத்துகளைக் கூறியுள்ளார். இவர்கள் அனைவரும் பங்கு பெறும் அளவில் இத்தொகுப்பில் அப்படி என்ன இருக்கிறது எனப் பார்க்கலாம். கோழியிடமும் கிளியிடமும் குழந்தைகள் உரையாடுகின்றனர்.

*சிறுவன்: 'கோழியாரே, கோழியாரே எங்கே போறீங்க?*

*கோழி: 'குப்பை மேட்டைக் கிளறிப் பார்க்கப் போறேன் நானுங்க!'*

*சிறுவன்: 'குப்பை மேட்டில் என்ன இருக்கு சொல்லித் தாருங்க!'*

*கோழி: 'என் தொப்பைக்கேற்ற உணவிருக்கு வந்து பாருங்க!'*

இப்படியாக உரையாடல் செல்கிறது. இப்பாடலின் இறுதியில் சைவ உணவு வலியுறுத்தப்படுகிறது. கூண்டுக் கிளியிடம் சிறுவன் உரையாடுதலில் ஒரு சில அடிகள் வருமாறு:

சிறுவன்: **கூண்டில் உன்னை அடைத்தவனோ**
**கொறிக்க வெளியில் போய் விட்டான்!**
**திரும்பி அவனும் வருமுன்னே**
**திறந்து விடுவேன்; பறந்து விடு!**

கிளி: **சுதந்திரமாய்ப் பறந்து செல்லச்**
**சிறகு இல்லை சின்ன தம்பி;**
**இயந்திரம் போல் இரக்கமின்றி**
**என் சிறகை ஒடித்து விட்டான்!**

சிறுவன்: **அன்று பெற்ற சுதந்திரத்தில்**
**ஒரு பங்கு உனக்கில்லையோ?**
**உனது கூர்மை அலகினாலே**
**உடைத்து வர மனமில்லையா?**

தம்மைப் போல் தம்மைச் சுற்றி இருக்கும் பறவைகளும், விலங்குகளும் மனிதர்களும் விளங்க வேண்டும் என நினைப்பவர்கள் சிறுவர்கள். அதனால்தான் அப்பாவித் தனமாய்க் கேட்டு விடுகிறார்கள். இயல்பாய்ப் பேசுகிறார்கள். எளிதாய் எதையும் எடை போடுகிறார்கள். இதைத்தான் பாரதியும் பாப்பாப் பாட்டில் பேசினார்.

விடுதலைக்கு முன்பு பாரதி பேசியதை விடுதலை பெற்ற பின் குழ. கதிரேசனின் பார்வையில் சிறுவர்கள் பேசுகின்றனர். மனிதர்க்கு விடுதலை கிடைத்து விட்டது என்பது உண்மைதான் என அறியும் சிறுவன் கிளிக்கும் விடுதலையை விரும்புகிறான். அதனாலேயே இத்தொகுப்புக்கு இத்தலைப்பு ஏற்பட்டுள்ளது. கிளிசோதிடக்காரர்கள் அன்றும் இருந்தனர். இன்றும் இருக்கின்றனர். கிளிகளை வீட்டில் வளர்க்கின்றனர் சிலர். கூண்டுக்குள்ளும் குடிவைக்கின்றனர். சிறுவர்கள் சிலர் கிளி கூண்டுக்குள் அடைபட்டிருப்பதைப் பார்க்கின்றனர். அதைப் போன்றே கோழி, ஆடு, மாடு, நாய், பூனை, பாம்பு, எலி, தவளை, குரங்கு போன்றவை மனிதர்களிடம் படும்பாடுகளையும் சிறுவர்கள் பார்க்கின்றனர்.

குழ. கதிரேசனின் பாடுபொருள்கள் ஒரு காலக்கட்டத்தில் கிராமியச் சூழல்களிலிருந்தும், அடுத்த காலச்கட்டத்தில் நகரச்

சூழல்களிலிருந்தும் பெறப்பட்டவை. இதனாலேயே, நாட்டில் எங்குமுள்ள காவலர்கள், சாலை விதிகள், ஓடும் வண்டியில் ஏறுதல், சிறுசேமிப்பு, ஒற்றுமை, சுகாதாரம், நூலகம், தமிழ்ப் பெரியோர்கள், நாடு, மொழி எனப் பல பாடுபொருள்களைத் தேர்ந்தெடுத்துப் பாடியுள்ளார்.

## மழலையர் வரிசைக் கவிதைத் தொகுதிகள்

குழந்தைக் கவிதைகளில் புழகாங்கிதம் கொண்ட குழ. கதிரேசன் குழந்தைகளின் வயது அடிப்படையில், மூன்று முதல் ஆறு வயதினர் (மழலையர்), ஆறு முதல் ஒன்பது வயதினர், ஒன்பது முதல் பதினான்கு வயதினர் என முப்பிரிவாகப் பிரித்துக் கவிதைகளை யாத்தும் தொகுத்தும் நூல்களை அச்சிட்டுள்ளார். **மழலை அரும்பு (1992), மழலைப் பூக்கள் (1992), மழலைத் தேன் (1995), சிரிக்கும் மழலை (1995), மழலையர் தமிழ் (1996), மழலைக் கற்கண்டு (2000), மழலைப் பாடல்களில் உயிர்-மெய் எழுத்துகள் (2003)** என்பன மூன்று வயதுக்கு மேல் உள்ளவர்களுக்காக வந்த நூல்கள். இவற்றில் உள்ள கவிதைகள் மழலையரே பாடுவது போன்றுள்ளன. "குழல் இனிது யாழ் இனிது என்ப தம் மக்கள், மழலைச் சொல் கேளாதவர்" என்ற குறளில் (66) கூறப்படும் மழலை என்பது வெறும், 'ஆ, ஊ' ஒலிகளிலிருந்து தொடங்குவது.

வளரும் குழந்தைகளுக்கு முதலில் குடும்பத்திலுள்ள உறுப்பினர்கள் வழிகாட்டி. பின்பு பள்ளிக்கூடத்திலுள்ள ஆசிரியர்கள் வழிகாட்டி. அடுத்ததாக அண்டிப் பழகும் அயல் வீட்டுக் குழந்தைகள் வழிகாட்டி. இறுதியாகப் புத்தகங்கள் வழிகாட்டி. இவற்றுள், வளரும் குழந்தைகளை வளர்க்கும் சமுதாயப் பொறுப்பினராகப் புத்தகங்களைக் குழ. கதிரேசன் எடுத்துக் கொள்கிறார். புத்தகங்களில் உள்ள பாடல்கள் மட்டுமல்ல; அப்புத்தகங்களில் உள்ள படங்கள் மட்டுமல்ல; அவற்றின் உருவாக்கமும் குழந்தைகளிடம் நற்பண்புகளை வளர்க்க வேண்டுமென்ற சமுதாயப் பொறுப்பிலேயே இம்மழலையர் நூல்களை உருவாக்கியுள்ளார். இவற்றுள் இவர் மேற்கொண்டுள்ள வழிகாட்டுதல்கள் என்ன வென்ன என இனிப்பார்க்கலாம்.

1. தமிழ் எழுத்துப் பயிற்சி
2. தமிழ்ச் சொற்கள் உருவாக்கம்

3. இவற்றுக்கான பாடல்கள்
4. இவற்றுக்கான படங்கள்

'என்றும் தமிழைப் படிப்பேனே' எனும் கவிதை 'அ' முதல் 'ஔ' வரையிலான உயிரெழுத்துகளையும் 'ஃ' எனும் ஆயுத எழுத்தையும் அடிகளின் தொடக்கமாகக் கொண்டு பாடப் பெற்றுள்ளது. ஆத்திசூடி போன்றது. ஆனால் ஆத்திசூடி அல்ல.

1990ஆம் ஆண்டிலேயே, பள்ளிக்கூட வெள்ளாடு என்ற தொகுதியில் இடம் பெற்ற இக்கவிதை பின் வந்த பல நூல்களிலும் இடம்பெற்றிருப்பது அதன் அருமை கருதியே! உழைத்துப் பிழைத்தல், ஊர்தியில் மெதுவாகச் செல்லுதல், ஏற்றத் தாழ்வை மறத்தல், ஐ.நா. சபைக்குச் செல்லுதல், ஒற்றுமையாக வாழ்தல், இவற்றையெல்லாம் விரும்பும் குழ. கதிரேசனின் சிறுவர்கள் நாட்டின் மேம்பாட்டுக்காக 'ஓடும் நதிகளை இணைக்க' அன்றே மும்முரம் காட்டியிருக்கின்றார். இன்றைய ஏக குரலாய் ஒலிக்கும் நதிகளை இணைக்கும் தாரக மந்திரத்தைப் பாரதி கண்ட கனவுகள் போலக் கவிதையில் அன்றே கூறியிருப்பது பாராட்டத் தக்கது. கவிஞர்களின் கற்பனைகள் நனவாகும் காலங்களும் வரும் போலும்.

மழலையர் தமிழ் என்பது எழுத்துப் பயிற்சி மற்றும் சொற் பயிற்சிக்கான புத்தகம். ஆயினும் இதில் இடம்பெறும் கவிதைகளும், ஆத்திசூடி போன்ற அடிகளும் அரியவை.

**ஆ,ஆ வை எழுதப்போறேன்**
**அம்மா, அப்பா வாருங்க!**
**அடுத்த எழுத்தைக் கைப்பிடிச்சு**
**எனக்கு எழுதித் தாருங்க! . . .**

எனக் குழந்தைகள் கேட்பது எல்லா வீட்டிலும் நடக்கும் விந்தைதான். உயிர் எழுத்துகளுக்கும் கவிதை; மெய் எழுத்துகளுக்கும் கவிதை; உயிர் மெய் எழுத்துகளுக்கும் கவிதை; எண்களுக்கும் கவிதை; உடம்பு உறுப்புகளுக்கும் கவிதை. எங்கும் கவிதை; எதற்கும் கவிதை. இதுவே குழ. கதிரேசனின் குறிக்கோள். கவிதை எளிதானது; என்றும் இனிமையானது; எளிதில் மனத்தில் இருப்பது என்பவை அவர் கண்டறிந்த உண்மைகள்.

தமிழ்ப் பயிற்சிக்கு, **மழலைக் கற்கண்டு, மழலைப் பாடல்களில் உயிர்-மெய் எழுத்துகள்** எனும் இரு தொகுதிகளும் ஏற்றவை.

பத்து மாதங்கள் கருவிலிருக்கும் குழந்தைகளின் நிலைகளை நம் கதைப்பாட்டு இலக்கியங்கள் சித்திரிக்கின்றன. கதிரேசனோ ஓராண்டின் மாதப் பெயர்களை ஒரு குழந்தையின் ஓராண்டு வளர்ச்சிக்கு உருவகித்துள்ளார்.

*சித்திரை மாதம் வந்தாச்சு!*
*சின்னப் பாப்பா தவழ்ந்தாச்சு!*
*வைகாசி மாதம் வந்தாச்சு!*
*உருட்டிப் பொருளைக் கவிழ்த்தாய்ச்சு!*
*ஆனி மாதம் வந்தாச்சு!*
*அரிசிப் பல்லும் முளைச்சாச்சு!*
*ஆடிமாதம் வந்தாச்சு!*
*அன்பாய்க் கையை அசைச்சாச்சு!*
*ஆவணி மாதம் வந்தாச்சு!*
*அழகாய்ப் பாப்பா நின்னாச்சு!*
*புரட்டாசி மாதம் வந்தாச்சு!*
*புதுப்புது சட்டை போட்டாச்சு!*
*ஐப்பசி மாதம் வந்தாச்சு!*
*அடிக்கடி மழையில் நனைஞ்சாச்சு!*
*கார்த்திகை மாதம் வந்தாச்சு!*
*கைகளைக் கொட்டிச் சிரிச்சாச்சு!*
*மார்கழி மாதம் வந்தாச்சு!*
*மழலைச் சொல் பல கேட்டாச்சு!*
*தைப் பொங்கல் வந்தாச்சு!*
*தாவி மடிமேல் குதிச்சாச்சு!*
*மாசி மாதம் வந்தாச்சு!*
*முத்தம் பாப்பா தந்தாச்சு!*
*பங்குனி மாதம் வந்தாச்சு!*
*பாப்பாப் பாட்டுப் படிச்சாச்சு!*

இது உண்மையா? சோதித்துப் பார்க்கத் தோன்றுகிறது அன்றோ? இதுதான் இக்கவிதைக்குக் கிடைத்த வெற்றியாகும்.

குழந்தைகளுக்கு எவை தெரியுமோ! எவை யெல்லாம் பிடிக்குமோ, எவை இருக்குமோ அவையெல்லாம் கவிதையாக வந்துள்ளன. **மரத்தில் மறைந்தது மாமத யானை மரத்தை மறைத்தது மாமதயானை** என்பது போல எழுத்துகளைக் காண்போர்க்கு எழுத்துகளாவும், கவிதைகளைக் காண்போர்க்குக் கவிதைகளாகவும் தோன்றச் செய்துள்ளது கதிரேசனின் தனித்தன்மையாகும்.

## மழலையர் 3 முதல் 6 வரை; சிறுவர் 6 முதல் 9 வரை

காலையில் அரும்பு; பகலெல்லாம் போது; மாலையில் மலர் என மூன்று பருவங்கள் பூக்களுக்கு உள்ளன. இவற்றைச் சிறுவர்களுக்கு இணைத்துப் பார்க்கிறார் கவிஞர். மழலையர் அரும்பு; மூன்று முதல் ஆறு வயது வரையினர் போது; ஆறுமுதல் ஒன்பது வயது வரையினர் மலர். இவை கவிஞரின் கவிதைகளுக்கும் சிறுவர்களுக்கும் பொருத்தமாக உள்ளன. இவற்றையே பாடத் தெரியாத குழந்தையைப் பற்றிப் பாடுவது, பகுத்தறியும் குழந்தையை முன்னிலைப் படுத்திப் பாடுவது; குழந்தையாகவே மாறி அக்குழந்தை பாடுவதுபோல் பாடுவது எனும் மூன்று நிலைகளைக் குழ. கதிரேசன் கொண்டுள்ளார். **குட்டிப்பாப்பா** (2001) எனும் கவிதைத் தொகுப்பு 3 முதல் 6 வரையிலான வயதினர்க்கான கவிதைத் தொகுப்பு.

இத்தொகுப்பில் இரண்டு அடிகளில் கவிதைகள் இணைக்கப்பட்டுள்ளன. பல பாடல்கள் முன் தொகுப்பில் வந்தவைதாம்; இங்கும் வந்துள்ளன. அதிக அடிகளில் அமையும் பாடல்கள் குழந்தைகளைச் சோர்வடையச் செய்யுமாம். இரண்டு அடிகளுக்கு மேலாக நான்கு அடிகளில் பாடல்கள் இருக்கலாமாம். அவற்றுக்கு மேலான அடிகள் கொண்ட பாடல்கள் 6 முதல் 9 வயதினர்க்காம் எனப் பாகுபடுத்தியுள்ளார். நகர்ப்புறம், நாட்டுப்புறம் எனும் இவற்றில் அமையும் பாடுபொருள்கள் வேறுவேறானவும் உண்டு; ஒன்றானவும் உண்டு. கவிதையில் பாடுபொருள் முக்கியமா, அல்லது பாட்டு முக்கியமா என்பது பிரச்சினைக்குரியது தான். அதில் தீர்வு காணவியலாது.

**குழந்தைப்பாப்பா** (2001) எனும் கவிதைத் தொகுப்பில் நான்கு அடிகளில் மட்டுமே கவிதைகள் உள்ளன. **மிட்டாய்ப்பாப்பா** (2001), **டிங்டாங் கடிகாரம்** (2001), **தங்கநிற மாம்பழம்** (2003) எனும் கவிதைத் தொகுப்புகள் '6 முதல் 9 வயதினர்க்கான கவிதைகளைக் கொண்டுள்ளன. இவற்றுள் பல கவிதைகள் ஏற்கெனவே முன் தொகுப்புகள் இடம்பெற்றவைதாம். கவிஞரின் பரிணாம நிலையில், சிறுவர்களை வயது அடிப்படையில் பகுத்துப் பார்க்கும் வளர்ச்சி நிலை ஏற்பட்டதன் அடையாளமாகவே இவ்வாறு வரையறுக்கப் பெற்றுள்ளதாகக் கருதலாம். மழை, தண்ணீர், மேகம், நதிகள் பற்றிய சிந்தனைகளைக் கவிஞர் தொடக்க கால முதலே கொண்டிருந்தார் எனக் கருத முடிகிறது. இது இக்காலத்துக்கும் எதிர்காலத்துக்கும் ஏற்றதான கருத்துதான்.

**தண்ணீர், மழை நதிகள் பற்றிய பாட்டுகள்**

தண்ணீர் தண்ணீர் தண்ணீர்
தரைக்கு அடியில் தண்ணீர்
தண்ணீரை மேலே எடுப்போம்
தாகம் தீரக் கொடுப்போம்

அழுக்குக்கள் அகற்றுவோம் (**பள்ளிக்கூட வெள்ளாடு** 1990), (**தொப்பைக் கோழி** 1991) என்ற கவிதையில், நீரில் அழுக்குகளை அகற்றுதல் பற்றிய அடிகள் உள்ளன. 'சேமிக்க வேணும்' என்ற கவிதையில் (**காகிதக்கப்பல்** 1990), (**பேசும் கிளியே** 1991), (**தங்கநிற மாம்பழம்**, 2003), நீரைச் சேமித்தலின் இன்றியமையாமை வலியுறுத்தப்படுகிறது.

சேமிக்க வேணும் – நீரைச்
சேமிக்க வேணும் – தம்பி
சிக்கனமாய்ச் செலவு செய்து
காண்பிக்க வேணும்!

கடல் நீரைக் குடிநீராக்கும் திட்டம் தற்போது நடைமுறையில் இருந்து வருகிற நிலையில் கடலின் அருகே நன்னீர் கிடைத்தலை இக்கதை அடிகள் மூலம் கவிஞர் கூறுகிறார். பல இடங்களில் அவ்வாறு நன்னீர் கிடைத்து வரும் செய்தி நாம் அறிந்ததே. மழை நீர் சேகரிப்பு மகத்தான திட்டமாக நடைமுறைப்படுத்தப் பெற்றிருக்கும் இக்காலத்தில் கவிஞர் குழ. கதிரேசனின் சிறுவன் ஒருவன் 'மழைத் தண்ணீர்' என்ற கவிதையில் (**மழலைப்பூக்கள்** 1992, **டிங்டாங் கடிகாரம்** (2001) (பாடுவோம் அறிவியல் (1998) அன்றே பாடிய கவிதை அடிகள் வருமாறு:

அடைமழையின் போது
அண்டாத் தண்ணி பிடிப்பேன்!
அண்டாத் தண்ணி மீது
அகலத் துணி விரிப்பேன்

தெளிந்த நீரை எடுப்பேன்;
அம்மா கையில் கொடுப்பேன்!
காய்ச்சி வடிகட்டி அதைக்
கடகடன்னு குடிப்பேன்!

**பள்ளிக்கூட வெள்ளாடு** (1990), **தொப்பைக் கோழி** (1991) எனும் கவிதைத் தொகுப்புகளில் வரும் தொடக்க அடிகள் மழை பற்றியன. எலி **கடித்த பூனையில்** (பக். 49),

மண்ணும் மழையை உறிஞ்சி அடியில்
சேர்க்குது பாரு – அது
மழையில்லாத போது தாகம்
தீர்க்குது பாரு

என நிலத்தடி நீர் பற்றிப் பாடியுள்ளார். குழ. கதிரேசன் அறிவியல் உண்மை ஒன்றை 'மழை தரும் மேகம்' எனும் கவிதையில் (மழலைப்பூக்கள் 1992) அறிமுகப்படுத்துகின்ற கவிதை அடிகள் வருமாறு:

ஆவியாகும் நீரை மேகம்
அள்ளி அள்ளி உண்ணுது!
அமுத மழை ஊருக்கெல்லாம்
அள்ளித் தந்து செல்லுது!

இதைப் போன்றே மழலை அரும்பு (1992) எனும் தொகுதியில் 'தாகம் தீர்க்கும் மேகம்' எனும் கவிதையில் பாடப்பெற்றுள்ளது.

மேகம் நல்ல மேகம்!
மிதக்கும் நல்ல மேகம்!
தாகம் தீர்க்கும் மேகம்!
தவழ்ந்தே எங்கும் போகும்

மழை பெய்தலில் உள்ள அறிவியில் செய்திகள் ஒரு புறமிருக்கட்டும். மழைக்குக் கருணை வேண்டும் எனும் கவிஞரின் இரக்கக் கருத்து இங்கு மிளிர்தலைக் காணமுடிகிறது.

நதிநீர் பற்றிய நவீன எண்ணங்கள் கவிஞரிடம் அன்றே கருக்கொண்டுள்ளன என்பதற்குப் பல சான்றுகளைக் கீழே காணலாம். காகிதக் கப்பல் (1990) எனும் தொகுதியிலே 'நதிகளை இணைத்திடுவோம்' எனும் ஒரு கவிதை முழுதும் நதிகள் பற்றியது தான்.

கோபத்தில் ஓடும் நதிகளை எல்லாம்
கூட்டி நாம் வந்திடுவோம் – நம்
நாட்டிற்கு அவைகள் நல்லதைச் செய்ய
நாளும் உழைத்திடுவோம்!

வற்றாத கங்கையை வா என்றழைத்து
வழிகளைத் திருத்திடுவோம் – அதை
எந்நாளும் போற்றி இனிய காவிரி
யோடு இணைத்திடுவோம்!

*கங்கை காவிரி நாட்டியங் காண*
*கண்கள் மலர்ந்திடுவோம் – அதன்*
*சலங்கை ஒலியினை தினம்தினம் கேட்டுச்*
*சிந்தை மகிழ்ந்திடுவோம்!*

*இந்திய நதிகள் எல்லார்க்கும் பொதுவென*
*நீதியை வகுத்திடுவோம் – எங்கும்*
*சுதந்திர ரயில்களாய் நதிகளை நாட்டினில்*
*உலவிட விட்டிடுவோம்!*

குழ. கதிரேசனின் குழந்தைப் பாடல்களை மதிப்பிட்டவர்கள் பலரும் நதிகள் இணைப்பு எனும் நாட்டு நலத்திட்டத்தினை அன்று உணராதவர் போலும். அதனால் எக்கருத்தையும் இதுபற்றிக் கூறவில்லை. ஆயினும் கவிஞரோ அத்துடன் விடவில்லை. சிரிக்கும் மழலையில் (1995) 'ஊரும் ஆறும்' எனும் தலைப்பில் ஒரு கவிதையை உருவாக்கியிருக்கிறார்.

*திருநெல்வேலி நகரிலே*
*தாமிரபரணி ஓடுமாம்!*
*மதுரையிலே வைகைநதி*
*மடைதிறந்து ஓடுமாம்!*
*திருச்சியிலே காவிரி*
*துள்ளித் துள்ளி ஓடுமாம்!*
*காஞ்சியிலே பாலாறு*
*கரைகடந்து ஓடுமாம்!*
*காய்ந்துபோன ஆறுகளே*
*குதித்து ஓடிவாருங்க!*
*ஓய்ந்து நீங்க தூங்கிடாமே*
*அமைதியாக ஓடுங்க!*

காவிரி, தென்பெண்ணை, பாலாறு, வைகை, பொருணை நதிகளால் மேனி செழித்த பாரதியார் காலத்துத் தமிழ்நாடு காணமற் போய், இப்போது, காய்ந்து போன ஆறுகளையே கதிரேசன் உட்பட நாம் அனைவரும் காண்கின்றோம். காலத்துக் கேற்ற கவிதை அடியாக வந்து இது விழுந்துள்ளதைக் கண்டு மனம் கலங்குகிறதன்றோ! 'ஓடும் நதிகளை இணைப்பேனே!' எனும் கவிஞரின் சிறுவன் பாடியது முன்பே சுட்டப்பெற்றது காண்க.

### அறிவியல் செய்திகள்

குழ. கதிரேசனின் குழந்தைக் கவிதைத் தொகுதிகளில் அறிவியல் செய்திகள் அறிமுகப்பட்டிருப்பினும், பாடுவோம்

**அறிவியல்** (1998) எனும் தனித் தொகுதியும் வெளியிடப் பெற்றுள்ளது. ஏனைய தொகுதிகளில் உள்ள பல அறிவியற் கவிதைகளை இத்தொகுதியிலும் எடுத்தாண்டுள்ளார். அறிவியல், சுற்றுப்புறத் தூய்மை, அறிவியல் கருத்துக்கவிதைகள், மழலையர் அறிவியல், கணிதம் எனும் தலைப்பில் கவிதைகள் பல சேர்க்கப் பெற்றுள்ளன. ரோபோ, கணிப்பொறி, மின்சாரம், இன்சுலின் போன்றவற்றின் பயன்பாடு கவிதைகளில் காட்டப் பெற்றுள்ளது. மழை, ஊற்று, நீர் தொடர்பான மழலையர் கவிதைகளில் அமைந்துள்ள அறிவியற் செய்திகள் முன்பே காட்டப்பெற்றன. தொலைபேசி, தொலைக்காட்சி போன்றவற்றின் பயன்பாடுகளும் பாடப்பெற்றுள்ளன.

ஒரு பொருள் எதால் ஆனது; எப்படி ஆனது; ஏன் ஆனது எனும் உண்மைகள் தெரியாமலே நம்மில் பலர் அவற்றைப் பயன்படுத்தி வருகிறோம். நீரைப் பயன்படுத்துவோர் அந்நீரின் கூட்டுப்பொருள்கள் எவை; அந்நீரைக் குளிர்ப்படுத்தினால் கிடைப்பது என்ன? சூடுபடுத்தினால் கிடைப்பது என்ன? கடல் நீரைக் காய்ச்சினால் என்ன கிடைக்கும்? கடல் நீரோடு எவற்றைக் கலந்தால் நன்னீர் கிடைக்கும்? அழுக்கு நீரை எப்படிக் கெடாத நீராக்குவது இப்படியான மாற்று நிலைகளை அறிந்திருப்ப தில்லை. பலபாடல்களில் அவற்றை அறியச் செய்துள்ளார் கவிஞர்.

## ஒருமைப்பாட்டுக் கவிதைகள்

**கூட்டாஞ்சோறு** (1998) எனும் கவிதைத் தொகுதி சிறுவர் களுக்கான தேசிய ஒருமைப்பாடு மற்றும் உரிமைப்பாடல்கள் அடங்கிய தொகுதியாகக் கதிரேசனால் தொகுக்கப் பெற்றுள்ளது.

## அறிவுறுத்துதல் சரிதானா?

குழ. கதிரேசனின் தொடக்க முதலாகக் கவிதைகளில் அண்ணன் என்ற நிலையில் குழந்தைகளுக்கு அறிவுறுத்தும் பாங்கு மிகக் காணப்படுகிறது. இதனையே முற்சுட்டிய தன் அணிந்துரையில் லா.ச. ராமாமிருதம் "போதனா முறையில் பிரசாரம் கலந்திருந்தாலும் இது போன்ற கவிதைகள்... அவசியம் தான்" என்கிறார். சிறுவர்களாக இருந்தபோது பெரியவர்களால் அறிவுறுத்தப்பட்டவர்கள் பெரியவர்களாகிய பின் சிறுவர்களை அறிவுறுத்துவார்கள்; இவ்வகையான சுழற்சிநிலை தவிர்க்க முடியாதது; ஆயினும் அறிவுறுத்தப்பட்டவர்கள் அறிவுறுத்தும்

தகுதிக்கு வரும்போது அதற்கு அருகதையற்றுப் போதலும் உண்டு. சான்றாக, 'சாலை விதிகளை மதிப்போம்' (காகிதக் கப்பல் 1990) எனும் கவிதையில்,

> இங்கும் அங்கும் ஓடி ஆடும் தம்பி – நாம்
> இடது பக்கம்போக வேண்டும் தம்பி!
>
> பள்ளிசென்று பாடம் பயிலும் அண்ணா – நாம்
> பாதை ஓரம் போய் வருவோம் அண்ணா!
>
> நடைபாதை நமக்காகத் தம்பி – அதில்
> நடந்து பழகி வந்திடுவோம் தம்பி!
>
> சோம்பலினை விட்டொழித்தே நாமும் – சுரங்க
> வழியில் செல்ல வேண்டும் அண்ணா!
>
> சிவப்பு விளக்கு எரிகையிலே தம்பி – நாம்
> சேர்ந்து ஒன்றாய் நின்றிடுவோம் தம்பி!
>
> பச்சை விளக்கு எரிகையிலே அண்ணா – நாம்
> பாதை கடந்து வந்திடுவோம் அண்ணா!
>
> ஒருநாளும் மஞ்சள் கோட்டில் தம்பி – நாம்
> ஓடிப்பாதை கடக்க வேண்டாம் தம்பி!
>
> படிக்கட்டில் பயணம் செய்தால் அண்ணா – சாய்வுப்
> பாதையிலே சறுக்கி விழுவோம் அண்ணா!
>
> விதிகளை நாம் மீறுகின்ற போது – அது
> விபத்துகளை உருவாக்கும் கேளு!
>
> சாலை விதியை மதித்து நடப்போம் அண்ணா – நாம்
> சமர்த்துப் பிள்ளையாக வாழ்வோம் கண்ணா!

இளம் விலங்குக்கு இவ்விதிகளைக் கற்றுக் கொடுத்தால் அது முதியதானாலும் முரண்படாது. ஆனால் பாழாய்ப் போன மனித இனம் பெரும்பாலும் முரண்பட்டு நிற்கிறது. இளம் வயதில் தாய் தந்தையரை வணங்கும் சிறுவர்கள் வளர்ந்தபின் மதிக்காது நடந்து கொள்வதும் உண்டும். அழுக்குகளை அகற்றும் சிறுவர் அதைப் பிற்காலத்தில் மறத்தலும் உண்டு. பொய் சொல்லக் கூடாது எனப் படித்த குழந்தைகள் பெரியவர்களானதும் அதைப் பொருட் படுத்துதல் இல்லை. காகிதக் கப்பல் விட்ட சிறுவர்கள் பிற்காலத்தில் கண்டு கொள்வதே கிடையாது. நதிகளை இணைக்க நினைத்த சிறுவர் நாளடைவில் மாற்றுச் சிந்தனை கொண்டோராய் மாறுதலும் உண்டு. மழலை மணம் வீசிய குழந்தைகள் சிலர் வளர்ந்த பின் மாற்று மணம் வீசக் கூடியவர்களாகி விடுகின்றனர்.

ஒற்றுமையை வலியுறுத்தி வளர்க்கப் பெற்ற குழந்தைகள் வளர்ந்தபின் பாகப்பிரிவினைக்காக வெட்டிக்குத்திக் கொள்கின்றனர். கூட்டுக்குடும்பமாக - தாத்தா, பாட்டி, அம்மா, அப்பா, சித்தப்பா, சித்தி, பெரியப்பா, பெரியம்மா, அண்ணன், தம்பி, அக்கா, தங்கை, மாமன், மைத்துனர்களாக - வாழ்ந்தவர்கள் வளர்ந்த பின் இளமையை ஏறிட்டுப் பார்க்காமல் முரண்பட்டுப் போதலும் உள்ளது. ஏன் இந்த மாற்றம் ஏற்படுகிறது சிலரிடம் என்று எண்ணிப்பார்க்கும் போது வளர்ந்த வளர்ப்பினை மட்டும் குறை சொல்லிப் பயன் இல்லை. மனித உடம்பு வளரவளர, முரண்களும் வளர்ந்து வருகின்றன. அந்த நிலையிலும் அறிவுறுத்தும் கவிதைகளோ பிற காட்டிகளோ தேவைப் படுகின்றன. விலங்குகளுக்கு வேண்டாதவை மக்களுக்குத் தேவைப் படுகின்றன. என்றும் இளமையாய் இருந்து விடமுடியாது என எண்ணிய கவிஞர் **நெருப்புக் கொப்புளம்** *(1997, 2003)* எனும் நீண்ட நீண்ட கவிதைகள் அடங்கிய தொகுப்பை வெளி யிட்டுள்ளார். சமுதாயப் பாடல்கள் என அவர் கூறியிருந்தாலும் சாட்டை அடிகளைத் தாராளமாகக் கொடுத்துள்ளார்.

## நெருப்புக் கொப்புளம்

இன்றைய இந்தியச் சமுதாயத்தில் காணப்படும் அவலங்களைக் கவிஞர் ஒளிவு மறைவின்றிக் கவிதைகளில் வெளிப்படுத்துகிறார். அவலங்களைக் கண்டு சீறுவதற்குப் பதிலாக உளம் நொந்து குமுறுவதையே காண்கிறோம். அத்தனையும் எளிமையான கவிதைகள். நேரடியாக நெஞ்சம் பேசுகிறது. வார்த்தை ஜாலங்கள் ஏதும் இல்லை. இந்தியச் சமுதாயத்தில் அண்மைக் காலத்தில் புகுந்துவிட்ட நேர்மைக் குறைவான அம்சங்களை நெஞ்சக் குமுறலோடு கவிதைகள் கூறுகின்றன. கடல் நீரில் உப்பு கலந்திருப்பதுபோல இன்றைய சமுதாயத்தில் ஊழல் கலந்திருக்கிறது என்று குறிப்பிடுகிறார்

கடல்நீரையும் நன்னீராக்கும் இக்காலத்தில் ஊழல்களையும் நியாயப்படுத்தி, பொய், புளுகு மூட்டைகளை அவிழ்த்து விட்டு, மக்களை மயக்கி மாயம் செய்யும் மந்திர தந்திர மானிடத் தலைவர்கள் இருப்பதைக் கண்டு கவிஞர் கவிதைகளை அவிழ்த்து விட்டுள்ளார். கவிஞர்கள் சிலர் கண்டும் காணாமல் விட்டு விடுவார்கள்; ஒரு சிலர் பொங்கி எழுவார்கள். இக்கவிஞர் பொங்கி எழாமல் தன்னையே சுட்டுக் கொள்கிறார்.

## முடிவுரை

கவிதைகளில் சொற்கள் திரும்பத்திரும்ப வருவதாக உணரப்பட்டது. கவிதைகள் மீண்டும் மீண்டும் எடுத்துத் தொகுக்கப்பட்டுள்ளதாகவும் கண்டறியப்பட்டது. ஆனால் நுனிக்கரும்பு முதல் கடித்துச் சுவைப்பதுபோல் கவிஞரின் கவிதைகளில் கவிதை நயமும், நற்கருத்துகளும் பிறவும் இருந்ததைக் கண்டறிந்ததாலே இக்கட்டுரை சாத்தியமாயிற்று. ஒரு படைப்பாளியோ படிப்பாளியோ தம் போன்றவரைப் பாராட்டுவது அருமை. இங்கே குழ. கதிரேசனைப் பாராட்டியவர் களைத் தவிர்த்து வேறு படைப்பாளிகளோ படிப்பாளிகளோ அவரைப் பாராட்டியிருக்கிறார்கள் என்றோ, தம் நூல்களில் பதிய வைத்திருக்கிறார்கள் என்றோ தேடிப்பார்த்தால் எஞ்சுவது ஏமாற்றமாகத் தான் இருக்கும். புதுக் கவிதைகளைப் படைத்தோர் பலர் தம்மை வானம்பாடிக் கூட்டம் என்றோ, எழுத்து, இலக்கிய வட்டம், இப்படியான கூட்டம் என்றோ இனங்காட்டிக் கொண்டனர். ஆனால் குழந்தைக் கவிஞர்களோ இன்னும் கூட்டம் சேரவில்லை; கூட்டத்தில் சேர்க்கவும் இல்லை என்றே தெரிகிறது.

# மித்ரா

கவிஞர் அறிமுகம்

இயற்பெயர் - வீ. உண்ணாமலை. புனைப்பெயர் - மித்ரா. முதுகலை, ஆய்வியல் நிறைஞர், முனைவர், முதுமுனைவர், இளநிலை இந்திப் பட்டம், பிரவீன் இந்தி ஆகிய கல்வித் தகுதிகளைப் பெற்றவர். சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றுபவர்.

1. சித்திரை வெயில் (1979)
2. தாகம் தீரா வானம்பாடிகள் (1988)
3. நிரந்தர நிழல்கள் (1988)
4. காற்றின் சிறகுகள் (2001)

எனும் நான்கு புதுக்கவிதை நூல்களையும்,

5. ஹைக்கூ கவிதைகள் (1993),
6. குடையில் கேட்ட பேச்சு (1993),
7. மித்ராவின் ஹைக்கூ கவிதைகள் (2001)

எனும் மூன்று ஹைக்கூ கவிதை நூல்களையும்,

8. பாரதிதாசனின் நூறு பாடல்கள் (தமிழிலிருந்து இந்திக்கு),
9. ஹைக்கூ என் தோழி (ஆங்கிலத்தில் இருந்து தமிழுக்கு)

எனும் மொழிபெயர்ப்பு நூல்களையும் எழுதியுள்ளார்.

ஒன்பது கவிதைப் படைப்புகள் மட்டுமின்றி, புதுக்கவிதைகளில் சமுதாயம் (முனைவர் பட்ட ஆய்வேடு), வள்ளலாரின் சிந்தனைகள், வள்ளலாரின் சீர்திருத்தம், வள்ளலாரின் சிந்தனைகள், வள்ளலாரின் பொதுக் கொள்கைகள், வள்ளலார் தமிழ், காலந்தோறும் அறிவியல் முதலான பன்னிரண்டு உரைநடை நூல்களையும் எழுதியுள்ளார். அவற்றுள் புதுக்கவிதைகளில் சமுதாயம், பாரதிதாசனின்

**புதியதோர் உலகு செய்வோம், கண்ணதாசன் கவிதைகளில் அறிவியல், இயற்கையில் மலர்ந்த ஹைக்கூ, தமிழில் ஹைக்கூ கவிதைகள் அன்றும் இன்றும், ஹைக்கூ கவிதைகளில் நாட்டுப்புற இயல் தாக்கம், நிகழ்கால கவிஞர்கள்** (குறுஆய்வு- Minor Project) ஆகிய நூல்கள் இவரது கவிதைத் திறனையும் ஈடுபாட்டையும் காட்டுகின்றன. தமிழியல் முறை வரலாறு என்ற பதிப்பு நூலையும் இவர் எழுதியுள்ளார்.

தியாகராசா, சாரதா, ஏ.பி.சி. பராசக்தி மகளிர், அரசினர் மகளிர் ஆகிய கல்லூரிகள், புதுவை, பாரதியார், அண்ணாமலை, மனோன்மணியம் சுந்தரனார் ஆகிய பல்கலைக்கழகங்கள், பாண்டிச்சேரி தமிழிலக்கிய உயராய்வு மையம் ஆகிய நிறுவனப் பாடத்திட்டத்தில் இவருடைய படைப்புகள் இடம் பெற்றுள்ளன. இப்பதினொரு இடங்களில், ஒன்பது இடங்கள் ஹைக்கூ கவிதைகளைப் பாடமாக வைத்துள்ளன. **தாகம் தீரா வானம்பாடிகள்** (1994-96), **குடையில் கேட்ட பேச்சு** (2000-2003) என்ற புதுக்கவிதை நூல்களிலுள்ள ஹைக்கூ கவிதைகள் மட்டுமே பாடத்திட்டத்தில் இடம்பெறுகின்றன. மேலும் **நிரந்தர நிழல்கள்** என்ற புதுக்கவிதை நூலும், **புதுக்கவிதைகளில் சமுதாயம்** என்ற உரைநடை நூலும் பாடத்திட்டத்தில் உள்ளன.

இவரால் நெறிப்படுத்தப்பட்ட ஐவர் முனைவர் பட்டம் பெற்றுள்ளனர்; மூவர் ஆய்வு செய்து வருகின்றனர். இருபத்திரண்டு பேர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளனர்; பதினான்கு பேர் செய்து வருகின்றனர்.

மாநாடு, உலக மாநாடு, தேசியக் கருத்தரங்கு, இந்தியத் தமிழாசிரியர் மன்றம் போன்ற கருத்துப் பட்டறைகளில் கலந்து கொண்டு முப்பத்து மூன்று ஆய்வுக் கட்டுரைகள் வழங்கியுள்ளார். 90களில் தொடங்கி 2002 வரை முப்பத்து எட்டு முறை இவரது கவிதைகள் இடம்பெறல், நூல் அறிமுகம் மற்றும் விமர்சனம் போன்றன **நிகழ்** (ஞானி), **குமுதம், நக்கீரன், கவிதாசரண்** போன்ற இதழ்களில் இடம்பெற்றுள்ளன. 23 நூல்களுக்கு முகவுரை வழங்கியுள்ளார்.

சென்னை, திருச்சி, பாண்டிச்சேரி வானொலிகளில் கவிதை, உரை போன்றவற்றை 27 முறைகள் தந்துள்ளார். பாண்டி

வானொலியில் படித்த கவிதைகளின் தொகுப்பே '*காற்றின் சிறகுகள்*' என்ற நூலாக வெளிவந்துள்ளது. சன் தொலைக் காட்சியில் 'அறைகள்' எனும் பொருண்மையில் பேசியுள்ளார்.

இலக்கியப் பணி (யூ.எஸ்), 2000இல் 'பெண்களுக்கான சாதனையாளர்' விருதினை வழங்கி உள்ளது. சேலம் தமிழ்ச்சங்கம், 'புதுக்கவிதைகள் ஒரு முழுமையான அலசல்' என்பதற்காகப் பரிசினைத் தந்துள்ளது. கவிஞர் மித்ரா தமிழ்ப்பெண் கவிஞர்களில் குறிப்பிடத்தக்கவர். ஹைக்கூ கவிதைகளின் வழி நன்கறியப் பட்டவர். இளைய படைப்பாளிகளைத் தனது வாழ்த்துகள் வழி உற்சாகமூட்டி வருபவர்.

### இயற்கை

மனிதன் தான்வாழும் சூழலில் மனம் இயைந்து வாழ்ந்தால் மட்டுமே மகிழ்ச்சி கொள்கிறான். அம்மாதிரியான பொருத்தம் இல்லாது போகும் போதெல்லாம் அதனைப் பெறுவதற்குப் பலவகையிலும் முயற்சிக்கிறான். இவ்வுணர்வு கலை, இலக்கியத்துறைகளில் தலைகாட்டுவது இயல்பு. இதனை மித்ராவின் கவிதைகளிலும் காணமுடிகிறது. அறிவு, முயற்சி போன்றவற்றின் வழி மனிதன் சந்திரனில் காலை வைத்து விட்டான். இருப்பினும் வானம், சூரிய சந்திரர் விண்மீன்கள் போன்றவை மனிதனுக்கு என்றைக்குமே அதிசயப் பொருட்கள் தான். மண், மலை, ஆறு, வானம் போன்றவை இக்கவிஞருக்கு மனித உருவில் தோன்றுகின்றன. இவரது கவிதையில் இயற்கைக் காட்சிகள் மனிதப் படிவங்களாகப் பின்வருமாறு மாற்றப்படுகின்றன.

**இரவு முழுதும்**
**தூங்கிய**
**சோம்பேறிச் சூரியன்**
**உறக்கப் போர்வையை**
**உதறி எறிந்து விட்டு**
**சோம்பல் முறிக்கும் நேரம்** (நி.நி. ப. 8)

மேலும் சில கவிதைகள் முழுமையான மனித உருவங்களாக உயர்வதையும் காணமுடிகிறது. நட்சத்திரங்களை,

**நீங்கள்**
**எந்த நிரபராதிக்காக**
**சாட்சியங்கள் சொல்ல**
**அடிக்கடி வாய் திறக்கிறீர்கள்** (ப. 23)

என்று கூறும்போது நட்சத்திரங்களின் கண் சிமிட்டலுக்கு ஒரு புதிய அர்த்தத்தைத் தருகிறார். ஈழத்தமிழர் படும்பாடு, வரதட்சணைக் கொடுமை, ஏழ்மை, முதலானவற்றை இயற்கைக் காட்சிகளின்வழிக் காட்டுகிறார்.

**சிங்கள வெறியர்கள்**
**தமிழ்க் குழந்தைகளை**
**வாணலியில் போட்டு**
**வறுத்தெடுப்பது போல்**
**ஏழை வர்க்கத்தை**
**இரக்க மில்லாது சுட்டெரிக்கிறாய்** *(பக். 14–15)*

**எந்த மகளுக்கு நாளும்**
**சீர் கொண்டு ஓடுகிறாய்?**
**உனக்கும் வரதட்சணைக் கொடுமையா? (மேகம், ப. 30)**

**ஏழையின் வாழ்வு போல்**
**உங்கள் வாழ்வும்**
**பயனற்ற வாழ்வு தான்** ***(கள்ளிப்பூக்கள், ப. 87)***

வானத்தை வேள்விச் சாலை, விளையாட்டு மைதானம், மலர்த்தோட்டம் என்று கூறிக் காட்சிப் பொருளைக் கவிதைப் பொருளாகக் காட்டும் கவிதையின் ஒரு பகுதி பின்வருமாறு:

**நீ**
**மேகக்குடை பிடித்து**
**அந்தரத்தில் சதா காலமும்**
**ஆதரவின்றி நிற்கிறாயே?**
**மண்ணில் என்ன அதிசயம்** *(ப.4)*

ஆறுகள் பற்றிக் கூறும்,

**மலையில் பிறந்து**
**சமவெளியைத் தழுவும்**
**சமதர்ம வாதிகள்** *(ப. 50)*

என்ற கவிதை அடிகள் ஆறுகள் புத்துலகத்திற்கு வழிகாட்டுதலை உணர்த்துகின்றன. நீரானது மலை உச்சியில் இருந்து இறங்கிச் சமவெளியைச் சந்தித்துக் கற்களை வருடிப் புழுதியோடு புரள்கிறது. அப்போது புழுதி பாட்டாளியின் துயருக்கு உருவக மாகிறது. இவருக்குப் பிடித்த வாழ்க்கைச் சூழல், தற்காலத்து நாகரிக நகரங்களில் இல்லை. இவர் விரும்பும் இயற்கையைக் காட்சிப்படுத்துகிறது பின்வரும் கவிதை.

காலை முதல் மாலை வரை
மாலை முதல் இரவு வரை
மண்மகள் மடியமர்ந்து
கண்மலர்ந்து மணம் வீசும்
கானகத்துப் பூக்கள் !

உயிரினங்கள் பசியாற
உலகில், தியாகியாய் வளர்ந்திருக்கும்
மரம் செடி கொடி
புல்பூண்டுகள் !

வயல் வரப்புகளில்
பனிநீர் சுமந்து நிற்கும் புற்கள்
கரையோரம் கவிதை பேசும்
வாய்க்கால்கள் !

நான் செல்லும் வழியெங்கும்
கண்காட்டி கை அசைக்கும்
மேகத் தோழிகள் !

யாருமற்ற தனிவழிப் பயணத்தில்
பயம் போக்க இளமையில்
மனப்பாட வரிகளை
வாய்விட்டுச் சொல்லிச் சென்ற
என் எண்ணத்தில் இனிக்கும்
வண்ண ஒழுங்கைகள்!

தங்க நிற இலையோடு தலையசைத்து
தாய் மடியாய் நிழல் தந்து
அன்பு செய்த
அந்த ஆலமரம் !

காட்டாறு சிந்திய எச்சிலாய்
ஓடைகள்
மேடு பள்ளங்கள்
பசும்புல் தரைகள்!

குட்டித் தீவுகளாய்
ஏரி குளங்கள்
ஆழம் காண முடியாத ஆழ்கடல்
தன் போக்கில் தான் நடந்து
சதா முணுமுணுக்கும் ஆறுகள்
இவையெல்லாம் இயற்கையளித்திட்ட
இனிய நல் வரங்கள் (கா.சி. பக். 11-12)

இக்கவிதை இவர் யாருக்கும் உடமையாகாத அனைவருக்கும் பொதுவான இயற்கையையே நேசிக்கிறார் என்பதை உணர்த்துகிறது.

நவீன சாதனங்களும், தொழில் நுட்பங்களும் கலக்காத பழம் கிராமத்தையே இவரது மனம் விரும்புகிறது. ஒற்றையடிப் பாதை, மரம்செடிகள், புல்வெளிகள், வயல், மரப்பாலங்கள், குடிசைகள், பொத்தல் குடிசைகள் போன்ற கிராமத்தின் வளங்களைச் சுட்டுகிறார். இன்று அது மாறியிருக்கும் நிலையைப் பின்வருமாறு காட்டுகிறார்.

**அன்று, நுரை தள்ளும் மாடுகளை**
**ஏர்பூட்டி உழும் பொன்னேர் உழவன் இன்று,**
**டிரேக்டரில் வலம்வந்து உழுகின்றான்!**

**இன்று, வரப்புகளில்லாத வயல்களில்**
**இயற்கை உரங்களின்றி ரசாயன உரங்கள் உண்டு**
**சிரித்து நிற்கும் பயிர்கள்!**

**விளைநிலங்கள் விலைநிலங்களாகி**
**கான்கிரீட் பயிர்கள்**
**காற்றில் செய்கையாய்**
**கலகலத்துச் சிரிக்கும்!**

**மரப்பாலங்கள் இன்று**
**கான்கிரீட் பாலங்களாய்க் காட்சி தரும்!**
**இயற்கை குடியிருந்த**
**அடுக்கு மாடிக் கட்டிடங்கள்**
**அழகாய் நின்றிருக்கும்!**
**உண்மையில்**
**கிராமத்தின் இயற்கை யழகு**
**காலத்தால் களவாடப் பட்டது!** (126)

தாமரையின் மொட்டுகள் - யானைத் தந்தங்களாகவும், நதி - மங்கையாகவும் உருவகப்படுத்தப்படுவதை,

**தாழைச் செடியெங்கும்**
**யானைத் தந்தங்கள்**
**மொட்டுகள்** (மித். ஹை. ப.87)

**நதிமங்கை கூந்தலுக்குப்**
**பூச்சூட்டி**
**அனுப்பும்**
**கரையோர மரங்கள்** (ப. 79)

என்ற கவிதைகள் காட்டுகின்றன.

**தொட்டிச் செடிக்கு நீரூற்றுகையில்**
**கேலியாய்ச் சிரிக்கின்றன**
**வேலிப்பூக்கள்** *(ப. 69)*

என்ற கவிதை இயற்கை முரணை அழகுற வெளிப்படுத்துகின்றது. இயற்கையில் முரணைக் காட்டும் கவிஞர் வாழ்க்கையில் வாழ்வின் புதிய கோணங்களையும், பரிமாணங்களையும் இயற்கையின் அனைத்து அம்சங்களோடும் இணைத்துப் பார்க்கிறார்.

### சுற்றுப்புறச் சூழல்

இயற்கையின் பயனை நன்முறையில் பெறவேண்டுமானால் சுற்றுப்புறச் சூழலைப் பாதுகாத்தல் தேவையாகிறது. ஆனால் சுற்றுச்சூழல் சீருடன் விளங்குவதில் பல இடையூறுகள் நாளும் தோன்றிப் பெருகிக் கொண்டிருப்பதைக் கண்ணுற்ற இக்கவிஞர் தனது சமூக உணர்வினை வெளிப்படுத்துகின்றார். புல்வெளி களும், மரங்களும் இயற்கையின் கொடை. அவை மனிதனுக்கும், மண்ணுக்கும், சுற்றுப்புறச் சூழலுக்கும் நன்மை தருவன. எனவே அவை பாதுகாக்கப்பட வேண்டும் என்பதை உணர்த்தும் கவிதைகள்:

**அழகுகள் தேடிச் சுழன்ற**
**கண்களைச் சுட்டது**
**புல்வெளியில் ....**
**புகையும் சிகரெட்** **(மித். ஹை. ப.31)**

**வெட்டப்பட்டுத் தொங்கியது**
**காடுகள்**
**அழிக்காதீர்கள்** **பலகை (ப.96)**

**சிம்பாநாய் தூங்குகிறது**
**ஹாக்கி திடலில், விழித்தெழுகிறது**
**சிறுநீர் கழிக்கப்பந்து விழும் இடத்தில்**
**(ஹை. என்தோ. கவிதை 18)**

### பெண்

அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு, பெண்புத்தி பின்புத்தி, கோழி கூவிப் பொழுது விடியாது என்பன சமூகத்தில் பெண்கள் குறித்து இருந்து வந்த நிலைகளைக் காட்டும் அனுபவ மொழிகள். இவையெல்லாம் நாகரிகமற்றவை; விலக்கப்பட வேண்டியவை என்று நவீனகாலத் தலைவர்களால் முன்னெடுத்துப் பேசப்பட்டன. பாரதி, பாரதிதாசன் போன்ற கவிஞர்களும்

வீரார்ந்த கவிதைகள் யாத்துள்ளனர். பாரதிதாசனுடைய கொள்கைவழிப் பெண்விடுதலை பற்றி இக்கவிஞரும் எழுதியுள்ளார். அவர் பெண்மைக்குச் சிறப்புச் சேர்த்த கவிதைப் பொருண்மைகளை இக்கவிஞரும் கையாளுவதை,

*ஆணுக்குப் பெண் ஆற்றலில் நிகர் என்றார் பாரதி!*
*ஆணுக்குப் பெண் அனைத்திலும் நிகர் என்றார் பாவேந்தர்!*
*அன்னையும் பெண் மகவு என்றால் அஞ்சுகின்ற*
*காலமிது! கண்விழித்துப் பார்க்கும் முன்பே*
*கல்லறையில் இடும் கருணையிலா நீள் உலகு*
*கனிவோடு பெண்படைப்பை படைத்திட்ட பாவேந்தே!*
*பார் உள்ளவரை பாவையர் உலகம்*
*உமைப் பாங்காக நிதம் வணங்கும்* (கா.சி. 48)

என்ற கவிதைவழி அறியமுடிகிறது. பெண் விடுதலையில் இன்னும் மாற்றம் தேவை என்பதை உணர்த்த உரிமையற்று வாழுகின்ற பெண்களின் நிலைகளைப் பின்வரும் கவிதைகளில் காட்டுகிறார்.

*உன்னால் முடிகிறது குயிலே! ஊரறிய அழுவதற்கு*
*நான் மனிதப் பெண்!* (மி. ஹை. ப. 18)

*பறந்து போகிறது-அந்தச்*
*சின்னப் பறவை*
*சன்னல் வழியே பார்க்கிறேன்* (ஹை. ப. 42)

### தத்துவம்

*நிலத்தைப் பார்த்து, உன்னில் மாற்றங்கள் உண்டு*
*அழிவு என்பது உன்*
*அகராதியில் இல்லை* (நி.நி. ப. 42)

எனக் கூறும் போது உயிர் அழிவதில்லை மாற்றம் தான் பெறுகிறது என்ற இறவாமைத் தத்துவம் வெளிப்படுகின்றது.

### ஆன்மிகம்

மரணமிலாப் பெருவாழ்வு எனும் சித்தர் கோட்பாட்டை மறைபொருளாகக் காட்டும் இவர், கடவுள் பற்றிய தம் கருத்தை,

*ஒரு கல் –*
*அதற்கு விபூதி குங்குமம்*
*கொஞ்சம் பூ சுற்றல், இடம் கொஞ்சம் தூய்மை. . . .*
*இது போதும்*
*கடவுள் வழிபாட்டிற்கு. . . .*

கொலை கொள்ளை
திருட்டு கள்ளக் கடத்தல்
பாவம்செய்வோர்க்கு
கோயில் ஒரு சரணாலயம்

விஞ்ஞான உலகில்
கடவுள் என்றோ
காலாவதி யாகிவிட்டார். . . .

இருந்தாலும் . . . .
நம்மவர்க்கு
கோயில்
ஒரு பொழுது போக்கிடம் . . . . . . (நி.நி. ப. 103)

என்று வெளிப்படையாகவே தெரியப்படுத்துகின்றார். மனிதனால் படைக்கப்பட்ட கடவுளும், அவன் குடிகொண்டுள்ள கோயிலும் பக்தி என்ற உணர்வால் மனித வாழ்வைப் பண்படுத்தின. இருப்பினும் அவன் செய்யும் தவறுகளை இறக்கி வைக்கும் போக்கிடமாகவும் அவை ஆகிவிட்டன. அறிவியல் வளர்ச்சி கடவுள் கொள்கையில் உள்ள நம்பிக்கையைத் தகர்த்துக் கொண்டு வருகிறது. தெய்வ நம்பிக்கை உள்ளவர்களும் அவ்வழிபாட்டின் முக்கியத்துவத்தை உணர்ந்தபாடில்லை என்பன போன்ற கருத்துகளை இக்கவிதை முன்வைக்கிறது.

மேலும் புற அலங்காரமாக நெற்றிக்குப் பொட்டிடுவதும், பக்திப் பாடல்களை, மந்திரங்களை நேரங்கிடைக்கும் போதெல்லாம் கூறிக்கொண்டிருப்பதும், இறையை வணங்கும் போதுகூடக் கவனத்தைச் சிதற விடுவதும் பக்தியல்ல. மனத்தூய்மை இல்லாத பக்தியால் எப்பயனுமில்லை. கடமையைச் செய்வதே சிறந்த கடவுள் பக்தி என்பதை,

நெற்றியில் பட்டை
கொஞ்சம் குங்குமம்
சந்தனம் மணக்க வேண்டும் . . . .
இதுதான் பக்தி
மனம்நிறை அழுக்கு . . . .

சில பஜனைப் பாடல்கள்
அல்லது
கடவுள் பெயர்கள்
உச்சரிக்கணும் . . . .

கை மட்டும் தொழுதிருக்கும்
கண் பார்வை மட்டும்
பெண்களைப் பார்த்திருக்கும் . . .

கடமையை மறப்போர்க்கு
பக்தி ஒரு நனவுப்பிரதேசம்
கடமையைச் செய்வோருக்கு
பக்தி மாயப் பிரதேசம். . . (நி.நி. ப. 104)

என்ற கவிதையில் கூறுகிறார்.

அரசியல்

ஒரு நாள் விடுமுறை தந்து உதவும் சுதந்திரம் வறுமைப் பிடிக்குள் சிக்குண்டிருக்கிறது. இந்நிலைக்குக் காரணம் மக்களின் விழிப்புணர்வின்மையே என்று கூறும் கவிதையின் ஒரு பகுதி:

இந்நாட்டு மக்களுக்கு
சுதந்திரத்தின் பொருளே
புலப்படா திருக்கையில்
பொன்விழா தேர் புறப்பட
ஒப்பனைகள்
செய்யப்படுகின்றது (நி.நி. ப. 95)

அடிமைத் தளையினின்றும் விடுதலை எனும் இலட்சிய நோக்கில் பெறப்பட்ட சுதந்திரம் காட்டும் வறுமையின் கொடுமையை, தேசியக் கொடி என்ற கவிதையிலும் கூறுகிறார்.

கொடிக்கம்பங்கள் ஒப்பனையால்
சிங்காரிக்கப்பட்டும்
கொடி பட்டொளி வீசிப்
பறந்து கொண்டிருக்கும் போதும் . . . .
அதன் கிழே
இந்நாட்டு மன்னர்கள்

எச்சிலைக்கு நாய்களோடு போட்டியிட்டு
சண்டையில் ஓய்ந்தும் . . . .
நீ, ஒருமைப்பாட்டின்
சின்னம்தான் (நி.நி. ப. 96)

தேர்தல் நேரத்தில் மக்கள் விழிப்புணர்வுடன் சிந்தித்துச் செயல் பட்டால் மேலுள்ள அவலங்களுக்குத் தீர்வு தேட இயலும். ஆனால் ஒற்றைப் பிராமணனும், விறகு, எண்ணெய் விற்பவரும் எதிர்வருதல் ஆகாது என்பன போன்ற மூடநம்பிக்கைகளைப் பின்பற்றுவதற்கே மக்களுக்கு நேரம் சரியாக இருப்பதால் இதைப் பற்றியெல்லாம் சிந்திக்க ஏது நேரம் என்பதை, உணர்த்தும் கவிதையின் ஒரு பகுதி:

*எதெதெற்கோ*
*சகுனம் பார்க்க போரே*
*தேர்தலுக்கு –*
*இந்த நாட்டின் எதிர்காலத்தை*
*கறுப்பு மையிட்டு*
*துக்கத்தில் தொடங்குவதை எண்ணியதுண்டா? (நி.நி.ப. 93)*

தேர்தலில் ஏமாந்த மக்களை அரசியல்வாதி எப்படி ஏமாற்று கிறான் என்பதைக் கூறும் கவிஞர், கொலை, கொள்ளை, பெண் பித்து, தேர்தலின் போது பல்லிளிப்பு, முடிந்தபின் முகம் சுளிப்பு போன்றவை இவனின் பண்பு என்றும் கூறுகிறார். இக்கவிதையின் ஒரு பகுதி:

*வெள்ளையன் சுரண்டியது*
*பாதி என்றால்*
*மீதி*
*இவர்களாலேயே சுரண்டப்படுகிறது (நி. நி. ப. 97)*

இத்தகைய மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தகுதியற்ற அரசியல்வாதிகள், மக்களது பிரச்சினைகளை ஒதுக்கித் தள்ளி விட்டு, தங்களுக்காக வாய்ச்சண்டை, ஒலி பெருக்கி உடைப்பு, செருப்பு வீசல், கொச்சைச்சொல் பேசல் போன்ற தகாத செயல்களைச் செய்து பார்வையாளனுக்கும், பத்திரிகையாளனுக்கும் மகிழ்ச்சியூட்டும் போக்கிடமாகச் சட்டசபையை ஆக்கி விடுகின்றனர் எனச் சாடுகிறார் (ப. 98)

வழக்கறிஞர்களின் மனச்சாட்சியில்லாச் செயல், சட்டத் திலுள்ள ஓட்டை, நீதியின் சடத்தன்மை போன்றவற்றைச் சாடும் கவிஞர் பொய் கூறிச் சோதிடர் பணம் பெறுவதை,

*தங்கள் வாழ்வு வளமாக*
*மற்றவர்கள் வாழ்வைச்*
*சுரண்டும் சூன்யக்காரர்கள் ....*
*குருட்டுக் கணக்கில்*
*மக்கள் மனங்களை*
*மருட்டும் திருட்டுப் பயல்கள்*
*வேலை வெட்டியற்ற*
*இவர்களுக்கு*
*பொய் சொல்வதே*
*ஒரு பொழுது போக்கு (நி.நி. ப 92)*

என்று கூறிச் சாடுகிறார்.

## ஹைக்கூவின் சிறப்பு

பொதுவாக ஹைக்கூ என்பது, மூன்றடிகளில் முன் இரண்டு அடிகளில் இருந்து மாறுபட்ட உணர்வை இறுதி அடி தருவதாக அமையும். இவரது ஹைக்கூ கவிதைகள் நமது சமூக மரபில் இருந்துவந்த எள்ளல், சிலேடை, இறைச்சி போன்றவற்றை ஆற்றலுடன் புதிய உணர்வுடன் வெளிப்படுத்துகின்றன. நமது கவிதை உத்திகளையும், தற்காலத்து மனித வாழ்க்கையையும் ஜப்பானிய ஹைக்கூவையும் இணைத்துக் கவிதை ஆக்கும் திறனைக் கவிஞர் கைவரப்பெற்றுள்ளார். இவரது ஹைக்கூ கவிதைகளில் மேலும் சிலவற்றைக் காண்போம்.

**கலை கலைக்காகவா?**
**எறும்புகள்**
**தின்னும்**
**கிராமத்துக் கோலம்** *(மித். ஹை. ப. 37)*

மனிதன் தானாகத் தெரிந்துகொண்டவற்றுள் ஒன்றுதான் கோலம் போடுவது. கலை உணர்வின் வெளிப்பாடான கோலம் மண்ணிலுள்ள கண்ணுக்குத் தெரியாத சிறிய உயிரினங்களுக்கு உணவாகப் பயன்படும் என்பதால் அரிசிப்பொடியில் போட்டனர். எறும்புகள், பறவைகள் போன்றவை வீட்டிற்குள் வந்து பொருட்களை உண்டு சேதப்படுத்தும் வழக்கம் ஏற்படாமல் இருக்கவும் அரிசி மாவில் கோலம் போட்டிருக்கலாம். இன்று வெள்ளைக் கல்லில் இடும் கோலமாவு காற்றிலே கலந்து மனிதர்களின் மூக்கிலே நுழைந்து நலத்திற்குக் கேட்டை விளைவிக்கிறது. எது எப்படியிருப்பினும் எந்த ஒன்றும் அது அதுவாகவே இருக்கும்போது பயனுடையதாய் அமையும்; உயர்ந்த தூய்மையான எண்ணத்தின் செயல்பாடு பயனுடையதாய் அமையும் என்பன இக்கவிதைவழிப் பெறப்படுகின்றன.

**குளம்**
**முகம் பார்க்கும் நிலா**
**குளிக்காமல் திரும்பினேன்** *(52)*

இதில் குளத்தின் சிறப்பும், உயர்வும் வெளிப்படுகின்றன; ஆனால் வாழ்வின் பயன் துய்க்கப்படவில்லை. நடைமுறைக்கும் கலை உணர்வுக்கும் பொருத்தமுற அமைந்த முன் கவிதையின் அழகியல் நிறைவை, இன்பத்தை இது தரவில்லை என்றே கூறலாம்.

பறவைகளுக்குப்
பழமொழிகள்
பசிக்கு ஒரே மரம் *(53)*

இக்கவிதை மனிதர்களிடையே வேறுபாடுகாட்டக் கூடாது என்பதைக் காட்டுகிறது.

**காலை வெயில்**
**பச்சை வயல்**
**சில நட்சத்திரங்கள்** *(54)*

இச்சிறிய ஹைக்கூவில் கவிஞர் தன்னையும், இம் மானுடத்தையும் நேசிக்கும் பாங்கை அழகுற உணர்த்துகிறார்.

**வயல் மனசு துடிக்கும்**
**கூலிக்குக் காத்திருக்கும் தாய்**
**தப்புக்கதிர் பொறுக்கும் பிள்ளை** *(55)*

இக்கவிதை உழைக்கும் மனிதரின் வாழ்வு மிகவும் மோசமாகப் பாதிக்கப்படுவதைப் பார்த்த வயலின் மனதும் துடிக்கிறது என்பதாக அமைகிறது. இதன்வழி வயலின் மனதாக மனிதநேயம் மிகுந்த மானுடத்தின் மனத்தைக் காட்டுகிறார்.

**இவ்வளவு கவிஞர்கள்**
**சுரண்டினால்**
**நிலவே ஏன்வராது**
**அமாவாசை** *(88)*

அமாவாசையன்று நிலவு ஒளியற்று இருக்கும் இயற்கை நிகழ்வை இக்கவிதை காட்டுகிறது. இதில் கவிஞர்கள் நிலவை மிகுதியாகப் பயன்படுத்துகின்றனர் என்பது மட்டும் கூறப்பட வில்லை. உழைப்பு சுரண்டப்படுவதால் உழைப்பாளியின் வாழ்க்கை ஒளியிழந்து இருண்டு கிடக்கிறது என்பதும் எள்ளல் தொனியில் வெளிப்படுத்தப்படுகின்றது.

**கல் மனசுக்காரர்கள்**
**பாருங்கள்**
**பாறைகளை**
**உடைக்கிறார்கள்** *(58)*

இதில் முன்சொன்ன கவிதையினுடைய மறைபொருள் வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளது எனலாம்.

**தலைமுறைக் கோபம்**
**அடிவிழ–அடிவிழ**
**அதிரும் பறை** *(59)*

இதில் ஒடுக்கப்படும் மக்களின்மீது செலுத்தப்படுகின்ற வன்முறையும், அதன் விளைவாகத் தோன்றும் அவர்களின்

எதிர்ப்பும் சிலேடையாக வெளிப்படுகிறது. ஏழ்மை, வறுமை, பொருளாதார ஏற்றத்தாழ்வு, நிரந்தரமற்ற வாழ்க்கை, ஓய்வற்ற உழைப்பாளியின் வாழ்வு, நிரந்தரத் தீர்வின்மை போன்ற பொருண்மைகளைப் பின்வரும் கவிதைகள் வெளிப்படுத்துகின்றன.

பசித்த குழந்தை அழும்
கஞ்சி காய்ச்சுவான் தந்தை...
சுவரொட்டிகள் ஒட்ட (31)

செழித்த வயற்பரப்பில்
மாடு மேய்கிறது
பசித்த சிறுவன் (101)

மணற்பரப்பில்
மீன்கள் காயும்
பசியில் மீனவன் (92)

தொடர்ந்த மழை
தொலைந்த உப்பளங்கள்
கரிக்கும்
விழிநீர் (91)

சிம்னி விளக்கொளியில்
எதிர்கால இந்தியாவைப்
படிக்கிறான்
ஏழைச் சிறுவன் (89)

ஒரு விடுமுறைப் பயணமில்லை
கேளிக்கைகள் இல்லை. அந்த ஹரிகேனின் விலைவு
ஒரு குழந்தையின் வளர்ச்சிக்கு (ஹை. என்தோ. க. 86)

சோர்வடைந்த உழைப்பாளியின் ஓய்வு
மற்றும் குருடனின் விழித்தெழுதல்
மற்றொரு முறையும் ஓர் இரவுக்குள் (21)

மனிதனின் அவலநிலை, அதிலிருந்து விடுபட அவன் மேற்கொள்ள வேண்டுவன என்பனவற்றை உணர்த்தும் பல கவிதைகளைத் தந்துள்ளார். வாழ்க்கைப் பிரச்சினைகளை எதிர்நோக்கிச் சமாளிக்க வேண்டுமே அன்றி, சரியற்றத் தீர்வுகளைத் தேடுதல் கூடாது என்பதை,

தப்பித்துக் கொள் குடியின் மூலம்
அல்லது கற்பனை மூலம்...
ஒரு முயற்சி மிதப்பதற்கு
புனிதமணல் மீது மிதக்க (74)

என்ற கவிதையிலும், நாம் செய்ய வேண்டியதைச் செய்கிறோம்; பெறவேண்டியதைப் பெறுகிறோம். ஆனால் அவற்றை உரிய காலத்தில் பெறமுடியாத துரதிஷ்டசாலியாக இருக்கிறோம் என்பதை,

> **வரிசையில் முதலில் நிற்பவன் தான்**
> **அதற்குமுன் சென்ற**
> **பஸ்ஸை விட்ட**
> **அதிர்ஷ்டமில்லாத முதல் மனிதன்** *(77)*

என்ற கவிதையிலும், நாம் அடையக் கூடிய வெற்றியானது போராட்டம், வேதனை, விரக்தி போன்றவற்றின் பின்னணியில் கிட்டுவது என்பதை,

> **வெறுமை மற்றும் மனச்சோர்வு வெறுமை**
> **மேலும் மனச்சோர்வுடன் வெறுமை மற்றும்**
> **அது வெற்றிக்குப் பின்னால்** *(112)*

என்ற கவிதையிலும், பட்டகாலிலே படும், கெட்ட குடியே கெடும் என்பதற்கேற்பத் தொடர்ந்து துன்பங்களை நாம் அனுபவித்து வருகிறோம் என்பதை,

> **விழுந்த வலி தீருமுன்**
> **விரட்டும் காற்று**
> **பாவம் இலை** *(ப. 48)*

என்ற கவிதையிலும் காட்டுகின்ற மித்ரா மனிதனின் வாழ்க்கைப் போராட்டம் நிறைந்தது என்பதை உணர்த்துகிறார். வேலை என்பது மனிதனுக்கு உயிர் போன்றது. அது கிடைக்காமல் போகும்போதும், பறிக்கப்படும்போதும் அவன் நடைப்பிணமாகிறான் என்பதை,

> **ஒரு மனிதன் குறிப்பாக வேலையிலிருந்து நீக்கப்பட்டவன்**
> **தன்னைக் கடந்து செல்லும் எந்த**
> **அழகிகளையும் நோக்கமாட்டான்** (ஹை. என்தோ. க. 76)

என்ற கவிதை காட்டுகிறது. எல்லைகள், வேறுபாடுகள் என்பன மனிதனுக்கு உதவியாக இருக்கின்றன; அவனை உயர்த்துகின்றன. ஆனால் சமூகத்தின் அறியாமையானது ஏற்றத்தாழ்வையும், போலி கௌரவத்தையும் உருவாக்கிவிடுகின்றன. இது வாழ்வைப் பாழ்படுத்தும் என்பதை,

> **ஒருவனுடைய எல்லைகள்**
> **சமுதாயத்தின் மதிப்புக்காக**
> **சந்திக்கின்றன ஒரு டம்பத்தை உருவாக்க** *(30)*

என்ற கவிதை உணர்த்துகிறது.

இன்றைய கவிஞர்கள்வழி நின்று இக்கவிஞரும் சுதந்திரத்தைப் பாடுகிறார்; அடிமைத் தளைகளை எதிர்க்கிறார். ஜப்பானிய ஹைக்கூ கவிதையின் அழகியலைத் தமிழ்ச் சூழலோடு இணைத்து, சமூகப் பார்வையோடு கவிதைகள் படைத்துள்ளார். இயற்கையை ஆராதனைக்குரிய அழகுப் பொருளாய், தெய்வாம்சமாய், சோகங்களை இறக்கும் சுமைகளாய்க் காட்டுகிறார். இவரது கவிதைகளில் இயற்கையும் சமுதாயமும் பின்னிப்பிணைந்துள்ளன. பழைய கிராமத்து எளிய வாழ்க்கையில் நாட்டம் காட்டுகிறார். மனிதனின் கைபடாத இயற்கையின் தூய்மை அழகில் புதைந்து போகிறார். எனினும் இன்றைய நவீன உலகத்தில் சிக்கல்களுக்கு முகங்கொடுக்காமல் பின் வாங்குகிறார். சிந்தனை ஆற்றலுடன் கவிதைகளைத் தரும் இவர் இதனையும் கைக்கொண்டால் அழகுக்கு அழகு சேர்த்தாற்போல் இவரது கவிதைகள் பொலிவுறும்.

## முதன்மை நூல்கள்

1. **காற்றின் சிறகுகள்,** அன்பு நிலா பதிப்பகம், வந்தவாசி, 2000.
2. **நிரந்தர நிழல்கள்,** பைந்தமிழ்ப் பதிப்பகம், சிதம்பரம், 1988.
3. **மித்ராவின் ஹைக்கூ கவிதைகள்,** அன்புநிலா பதிப்பகம், வந்தவாசி, 2002.
4. **ஹைகூ என் தோழி,** அன்னை பூமி பதிப்பகம், 1994.
5. **ஹைகூ கவிதைகள்,** சாரல் வெளியீடு, சென்னை, 1990.

# வேலூர் ம. நாராயணன்

*கவிஞர் அறிமுகம்*

*வேலூரில் 1-1-1950இல் பிறந்தார். தந்தை எம்.கே. மதுரை. தாய் ம. வள்ளியம்மாள். முதல் வகுப்பு முதல் பி.எஸ்.ஸி. பட்டப் படிப்பு வரை வேலூரிலேயே படித்தார். பச்சையப்பன் கல்லூரியில் எம்.ஏ. தமிழ் படித்தார். பட்டம் பெற்றதும் சென்னை கௌரிவாக்கம் எஸ்.ஐ.வி.இ.டி. கல்லூரியில் ஓராண்டு தமிழ்த் துறையில் பணியாற்றினார். 1973 முதல் வேலூர் பாரத ஸ்டேட் வங்கியில் எழுத்தராகப் பணியாற்றி வருகிறார். 'பெரியாரும் மனித நேயமும்' எனும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆய்வு நிகழ்த்தி முனைவர் பட்டம் பெற்றார். படித்த படிப்பிற்கும் பார்க்கும் வேலைக்கும் இடைவெளி அதிகம் என்பதை உணர்ந்து, தமது இலக்கிய வேட்கைக்கு வடிகாலாக அமையும் வகையில் 'வேலூர் இலக்கிய அன்பர்கள் வட்டம்' எனும் அமைப்பினைத் தொடங்கி 25 ஆண்டுகள் நடத்தியிருக்கிறார். 1978 முதல் கவிதை படைத்து வரும் வேலூர் ம. நாராயணன் இதுவரை வெளியிட்டுள்ள கவிதை நூல்கள் வருமாறு:*

1. *நிலா முற்றம் (1983)*
2. *பொற்காலம் (1984)*
3. *செவ்வானம் (1987)*
4. *கற்பூரப் பெட்டகம் (1989)*
5. *பெருமிதம் (1992)*
6. *அமிழ்தம் (1996)*
7. *கிழக்கு திசை (1999)*
8. *நிலா முகம் (2001)*
9. *இன்பமும் நாமும் (2003).*

### சொற்பொழிவு நூல்கள்

அமுத வெள்ளம், கருவூலம், எழுநிலை மாடம், விருந்தும் மருந்தும், சிரிப்பும் சிந்தனையும், மானிட சமுத்திரம், வானமுதம்.

### கட்டுரைகள்

அறிமுகம், அறிவுத்தாகம், கண்ணோட்டம், இனியவை இருநூறு, பொன் மலர்கள், மலரும் மணமும், அமுதமொழிகள் ஆயிரம், சிகரங்கள், பெரியாரும் மனிதநேயமும் (முனைவர் பட்ட ஆய்வேடு), தமிழ் ஞாலம், நெஞ்சோடு நெஞ்சம், திசை கண்டேன் வான் கண்டேன், முத்துப்பந்தல்.

### முதல் கவிதை

கவிஞரின் முதல் கவிதை பாவரங்கப் பாடலாக மலர்ந்தது. வெண்மை என்பது தலைப்பு.

**கரியநிறப் பசுவெனினும்**
**கறக்கவரும் பால்வெண்மை**
**வரிக்குதிரை கரைநீங்கில்**
**வருங்குதிரை முழுவெண்மை**

எனப் பிராணிகளின் வெண்மையைப் பாடி,

**பந்தியெனுங் காவியத்தின்**
**பாட்டுடை நாயகனாய்**
**முந்திவரும் சோறும்வெண்மை**
**முடிவில்வரும் மோரும்வெண்மை**

எனப் புதிய உவமையின் வாயிலாகச் சோற்றின் பெருமை பாடி,

**ஒருவனுக்கு ஒருத்தியெனும்**
**உண்மையினை உணரார்க்கே**
**உருப்படியாய் வாழ்நாளில்**
**உறும்நோயின் பேர்வெண்மை!**

என, நெறிபிறழ்வதால் ஏற்படும் விளைவைப் பாடிப் பெருமை பெற்றார்.

### மொழிப்பற்று

தமிழ் மொழி மீதும் தமிழினத்தின் மீதும் பற்றுக் கொண்டவர் கவிஞர் ம. நாராயணன். இவ்வுணர்வு அவரது கவிதைகளில் இழையோடுவதைக் காணமுடிகிறது.

**எங்களைத் தகர்க்க எண்ணும்**
**எவர்க்குமே நீயோர் கூர்வாள் (நிலா முற்றம், ப. 17)**

எனப் பெருமிதம் கொள்கிறார். கூர்வாள் போன்றது தமிழ் என்கிறார்.

**சந்தத் தமிழ் – எழில்**
**சிந்தும் தமிழ் – எங்கும்**
**முந்தும் தமிழ் – நம்மை**
**உந்தும் தமிழ் உயர்கவே (ப. 20)**

என ஆதரவுக் கரம் நீட்டுகிறார் - போற்றுகிறார்.

**தடுப்பவர் உன்னரும் தந்தை யெனினும்**
**தாய்மொழிப் பற்றைத் துறவாதே ( ப. 63)**

என அறிவுரையும் கூறுகிறார். தமிழும்விழா தமிழரும் விழார் என்னும் உண்மையை

**தரணிக்கு உணர்த்தும் நன்மகளே – தைத்**
**திங்களில் பூத்திடும் பொன்மகளே!**
**(இன்பமும் நாமும், ப. 75)**

என்பது கவிஞர் உணர்த்தும் உண்மை.

> எனது கவிதைகள் கவர்ச்சிக்காக மட்டும் வளர்க்கப்படும் 'குரோட்டன்'கள் அல்ல; மாந்த இனத்தில், குறிப்பாகத் தமிழ் இனத்தில் உள்ள நோய்களைத் தீர்க்கும் அரிய மூலிகைகள் (நிலா முற்றம், ப. 3)

எனும் கவிஞரின் கூற்று, மனிதம் மீதும், தமிழினத்தின் மீதும் தமிழ்ச் சமுதாயத்தின் மீதும் அவர் கொண்டுள்ள அக்கறையை வெளிப்படுத்துகிறது.

## சமுதாயப் பார்வை

சமுதாயத்தில் ஆதிக்கம் செலுத்துகின்ற பொய்ம்மை, போலித்தனம், இரட்டை நாக்கு, பலவேடம், அறியாமை, முரட்டுத்தனம் ஆகியவற்றினால் கவிஞரின் உள்ளம் மிகவும் நொந்து போகிறது. இதன் விளைவாக அவர் படைக்கும் கவிதைகளில் (செவ்வானம்) கோபமும் ஆத்திரமும் பீறிடுகிறது.

**எங்கெங்கு பார்த்தாலும் ஏய்க்கும் நோக்கம்**
**எவர்வாயைத் திறந்தாலும் போலிப் பேச்சு (ப. 87)**

என்று சீறுகிறார்.

*சோறுமில்லை துணியுமில்லை தொழில்களு மில்லை*
*திருவிழாவிற் கிந்தநாட்டில் பஞ்சமு மில்லை*
*தின்கின்ற பணி மட்டும் ஒழுங்காய்ச் செய்யும்*
*சோம்பேறி சமுதாய நோயின் எச்சில் (ப. 67)*

என்றெல்லாம் கோபக்கனலில் பாடுகிறார். கவிஞரின் பார்வை திரைப்பட இரசிகர் மன்றங்களையும் விட்டு வைக்கவில்லை.

*இரசிகர்க்கேன் மன்றங்கள்? உயிரைக் கொல்லும்*
*இரத்தவாந்தி பேதிக்கேன் திருவி ழாக்கள்? (ப. 72)*

காட்டமான கேள்விதான். இளம் தமிழர்களின் சாபக்கேடு இரசிகர் மன்றங்கள். குடியிருக்கச் சொந்தமாக ஒரு குடிசை கூட இல்லாத ஏழை இரசிகன், பணக்கார நடிகனுக்கு மன்றம் அமைப்பது மடமைதானே? தவிர, சாராயக் கடையில் சரசுவதி பூசை நடைபெறுவது கூடக் கவிஞரை ஆத்திரப்பட வைக்கிறது.

*கண்ணைப் பறிக்கும் 'மின்'சர விளக்குகள்*
*இறையருள் சிந்தும் இசையின் முழக்கம்*
*தெருக்கள் தோறும் திருவிழாக் கோலமேன்?*
*இதுதெரி யாதா? இன்று*
*சரசுவதி பூசையாம் சாராயக் கடைகளில்! (ப. 45)*

**உழைப்பும் கண்ணீரும்**

உழைக்கும் வர்க்கத்தின் மீது கவிஞர் அன்புள்ளம் கொண்டு, அவர்களின் நிலைக்காகக் கண்ணீர் சிந்துவதைக் கவிதை வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

*கண்ணின்முன்னர் குற்றஞ்செய்யும்*
*கயவர் செல்வராகிறார்*
*மண்ணின்மீது வியர்வைசிந்தும்*
*மக்கள்வயிறு காய்கிறார் (நிலா முகம், ப. 104)*

குற்றம் புரிபவர் செல்வந்தராவதும், வியர்வை சிந்தி உழைப்பவர் பட்டினியால் வாடுவதும் ஏன்? இதற்கு யார் காரணம்? உழைப்பையும் உழைக்கும் வர்க்கத்தையும் மதிக்காத நேசிக்காத சமூகத்தின் மீது கவிஞர் நெருப்பை உமிழ்கிறார்.

*தொழிலாளர் இல்லை யென்றால் – தினம்*
*சுழல்கின்ற உலகே இல்லை*
*ஆனால் –*
*தொழிலாளர் வர்க்கத்திற்கு இந்தச்*
*சமூகத்தில் மதிப்பேன் இல்லை? (இன்பமும் நாமும், ப. 58)*

என்று காட்டமாக வினா தொடுக்கிறார். இந்நிலை மாற என்ன வழி என்பதையும் சுட்டிக்காட்டுகிறார்.

வீணைக்கும் விரலுக்கும் மோதல் வந்தால்
மீன்சந்தைக் கூச்சலின்றி இசையா தோன்றும்?
வீணுக்கு உழைத்திளைத்து ஓடாய்ப் போனோர்
வெகுண்டெழுந்தால் வையத்தின் போக்கே மாறும்
(பொற்காலம், ப. 84)

வானில் உலா வருகின்ற சூரியன், வயது முதிர்ந்த நிலையிலும் அயராது உழைப்பது போல, நிலத்தில் உழைக்கும் குப்பனுக்கு - வயிற்றுக்குச் சோறில்லை; உடுத்த உடையில்லை. இந்த இரண்டுக்கும் அவன் நாயாய் அலைய வேண்டி நேரிடுகிறது. ஆனால், கயவர் எல்லாம் மேல்தட்டில் அமர்ந்திருப்பர். இந்த நிலைமைக்கு முடிவு கட்டுவதற்கு வழியுண்டா? உண்டு என்கிறார் கவிஞர்.

புண்பட்ட நிலையிதனைப் புரட்டிப் பார்க்கப்
பேரறிவு தேவையில்லை; புரட்சி போதும்! (ப. 85)

உழைக்கும் வர்க்கம் சிந்தும் கண்ணீர் காணாமல் போக வேண்டுமானால், புரட்சி தேவை என்பதே கவிஞர் முன்வைக்கும் தீர்வாகிறது.

பாடுபடும் இனத்தவர்க்குச் சுதந்தி ரத்தால்
பெருமளவில் பயன்குவிக்கச் சபதம் ஏற்போம்!
(ப. 83)

என்று அனைவருக்கும் அழைப்பு விடுகிறார்.

ஏழைமை என்பது சாபமல்ல – முயன்றால்
ஏழைமை விரட்டுதல் கடினமல்ல
தோழமை உழைப்பும் நேர்மையென – நாளும்
தொடர்ந்து ழைத்தால் வெற்றி தூரமல்ல
(கிழக்கு திசை, ப. 28)

உழைப்பும் நேர்மையும் வெற்றி நல்கும் என்று அழுத்தந் திருத்தமாகக் கூறுகிறார் கவிஞர்.

## திரைப்பட எதிர்ப்புணர்வு

திரைப்படம், திரைப்பட நடிகர் நடிகையர், இரசிகர்கள் என, திரையுலகின் தொடர்புடையோரைத் தயக்கமின்றிச் சாடுகிறார்.

*நடிப்பினை உண்மை எனநம்பி*
*நரிகளை அரிமா எனப்பணிவார் (நிலா முகம், ப. 55)*

என்பது கவிஞரின் குற்றச்சாட்டு.

*திரைசா ராயம் லாட்டரி போதையில்*
*திளைத்திடும் மக்கள் இருகால் மாக்கள் (ப. 62)*

என்றே குத்திக் காட்டுகிறார். முந்தானை முடிச்சு எனும் திரைப்படம், வசூலில் மாபெரும் வெற்றிப்படம். ஆனால், தரத்தில்......? கேள்விக் குறியே! இத்திரைப்படம் ஆண்களிடையே ஏற்படுத்திய தாக்கத்தை நெஞ்சில் முள் தைப்பது போல் சாடுகிறார்.

***முந்தானை முடிச்சு'தனைப் பார்த்த தாலே***
***முப்பதுநாள் தந்தையர்க்குத் தூக்கம் இல்லை!***
***இந்தாம்மா 'முருங்கைக்காய்' பத்து தாயேன்***
***என்றன்றோ கடைத்தெருவில் அலைகின் றார்கள்!***
***(பொற்காலம், ப. 36)***

பெரிய திரை சமுதாயத்தில் ஏற்படுத்தும் விளைவு இவ்வாறு இருந்தால், இந்த நாடு வல்லரசு ஆவது பகற்கனவே என்று தொனிக்கும் வண்ணம் கவிஞர் கவிதையைப் படைத்திருக்கிறார்.

***தனதுவீர(?) நடிகர் திரையில்***
***தோன்றும் வேளையில் – பலர்***
***மணக்கும்பூவும் சில்லறையும்***
***வாரி இறைக்கிறார் – நாயாய்***
***மாறி குரைக்கிறார்! (கற்பூரப் பெட்டகம், ப. 21)***

கவிஞரின் திரைப்பட எதிர்ப்புணர்வின் உச்சகட்டமாக இவ்வரிகள் மிளிர்கின்றன. பொழுது போக்கிற்கானது திரைப்படம் என்றில்லாமல், வண்ணக் குப்பைகளை வண்ண மலர்கள் என நம்நாட்டு மக்கள் வாரி முகர்வது அறிவுப்பூர்வமான செயல் அன்று. மக்களின் இரசனை மாறுமா? காலம்தான் பதில் கூற வேண்டும். எனினும், எதிர்ப்புணர்வைப் பதிவு செய்வது கவிஞனின் கடமையாகிறது.

அரசின் கட்டுப்பாட்டிலிருக்கும் மக்கள் தொடர்புச் சாதனங்களும், திரையுலகத்தைக் 'கட்டி அழுவது' புரியாத புதிர். மூளைக்கு வேலை கொடுக்க முடியாதவர்கள்தாம், திரையுலகினரை அழைத்து நிகழ்ச்சிகளை 'வாரி' வழங்குகின்றனர்.

ஒப்பனையுலகத்துக்குப் பல்லக்குத் தூக்க இந்த நாட்டில் ஏராளமானோர் இருப்பது கவிஞர்க்கு வேதனையூட்டுகிறது.

> வரிகளே செலுத்தா திரைப்பட உலகினர்
> வரிகள் செலுத்தவே அறிவுரை தருகிறார்
> *(இன்பமும் நாமும், ப. 38)*

என்று ஏளனமாகப் பேசுகிறார் கவிஞர். உண்மைதானே? உபதேசம் என்பது ஊருக்குத்தானே இந்த நாட்டில்? இன்னுமொரு சேதி கூறுகிறார் கவிஞர். திரையுலக நடிகை அளித்த நேருரை (பேட்டி) பற்றிய அவரது கவிதை இது:

> ***ஆண்டிற் கிருமுறை ஆளனை மாற்றும்***
> ***திரைப்பட வானின் தாரகை யொருத்தியை***
> ***நாளிதழ் நிருபர் நேருரை கண்டார்.***
> ***'துடிப்புடன் நடிப்பதில் தேர்ந்த அம்மையே!***
> ***அடிக்கடி ஆளனை மாற்றுதல் ஏனோ?'***
> ***பேரிளம் பெண்ணவள் பொறுமையாய்ச் சொன்னாள்***
> ***'பழையன கழிதலும் புதியன புகுதலும்***
> ***நடிப்புத் துறையில் நாளும் இயற்கையே!'***
> ***(பொற்காலம், ப. 46)***

நாட்டு மக்களுக்கு இந்த நேருரையால் விளையும் பயன் என்ன? வாள் முனையைக் காட்டிலும் பேனா முனை ஆற்றல் மிக்கது என்ற உயர்மொழிக்குக் களங்கம் கற்பிக்கும் வகையில் இத்தகைய கேள்வி கேட்கும் நிருபரை என்ன செய்வது? அவலத்தின் உருவமாக ஊடக உலகம் விளங்குவது வேதனைக்கு உரியது.

### அரசியலுக்குச் சாட்டையடி

நம் நாட்டின் முன்னேற்றத்திற்குத் தடைக்கல்லாக அமைவன அரசியல் கட்சிகளும் சாதிகளும். அவற்றின் எண்ணிக்கைக்கு அளவேயில்லை. மக்களுக்கு நன்மை பயப்பதாக அவை இல்லை என்பதுதான் வேதனை.

> ***எத்துணைக் கட்சிகள் எத்துணைச் சாதிகள்***
> ***எத்துணை மதங்கள் இங்கே – இவர்நம்***
> ***இன்னலைத் துடைப்ப தெங்கே?*** *(ப. 56)*

சுயநலக் கும்பலும் கூட்டணியும் கோலோச்சும் வேளையில் மக்களின் இன்னலை யார் துடைப்பார்? தலைவிதி இது என்றே சோர்ந்து போவதும் கண்கூடு.

## பெண்மை பாராட்டல்

பெண்மைக்கு ஆதரவுக் கரம் நீட்டுவது இக்கவிஞரின் இயல்பு என்பதைக் கவிதைகள் படம்பிடித்துக் காட்டுகின்றன. பெண் குழந்தை பிறந்தவுடன், பரிதவிக்கின்றவர்க்கு என்ன கூற நினைக்கிறார் தெரியுமா?

> **பெண்வயிற்றால் தான்நமக்கு உடம்பே என்னும்**
> **பேருண்மை புரிந்தபின்னும் ஏனோ மக்கள்**
> **தன்வயிற்றில் பெண்பிறந்தால் கலங்கு கின்றார்!**
> **தலைவிதியை நொந்துதினம் வருந்து கின்றார்!**
> **(ப. 57)**

எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும் என்பதால், பெண் பிள்ளைக்கு அதைத் தந்து விட்டால், பிரச்சினைக்கு முற்றுப்புள்ளி வைத்து விடலாம் என்பது கவிஞரின் தீர்வாகிறது. பாவம் தாய்க்குலம் என்று பரிதாபப்படுகிறார் கவிஞர். தாய்க்குலம் இழைக்கும் தவறு யாது என்பதனைச் சுட்டிக்காட்டவும் தவறவில்லை.

> **உருப்படியாய் விடுதலையைப் பெறுவதற்கோ**
> **ஊறிவிட்ட கொத்தடிமை தவிர்ப்பதற்கோ**
> **விருப்பமில்லாத் தாய்க்குலங்கள் கோடி! வாழ்வில்**
> **மடமைகளே வேண்டுகின்றார் தேடித் தேடி**
> **(ப. 96)**

மகளிர்தம் மடமைகளே அவர்களுக்குச் சங்கிலியாக விளங்கு வதாகக் கருதுகிறார்.

> **பட்டாடை பொன்நகைகள் பொழுது போக்கு**
> **படக்காட்சி சுவையுணவு இவற்றைக் கண்டால்**
> **பட்டமரம் தழைத்ததைப்போல் மகிழும் பெண்கள்**
> **பணம்வந்த வகைபற்றிக் கேட்ப தில்லை! (ப. 87)**

என்று குறிப்பிட்டாலும், நமது நாட்டின் முன்னேற்றம் தற்போது பெண்கள் கையில் என்கிறார். அதே வேளையில், மனைவியைப் பாராட்டத் தவறவில்லை.

> **மனைவி யென்பவள் மாட்சிமை மிக்கவள்**
> **அனைத்து உறவினும் ஆழ மானவள் . . .**
> **தினைத்துணை யின்பம் துணைவர்க் களித்தபின்**
> **பனைத்துணை யாகவே பாரஞ் சுமப்பவள்!**
> **(நிலா முகம், ப. 48)**

எனப் பாராட்டி, கணவன் உயர்வது மனைவியைப் பொறுத்தே அமைவதாக உறுதி கூறுகிறார்.

*அத்தகு மனைவியை ஆடவர் போற்றுதல்*
*நத்துதற் குரியநல் நித்தியக் கடமையே!* (ப. 48)

என்று கோடிட்டுக் காட்டுகிறார்.

### தமிழ்ச் சான்றோருக்குப் பாராட்டு

தமிழ்ச்சான்றோர்களைப் பெரிதும் மதிப்பவர் கவிஞர். திருவள்ளுவரையும் திருக்குறளையும் கண் எனப் போற்றுபவர்.

தேன்போலத் தெவிட்டாமல் சுவைக்குந் தோறும்
சிந்தனையைக் கூராக்கும் கருத்துக் கொல்லன்
(பொற்காலம், ப. 15)

என்று வான்புகழ் வள்ளுவரைப் புகழ்கிறார். பாரதிதாசன் அடிச்சுவட்டில் நடப்பவர் கவிஞர். பாவேந்தர் குறித்து, பல கவிதைகளைப் படைத்திருக்கிறார்.

*தாய்வழிப் பாட்டன் சிலருண்டு – நமக்குத்*
*தந்தைவழிப் பாட்டன் சிலருண்டு*
*தமிழ்வழிப் பாட்டன் ஒருவன்தான் – அவன்*
*தரணி புகழ்ப் 'பா வேந்தன்'தான்!*
*(இன்பமும் நாமும், ப. 22)*

என்பது அவற்றில் குறிப்பிடத்தக்க ஒன்று. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் 'பாவேந்தும் தென்றலென' மாறியதாகப் பாடுகிறார்.

கொதித்துவரும் எரிமலையாய்க்
குமுறுகின்ற மனமிருந்தும்
கொஞ்சுதமிழ் பாடிநின்ற குயிலவன் – வான்
கோழிகளின் நடுவிலொரு மயிலவன். . .
கவிஞன்தன் மானத்தின் மந்திரம் – பட்டுக்
கோட்டைதந்த கல்யாண சுந்தரம்
*(இன்பமும் நாமும், ப. 21)*

எனவே, தமிழோடு வாழ்பவர்களைப் பாடும் கவிஞர் என ம. நாராயணனைக் கவிஞர் சுரதா பாராட்டுகின்றார். தந்தை பெரியார் என்றால் கவிஞருக்கு உயிர். அன்னாரின் சொல்லில் செயலில் தன்னைப் பறிகொடுத்தவர். பிற தலைவரெல்லாம் பொருள் சேர்த்தபோது, தன் பொருளைச் செலவிட்டவர் பெரியார் என்கிறார் கவிஞர்.

வாக்காளர் தயவின்றி வாழ்ந்த தால்தான்
வரலாற்றைப் புதுப்பித்தார் பெரியார் மண்ணில்
போக்கற்ற இனம்தமிழர் இனமே என்று
பெருமுழக்கம் செய்துநமை விழிக்கச் செய்தார்! (ப.60)

என்பது உண்மைதானே! இன்றைய இளைஞர்கள் எவர் எவருக்கோ தாளம் போடும் நிலைமை மாற வேண்டும்; தந்தை பெரியாரை அவர்கள் நினைக்க வேண்டும் என்று கவிஞரின் நல்லுள்ளம் எண்ணுகிறது. கவிஞரின் தந்தை காங்கிரசு தொண்டர். அந்தக் காலத்தில் காங்கிரசில் இருந்த தந்தை பெரியார் பற்றி அவர் மகனுக்கு எடுத்துச் சொன்னதன் விளைவாக, இளமையிலேயே பெரியாரிடம் அன்பு கொள்ளத் தொடங்கிவிட்டார் கவிஞர். வேலூரில் தாம் வாழும் வீதிக்கு, பெரியார் வீதி என்றும், இருப்பிடப் பகுதிக்குப் பாவேந்தர் நகர் என்றும் பெயரிட்டிருப்பது சுட்டத்தக்கது. முனைவர் பட்ட ஆய்வுக்கான தலைப்பு: **பெரியாரும் மனிதநேயமும்**. ஆக, பெரியாரும் பாரதிதாசனும் இவ்வேலூர்க் கவிஞருக்கு இரு கண்களாவர்.

*பிற*

மக்களுக்குத் தீமை பயக்கும் எதையும் சாடத் துணிவு பெற்ற கவிஞர் அங்கதச் சுவை மிளிரும் கவிதைகளையும் படைத்திருக்கிறார். திருப்பதி நாமம் அவரது கண்ணுக்குப் புலனாகிறது. கவிஞர் ஆழ்ந்து சிந்திப்பவர், ஊடுருவிப் பார்ப்பவர் என்பதற்குச் சான்று இது:

பட்டை நாமம் பதித்த பேருந்து
திருப்பதி நோக்கிப் பாய்ந்து சென்றது
போக்கு வரத்தின் பெயரெது வெனவே
நோட்டம் விட்டேன் நெஞ்சம் வியர்த்தேன்
'பெரியார்' எனும் பெயர் புன்னகை செய்ததால் . . . !
(செவ்வானம், ப. 48)

அரசு ஆணை பறந்து வந்தது. எதற்காக? இதோ கவிஞர் கூறுகிறார்:

*பள்ளிக்குப் பக்கத்தில் கள்ளுக் கடையா?*
*உள்ளூர் மக்கள் உரக்க எதிர்த்தனர்;*
*அரசிடமிருந்து ஆணை வந்தது*
*பள்ளியைப் பிறிதோர் இடத்தில் மாற்றவே!* (ப. 46)

இதைப் படித்தவுடன் நகைப்பும் சினமும் ஏற்பட வாய்ப்புண்டு. தாக்கல் எனும் சொல்லை வைத்து சொல் விளையாட்டு

நடத்துகிறார் கவிஞர். கூத்து என நிதிநிலையறிக்கையை அவர் குறிப்பிடுகிறார். 'தாக்கல்' எனும் தலைப்பில் அமைந்த கவிதையைக் காண்போம்.

**ஆண்டுகள் தோறும் ஆள்பவர் நிகழ்த்தும்**
**நிதிநிலைக் கூத்தே! நீதான் எங்கள்**

**வாழ்வினைத் 'தாக்கி' வயிற்றினைத் 'தாக்கி'**
**ஊழ்வினை யென்றுநல் லுணர்வினைத் 'தாக்கி'**

**வரிவிலை உயர்வென முதுகினைத் 'தாக்கி'**
**அணுஅணு வாகவே ஆளைக் கொல்வதால்**

**நிதிநிலை அறிக்கை 'தாக்கல்' என்றே**
**நன்றி யுணர்வுடன் நவில்கின்றனரே! (நிலா முற்றம், ப.102)**

இனி, அந்தப்புரம் எனும் சொல்லைக் கவிஞர் எவ்வாறு கையாண்டிருக்கிறார் என்று பார்ப்போம்.

**அறிஞர்க்கு அந்தப்புரம் ஆரவாரம். . . .**
**வறிஞர்க்கு அந்தப்புரம் செல்வரில்லம். . . .**
**படகருக்கு அந்தப்புரம் சுழற்சியென்றால்**
**பரத்தையருக்கு அந்தப்புரம் புனிதமாகும்! (ப.90)**

கற்பனை அமையக் கவிதை படைப்பதிலும் வல்லவர் வேலூரார். விண்மீன்கள் அவரது கண்பார்வையில்-

**கண்சிமிட்டிக் கதிரவனைக் கவர்ந்திடவே**
**காலமெல்லாம் முயலுகின்ற முறைப்பெண்கள் (ப.91)**

ஆகின்றன. கணிப்பொறியைக் கண்மணி என்கிறார். அதன் கண் இவர் மீது பட்டதால் இதயம் முழுவதும் பூத்து நின்றாராம். இருவரையும் பிரிப்பது எதுவோ?

**என்தடையோ! இல்லை உன்தடையோ இங்கு**
**எவர்தடையும் நம்மைப் பிரிப்பதில்லை**
**மின்தடை மட்டிலும் சில நேரம் முறை**
**மாமன் எனவரும் அச்சுறுத்தும் (கிழக்கு திசை, ப.27)**

நாயக - நாயகி பாவத்தில் அமைந்த ஆழ்வார் பாசுரம் போல் இதையும் நினைத்திட வாய்ப்புண்டு. மின்தடையை முறை மாமன் என உவமித்திருப்பதும் கவித்திறனுக்குச் சான்றாகிறது. மனைவியைத் திங்களுடன் ஒப்பிடுகிறார். அப்போது பிறக்கும் கவிதை வரி, சற்றே புதுக்கோணத்தில் அமைகிறது.

**இல்லற வானில் எழிலுறத் திகழும்**
**திங்கள் அனையவள் தேனாய் இனிப்பவள்**

**திங்கள் போலவே திங்கட் கொருமுறை**
**'ஓரிரு' நாட்கள் ஓய்ந்தும் கிடப்பவள்** *(நிலா முற்றம், ப. 48)*

பிறந்த ஊரான வேலூருக்கு அருகில் ஓடும் பாலாறு பற்றிய அவரது வருணனை இதோ:

**நீள்நெடுங் காலம் நாணம் மறந்து**
**நீர்த்துகில் அணியா நிர்வாணப் பெண்ணே!**

பிறந்த ஊரின் பெருமையைப் பறைசாற்றுவதில் கவிஞர் பெருமிதம் கொள்கிறார்.

**பண்பாட்டின் ஊற்றெனவே**
**பாரினிலே திகழ்கின்ற**
**தென்னாடு 'பசு' என்றால்**
**திகழ்மடியே வேலூர்தான்!** *(பெருமிதம், ப.12)*

காதல் பற்றி இவர் மிகக் குறைவாகவே கவிதை பாடியிருக்கிறார். அவற்றில் காணும் உவமைகள் படிக்கப் படிக்கச் சுவை தருவன. காட்டாக,

**நோதலும் ஊடலும் நீர்மிசை நுரைகள்**
*(இன்பமும் நாமும், ப.99)*

**வாடையை நிகர்த்த பார்வையினால்என்**
**வாலிபக் கனலை விசிறிவிடு!** *(இன்பமும், நாமும், ப.103)*

கூட்டுறவின் தேவையை, இன்றியமையாமையைப் பாடும் போது, உவமைகள் அணி வகுத்து நிற்கின்றன.

**தனித்தனித் தேனீ ஒற்றுமையாய்த்**
**திரட்டிய செல்வம் தேனாகும்**
**தனித்தனி மாந்தர் பிரிந்திருந்தே**
**தந்திடும் உழைப்போ வீணாகும்!** *(பெருமிதம், ப.22)*

குழந்தைகளையும் கவிஞர் மறந்துவிடவில்லை. அவர்களுக்காகவும் சில கவிதைகளைத் தருகிறார். காட்டாக,

**அன்பு வேண்டும் பாப்பா – எதிலும்**
**ஆர்வம் வேண்டும் பாப்பா – இனிய**
**பண்பு வேண்டும் பாப்பா – நல்லோர்**
**பழக்கம் வேண்டும் பாப்பா!** *(நிலா முற்றம், ப. 62)*

என்பது மிக எளிமையாகவும், அறிவுரை நிறைந்ததாகவும் அமைந்திருக்கக் காணலாம். இறை ஒன்று (பெருமிதம், பு. 38) எனப் பாடியவரே,

*வண்ணத்திரையும் சின்னத்திரையும்*
*மட்டைப் பந்தின் வீச்சும் பேச்சும்*
*வாழ்க்கைப் பாதையில் கானல் நீரே (இன்பமும் நாமும், ப. 35)*

என அறிவுறுத்துகிறார். குடும்பநலத் திட்டத்தின் தேவை (பொற்காலம், ப. 37), கொசு ஒழிப்பு (நிலா முகம், ப. 56) பற்றியும் பாடுகிறார். கவிஞருக்குப் பிடித்தமானவர் இறந்து போன நிலையில், பா புனைந்திருக்கிறார். சிவாஜி, ஆசிரியர் சுதாகர் எனப் பலருக்கு இரங்கற்பா பாடியிருக்கிறார்.

### கவிதையும் கவிஞரும்

வேலூர் ம. நாராயணன் படைத்திட்ட கவிதைகளைப் பார்த்த பின்பு, கவிதை பற்றிய அவரது கருத்து என்ன என்று ஆராயலாம்.

***கவிதை என்பது குழந்தை போன்றது***
***அதனைப் பயத்தல் அத்துணை எளிதல்ல; . . .***
***யாப்புக் கட்டிலில் காளையும் கன்னியும்***
***இணைந்து மகிழ்ந்து இன்பம் துய்த்ததும்***
***கருவில் தோன்றும் கருத்துச் சினைதனைக்***
***காலந் தோறும் கண்ணெனக் காத்தபின்***
***உரிய வேளையில் புறந்தரும் காலையில்***
***அருமைக் குழந்தையே 'கவிதை' யென்பது!***
***ஏனைய முறையில் தோன்றுவ எல்லாம்***
***கவிதைகள் அல்ல காகிதக் குப்பையே! (ப. 100)***

கவிஞர் என்பவர் எவ்வாறிருக்க வேண்டும், செயல்பட வேண்டும் என்பது தொடர்பாகவும் இக்கவிஞருக்கு கொள்கை உண்டு.

**ஒழுக்கம்' என்னும்**
**தேருக்கு ஆணியெனத் திகழ்தல் வேண்டும்**
**சொன்னநெறி நின்றுசெயல் படுத்த வேண்டும்**
***(பொற்காலம், ப.29)***

கவிதை, கவிஞர் பற்றிய இவரது கருத்து ஏற்புடையதாகின்றது. படைப்பாளியின் படைப்பைக் காணும் போக்கும், படைப்பாளி யிடம் ஒழுக்க நெறி இருக்க வேண்டும் எனும் சிந்தனையும் கவிஞரின் தேர்ந்த சிந்தனையின் பாற்பட்டதாகிறது. வள்ளுவரின் குறளை வழிகாட்டியாகக் கொண்டு வாழ்ந்திடும் கவிஞர் வேலூர் ம. நாராயணனின் வாழ்க்கை பற்றிய தத்துவம் பின்பற்றுதற்கு ஏற்றதே என்றால் மிகையாகாது.

# ராஜமார்த்தாண்டன்

## ராஜமார்த்தாண்டன் - அறிமுகம்

கன்னியாகுமரி மாவட்டத்தில் இடையன்விளை கிராமத்தில் விவசாயக் குடும்பத்திலிருந்து வந்தவர் ராஜமார்த்தாண்டன். தனது ஆறாவது வகுப்பின்போது **கல்கண்டு, குமுதம், கல்கி, ஆனந்த விகடன்** ஆகிய இதழ்களில் வரும் கதைகளைப் படிக்கத் தொடங்கினார். ஜெயகாந்தனின் எழுத்துகளின் மீது ஆர்வம் கொண்டவர். தமிழ் முதுகலை வகுப்புப் படிக்கும்போதுதான் **மணிக்கொடி** எழுத்தாளர்களின் எழுத்துக்கு ஈடுபாட்டுக் குள்ளானார். அப்போது இலக்கியம் பற்றிய அவரது கனவுகள் நொறுங்கிச் சிதைந்தன. யதார்த்தம் அதிர்ச்சியூட்டி மெல்ல மெல்ல அதன்பால் ஈர்ப்பை ஏற்படுத்தியது. புதுமைப்பித்தனும், **மணிக்கொடி** எழுத்தாளர்களும் தன்னுள் புதிய அனுபவங்களை உருவாக்கத் தொடங்கினர் எனக் குறிப்பிடுகிறார் (ராஜ மார்த்தாண்டன், 2000:7). இவரது முதல் கவிதை 1966ஆம் ஆண்டு தினமலர் நாளிதழில் வெளியானது.

கேரளப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்ட போது, நண்பர் திருமால் இந்திரசிங்கை, ஆசிரியராகக் கொண்டு 1975இல் **கோகயம்** மாதமிருமுறை இதழை ஆ. தசரதனுடன் சேர்ந்து இவர் நடத்தினார். சில கருத்து வேறுபாடுகளால் நான்கு இதழ்களுடன் அது நின்றது. 1976 அக்டோபரில் **கொல்லிப்பாவை** என்ற காலாண்டிதழைத் தொடங்கினார். 1984இல் மதுரை **தினமணி**யில் பணிக்குச் சேர்ந்தார். அங்குப் பணியாற்றியபோது புதுமைப்பித்தன் பற்றிய பல்வேறு கட்டுரைகளை வெளியிட்டார். 1990இல் சென்னைக்கு இடம்பெயர்ந்தபோதும் புதுமைப்பித்தன் தொடர்பான கட்டுரைகளைச் சிற்றிதழ்களிலும், தினமணியிலும் எழுதிக் கொண்டிருந்தார். பின்னர்ப் புதுமைப்பித்தனும் கயிற்றரவும் என்ற நூலை இரண்டாயிரத்தில் வெளிக்கொண்டு வந்தார்.

இவர் மதிப்புரைகள் மட்டுமல்லாமல் கவிதைகளும் எழுதி வந்தார். அவை **என் கவிதை** (1996), **அப்படியே நிற்கட்டும் அந்த மரம்** (1999) என்ற இரு தொகுப்புகள். அதன் பின்னர் இரண்டாண்டுகளில் எழுதிய கவிதைகளையும் தொகுத்து ஒரு முழுத் தொகுப்பு நூலாக, **ராஜமார்த்தாண்டன் கவிதைகள்** 2002இல் வெளியிடப்பட்டது. இக்கவிதைத் தொகுப்பில் 122 கவிதைகள் உள்ளன. இதற்குத் தமிழ்நாடு அரசின் பரிசு வழங்கப்பட்டது. கவிஞர் தற்போது **தினமணி**யில் முதுநிலை உதவி ஆசிரியராகப் பணியாற்றுகிறார். இவரைப் பற்றி சுப்பிரமணியம் குறிப்பிடும்போது,

> ராஜமார்த்தாண்டன் கவிதைகளில் பெரும்பாலும் உண்மைத் துடிப்பு இருப்பதை ஏதோ ஒரு வகையில் என்னால் உணர முடிகிறது. வலிந்து திணிக்கப்பட்ட உவமைகளும், அலங் காரப் பூச்சுக்களும் அறவே தவிர்க்கப்பட்டுள்ளனவோ என எண்ணும் அளவுக்கு நேரடித்தன்மையும், சாமர்த்தியமின்மை யையும் காணமுடிகிறது. (கே.எஸ். சுப்பிரமணியன், 2004:3).

## சுயமதிப்பீடு

ராஜமார்த்தாண்டன் கவிதைகளில் சுயமதிப்பீடு வெளிப்பட்டுள்ளது எனக்கூறுவது தவிர்க்க வியலாது. முகமூடி அணிந்து, அதன் வழியாகப் பார்க்கத் தெரியாதவர் என்ற உணர்வை இவரது கவிதை தோற்றுவிக்கிறது. சாதாரண மனிதனுக்கும், கவிதை மீது ஈடுபாட்டை வளர்த்துக் கொண்ட மனிதனுக்கும் இடையேயுள்ள ஆளுமைத் தன்மையைக் காண முடிகிறது.

> **நானோ ஊசலாட்டக்காரன்**
> **பித்தனின் கடைக்கொழுந்து**
> **யாரிடம் கேட்பேன்?**
>
> **அதிர்ஷ்டத்திலும் நம்பிக்கையில்லை**
> **ஊதாரித்தனமாய்க்**
> **காலத்தையும் பின்தள்ளிவிட்டேன்**
> **இனியும் பொருள் சேர்க்கத்**
> **தெம்புமில்லை** (ரா.மா.க. 2002:64)

இவ்வாறு சுய மதிப்பீடு செய்யும் கவிஞரிடம் கைப்பு உணர்வோ, கழிவிரக்கமோ காணப்படவில்லை. உண்மையைப் பகிர்ந்து கொள்ளும் தன்மையைக் காண முடிகிறது.

*இன்றிருப்பதோ நூறு ரூபாய்*
*இந்த மாலைப் பொழுதேனும்*
*இனிதாய் கழியட்டுமே . . . .*
*இதமளிக்கும் குளிர்பானமே*
*ருசியான பொரித்த மீனே!*
*புகையும் சிகரெட்டே*
*வாழ்க*
*நன்றி உரித்தாகுக* *(ரா.மா.க. 2002:65)*

கவிஞர், தான் ஒரு ஊசலாட்டக்காரன் என்பதை வெளிப் படுத்துகிறார். இதில் சாதாரண மனிதர்களுக்கேயுரிய மனப் பாங்கைச் சலிப்பு மனப்பாங்காகக் காணமுடிகிறது. கவிஞர்கள் உணர்ச்சிகளால் உந்தப்படுபவர்கள். அதன் வெளிப்பாடே கவிதைகள். மனிதன் பயனற்ற பொருட்களின் மீது பற்றுடன் இருப்பதை, காக்கையை எடுத்துக்காட்டாகக் கொண்டு காட்டுகிறார்.

*பிளாஸ்டிக் தம்ளரைத் தூக்கிப்போய்*
*என்ன செய்யும் அந்தக் காக்கை?*

*போகும் வழியில் குஞ்சுகளுக்கு*
*தண்ணீர் மொண்டு போகுமோ?*

*அதிசயப் பொருளெனக் காட்டித் தன்*
*சாதுர்யக் கதைகள் பேசுமோ?*

*கூட்டிலதைப் பத்திரப்படுத்தி*
*தானியம் சேர்த்து வைக்குமோ?*

*என்ன செய்யும் அந்தக் காக்கை? . . .*
*ஏதேனும் காரணம் இருக்கக்கூடும்*
*மனிதன் போல்தானே காக்கையும்*
*ஓரிரு குணங்கள் தவிர்த்து* *(ரா.மா.க. 2002:68)*

## இயற்கையில் ஈடுபாடு

கவிஞர் இயற்கையுடன் இணைந்த வாழ்க்கையைக் கவிதையாகத் தருகிறார். தான் பார்த்து மகிழ்ந்த காட்சிகளைப் பதிவு செய்துள்ளதுடன், மனத்தில் தங்கிவிட்ட ஆலமரம் வேரோடு சாய்ந்து விட்ட காட்சியை நேரில் பார்க்கும் மனப்பான்மை இல்லாமல் உள்ளார்.

*ஊரின் வடகோடியில் அந்தமரம்*
*ஐந்து வயதில் பார்த்த போதும்*

*இப்படியே தானிருந்தது*
*ஐம்பதைத் தாண்டி இன்றும்*
*அப்படியேதான்*

*தாத்தாவின் தாத்தா காலத்தில்*
*நட்டு வளர்த்த மரமாம்*
*அப்பா சொல்ல கேட்டிருக்கிறேன்*
*உச்சிக்கிளையில் பழங்கொத்தும் காக்கை*
*சிட்டுக்குருவியாய் கண்ணில் படும்*

*பச்சைக் காய்கள் நிறம்மாறி*
*செங்காய் தோற்றம் கொண்டதுமே*
*சிறுவர் மனங்களில் பரவசம் பொங்கும் . . .*
*கருநீலக் கோலிக் குண்டுகளாய்*
*நாவற் பழங்கள் கிளைகளில் தொங்கும் . . .*

*காக்கை குருவி மைனா கிளிகள்*
*இன்னும் பெயரறியா பறவைகளுடன்*
*அணில்களும் காற்றும் உதிர்த்திடும்*
*சுட்ட பழங்கள் பொறுக்க*
*சிறுவர் கூட்டம் அலைமோதும் . . .*
*பெருவாழ்வு வாழ்ந்த மரம்*
*நேற்றிரவுப் பேய்க்காற்றில்*
*வேரோடு சாய்ந்து விட்டதாமே. . .*
*எனக்குப் போக மனமில்லை*
*என்றும் என்மன வெளியில்*
*அப்படியே நிற்கட்டும் அந்தமரம் (ரா.மா.க. 2002: 80, 81)*

குளக்கரையோரம் *(2002:88)* என்ற கவிதையும் இது போன்ற பதிவுகளை வெளிப்படுத்துகிறது. மனக்கோலம் *(2002:96)* என்ற தலைப்பில் அமைந்த கவிதையும் இத்தகையது. இயற்கையோடு இணைந்து, அதனைக் கூர்ந்து நோக்கும்போது, அது நமக்கு ஏதேனும் செய்திகளைத் தரும். கவிஞர் இவ்வாறு கூறுவதன் மூலம் சுற்றுப்புறக் காட்சிகளில் மிகவும் ஈடுபாடுடையவர் என்பதை அறிய முடிகிறது.

*குதிரையை லாயத்தில் கட்டு*
*கடிவாளம் கண்பட்டைகளை*
*அகற்று*
*சற்றே ஓய்வு கொள்ளட்டும்*
*நடந்துசெல்*
*கூர்ந்து நோக்கு*
*மனிதர்களை விலங்குகளை*

*புழு பூச்சிகளை பறவைகளை*
*மலர்களை மரங்களை*
*உறுமிச் செல்லும் வாகனங்களை*
*அன்பாய்க் கவனி* (ரா.மா.க. 2002: 17)

மனிதன், இயற்கைச் சூழலைப் பல்வேறு காரணங்களுக்காக அழித்துக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். காடுகளும், அதைச் சார்ந்த உயிரினங்களும் அழிக்கப்பட்டு அணைகள் கட்டப் படுகின்றன. நிலத்தடிநீர் கட்டுப்பாடின்றி உறிஞ்சப்படுகிறது. வானளாவிய அடுக்குக் கட்டடங்கள் பெருகி வருகின்றன. இயற்கைக்கு மாறான இந்நிகழ்வுகளால் பூமி புரண்டு சிலிர்த்தசைகிறது எனப் பூமி அதிர்வைக் கவிஞர் குறிப்பிடுகிறார்.

*நெடுமரங்கள் நின்ற இடமெல்லாம்*
*கான்கிரீட் கல்லறைகள்*
*அருகே நினைவுச் சின்னங்களாய்*
*தொட்டிச் செடிகள்*

*குடியிருப்பிழந்த பறவைகள் மீண்டும்*
*கானகம் நோக்கி பறந்தன*
*அங்கும் மரங்கள் வீழ்த்தப்பட*
*கடலுள் மாய்ந்தன பறவைகள்*
*மனிதனைச் சபித்தபடி*

*ஒருநாள்*
*பொறுமை காத்த பூமி*
*புரண்டு சிலிர்த்தசைய*
*வெட்டுண்டு சிதைந்த புழுக்களாய்*
*வெயிலில் துடிதுடிக்கும் மனித உடல்கள்*

(ரா.ம.க. 2002:124)

இயற்கையின் மீது ஈடுபாடுடைய கவிஞர் குழந்தைகள் வளர்ப்பதையும் மரம் வளரும் பாங்குக்கு ஒப்பிடுகிறார். கட்டுப்பாடுகள் வேண்டாம் எனக் கூறுகிறார்.

*நீர்வார்ப்பதுடன் நின்றுவிடு*
*திட்டங்கள் தீட்டாதே*
*கட்டுப்பாடுகள் விதிக்காதே*
*கிளைவிட வேண்டிய திசை*
*பூக்களின் நிறம் கனிகளின் சுவை*
*எவ்விதமாக என்று விதிப்பது*
*உன் வேலையல்ல*
*வேண்டுமானால் உரமிடு*

**பாதுகாப்பாக வேலியிடு**
**போதும்**

**இளங்கன்று வளரும்**
**மேகக் கசிவில் உடல் சிலிர்த்து**
**நாற்றிசையும் கிளை பரப்பி**
**தன்னிச்சையாய் கம்பீரமாய்**

**ஒரு மரமாக**
**ஒரு கவிதையாக** *(ரா.ம.க. 2002:29)*

*சென்னை நகரில் மாணவர்கள் விரும்பியதைக் கற்றுக் கொள்ளும் கட்டுப்பாடுகள் இல்லாத பள்ளிகள் சில உள்ளன. கவிஞரின் கனவு மெய்ப்படும் நிலை ஏற்படுகிறதைக் காண வியலுகிறது. இயற்கையான சூழலில் வாழ்ந்த கவிஞர் படிப்பிற்காகவும், பணிக்காகவும் நகர வாழ்க்கைக்கு இடம் பெயர்ந்திருக்கிறார். இருவேறு சூழ்நிலையில் வாழ்ந்த போதிலும் உயிரினங்கள் மீது அதிகமான ஆர்வம் இருந்துள்ளது. இதனை, இவர் பயன்படுத்துகிற சிட்டுக்குருவி, கிளி, புற, மைனா, காக்கை, மீன்கொத்தி, கழுகு, குயில், பருந்து, கோழி, வால்குருவி, கருங்குருவி, அடைக்கலங்குருவி, நாரை, செம்பருந்து, அணில், நாய்க்குட்டி, பூனை, மான், புலி, குதிரை, மீன், நாய், எறும்பு, எலி, பெருச்சாளி ஆகியவற்றிலிருந்து அறியமுடிகிறது. பல்வேறு மரங்களின் பெயர்களும் கவிதையில் காணப்படுகின்றன. அரசமரம், ஆலமரம், தென்னை, பனை, முருங்கை, மருதாணிச் செடி போன்ற சொற்களிலிருந்து கவிஞரின் மண்வாசனை தெரியவருகிறது.*

## வாழ்க்கை

*மனித வாழ்க்கையைக் குறிப்பிடும் போது, நம்பிக்கையின் அடிப்படையில் நடைபெறுவதாகக் கூறிவிட்டு இறுதியில் சோகத் துடன் என நிறைவு செய்யும் நிலையையும் காணமுடிகிறது.*

**சமீபத்தில்தான் இருக்கிறது**
**உனக்கான வீடு**
**என்றோ எவரோ எங்கோ**
**எப்படியோ வளர்த்த நம்பிக்கையில்**
**தேடியலைகிறார் மனிதரெல்லாம்.**
**அவரவர்க்குகந்த தெருக்களின் வழியே**
**அவரவர் வசதிக்கேற்ப**
**தங்களுக்கான வீட்டினை எவரும்**

அடைந்ததாகத் தகவலுமில்லை
என்றாலும் அலைகிறார்
எதிர்பார்ப்புடன்
இறுதியில் சோகத்துடன் (ரா.ம.க. 2002:11)

வாழ்க்கை, நினைத்தவாறு அமையாது எனவும், அவ்வாறு அமையாத அடிப்படைக்குக் காரணம் என்ன என்பதை 'இன்றிங்கே' என்ற கவிதையில் காணமுடிகிறது.

வழக்கத்துக்கு மாறாக இப்படியாயிற்று
தவழ்ந்து கொண்டிருந்தனர் மனிதர்கள்
எதனாலிப்படி
திகைத்து நிற்கையில்
கால்களை வாரிவிட்டது ஒரு கை
எல்லோரையும் போல் தவழ்ந்து செல்
அதட்டியது ஒரு குரல்
தவழத் தொடங்கினேன்

தொடக்கத்தில் தடுமாற்றம்தான்
பழகிப்போய் விட்டது இப்போது (ரா.ம.க. 2002:20)

பரபரப்பான எந்திரமயமான சூழலில் மனித முகங்களில் இயற்கையான புன்னகைகூட மலர்வதில்லை என்பதை,

வேறெதுவும் வேண்டாமே
இந்த மனித முகங்களில்
பொய்மையற்ற
இயல்பான
புன்னகைகள் மலர்ந்தால்
போதுமே
ஏதேனும் ஒரு மலர் போல

இது கூடச் சாத்தியமற்ற
இந்தப் பாலையில்
விதைகள் எங்ஙனம்
முளைவிடும்
துளிர்விடும்
பூக்கள் புன்னகைக்கும் (ரா.ம.க. 2002:22)

மனிதன் சமூக அக்கறையுள்ளவனாக, பிறர் துன்பத்தில் பங்குபெற்று அதனைத் தீர்க்க வழிசெய்பவனாகவும் இருக்க வேண்டும் என்பதை 'மனப்பறவை' என்ற கவிதையில் வெளிப்படுத்துகிறார்.

விண்ணிலேறி பறந்தொரு புள்ளியாகி
விருட்டென தரையிறங்கியதென் சினேகப் பறவை
சாலையோரக் கண்ணாடி துண்டுகள் பொறுக்கிக்
குப்பைத் தொட்டியில் போட்டது
எதிர்வீட்டுத் தோட்டத்தில் ரோஜாப்பூ கொய்துவந்து
பள்ளிக்குழந்தையின் தலைசூடி மகிழ்ந்தது
சுடிதார் மாணவியிடம் குறும்பு செய்த
காலிகளைக் கூரலகால் கொத்தி எச்சரித்தது
நடைபாதைக் குடியிருப்பில் அழும் குழந்தை கையில்
கொய்யாப்பழம் கொத்திவந்து வைத்தது
பஸ்நிறுத்தக் கிழவனின் வீங்கிய காலுக்கு
மூலிகை கொண்டு ஒத்தடம் கொடுத்தது
அரிசிமணிகள் பொறுக்கி வந்து
அவன் பாத்திரத்தில் கவனமாய் இட்டது

(ரா.மா.க. 2002:82)

இன்றைய அவசர உலகில் இது சாத்தியமா? ஒவ்வொருவரும் அவரவர் பணியைச் செய்ய வேகமாகச் சென்றுகொண்டிருக்கும் நிலையில் கற்பனையில் மட்டுமே கைகூடும். மனிதன் முரண்பட்ட பல்வேறு குணங்களின் கலவையாக உள்ளான் என்பதை வால்மனிதன் கவிதை மூலம் படம்பிடித்துக் காட்டுகிறார்.

இப்போதெல்லாம் அவனுடன் ஒரு வால்
ஏதேனுமொரு வால்
சிலபோது குரங்கின் வால்
சிலபோது சிங்கத்தின் வால்
சிலபோது நரியின் வால்
சிலபோது குதிரையின் வால்
சிலபோது எலியின் வால்
சிலபோது ஆட்டின் வால்
என்றிப்படி எப்போதும்
ஏதேனுமொரு வால் . . .
இப்போதெல்லாம்
அரிதாகி வருகின்றன
வாலில்லாமல் அவன்
நடமாடும் கனங்கள்

(ரா.மா.க. 2002:85)

## கானல்நீர்த்தன்மை

கவிதை கானல்நீரின் தன்மையுடையது என்பது கவிஞரால் பதிவு செய்யப்பட்டுள்ளது. இது போலித்தனமில்லாமல் அமைந்துள்ளது. தேடினேன் - கைவசப்படவில்லை என நண்பனுடன் பகிர்ந்து கொள்வது போல வசப்படாத கவிதை அமைகிறது.

*கடலோர மரத்தடியில் காத்திருந்தான்*
*கவிதை வசப்படுமென . . .*
*ஆழ்கடலின் அமைதி நோக்கிக்*
*கவிதைக்காக காத்திருந்தான் . . .*
*யாதொன்றும் மனத்தில் பதியவில்லை*
*ஆயிரமாயிரம் மர்மங்களைத்*
*தன்னுள்ளடக்கிய ஆழ்கடல் நோக்கிக்*
*காத்திருந்தான் கவிதைக்காக*
*வசப்பட்டதா கவிதை*
*என்றொரு குரல் கிசுகிசுக்க*
*திடுக்கிட்டுப் பார்த்தான் . . .*
*மனதில் குறுகுறுத்த*
*வரிகளை மரத்தடியில் விட்டுவிட்டு*
*எழுந்து நடந்தான்*
*அலைகளைச் சுமந்தபடி* *(ரா.மா.க. 2002: 66, 67)*

கவிஞர் வெறுங்கையுடன் போகிறாரே என்று குறுகுறுக்கும் படியாகக் கவிதை அமைந்துள்ளது. இவரது கவிதைகளில் சலிப்பு கலந்த நிலையைக் காணமுடிகிறது. வாழ்வின் எதிர்மாறான நிகழ்வுகளை எதிர்த்துப் போராட வேண்டும் என்பதைத் தவிர்த்த நிலை காணப்படுகிறது. இதனை விரக்தி என்றும் கூறவியலவில்லை.

*தொடங்கியாயிற்று*
*தாமதமாகவே என்றாலும்*
*தீர்மானத்துடன்*
*திட்டமிட்ட பயணங்கள்*
*ஆயத்த மூட்டைமுடிச்சுகளுடன்*
*விவாதச் சுமைகளுடன்*
*அறை மூலையில் கிடக்க*

*தொடங்கியாயிற்று பயணத்தை*
*இலக்கற்று*
*பாதைகளற்று*
*தன்னந்தனியாக*
*சுதந்திரமாக* *(ரா.மா.க. 2002:31)*

இதுபோன்று இன்னும் சில கவிதைகள் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

*சிதறிக் கிடக்குதிங்கே வாழ்க்கை*
*சதைப்பிண்டங்களாக*
*ரத்தத் துளிகளாக*
*குந்திப் பொறுக்கி*

வடிவமைத்தல்
இனியும் சாத்தியமோ? (ரா.மா.க. 2002: 21)

சாக்கடையில் பன்றிகள்
தெருவோரம் நாய்கள்
மரக்கிளையில் காகங்கள்
வானில் பருந்துகள்
எங்கும் நான் (ரா.மா.க. 2002: 27)

கவிஞர் விரக்தியின் எல்லையையும் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார் என்பதை 'எப்போதும் முடிவில் இன்பம்' என்ற கவிதையில் காண முடிகிறது.

சாவில்தானே முடிவு
காத்திருப்பானேன்
விரைவாகத் தேடிக்கொள்வோம்
எவ்வகையிலேனும் (ரா.மா.க. 2002: 38)

சில இடங்களில் கோரமான மரணமும், மனித உடலின் சதைக் குளம்பான காட்சிகளும் இடம்பெறுகின்றன. இது போன்ற கவிதைகளின் பின்னால் என்ன இருக்கிறது என்பதைச் சரிவர இனங்காண முடியவில்லை. இக்கவிதைகள் பார்வையாளனின் சோகத்தைக் காட்டுவதாகக் கருதலாம்.

அவசரமான அந்தச் சாலையில்
கணப்பொழுதில் நிகழ்ந்துவிட்டது . . .
சற்றுமுன் பளபள யமஹாவில்
கம்பீரமாய் சென்ற இளைஞன்
கணப்போதில் சதைக்குவியலாய் . . .
இது போன்ற மரணங்களுக்கு
என்ன நோக்கம் இருக்கக் கூடும்? (ரா.மா.க. 2002:89)

இது போன்று வேறு சில கவிதைகளும் உள்ளன.

உச்சாணிக் கிளையின்
பசுந்தளிர் மறைவிலிருந்து
உற்சாகக் குரலில் கூவியது குயில்

வேட்டைக்காரனொருவன்
மெல்ல துப்பாக்கி விசையழுத்த
கொலைச்சப்தம் வெடித்தடங்கும் முன்
துடிதுடித்து தரை வீழ்ந்த பஞ்சுடல்
சிந்திய குருதி மண் நனைக்க (ரா.மா.க. 2002: 57)

காலில் ஏதோவொன்றிடற
குனிந்து நோக்க
துண்டித்த சிறுகரமொன்று
மெல்லப் பற்றியெடுத்து
புதரோரம் வைத்துவிட்டு
ஒரு கணம் கனந்த மனம்
மறுகணம் வெறுமையாக
நடந்து கொண்டிருக்கிறான். *(ரா.மா.க. 2002:59)*

*ராஜமார்த்தாண்டன் கவிதைகள் இயல்பாகவும், எளிமையாகவும் உள்ளன. சுற்றுப்புறச் சூழலுடன் ஒன்றிவிட்ட தன்மையும், பறவைகள், விலங்குகள், மரங்கள் மீது கொண்டுள்ள பரிவும் கவிஞரின் இளமைக்காலத்தை நினைவூட்டுகின்றன. இவரின் சுயமதிப்பீடு, சலிப்பு போன்றவை சாதாரண மனித இயல்பின் வெளிப்பாடுகளாக அமைந்துள்ளன. கவிஞர் தனது இரண்டாவது கவிதைத் தொகுதியில் 'என்னுள் என்னைத் தேடுவதன் மூலம் சக மனிதனை - வாழ்க்கையைத் தேடுவதாகவே என் கவிதைகளை உணர்கிறேன்' என்ற உண்மையை உணர முடிகிறது.*

## முதன்மை நூல்கள்

*ராஜமார்த்தாண்டன் கவிதைகள், 2002, யுனைடெட் ரைட்டர்ஸ், சென்னை.*

*ராஜமார்த்தாண்டன், 2000, புதுமைப்பித்தனும் கயிற்றரவும், தமிழினி, சென்னை.*

## கட்டுரை

*சுப்பிரமணியன், கே.எஸ். 2004, "ராஜமார்த்தாண்டன் கவிதைகள்", நிவேதிதா நல்வாழ்வு மற்றும் கல்வி அறக்கட்டளை, சென்னை.*

# கி. சங்கர நாராயணன்

கவிஞர் கி. சங்கரநாராயணன் இவர் பாரத ஸ்டேட் வங்கியில் உதவிப் பொது மேலாளராகப் பணியாற்றி வருகிறார். நெல்லை மாவட்டத்தில் அமைந்திருக்கும் தென்காசிக்கருகில் உள்ள இலத்தூர் என்ற கிராமத்தில் 29.5.1951இல் இவர் பிறந்தார். தாயார் சிவகாமி; தந்தையார் கிருஷ்ணய்யர். இவர் வங்கியிலே பணியாற்றினாலும் தமிழன்னைதனை மறக்காதவர். இவருடைய கவிதைகள் அகில இந்திய வானொலியிலும், சன் தொலைக் காட்சியிலும் ஒலி, ஒளி பரப்பாகி உள்ளன. நாளிதழ், வார இதழ், மாத இதழ்களில் இவர்தம் கவிதைகள் வெளிவந்திருக்கின்றன. இவர் இயற்றிய நூல்கள்:

1. *நீலாம்பரி (1997)*
2. *ஐந்தருவி (1998)*
3. *தமிழால் வெல்க (2000)*
4. *அன்பெனும் ஊஞ்சலிலே (2001)*
5. *பூஞ்சோலை (பாப்பாப் பாடல்கள்)*
6. *அந்தாதிக் கந்தன் (2003)*
7. *சாரல் (2003)*

என்பன. இவர் இசையார்வம் மிக்கவர். எனவே இனிய தமிழிசைப் பாடல்களை இயற்றியுள்ளார். இப்பாடல்களைச் சங்கீத கலாநிதி, டிவி. சங்கரநாராயணன், மகாராஜபுரம் ராமச்சந்திரன், சௌம்யா, சுதா ரகுநாதன் போன்றோர் மேடைக் கச்சேரிகளில் பாடி வருகின்றனர். இசைமீது உள்ள ஆர்வத்தினால் தம் மகளுக்குச் சிவரஞ்சனி என்ற இராகத்தின் பெயரையே சூட்டியுள்ளார். தம் வீட்டிற்கும் அமிர்தவர்ஷினி என்ற இராகத்தின் பெயரை வைத்துள்ளார். **இயற்கையை அழிக்காதே** என்ற தலைப்பில் இவர் எழுதியுள்ள பாடல் ஆறாம் வகுப்புப் பாடத்திட்டத்தில் இடம்பெற்றுள்ளது. நாட்டுணர்வு, காந்தியம், பெண்ணியம், சாதியம், ஆன்மிகம் போன்ற பல பொருள்களில் கருத்துச் செறிவும் ஓசைநயமும் நிறைந்த இவர்தம் கவிதைப் படைப்புகள் இங்கு எடுத்துக்கொள்ளப் பெற்றுள்ளன.

தமிழுணர்வு

இவர் பயின்றது வணிகப்பாடமே ஆயினும் தமிழ் அன்னையிடம் தீராக் காதல் கொண்டவர்; தூயதமிழில் பேசுதல் வேண்டும் என்றும், பிறமொழி கலவாத தமிழ்ச் சொற்களைப் பேச வேண்டும் என்ற நோக்கமும் கொண்டவர். இன்று தமிழுடன் ஆங்கிலக் கலப்பு அதிகமாகக் காணப்படுகிறது. பிறமொழி கலந்துள்ள தமிழைப் பேணிக் காக்க அந்தப் பாரதியே வந்தால்தான் முடியும் என்பதைக் கவிநயம்படக் கூறுகிறார். தமிழன்னை சென்னை மாநகரம் வந்தனளாம். தமிழர்தம் நிலைகண்டு மீள்கையில் கூறுவதாக உள்ள பாடலாவது:

நகரை நீங்குமுன் பகன்றாள் – மீசைத்
தமிழா – தமிழர், தமிழின் நிலையறிவாய்
சிதடர் பலரைச் சீர்திருத்து
உதடு பொழியும் சீழ்தமிழை நிறுத்து
அதட்டித் திருத்து நற்றமிழ் புகட்டு
மந்தநிலை போக்கு, ஊட்டு உயர்நோக்கு
அதுவரை என்னை அழையாதே பாவம் தமிழர்

என்றும்

காணிநிலப் பாரதியே! தமிழ் மறந்து மக்கள் புதுப்
பாணி பற்றியதேன்? தமிழ்க்கேணி வற்றியதேன்?
வாணியைப்பணி எழுத்தாணி தருவாள் தமிழர் நாவில்
ஆணித்தரமாய் எழுது! நாணிப் பயனிலை

(ஐந்தருவி. ப. 34)

என்பதாகும்.

ஐ.நா. சபையிலும் தமிழ்மொழியில் அலுவல்கள் நடக்க வேண்டும் என்றும் பன்னாட்டு மொழியாகத் தமிழ் நடமாட வேண்டும் என்றும் நினைக்கும் இவர்தம் பேராவலை உலகைத் தமிழால் உயர்த்துவோம் என்ற கவிதையில் காணமுடிகிறது.

அஞ்ஞானம் நீக்க மெய் ஞானம் கண்ட தமிழ்
விஞ்ஞானம் காக்க நோபல் பரிசு கொளல் வேண்டும்
பன்னாட்டு மொழியாய்ப் பாரெலாம் பவனி வந்து
தென்னாட்டுத் தமிழ்ச் சக்தி உணர்த்தவேண்டும்

என்றும்,

ஐ.நா. சபையலுவல் தமிழிலே நடத்த வேண்டும்
சைனாச் சுவரெலாந் தமிழ்க் கவிதை மிளிர வேண்டும்

**நைனாத் தமிழை நாடு கடத்தவேண்டும்**
**தென்பாண்டித் தமிழிலே உலகக்கவி பாட வேண்டும்!**
*(நீலாம்பரி ப. 16)*

என்றும் கூறுகிறார்.

## நாட்டுணர்வு

ஜனநாயக நாட்டில் எப்படியேனும் வாக்குப்பெற்று நாடாளும் அரசியல்வாதிகளால் நாடு சீர்குலைந்து விடும். இந் நிலையை மாற்ற நல்லவர்க்கே வாக்களிக்க வேண்டும் என்பதை,

**துஞ்சாது நலத்தூய்மை புரப்போரை**
**அஞ்சாது காண்பீரே வாக்காலே – கெஞ்சியும்**
**கொஞ்சி வருவோரின் பண்புநலம் ஆய்வீரே**
**வஞ்சகர்க்கா நம்முயர் வாக்கு**

என்ற வெண்பாவில் கூறுகிறார். இந்திய விடுதலைக்குப் பாடுபட்டவர்கள் சிந்திய இரத்தம் அவர்தம் நாட்டுணர்வைக் காட்டவல்லது. பிஞ்சுநெஞ்சங்களில் இச்சிந்தனை விதைகளை ஊன்றுகிறார் இவர். **இதயமே இந்தியா** என்ற கவிதையில் நாட்டு விடுதலைக்குப் பாடுபட்ட நல்லவர்களைக் குறிப்பிடு கின்றார். கட்டபொம்மன், காந்தியடிகள், வ.உ. சிதம்பரம்பிள்ளை, தாகூர், பகத்சிங், நேரு, வாஞ்சிநாதன், திப்பு, ஜான்சிராணி போன்ற தலைவர்தம் சீரிய பணிகள் குறித்துப் பாடியுள்ளார் (**பூஞ்சோலை**. ப. 40). தேசப்பற்று உருவாகிடத் தாய்நாட்டுப் பண்ணை அனைவரும் சேர்ந்து கூட்டிசையாய்ப் பாடிடுதல் வேண்டும் என்பதை,

**நாட்டுப்பண் மட்டுமே நாளும் பாடுவோர்**
**நாட்டினிலே உண்டெனில் நாடுவாய் – கூட்டிசையாய்ப்**
**பாடிவரும் தன்மையும் பன்மை ஒருமையும்**
**தேடித் தரும் தேசத் தெம்பு**
*(**அன்பெனும் ஊஞ்சலில்**, ப. 91)*

எனக் கூறுகிறார். 'வங்கத்தில் ஓடிவரும் நீரின் மிகையால் மையத்து நாடுகளில் பயிர் செய்குவோம்' என அன்றே கூறினான் பாரதி! இன்று தேசிய நதி இணைப்புப் பற்றிப் பேசி வருகிறோம். நாட்டின் ஒரு பக்கம் மழை பெய்து கெடுக்கிறது. நாட்டின் மறுபக்கம் மழை பெய்யாமல் பஞ்சமும் வறட்சியுமான நிலை மாறவும், பாரதிவழி நதிகளை இணைக்கவும் இதயங்கள் இணைய வேண்டுமென்பதை, 'நதிகளே நாட்டின் நரம்புகள்' என்ற கவிதையில் கூறுகிறார்.

நதிகள் இணைப்பு பாரதி கணிப்பு அரசியல்
சதிகள் அறியா உன்னத முனைப்பு – நாட்டு
நிதிநிலை மாற்றும் சீரிய நினைப்பு
கதிகலங்கிப் போவான் இந்நாள்நிலை கண்டால்

துங்கபத்ரா ப்ரம்மபுத்ரா
மங்காப் புகழுடை கங்கா காவிரி
சங்கத் தமிழ் பாடும் வைகை பரணி
எவ்வாறு இணைப்பது அரசியல் கலவாது

இணையத் தேவை நிதிநிலையல்ல
இணையத்தேவை வரைபடமுந் தானல்ல – நதிகள்
இணையத் தேவை இணைந்த நெஞ்சுகளே
அணைகள் போதும் அன்பால் அணைப்போம் (நீலா. ப. 32)

காந்தியம்

தன்னுயிரைக் கொடுத்து அன்னை பாரதத்தின் மேன்மைக்குப் பாடுபட்டவர் அண்ணல் காந்தியடிகள். அவர்தம் பிறந்த ஊரில் காலடி வைக்கவேண்டும் என்றும், அம்மண்ணை நெற்றியில் வைப்பது புண்ணியமாகும் என்றும் கவிஞர் (பூஞ்சோலை, ப. 38) கூறுகிறார். காந்தியடிகள் மறைந்து அரை நூற்றாண்டுக்கு மேலாகிவிட்டது. முன்னேறிவரும் நாடுகளுள் இந்தியா ஒன்றாக இருந்தாலும் நாட்டின் சீர்குலைவுகளைக் கண்டு மனம் குமுறுகின்றார் கவிஞர். 'அண்ணல் இல்லா அரை நூற்றாண்டு' என்ற கவிதையில் பெண்கள் வாழ்வு சீரழிந்து கிடப்பது பற்றியும், கொள்கையில்லா அரசியல் கூட்டங்கள் பற்றியும், பெருகிவரும் வன்முறைகள் பற்றியும் குறிப்பிடுகிறார் (ஐந். ப. 16).

சாதியம்

நாடு நமது நாடு – சாதியை விடு... என்ற கவிதையில் இவர் கூறும் கருத்துகள் நம்மைச் சிந்திக்க வைக்கின்றன.

நேர்மைக்குச் சாதியில்லை – உடல்
வேர்வைக்கு சாதியில்லை – காதல்
பார்வைக்கு சாதியில்லை – சாதிப்
போர்வைக்குள் நீ மட்டுமேன்?

அன்புக்குச் சாதியில்லை – உயர்
பண்புக்குச் சாதியில்லை – செய்யும்
வம்புக்குச் சாதியில்லை – மனிதா
வீம்புக்குச் சாதிகள் ஏன்? (நீலா, ப. 25)

## பெண்ணியம்

ஆண்களும் பெண்களும் நிகர் எனக் கொள்வதால்
அறிவில் ஓங்கி இவ்வையகம் தழைக்குமால்

எனப் பெண்ணுரிமைக்குப் போராடியவன் பாரதி. பாரதிவழி வந்த கவிஞர் பெண்ணுரிமைக்காகப் போராடுகிறார். பெண்களைப் பெருமையோடு பேசுவதை ஏட்டிலே காண்கிறோம். வரதட்சணைக் கொடுமையால் வாடும் மகளிர் நாட்டில் பலர் உள்ளனர். உழைத்து ஓடாகிப் போனவர்களும், வயிற்றுப் பசியைப் போக்கித் தம்மையே விற்கும் மகளிரும் நம் பாரதத்தில் வாழ்கின்றனர். 'மங்கையராய்ப் பிறப்பதற்கே மாதவம் செய்திடவேண்டும்' என்று கூறியவர் தேசிகவினாயகம் பிள்ளை. ஆனால் பெண்சிசுக்கள் பிறந்தால் கள்ளிப்பால் தந்து கொல்வதும், கருவிலேயே பெண் சிசுக்களை அழிப்பதும் நாட்டின் பழக்கமாகிவிட்டது. இந்நிலை கண்டு கவிஞர் பாடும் பாக்கள் படிப்போரைச் சிந்திக்க வைக்கின்றன.

பொட்டைப்பிள்ளை என்று சொல்லி
படிப்பை நிறுத்துவர்
வெட்டிப் பேச்சு என்று நீயும்
விட்டுத் தள்ளடி
கட்டாயக் கல்வி உன்றன்
கண்ணைத் திறக்கும்
நட்டாற்றில் விட்டாலும்
நன்மை பிறக்கும் (பூஞ்சோலை; ப. 23)

இவ்வரிகள் பெண்களின் கல்வியுரிமையை எடுத்துரைக்கின்றன. பெண் சிசுவதை பற்றிக் கூறுகையில்,

கள்ளிப் பாலைத் தந்தே தம்
பிள்ளைப் பெண்ணைக் கொல்வதுமேன்
அள்ளி அணைத்த கைகளினால்
கொள்ளி வைத்தல் கொடுஞ்செயலே
(பூஞ்சோலை; ப. 50)

எனக் கூறுகிறார். திருவிளக்காய், குலவிளக்காய் வாழ வேண்டிய பெண்கள் வறுமை காரணத்தினால் தெருவிளக்கெனத் திண்டாடுகின்ற நிலையைத் 'தெருவுக்கு வந்த திருவிளக்குகள்' என்ற கவிதையில் காணமுடிகிறது. தம்மையே விற்றுத் தொழில் புரியும் மகளிர் தம் நிலைக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும் என்பதைக் கவிஞர்,

தம்மையே எரித்துக் கொள்வதால்
இவர்களும் கண்ணகிகள்

**சிறுகதை யாக்குவோம் இத்தொடர்**
**கதைப் புதினத்தை**
**மீறும் நாட்களேனும்**
**வாழட்டும் திரு விளக்காக** *(நீலாம்பரி; ப. 95)*

எனக் கூறுகிறார். பாரதிவழி வந்த பெண்கள் தங்கள் உரிமைகளைத் தட்டிக் கேட்பதைப் பெண்ணுரிமை என்ற கவிதையில் காணலாம்.

**பட்டிமன்றப் பொருளல்ல பாரதிப் பெண்கள்**
**எட்டிவிட உருண்டோடும் பந்தல்ல நாங்கள்**
**தட்டிக் கேட்டு நியாயம் கோரும் உரிமையாவும்**
**மெட்டி தாலி கட்டிவிட்டால் அடங்கியா போகும்?**
*(நீலாம்பரி; ப. 98)*

பாரதியார் வழிவந்த இவர் ஆண்களுக்கும் கற்புண்டு எனக் கூறுகிறார்.

**கண்ணில் நீர் துடைக்குங் கரமாகி**
**எண்ணில் நிலை ஏற்கும் உரமாகி**
**மண்ணில் தாய்மை காக்குந் திறமாகி**
**திண்ணிய ஆமைச் செருக்கன்றோ கற்பு** *(நீலாம்பரி; ப. 96)*

ஆடவர் அனைவரும் பெண்களின் துயர்நீக்கித் தாய்மையைப் போற்றவேண்டும் என்பதை இங்கு வலியுறுத்துகிறார்.

**ஆன்மிகம்**

இசையில் ஈடுபாடு கொண்ட இவர் பாடிய தமிழிசைப் பாடல்கள் பல. ஆறுபடை அழகன், அன்னை அபிராமி, ராம மந்திரம், சிவநாயகி, இசைவாணி, சிவகாமி, மயிலைமாமணி, கண்ணன் சோதரி, கூடல்நாயகி, பள்ளிகொண்ட பெருமாள், அய்யப்பன் என்ற பல தலைப்புகளில் இவர் பாடியுள்ளார். பல்லவி, அனுபல்லவி, சரணம் என்ற பிரிவுகளுடன் ராக தாளத்தோடு இப்பாடல்கள் அமைந்துள்ளன.

தமிழிசை வளர்த்த முத்துத்தாண்டவர், மாரிமுத்துப் பிள்ளை, அருணாசலக் கவிராயர், பாவநாசம் சிவன் ஆகியோரின் வழியில் இப்பாடல்களை ஆக்கியுள்ளார். இன்னார் பாடிய பாடல்கள் என்பதையறிய பாடலில்தம் முத்திரையைப் பதிப்பது வழக்கமாக இருந்து வருகிறது. மதுநாத் என்ற புனைப்பெயர் கொண்ட இவர்தம் பாடலில் இம்முத்திரை பயின்று வருவதைக் காணலாம். சான்றாகப் பூர்வி கல்யாணி ராகத்திலும் ஆதி தாளத்திலும் அமைந்த பாடலாவது

எடுப்பு

மா மதுரை ஆளும் மீனாட்சியே
தே மதுரத் தமிழால் போற்றுவேன் உனையே (மாமதுரை)

தொடுப்பு

நாமகளும் நீயே! நலிந்தோரைக் காக்கும்
கோமகளும் நீயே! அருள்வாயே (மாமதுரை)

முடிப்பு

தங்கரதம் ஏறித் தரணி காத்திடும்
அங்கயற் கண்ணியே! அன்னையே!
பங்கயப் பாதமே பற்றிப் பணிந்தேன்
சங்கரியே! மதுநாத வாணியே (மாமதுரை) (ப. 77)

என்பதாம். மாணிக்கவாசகரும், ஆண்டாளும் பாவை பாடி இறைவனைப் போற்றினர். இவரும் அரிநாமம் போற்றிப் பாவைப் பாடல்கள் பத்தினை, 'எழுபாவாய்' என்ற தலைப்பில் பாடியுள்ளார். அதிகாலை நேரத்தில் பெண்கள் கூட்டம் ஆலயம் சென்று அரிநாமம் போற்றிப் பாடுவதற்குப் பாவையரை எழும்படி அழைக்கிறார் (ஐந்தருவி. பக். 12).

காவடிச் சித்தன் கந்தன் மகிமையைக் காவடிச் சிந்தாக 76ஆம் கண்ணிகளில் பாடியுள்ளார். பத்திச் சுவையுடன் அமைந்த இக்கண்ணிகள் இறைவனைப் பாடிப்பரவி உணரத் தக்கவை (சாரல் ப. 108).

முருகனைப் பரவுவது போல் அந்தாதிக் கந்தன் எனும் நூல் அமைந்துள்ளது. பொதுவாக அந்தாதிக்குரிய பாக்கள் 100. இந்நூலில் 278 விருத்தப்பாக்கள் அமைந்துள்ளன. இவ்வந்தாதி பாடுங்கால் இவர் பெற்ற அனுபவத்தை நூலின் முன்னுரையில் கூறியுள்ளார். 10.8.2002 அன்று மத்தியப் பிரதேசத்தில் 'தமோ' எனும் ஊரிலிருந்து குஜராத்தில் உள்ள துவாரகைக்குச் செல்லு முன் உடல்நலம் வேண்டிக் கந்தனைத் தொழுது நின்றபோது 'காதலாகி கசிந்து கண்ணீர் பெருகிவர அழுகை விழுந்து அண்ணல் நினைவை' என்னும் வரிகளை இவர்தம் வாய் மொழிந்தது. சொற்கட்டும், பொருட்கூட்டும் நிறைந்த அந்தாதி விருத்தங்களைத் தம் 32 மணிநேர இரயில் பயணத்தில் எழுதி முடித்திருக்கிறார்.

பிற பாடல்கள்

இதயத்தைப் பாதுகாப்பதற்கு இவர் கூறும் வழிகள் பல. மரக்கறி உணவை உண்டால் மரணத்தை ஒத்தி போடலாம் என்று கூறுமிவர் பரபரப்பு கொள்ளாமல் இதயத்தைப் பாதுகாக்க அன்பினையும் இனிமையையும் வலியுறுத்துகிறார்.

**இருதயக் குழாய்தனை இலகுவாய் உணர்வாய்**
**இருதயம் கனக்காது இனி பாரம் சுமக்காது**
**இதயத்துச் சுவர்களை இறகுபோல் வைத்திரு**
**இதயமே பலமாகி இவ்வாழ்வு சுகமாகும்**

(அன். ஊஞ். ப. 42)

மேலும் கண்டதை உண்ணாமல் வயிற்றைச் சுருக்கினால் நன்மையுண்டு என்றும், கட்டுப்பாடு இல்லாதவர்கள் கூற்றுவனிடம் விரைந்து செல்வர் என்றும் கூறுகிறார்.

விஞ்ஞானம் வளர்ந்து நிற்கும் இந்நாளில் ஆங்கில மருத்துவம் மேலோங்கியுள்ளது. ஆங்கில மருந்துகள் பக்க விளைவைத் தருவனவாதலின் இயற்கை மருத்துவம், ஆயுர்வேதம், சித்தமருத்துவம் போன்றவற்றை மக்கள் நாடுகின்றனர் என்பதை இயற்கை மருந்து என்ற கவிதையில் (பூஞ்சோலை ப. 77) கூறுகிறார்.

காடுகள் அழிக்கப்படுகின்ற இந்நாளில் 'மரங்களை வளர்ப்போம்' என்று முழக்கம் பெருகி வருகின்றது. இயற்கை தன்னை அழிக்காமல் இருந்தால் இனிய வாழ்வு பெறலாம் என்பதைக் கவிஞர் உணர்த்துகின்றார் (ஐந்தருவி, ப.36). இளநெஞ்சங்களில் இக்கருத்தைப் பதித்து வைத்தால் எதிர்கால இந்தியா செழிக்கும் என்ற மனத்தை உடையவராய்,

**வெட்டுதல் நிறுத்தி மரங்களையே**
**பட்டுவிடாமல் காத்திடுவாய்**
**காட்டு விலங்குக் கூட்டந்தனை**
**கவனமொடு நீ போற்றிடுவாய்**

**நிலங்களே வீடாய் மாறிவிடின்**
**நிலத்தடி நீரும் குறைந்திடுமே**
**இலக்குகள் இன்றி நடமாடி**
**இயற்கையைச் சீண்ட நினையாதே**

**வரைமுறை இன்றி வாழ்ந்துவிடின்**
**எரிமலைச் சீற்றம் தொடர்ந்திடும்**

**கரைகளைக் கடந்து கடல் வந்தால்**
**காப்பாற்றும் வழி உண்டோ சொல்** (பூஞ். ப.72)

என உரைக்கிறார். நில்லா உலகில் புகழ் நிலைக்க அறச் செயல்கள் புரிதல் வேண்டும். தானம் செய்வதில் தலைசிறந்த நாடு பாரதம். மற்ற தானங்களைவிடச் சிறந்த தானம் தம் உறுப்புகளைத் தருவதாகும். இதனைக் கவிஞர்,

**ஓர்கண்ணைத் தந்துலகில்**
**ஒளிவெள்ளம் பாய்ச்சுவீர்**
**ஓர் நீரகம் தந்தும் நீர்**
**ஒருயிரைக் காத்திடுவீர்**
**ஓர் குப்பியேனும் நீர்**
**உம்குருதி அளிப்பீரே**
**ஓர் உலகம் வாழ்வோரை**
**ஒருயிராய் நினைப்பீரே** (சாரல். ப. 38)

என்று அறிவுறுத்துகிறார்.

## முடிவுரை

வங்கியில் பணிபுரிந்த போதும் தமிழார்வம் கொண்டு பல்வேறு தலைப்புகளில் இவர் பாடியுள்ளார். இவர்தம் கவிதைகள் வளரும் கவிஞர்களுக்கு ஊக்கத்தையும், ஆக்கத்தையும் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை.

# கஸ்தூரி ராசா

## கவிஞர்

இவர் புரசைப்பாக்கத்திற்கு அருகே உள்ள ஓட்டேரி என்ற பகுதியில் 1952இல் இராகவன், சுந்தரம்மாள் ஆகியோருக்கு மகளாகப் பிறந்து வளர்ந்தவர். இவர் தமிழில் எம்.ஏ., எம்.ஃபில், பிஎச்.டி., இதழியல் (முதுகலைப் பட்டயம்), சித்தாந்த இரத்தினம், மருத்துவச் சான்றிதழ் படிப்பு (Basic pranic Healing), பி.எட். போன்ற பட்டங்களைப் பெற்றவர். உயர்நிலைப் பள்ளிகளில் பணியாற்றிய இவர் 1987ஆம் ஆண்டு முதல் அண்ணா ஆதர்சு மகளிர் கல்லூரியில் தொடர்ந்து பணியாற்றி வருகிறார். பல்கலைக் கழகங்கள் நடத்தும் கருத்தரங்குகளிலும், தமிழ் மன்றங்கள் நடத்தும் மாநாடுகளிலும் கலந்து கொண்டு 75க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியுள்ளார். திருக்குறளைப் பரப்புவதை நோக்காகக் கொண்ட இவர், வள்ளுவர் வழி இதழில் நூல்களைத் திறனாய்வு செய்து வருகிறார். உலகத் திருக்குறள் பேரவை, **வள்ளுவர் வழி**, வாசகர் வட்டம் போன்ற அமைப்பு களில் துணைத் தலைவராக இருந்து பணியாற்றுகிறார். உலகத் திருக்குறள் மையமும் தமிழக அரசும் இணைந்து வள்ளுவர் கோட்டத்தில் நடத்தும் கூட்டங்களில் ஆய்வுக் கட்டுரைகளைத் தொடர்ந்து வழங்கி வருகிறார். திருக்குறள் இயக்கம் **திருக்குறள் ஞாயிறு** என்ற பட்டத்தை இவருக்கு வழங்கியுள்ளது.

தாய் மண் இலக்கியக் கழகம், பேரறிஞர் அண்ணா தமிழ் வளர்ச்சி மன்றம் (காஞ்சிபுரம்), இலக்கியச் சுடர்மணி, தமிழ்க் காப்பாளர் என்ற பட்டங்களையும், பன்னாட்டுத் தமிழுறவு மன்றம் தமிழ்ப்பணிச் செம்மல் (வெள்ளி விழா மாநாட்டில்) என்ற விருதையும் இவருக்கு வழங்கியுள்ளன.

**அன்றும் இன்றும், தமிழ் இலக்கியங்களில் நிலையாமை** (இரண்டு தொகுதிகள்), **திருக்குறள் காட்டும் வாழ்வியல் நெறிகள், இலக்கிய மலர்கள், தமிழும் தமிழரும்** ஆகிய ஆறு ஆய்வுக் கட்டுரை நூல்களும், **முக்கனி** என்ற

கட்டுரை நூலும், **கஸ்தூரி ராசாவின் கவிதைகள், வேரும் விழுதுகளும்** என்ற இரண்டு கவிதை நூல்களும், **கஸ்தூரி ராசாவின் சிறுகதைகள்** என்ற சிறுகதை நூலும் எனப் பத்து நூல்களை இவர் வெளியிட்டுள்ளார்.

சுதந்திரம் கண்ட பொன்விழா, பாவேந்தர் குயில்கள், ராஜீவ் காந்தி கவிதாஞ்சலி, ஆனந்த சுதந்திரம் - 50, பாவேந்தர் பூங்கா, பாவேந்தர் பாதையில் போரிலா உலகம், மக்கள் தலைவர் மணிமாலை, கவிஞர் போற்றும் சுரதா, தமிழருவி, நட்பெனும் ஞானப் பேழை, பாவேந்தர் குயில் பூங்கா, புது நானூறு, அணி வகுப்பு, ஒரு கூட்டுப் பறவைகள், புதிய சகாப்தம் போன்ற தொகுப்பு நூல்களில் இவருடைய கவிதைகள் முப்பதுக்கும் மேல் வெளிவந்துள்ளன; பள்ளி, கல்லூரி மாணவிகள் இசை அமைத்துப் பாடும் வகையில், பாடல்களை அவ்வப்போது எழுதியும் வருகின்றார்.

## நூல்களின் அமைப்பு முறை

1998ஆம் ஆண்டு இவர் தன் பெயரில் **கஸ்தூரி ராசாவின் கவிதைகள்** என்ற நூலை வெளியிட்டார். இந்நூலில் தான் கூற வந்த கருத்துகளைப் பெண், பெண்-ஆண், பொது, சான்றோர், இயற்கை, தத்துவம் என ஆறு பகுதிகளாகப் பகுத்துக் கொண்டுள்ளார். முதல் இரு பகுதிகளில் 29 தலைப்புகளில் (23+6) பெண்களுக்குரிய பிரச்சினைகள், ஆண்கள் பெண்களை நடத்தும் விதம், இல்லறக் கடலில் பெண்கள் ஆற்றும் பணி போன்றன பற்றிப் பேசுகின்றார். அடுத்துள்ள பொது என்ற பகுதியில் 13 தலைப்புகளில் இலக்கியத்தின் மாண்பு மற்றும் கல்வியின் பெருமை குறித்தும், சான்றோர் என்ற பகுதியில் 12 தலைப்புகளில் முன்னாள் பாரதப் பிரதமர் நேரு, திருவள்ளுவர் போன்ற சான்றோர் குறித்தும், இயற்கை என்ற பகுதியில் ஆறு தலைப்புகளில் இயற்கை குறித்தும், தத்துவம் என்ற பகுதியில் 14 தலைப்புகளில் தத்துவம் குறித்தும் எழுதியுள்ளார்.

2002ஆம் ஆண்டு வெளியான **வேரும் விழுதுகளும்** என்ற நூலில் பாப்பாப் பாட்டு, மெய்ப்பாடு, வாழ்க்கை, உலகில் முதலிடமே, புதுமகளே வா, புத்தாயிரமாண்டில் புத்துணர்வு பெறுவோம், நாடு நலமுற, விடியலைத் தேடி, சுதந்திரம், நேற்று-இன்று-நாளை, நூலகம் மாண்புறும் நாள் முதலான 20 தலைப்புகள் இடம்பெற்றுள்ளன. **பாப்பாப் பாட்டு** எனும் தலைப்பில் உள்ள 20 பாடல்கள் குழந்தைகள் பாடும் வகையில்

உள்ளன. வெண்பா, ஆசிரியப்பா, புதுக்கவிதை, ஹைக்கூ (குறும்பா) ஆகிய வடிவங்களைத் தாங்கியுள்ள இந்நூல் பழைமைக்கும் புதுமைக்கும் பாலமெனத் திகழ்கின்றது. மரபுக் கவிதைகள் வேராகவும், மற்றவை விழுதுகளாகவும் இணைந்து தமிழ்க்கவிதையாகிய ஆலமரம் விழாது தளிர்க்கும் வகையில் பாடல்கள் உள்ளன. மொழி, சான்றோர், சமுதாயம் ஆகிய தலைப்புகளில் உள்ள பாடல்கள் வெண்பாவில் அமைந்துள்ளன.

ஒட்டேரியில் வாழ்ந்து வந்த போது அங்குள்ள தொழி லாளர்களின் குடும்பங்களிலுள்ள பெண்கள்படும் துன்பங்களைக் கண்டு இவர் மனம் நெகிழ்ந்திருக்கிறார் என்பதனை,

**அடிபட்டால் வலிக்குமெனப் பார்த்தால் அறியலாம்**
**கடிபட்டால் விடமேறும் எனக் கண்டு தெளியலாம்**

இவரது உணர்வுகளுக்கு வடிகாலாக உருவாகிய இதுபோன்ற கவிதைகள் பலவற்றை இவரது படைப்புகளில் காணமுடிகின்றது.

## பெண்

பெண்களின் அவல நிலையை, அவள் படும் தொல்லையை, வளமின்றி இருண்டும் கிடக்கும் அவளது வாழ்வைப் பின்வருமாறு விளக்குகிறார்.

**ஐ.ஏ.எஸ். ஆனாலும்**
**அடுக்களை என்றாலும்**
**ஆணின் நிழலில் பெண்** (வே.விழு. ப.27)

**இயந்திரத்தின் எதிரில்**
**இனிய மலர் – வாழ்வும்**
**இயந்திரம்** (மேலது)

**இறப்பினும் கொடுமை**
**இல்லறத் தீயினில்**
**விறகு – மனைவி** (ப. 53)

**வேகின்ற கட்டையைத்**
**தினமும் தீய்க்கும்**
**அதிசய மருந்து – கணவன்** (மேலது)

**சங்கதியைப் பரப்புவதற்கு நாத்தனார் சன்னல்கள். .**
**மனைவியென்ற ஒளிவிளக்கு. . . .** (க.ரா.கவி. ப. 28)

**அயர்ந்த வேலையில் இரவை அனுபவித்த**
**அழகிய பெண்ணின் வாழ்வு அமாவாசை** (ப.3)

இன்றைய சமுதாயத்தில் வறுமை, தொழிலின்மை, ஒழுக்கக்கேடு போன்றவை காரணமாய், தம் கணவரால் பெண்களுக்கு ஏற்படும் இழிநிலையை,

> மனைவியை விற்கும் அரிச்
> சந்திரன், தருமர் இன்றும்
> உலகில் (வே.விழு. ப. 39)

எனக் காட்டி, ஆணாதிக்கத்தின் உச்ச நிலையை இதன் வழி உணர்த்துகின்றார். பெண்களின் இழிநிலையைக் கண்டு வருந்தும் கவிஞர் அவர்களிடத்துள்ள தவறினை இடித்துரைக்கவும், ஆண்களிடத்துள்ள நற்குணத்தைப் போற்றவும் தவறவில்லை.

> காதலித்தான் வேறொருவன்
> காரில்வர – அவள்
> 'கார்' 'மே' 'கம்' (ப. 29)

ஒருவனுக்கு ஒருத்தி எனும் பண்பாட்டை மீறி ஒருவனைக் காதலித்து, மற்றொருவனைக் கரம்பிடிக்கும் பெண்ணின் செயலை ஓரிடத்தில் நில்லாத கார்மேகத்தின் செய்கைக்கு ஒப்பிடுகிறார். இதில் ஒரு கார் வாகனத்தையும், மறுகார் வானத்தையும் குறிக்கும் சொல்லாட்சி நயம்பட அமைந்துள்ளது.

> ....... .......பல
> கணவன் மாரோ கண்மணியாய்ச் சில
> கணவன் மாரோ 'கரு'திரையாய் (க.ரா. கவி. ப. 99)

என்ற அடிகளில் பெண்களின் திறமையினை இருட்டடிப்புச் செய்கின்றவர்களுக்கிடையே, பெண்களுக்கு வழிகாட்டியாகப் பல ஆண்கள் விளங்குவதைத் தெளிவுபடுத்துகின்றார். மேலே கூறிய கவிதையில் காதல் என்ற பெயரில் நிலவும் சீர்கேடு சுட்டப்படு கிறது. மற்றும் பல கவிதைகளில் உருகவும், இணையவும் செய்யும் காதல் போற்றப்பட்டுள்ளது.

> கலந்து இணைந்தோம்
> கண்ணீர் தேனாயிற்று
> கண்களில் காதலி (வே.விழு. ப. 31)

தலைவனைப் பிரிந்த தலைவி படும்பாட்டினைப் பின்வருமாறு வெண்பாவில் வடிக்கிறார்.

> அன்னப் பறவையே! அன்றில் பறவையே
> என்னுளம் ஏனோ இரங்குவது? – என்னுடைய

*மன்னவன் எங்குளான்? மங்கை துயர்களைய*
*அன்னவனை இங்கே அழை! (ப. 9).*

காதலின் வெளிப்பாட்டைக் காட்டும் இக்கவிதை தூது எனும் சிற்றிலக்கியத்தைக் காட்டும் முகமாக அமைகிறது. பிரிவுத் துன்பத்தின் வடிகாலாக அமைந்து தலைவியின் மன வருத்தத்தைப் பிரதிபலிக்கின்றது. பாலையும் நீரையும் தனித்தனியே பிரித்துப் பாலை மட்டும் உண்ணும் பண்புள்ளது அன்னம். துணை பிரிந்த கணமே உயிர் துறக்கும் தன்மையது அன்றில். குணம் கெட்டுப் பிரிந்த தலைவனைத் திருத்தும் ஆற்றல் அன்னத்திற்கு உண்டு எனும் நோக்கில் இதனையும் தலைவன் பிரிவால் துயரடைந்த தலைவி, இறப்பைத் தழுவும் அன்றிலின் தன்மையில் உள்ளாள் எனும் நோக்கில் இதனையும் தூது அனுப்பி மங்கை துயர் களைய ஆசிரியர் வேண்டுகிறார்.

பரத்தையர் படும்பாட்டினையும், புதிய கோணத்தில் கீழ்வருமாறு சிந்திக்கிறார்.

**அன்பென்றால் என்ன வென்று அடியோடு மறந்து விட்டேன்**
**அம்புபட்ட புறாபோல அறையிருளில் தவிக்கின்றேன்**
**(க.ரா. கவி. ப. 38)**

இலைமறை காயாக இருக்கும் சமுதாய உணர்வுகளை பரத்தமை பற்றிய கவிதைகளில் எதார்த்தமாகக் காட்டுகின்றார்.

**அங்கென்ன அழகிப் போட்டியா**
**ஆடையில்லாத நிலவு**
**கண்சிமிட்டும் விண்மீன்** (வே.விழு. ப. 23)

**மேகப் பெண்ணே**
**ஊர்ந்து வருவதால்**
**ஊர்வசி நீயே** (மேலது)

விதவைப் பெண்ணுக்கு மறுமணம் நிகழ்வதால் அவள் வழி, பிள்ளைகள் குடும்பமாக மகிழும் நிலையினை,

**வெறிச்சோடிய பெண்**
**பதியம் போட**
**மீண்டும் மலர்கள்** (ப. 43)

எனக் காட்டுகின்றார்.

## கல்வி

பெண் கல்வியைப் பெரிதும் வற்புறுத்தும் இவர், அதன் மேன்மையை,

> ஆணின் கல்வி அறுசுவை உணவே
> அரிவைக் கல்வி அமுதாம் உணவே (க.ரா. கவி. ப. 40)

என்று உணர்த்துகிறார். இன்றைய ஆங்கிலக் கல்வி நிலையங்களும், தொழில்நுட்பக் கல்லூரிகளும் அடிக்கும் பகற் கொள்ளையினை,

> கண்போன்ற கல்விக்கும் காசுபணம் கேட்பவரைப்
> பெண்களைச் சாய்க்கும் பழிகாரர் – எண்ணத்தை
> மின்னாம் குடியாக்கித் தீய்த்து மிதித்தவரின்
> வன்செயல் வேரறுப்போம் வா (வே.விழு. ப. 6)

என்ற கவிதையில் கடிந்துரைப்பதோடு, பெண்ணுரிமைக்கும் குரல் கொடுக்கின்றார். வேலையில்லாத் திண்டாட்டத்தையும், அது தீரும் வழிமுறையையும்,

> பிச்சைக் காரனா
> நீ தந்து நானேற்க
> பட்டதாரி (ப. 40)

என்ற கவிதையில் தெளிவுபடுத்திப் படித்த இளைஞர்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டுகிறார்.

## வறுமை

தங்க இடம், உடுக்க உடை, உண்ண உணவு ஆகிய அடிப்படை வசதிகளைக் கூட அமைத்துக் கொள்ள முடியாத நிலையே விடுதலை பெற்று ஐம்பதாண்டுகள் ஆகியும் நிலவுகிறது. அது மட்டுமல்லாமல் பசியும், பட்டினியும் இன்றும் தலை விரித்தாடுகின்றது. இதனை உணர்த்தும்முகமாய்,

> மானுடன் ஒருவன் கூடுகட்ட
> மாயை உலகில் முடியலையே
> மானாய்ப் பிறந்தால் புதர் நடுவில்
> மாண்புறு வாழ்க்கை வாழ்ந்திடலாம் (க.ரா.கவி.ப.105)

என்ற கவிதை அமைகின்றது. ஏழை மக்களின் அவல நிலையினைக் காட்டும் போது,

> எலும்பு முறிந்தது
> எகிறிப் பாய்ந்ததில்
> நாய் வெற்றி (வே.விழு. ப. 42)

என்று கூறுகிறார். எச்சில் இலைகளைப் பற்றுவதில் கூட நாய்க்குத் தான் வெற்றி என்பது வறுமையின் கொடுமையைக் கண்முன் நிழலாடச் செய்கின்றது.

## வாழும் முறை

வாழும் வகையினை எறும்பு, நாய் போன்ற உயிரினங்களைக் காட்டி விளக்குகிறார் (க.ரா.கவி.,ப.106). பறவையைக் காட்டி மனிதனைச் சிந்திக்குமாறு ஆணையிடுகிறார்.

> **அலகினால் அமுதூட்டும் பறவை**
> **அழகுகைகள் தடுப்பதேன்**
> **மனிதா யோசி** *(வே.விழு. ப. 53).*

வாழும் வகையினைக் கூறி ஒருமைப்பாட்டை,

> **காக்கை கூறும் பாடத்தைக்**
> **கடுகள வேனும் மறக்காது**
> **நமக்குக் கிடைத்த உணவினையே**
> **நான்கு பேருக்கு வழங்கிடுவோம்** *(ப. 17)*

என்ற கவிதையில் வற்புறுத்துகிறார். அல்லா, யேசு அனைத்தும் தெய்வம் அனைவரும் உறவினர் (ப. 74) என மத ஒருமைப் பாட்டினையும், ஒன்று கூடுவோம் என்ற தலைப்பில், கதை கூறுகின்ற அமைப்பில் தேசிய ஒருமைப்பாட்டினையும் (ப. 15) வலியுறுத்துகிறார். கலப்பு மணம் சாதியைத் தீய்க்கின்ற தீயாம் (ப. 10) என்று சாதி, மத ஒழிப்புக்குத் துணை நிற்கும் கலப்பு மணத்தின் அவசியத்தை ஆதரித்தும் வற்புறுத்தியும் (ப. 60) கவிதை படைத்துள்ளார்.

குடியை மறந்தாலன்றிக் குலம் விளங்க இயலாது, குடியால் குணம் கெட்டு வாழ்தல் கூடும், குணமோங்கி வாழக் குடிபோதைப் பழக்கத்தை விட்டொழிக்க வேண்டுமெனச் **சமுதாயம்** (பக். 6-11) என்ற தலைப்பில் அறவுரை பகர்கின்றார். சூதாட்டத்தைச் சாடும் இதே தலைப்பில், உலகளாவிய பயங்கர வாதத்தையும், உலகப் பயிர்களுக்கு இடையில் எழுந்த களையாகத் தீவிரவாதியான ஒசாமா பின்லேடனையும் சாடுகின்றார்.

மேலுமிதில் பெற்றோரையும், மற்றோரையும் முதியோர் காப்பகத்தில் சேர்த்து விடுகின்ற சமுதாயக் கேட்டினைக் களைய விரும்புகின்றார். முதியோரைக் காப்பகத்தில் விட்டால் நமக்கும் அந்நிலை உருவாகும் என இடித்துரைத்து மக்களைப் பண்படுத்தியுள்ளார் (பக். 49-53).

முதியோர் இல்லா வீடு
முடிவிலாக் காடு - மனிதா
முழுமையாகு (ப. 49)

பணமிலா இளையள்
பிணமாய் வாழ்வாள்
முதியோர் இல்லம் (ப. 50)

## அரசியல்

சுற்றுப்புறச் சூழல் மாசுபடுவதற்கு அரசே துணை போகின்ற அவலநிலையை,

அனுமதி அரசிடம்
அடுக்குமாடி கட்ட - மரம்
ஆஹா வென்று சிரித்தது (ப. 22)

எனத் துணிச்சலுடன் பறைசாற்றுகிறார். தொண்டனை முன்நிறுத்தித் தான் போலியாக வாழும் அரசியல் தலைவர்களின் முகத்திரையை,

தலைவன் வாயில் தொடைக்கறி
தொண்டன் உண்ணாவிரதம்
அரசியல் (ப. 44)

எனக் கிழிக்கின்றார். இலஞ்சம் தலைவிரித்தாடுவதையும் போலியான போராட்டங்களையும் பல கவிதைகளின் வழிச் சாடுகிறார்.

## மொழிப்பற்று

தமிழ்மீது விருப்பம் கொண்ட கவிஞர் முதலிலே தமிழ்த் தாயைத்தான் வணங்கிப் போற்றுகின்றார்.

தமிழே! உயிரே! உயிரின் உணர்வே
தலையால் உன்னை வணங்குகி றேனே (க.ரா. கவி. ப. 2)

இன்பத் தமிழிருக்க ஏனடா வேற்றுமொழி (வே.விழு.ப.1)

தாய்ப்பாலின் வீரியமும் . . . . . .
நல்ல தாய்மொழியே கல்விக்குக் கண் (ப. 2)

என்ற பாடல்களில் தாய்மொழிவழிக் கல்வியின் இன்றியமை யாமையை வலியுறுத்துகின்றார்.

## நாட்டுப்பற்று

நாடு நலமுற என்ற கவிதையில்,

**இந்திய நாடு சுதந்திரம் பெற்றே**
**இருந்த கொள்கை அனைத்தையும் விற்றே**
**இருளாம் பொருளைச் சேர்ப்பதைக் கற்றே**
**இருண்டு போகுமுன் நாட்டைப் பற்று** (ப. 60)

என நாடு இருண்டு போகுமுன் ஈனக் குணத்தை விடுத்து நாட்டுப் பற்றுடன் திகழ்வோம் என அறிவுறுத்துகிறார்.

**சுதந்திரம் பெற்ற சொந்த நாட்டில்**
**சுகமும் கிடைப்பது சுலபத் தவணையில்!** (ப. 67)

என்ற கவிதையில் மக்களின் அவல நிலையை உணர்த்தி, சுதந்திரக் காற்று நன்கு வீசாமையால் நாட்டுப்பற்று மக்களிடம் குறைந்து விடுமோ என ஐயம் எழுப்புகிறார். மேலும் சமரசச் சிந்தனை, அன்பு ஆகியவற்றைக் கைக்கொண்டு கீழ்மக்கள் செயலை அழித்திடவும், ஊழல்வாதிகளை ஒழித்திடவும் செய்தால் உலகில் இந்தியா முதலிடமே (பக். 74-75) எனக் கூறி அவல நிலை மாற மக்களாற்ற வேண்டிய செயல்களைப் பட்டியலிட்டு நாட்டுப்பற்றை விதைக்கிறார்.

**இந்தியா உயர்ந்து ஓங்கிடவே**
**இரவும் பகலும் உழைத்திடுவோம்** (பக். 12-18)

என்பதன்வழி உழைப்பின் உயர்வை வெளிப்படுத்துகிறார். நாட்டைக் காக்க நன்றாகக் கல்வி கற்க வேண்டும் என்றும் கூறுகிறார்.

## சிறுவர்

பாரதியார் என்ற தலைப்பில் வள்ளுவர்வழி, கல்வி, காலம், பொன் முதலான 20 உட்தலைப்புகளில் (வே.விழு. பக். 12-20) குழந்தைப் பாடல்களைப் புதுக்கவிதையில் பாடியுள்ளார். பாரதி யாரின் கவிதைகளைப் போன்று வழங்கியுள்ளதால் பாரதியார் என்றே இக்கவிதைகளுக்குத் தலைப்புக் கொடுத்துள்ளார்.

'நிலா நிலா ஓடிவா' என்ற கவிதையில் பாரதியின் படைப்புகளைப் போற்றியுள்ளார். "கைவீசு" கவிதையில் நாட்டுப் பற்றையும் மொழிப்பற்றையும் குழந்தைகள் மனத்தில் பதிக்க முற்பட்டுள்ளார். யானை எனும் கவிதையில் யானையைக் காட்டித் தேங்காய் தந்திடுவோம், குதித்துக் குதித்து ஆடிடுவோம் எனத் தன்னுணர்ச்சிப் பாடல் பாடுகின்றார். "அ. . . ஔ" வரை

எனும் கவிதையில் ஔவை மூதாட்டியைக் குழந்தைகளுக்கு நினைவுகூர்கின்றார். மேலும் தாய், தந்தை, ஆசான் ஆகியோரின் அருமை, கல்வி, ஒற்றுமை உணர்வு, குறளின் சிறப்பு ஐவகைச் சுவை, தேசத்தலைவர், பகவான் மகாவீர் கொள்கை, மகாத்மா காந்தி, தொலைக்காட்சியின் பயன் போன்றன குறித்த இன்றி யமையாத பண்பு நலன்களை எளிய தமிழில், இனிய சந்தத்துடன் குழந்தைகளுக்கேற்றவாறு கவிதைகளாக வடித்துள்ளார்.

**அன்பே நமக்குத் துணையாகும்**
**ஆன்றோர் சொன்ன வழியாகும்**
**இன்பம் மனிதன் பெற்றிடவே**
**ஈகைக் குணத்தை வளர்த்திடு**
**உயர்ந்தவன் என்ற பெயரோடு**
**ஊரார் சொல்ல வாழ்ந்திடு**
**எதற்கும் அஞ்சா நிலையினை**
**ஏற்று வாழ முனைந்திடு**
**ஐயன் ஒருவர்தா னென்றே**
**ஒன்று கூடி முழக்கிடு**
**ஓதும் வேதம் குறளாகும்**
**ஔவை வழியில் நடந்திடு**
**அஃதே நமக்கு உணர்வாகும்** *(ப. 14)*

## சான்றோர்

திருவள்ளுவர், பாரதியார், பாரதிதாசன், அறிஞர் அண்ணா, பெரியார், அன்னை தெரசா, எம்.ஜி. ராமச்சந்திரன், இராஜீவ் காந்தி, கருப்பையா மூப்பனார், கலைஞர் கருணாநிதி, நீதிபதி பெ. வேணுகோபால், புலவர் மா. செங்குட்டுவன், பாதுஷா மன்னர், கவிஞர் சுரதா போன்ற சான்றோர்களையும், துறை சார்ந்த அறிஞர் களையும் அவர்தம் அரும்பணிகளையும் பாராட்டு முறையில் போற்றுகின்றார். அன்னை தெரசா பற்றிக் கூறும்போது வெண்பாவில்,

**தனக்கென்று வாழாத அன்னை 'தெரேசா'**
**மனத்தில் மணக்கும் மலர்** *(வே.விழு. ப. 5)*

என வாழ்த்துகிறார். தந்தை பெரியார் பற்றிக் கூறும் போது,

**வல்லாண்மை ஆதிக்க வாதிகளைச் சாடியே**
**பல்லாண்டு மக்கள் பணிசெய்தார் – வல்ல**
**வரிகளால் பெண்ணுரிமை வாதஞ்செய் வைக்கம்**
**பெரியார்தொண்டு போற்று** *(ப. 5)*

எனப் பாராட்டுகின்றார். இதில் கேரளத்து வைக்கம் எனும் இடத்தில் பெரியார், ஈழவர் மற்றும் பழங்குடியினரை ஆலயப் பிரவேசம் செய்யச் செய்து அதற்குத் தலைமைப் பொறுப்பினை ஏற்ற வரலாற்று நிகழ்ச்சி பதிவு செய்யப்பட்டுள்ளது. இதே போல் பாதுஷா மன்னர்களைக் குறிப்பிடும்,

**காகிதம் அறியாக் காலத்தில் காஷ்மீர்**
**கண்ணென ஆண்ட பாதுஷா மன்னர்**
**இந்திய நாட்டில் அனைவரும் உணர**
**இந்தக் கலையை இதயத்தில் பதித்தார்** (ப. 20)

என்ற பாடலில், பல்லோர் அறிய நூலகமாகச் செப்பேடு, கல்வெட்டு, பனையோலை முதலியனவற்றைத் தொகுத்து ஓரிடம் வைத்த பெருமை பாதுஷா மன்னர்களையே சாரும் என்ற வரலாற்று நிகழ்வு சுட்டப்படுகிறது. மேலும், அனைத்து மாநிலங்களும் ஒன்றாக இருந்த நிலை மாறி இந்தியா பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்ட வரலாறும் பதிவு செய்யப்பட்டுள்ளது (ப. 70).

## தத்துவம்

அன்றுமுதல் இன்றுவரை எழுதி வரும் கவிஞர்கள் இவ்வுலகம் நிலையில்லாதது என்ற கருத்தை முன் வைக்கின்றனர். அதனையொட்டி வாழ்க்கை என்பது நாடகமென்றும், இங்கு வாழ்பவர்கள் பொம்மைகள் என்றும், இறைவன் நம்மை அசைக்க நாம் ஆடுகிறோம் என்றும் கூறி உலகின் இயல்பைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறார் (கரா. கவி. ப. 106). வாழும் வழி (பக். 105-106), ஆண்டவன் ஆடல் (ப. 107), நண்பனே (ப. 97), துன்பம் எங்கே (ப. 110) போன்ற தலைப்புகளில் பின்வருவன போன்ற தத்துவக் கருத்துகள் மிளிர்கின்றன.

**நீராய் உதிர்ந்திடும் உன்வாழ்வு**
**நித்தியம் என்பது உன் எண்ணம்**
**நீராய் ஓடி அழிகின்ற**
**நிர்மல நாளே நன்னாளாம்** (ப. 106)

காலத்தின் அருமையை நிலவின் வழியாகச் சுட்டிக்காட்டி,

**மெய்யறுக்கும் வாள்நாளாம்**
**உயிரறுக்கும் கத்திப்பிறை** (வே.விழு. ப)

என்று நிலையாமையை உணர்த்துகிறார். உலகமெனும் நாட்டைச் சூரிய சந்திரர் என்ற இருவர் பகல், இரவு எனப் பகுத்துக் கொண்டு ஆள்கின்றனர் என்பதை,

ஒரே நாடு – இருவரும்
ஒன்றாக ஆளுகை – ஆட்சி
சீராம் – இருசுடர் (ப. 22)

என்ற கவிதையில் உணர்த்துகிறார். இறப்பும், பிறப்பும் மாறிமாறி வரும். உயிர்க்கு மறுபிறப்புண்டு என்பதை,

ஒருமுறை இறப்பு
போகும் – திரும்பும்
அதிசயம் வாழ்வு (ப. 38)

என்ற கவிதையில் வெளிப்படுத்துகிறார். உயிர்க்குப் பிறப்பு உண்டு என்ற குறட் (339) கருத்துக்கு உடன்படுகிறார்.

## தொகுப்பு நூல்கள்

வாழும் சான்றோர்களின் மணிவிழா மலர்களில் இவரது கவிதைகள் இடம்பெற்றுள்ளன. இன்றைய சமுதாய நிலையினை, அரசு அலுவலர்களின் போக்கினைத் தொகுப்பு நூல்களிலுள்ள கவிதைகளில் காணமுடிகின்றது. மேலுமிவற்றில் வீடு-சமுதாயம்-நாடு-உலகம் உயர்வு பெற உள்ளம் கனியாக வேண்டுமென்பதும் உணர்த்தப்படுகின்றது.

## உத்தி

மரபுவழிப்பட்ட யாப்புமுறை, புதுக்கவிதை, குறுங்கவிதை, அணிகள், கற்பனை, இயற்கை, சொல்லாட்சித் திறன், நடைநலன், மெய்ப்பாடு போன்ற உத்திகளை இவர் தம் கவிதைகளில் பின்பற்றியுள்ளார். அணிகளைப் பயன்படுத்தும் போது உவமையை மிகுதியாகவும், உருவகத்தைக் குறைவாகவும் கையாண்டுள்ளார்.

### உவமை

தாய்ப்பாலின் வீரியமும், தாவியே வேகமுடன்
பாய்கின்ற ஆற்றினி மையுடனே – தூய்மையாய்க்
காய்கின்ற செங்கதிரின் வன்மையும் கொண்டநல்ல
தாய்மொழியே கல்விக்குக் கண் (வே. விழு. ப. 2)

என்ற பாடலில் தாய்மொழியைத் தாய்ப்பாலின் வீரியத்திற்கும், பாய்கின்ற ஆற்றின் இனிமைக்கும், காய்கின்ற செங்கதிரின் வன்மைக்கும் உவமித்திருக்கிறார்.

### உருவகம்

நிலவுப் பெண்ணே, மேகப் பெண்ணே, மங்கையருவி, வான இலை, குறிஞ்சிப் பெண், மருதப் பெண், பாலைமகள் போன்ற உருவகங்களைப் பயன்படுத்தியுள்ளார்.

**தங்க வளையல்கள் அணிந்து**
**வைர மாலை மிளிர வந்தாள்**
**மழைப்பெண்** (ப. 20)

### சொல்லாட்சி

அதிகார வர்க்கம் சார்ந்தவர்களை **வல்லாண்மை ஆதிக்க வாதிகள்** என்றும், பெரியாரை **வாதஞ்செய் வைக்கம் பெரியார்** என்றும், கல்விக்கு அதிகத் தொகை கேட்கும் கயவரைச் சாடும்போது **வன்செயல் வேரறுப்போம் வா** என்றும், ஐவகை நிலங்களைப் பெண் என்றும், எருதின் உறுதியும், எறும்பின் வேகமும், காளைக்கு இல்லையேல்களை என்றும் கூறுவன சொல்நயத்தையும் சொல்லாட்சியையும் நடை நலனையும் வெளிப்படுத்துகின்றன.

### அடைமொழி

வள்ளுவர், முன்னாள் முதல்வர் எம்.ஜி.ஆர்., மா.செங்குட்டுவன் போன்றோரைப் பற்றிய கவிதைகளில் சிறப்பான அடைமொழிகள் பல கையாளப்பட்டுள்ளன. அன்னை தெரசா பற்றிய கவிதையில் **நறவத்தை மாற்றிடும் நல்வண்டு** (வே. விப. ப.5) என அடைமொழி தரப்பட்டுள்ளது. **வேரும் விழுதும்** என்ற நூலில் தமிழ்மொழிக்குப் பதினைந்து அடைமொழிகள் வழங்கப்பட்டுள்ளன.

### தொடரமைப்பு

**'புற்றீசற் பாக்களில் உம்பாடல் கற்றூணாம்'** (வே.விழு. ப.5)
**'மதத்தால் அழிவது மதத்தலைவருடன் மதமும்'** (ப.46)
**'மலராய் மலர்ந்து மருகி உதிரும் பிறவிக் காடு'** (ப.48)

போன்ற தொடர்கள் ஓசைநயத்துடன் அழகு மிளிரக் காணப்படுகின்றன.

### கற்பனை

**களவாம் மொட்டு**
**கற்புக் கனியாம்** (ப. 38)

கருமைப் புல்வெளியில்
வெண்ணிலா ஒளியில் நடக்கிறேன்
அந்தகன் (வே. விழு. ப.36 )

என்ற கவிதையில் கற்பனை நயம் மிளிர்கின்றது.

## இயற்கை வருணனை

கவிஞர்கள் இயற்கையோடு இரண்டறக் கலந்தவர்கள் என்பதனை இவர்தம் கவிதைகளும் புலப்படுத்துகின்றன.

மேகக் கூந்தலில் சிக்கிய விண்மீன் அருவி (ப. 20)

வானப் பெண்ணின் வளைந்த தாவணி அருவி (ப. 20)

மழலைச் சிரிப்பு மங்கையின் கதகதப்பு மலை வீழ் அருவி (ப. 20)

என்ற அருவி குறித்த வருணனையும், ஐந்திணை குறித்த அனைத்துக் குறுங்காவியங்களும் இயற்கை வருணனையை எடுத்தியம்பு கின்றன (வே.விழு. ப. 21-53). இதன்வழி ஐவகை நிலத்தியல்பும் தொல்காப்பிய மரபு வழுவாமல் சுட்டப்பட்டு வர்ணிக்கப்படுகின்றன.

## வினா அமைப்பு

வில்லாளர் வீரமும், கிள்ளையர் காதலும்
நல்லாரின் பாடல் நலப்பொருளே – நில்லாமை
சொல்லியவர் வீட்டையும் சொல்லி மிகச் சுட்டியதால்
வல்லாரார் வள்ளுவரல்லால்? (ப. 2)

என்ற கவிதையில் வீரமும், காதலும், நலப்பொருளும், நில்லாமையும் (இளமை - செல்வம் - யாக்கை - நிலையாமை) வீடுபேற்றையும் தெள்ளிதின் விளக்கிய வல்லார் வள்ளுவரே. அவரைத் தவிர, செம்மையுறச் செப்பியவர் யார் என்ற கேள்வியை எழுப்பி விடை தருகின்றார்.

## ஒப்பீடு

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு (1)

என்ற குறட்கருத்தை,

அகர எழுத்தே அனைத்தின் முதலாம்
பகவ னவனால் பார்பொருள் படைப்போம் (வே.விழு. ப.73)

என எடுத்தாண்டுள்ளார். தமிழ்மொழியைப் பிறமொழியுடனும், முடத்தெங்கினைச் சமுதாயத்துடனும் ஒப்பிடும் இவர், இயற்கை எனும் தலைப்பில் (மேலது, பக். 20-53) பின்வரும் ஒப்பீடுகளைப் பயன்படுத்தியுள்ளார்.

**வைரக்கற்கள் – அருவி**
**ஆப்பிரிக்க பெண் – இரவு**
**குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை – பெண்**
**இரு குன்றுகள் ஒட்டிய இளைய மலை – பெண்**
**அன்பிலா வாழ்வு – வெங்காயம்**
**ஆடும் கண்ணாடி – குளம்**
**ஆலமரம் – நட்பு**
**தூக்கும் கழுதையா, சுமைதாங்கியா – பள்ளிக்குழந்தை**

## மெய்ப்பாடு

உணர்ச்சி கவிதையால் உருவெடுக்கிறது. எனவே, இத்தகு மெய்ப்பாட்டினை, **மெய்ப்பாடு** எனும் தலைப்பில் (வே.விழு பக். 35-37), ஆறு மெய்ப்பாடுகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

### நகை

**குருவி வால் தலையழகி**
**குட்டைப் பல்லழகி – பெண்ணுக்கு**
**யானைக் கண்** *(ப. 35)*

### அழுகை

**கண்ணீர் குளமாகிக்**
**கட்டிய வீடு – இன்று**
**கரைகிறது** *(ப. 35)*

### இளிவரல் (வருத்தம்)

**சந்திக்கவே நேரமில்லை**
**சந்ததிக்கு வழியேது**
**சிந்திக்கும் காதலர்**

இக்கவிதை வெளிநாட்டில் பணிபுரியும் இந்தியர் பொருள் கருதி மனைவியை விடுத்துச் செல்லும் அவல நிலையை, வருத்தமுடன் வாழ்ந்துவரும் பெண்டிர் நிலையைக் கண்முன் கொண்டுவந்து நிறுத்துகின்றது.

**மருட்கை**

**மின்னும் பற்கள்**
**வெண்ணெயென உடல்**
**வெளிர்மலர் - காதலி** *(ப. 36)*

**அச்சம்**

**மாலை சூடாத மயில்**
**காளைகள் நடுவே கண்ணாமூச்சி**
**கண் தெரியாத காக்கை** *(ப. 37)*

இக்கவிதை சமுதாயத்தில் நடக்கும் கற்பழிப்புச் செய்திகள் பல கண்டுகொள்ளப்படாமல் உள்ளதையும் சமுதாயம் கண் தெரியாத காக்கைபோல் உள்ளதையும் அச்சவுணர்வுடன் வெளிப்படுத்துகின்றது.

**பெருமிதம்**

**இந்தியப் பணத்தில்**
**இதய அறுவை நிபுணன்**
**இருப்பது அமெரிக்காவில்** *(ப. 37)*

வெளிநாட்டில் வேலை பார்ப்பதைப் பெருமிதமாகக் கருதுகின்ற நிலை இதில் வெளிப்படுகிறது; இருப்பினும் இந்தியாவின் அவலநிலையைப் படம்பிடிக்கும் இளிவரல் சுவையே மிகுந்துள்ளது. இவ்வாறு,

மொழிப்பற்று, நாட்டுப்பற்று, நட்புறவு, வாழ்வியல் நிகழ்வு, வரலாற்று நிகழ்வு, மனித நேயம், இறையுணர்வு, குழந்தை, சமுதாயச் சிற்பி, சமுதாயச் சிக்கல், பெண்படும் துயரம், ஆணாதிக்கம், பெண்ணுரிமை, காதல், வரதட்சணை, கலப்பு மணம், விதவை நிலை, வறுமை ஒழிப்பு, குடியால் கேடு, சாதி மத ஒழிப்பு, ஒற்றுமை, மூடக்கொள்கைகள், சுரண்டல் ஆதிக்கம், வேலையில்லாத் திண்டாட்டம் போன்ற பல பொருண்மைக் கூறுகள் அலசி ஆராயப்பட்டு ஆங்காங்கே தீர்வுகளும் இவரது கவிதை நூல்களில் கூறப்படுகின்றன.

## முதன்மை நூல்கள்

**கஸ்தூரி ராசாவின் கவிதைகள்,** கஸ்தூரி ராசா, ஞாயிறு பதிப்பகம், சென்னை, 1998.

**வேரும் விழுதுகளும்,** முனைவர் கஸ்தூரி ராசா, ஞாயிறு வெளியீடு, சென்னை, 2002.

# சுந்தரமூர்த்தி

## சுந்தரமூர்த்தியின் தென்கிழக்குப் பருவமழை

இந்நூலில் 43 தலைப்புகளில் கவிதைகள் அமைந்துள்ளன. கவிதைத் தலைப்புகள் ஒரு சொல், இரு சொல், முச்சொல் என்ற சொற்கட்டுகள் அமைப்பில் அமையப் பெற்றுள்ளன.

ஒரு சொல் தலைப்புகள்



இருசொல் தலைப்புகள்

முச்சொல் தலைப்புகள்

மேகம் என்றொரு பெண்ணொருத்தி (6)
வானம் என்னைவிடச் சிறுதுளி (9)
செய் இல்லையேல் செத்து மடி இவைகள் சொல்லும் செய்திகள் (20)
காரண காரியக் கோட்பாடு (39)

சுந்தரமூர்த்தியின் கவிதைக்கு **நடப்பியல் நடவுகளும் மண்ணின் பதிவுகளுமாய்** . . . என்ற தலைப்பில் அணிந்துரை நல்கிய இராம குருநாதன் கூறும் போது:

> கவிஞர் பார்வையில் பலவிதமான பாடுபொருள்கள் உலா வருகின்றன. சமுதாயச் சிந்தனையும், அறிவியல் நோக்கும், சமூக நடப்பும், உலகளாவிய நாட்டமும் காதல் வலை பின்னும் நேர்த்தியும், அவரது கவிதையில் கைவரப் பெற்றிருக்கின்றன. இயற்கையின் மடியில் அழகுணர்வுடன் தோயவும் நினைக்கிறது கவிஞரின் மனம் இக்கூற்றின் வழியாகக் கவிஞரிடத்துக் காணும் அழகியல் உணர்வு இயற்கையாக அமையப் பெற்றது எனலாம்.

அதன் வெளிப்பாடே பின்வரும் கவிதை.

தலைக்கு
மேலே மிதக்கும்
மேகம்
எந்தக் குளத்தின்
வாயிதழின் உறிஞ்சப்பட்ட
உமிழ்நீர் (ப.64)

மலர்கள்

நில விசும்பை
மழை பெய்யச் சொல்லி
பூமி அனுப்பி வைத்த
மலர்மனுக் கோரிக்கைகள்
ஏழைப் பையனின்
கிழிந்த சட்டையில்
அறுந்த பொத்தான்களுக்குப் பதில்
பூமி அனுப்பி
வைத்த
இலவசப் பொத்தான்கள் (ப.70)

சூரியனும் கடலும் என்ற தலைப்பில் அமைந்த கவிதை இயற்கையைக் கவிதைக் கண்களோடு அழகுறக் கவிஞர் எப்படி நோக்கியுள்ளார் என்பதற்கு அருமையான சான்று எனலாம்.

*பூமியின் நீலச்சேலை*
*கடல் நீரென்றால்*
*அலைகள்*
*அச்சேலையின் ஜரிகைகள்!*
*நீலச்சேலை கட்டிய*
*பூமியைச்*
*சூரியன் சுண்டி இழுத்து*
*ஆவியாக்கினால்*
*சூரியனொரு துச்சாதனன்!* *(ப.56)*

செய் இல்லையேல் செத்துமடி என்ற தலைப்பில் இவர் இயற்றியுள்ள கவிதை.

*கொடிகள் பரவ*
*மரமாகிக் கொஞ்சநாள் வாழ்!*
*செடிகள் முளைக்க நீராகி*
*வேர்களோடு*
*கூட்டணி சேர்!*
*மெல்லிசைத் தென்றலாக*
*சிலகாலம் பிறவி எடு*
*உழைத்த மனிதர்களின்*
*வியர்வைத் துளிகளைக்*
*காற்றுடம்பால் துடை!*
*வானிலே*
*வெண் மேகமாய்*
*மித*
*களைத்த உயிர்களுக்கு*
*தற்காலிக நிழல் தந்து*
*சூரியனை மறை!*
*உன் ஆன்மாவிற்குள்*
*நீயே நுழை*
*மறைந்து வாழும்*
*மிருகத்தை*
*அழித்தொழித்துப் பற*
*இவைகளைச் செய்*
*இல்லையேல் செத்துமடி!* *(ப.61)*

இந்தக் கவிதையில் பிறர்க்குப் பயன்படும் நிலையில் வாழ வேண்டும். அதிலும் குறிப்பாக நாடுயரப் பாடுபடும் உழைக்கும்

வர்க்கத்திற்கு உடல், பொருள், ஆவியால் பயனுடையவனாக வாழ முயல வேண்டும். தன் மனத்தகத்தே புதைந்துள்ள நான் என்ற அகந்தையை அகற்றி எனக்கு என்ற நிலைமை மாற்றிப் பிறர்க்குப் பயன்படும்படியாகப் பொதுச்சிந்தனையோடு வாழ வேண்டும். அவ்வாறில்லையேல் செத்து மடிதல் வேண்டும் எனக் கவிஞர் கூறுவது அவர் சமூக அக்கறையில் கொண்ட பிடிப்பைக் காட்டும்.

சமூக அவலம்

இன்றைய சமூக அவலத்தைக் கவிஞரது சிவசக்தி செதுக்கிய கடிதம் என்ற தலைப்பில் அமைந்த கவிதை எத்தனை அற்புதமாக விளக்கிச் செல்கிறது என்பதைக் காணலாம்.

சிவசக்தி இயக்கத்தில்
செதுக்கப்பட்ட கடிதம் நான்!
ஐயிரண்டு திங்கள்
அஞ்சலகக் கருவறைப் பெட்டிக்குள்
தாயால் அடை காத்து
தை முதல் நாள்
தரை தொட்டுப் பார்த்தவன் நான்! . . .
என் முகவரியைத் தேடி
முத்திரைகள் வந்தன
முதல் முத்திரை
இந்த நாட்டிற்குள் விழுந்தேன்
இரண்டாம் முத்திரை
இந்த மதத்திற்குள் விழுந்தேன்
மூன்றாம் முத்திரை
இந்த இனத்திற்குள் விழுந்தேன்!
நான்காம் முத்திரை
இந்த சாதிக்குள் விழுந்தேன்
ஒவ்வொரு முத்திரைக்கும்
பல்லாயிரம் மனிதர்களை இழந்தேன்
கடைசியாய் வாசலில்
வந்து நின்று வீசும்
தபால்காரனின் கடிதம் போல
வீட்டிற்குள் வீசப்பட்டேன்
இன்று
வீட்டின் மூலையில்
கம்பியில் செருகப்பட்ட
கடிதங்களோடு கடிதமாய் நான்
இறுதி வரையிலும்
நான் பிரிக்கப்படாமலும்
என்
ஆன்மா படிக்கப்படாமலும்
தனியாய் நான் (பக்.25-26)

## கவிஞரும் இயற்கையும்

இயற்கைக் கூறுகளை வைத்துக் கவிபாடுதல் என்பது காலங்காலமாகக் கவிஞர்களிடையே உள்ள மரபு. அவ்வகையில் சுந்தரமூர்த்தி இயற்கையைக் கண்டுள்ள பாங்கு, கவித்துவத்தோடு சமூகச் சிந்தனையைத் தூண்டுவதாகவும் அமையப் பெற்றது எனலாம். 'யாருக்குப் பெய்யும் மழை' என்ற தலைப்பில் அமைந்த கவிதை, மழை குறித்துக் கவிஞர் சிந்தனை அழகியலோடு அரிய கருத்தையும் இணைத்துச் சொல்வதாக அமைந்துள்ளது. இக்கவிதையிற் காணும் சொற்கட்டுகள் படித்து இன்புறத்தக்கன.

*அதோ வானம்*
*நெற்கதிர் அடிக்கத் தொடங்கி விட்டது*
*கட்டிய கதிர்களாய்*
*மேகக் கூட்டம்*
*கூடைகளில் செந்நெல் போலக்*
*குட்டைகளில் நீர்த்துளிகள்*
*சாக்குகளில் செந்நெல்போல*
*ஏரிகளில் நீர்த்துளிகள் . . .*
*மேகம் இசைத்த மெட்டிற்கு*
*பூமித் தவிலில்*
*தாளம் தட்டும்*
*மழைத்துளிகள்*
*புகுந்த வீட்டிலிருந்து*
*பொறந்த வீட்டிற்கு*
*ஆசையோடு பறந்து வரும்*
*வானின் மருமகள்கள்* *(பக்.45-46)*

மண் என்ற தலைப்பில் கவிஞரின் சிந்தனை வாசகனின் மனத்தே ஊடுருவி அவன் எண்ண அலைகளைத் தூண்டிவிட்டு இவரது கருத்தை அதோடு மோத விட்டு இறுதியில் கவிஞரது கருத்து ஏற்புடைய ஒன்று என்று அவனை ஏற்றுக்கொள்ளும்படிச் செய்யும் திறன் பெற்றதாக அமைந்துள்ளது.

*மண் எந்த விதையையும்*
*அமுக்காது! வளர்த்து விடும்*
*மண் எந்தக் கழிவுகளையும்*
*புறக்கணிக்காது! எருவாக்கும்*
*மண் எந்தத் தாவரத்தையும்*
*புறக்கணிக்காது! தாய்ப்பாலாய்த்*
*தண்ணீரைத் தரும்!*
*மண்ணைக் கிளறினால் அழாது*
*மலர்ந்து நிற்கும்!*

மண்ணை வெட்டி மனிதன்
தங்கம் எடுக்கலாம்
தலைக்கனம் கொள்ளாது
மண்ணை வெட்டி மனிதன்
மண்ணாலேயே வீடு கட்டலாம்
மண் பொறுமாது
மண்ணை வெட்டி மனிதன்
வைரம் எடுக்கலாம்
தன்புகழ் பாடாது
தன் பூகம்ப மார்பைப் பிளந்து
தனக்குள் அனைத்தையும் புதைக்க முடியும்
தன் எரிமலை வெப்பத்தில்
அனைத்தையும் தீக்கிரையாக்க முடியும்
தன் புவிஈர்ப்பு விசையை
இரத்து செய்து நம்
இயக்கத்தை நிறுத்த முடியும்
மண் அனைத்தையும்
தன்வயமாக்கும்! பொதுமையாக்கும்
மண்ணுக்கு
வர்க்கபேதம் இல்லை
ஆனால் மனிதன்
மண்ணுக்குள் அணுவைப் புதைத்து
அதன் இதயத்தை அதிர வைக்கிறான்
அது வளர்க்கும் உயிர்களை
அடக்கு முறையால் அசிங்கப்படுத்துகிறான்
அதன் இதயத்திலிருந்து
எண்ணெய் எடுத்து
அதன் முகத்தையே எரிக்கிறான்
அது தரும் தங்கத்தையும்
வைரத்தையும் கொண்டு
அதையே விலை பேசுகிறான் (பக்.107-109)

இப்பாடலில் இறுதி அடிகள் இன்றைய நவீன உலகில் வானியல் ஆய்வு மையம் சமூகப் பொறுப்புணர்ச்சியின்றி நடந்து கொள்ளும் முறையை இயற்கை நிகழ்வுகளோடு ஒப்பிட்டு நவீன அறிவியல் எத்தனை பிழைபட்டு நிற்கிறது என்பதற்கு அங்கத முறையில் அமைந்த கவிஞரின் எள்ளல் படித்து இன்புறத்தக்கது.

கிராமியத்தின் தொழிற்கூடமாக விளங்கும் வயற்காட்டு அனுபவங்களைத் தன் கவிதையில் பதிவு செய்துள்ள அருமை எண்ணி இன்புறத்தக்கது. 'நடவுப் பாட்டு' என்ற இந்நெடிய கவிதையே இதற்குப் போதுமான சான்று எனலாம்.

அலை புரண்டு
வீழ்வது போல் சுலப் பையின்
கொழுபட்டு
மண்தலை புரண்டு விழும்
சேறடித்துப் பிரம்புப் பலகைப்
போட்டு இழுத்தால்
வயல்
திருமணத்திற்குக்
குழைக்கப்பட்ட
சந்தனம் போலிருக்கும்
சேறடித்த வயலில்
கால்வைத்து நடந்தால்
பறக்கையில்
தோன்றும் மகிழ்ச்சிக்கு
எதிர் மகிழ்ச்சியாய்
அவ்வுணர்வு இருக்கும்!
சிறார்கள்
ஞாயிறு கிராப் வெட்டித்
திங்கள் பள்ளிக்குப்
புறப்படும் பொலிவாய்
வரப்புகள்
நடவுக்குமுன் செதுக்கப்பட்டு
புதுப்பொலிவாய் இருக்கும்!

நாற்று முடிகளை
வயல் முழுதும்
வீசுகையில் ஒரு பச்சைக்கிளி
பறந்து சென்று அமர்வதாய்
மிக நேர்த்தியாய் விழும்!

நாற்றுப்பயிர்
பொறந்த வீட்டுப் பெண்
நடவுப் பயிர்
புகுந்த வீட்டுப் பெண்
நாற்று முடிச்சு
அதன் தாலி
நடவும் ஒரு வகையில்
கல்யாணம்தான்! *(பக்.30-31)*

எனச் சுவையான வயற்புற அனுபவங்களை நம் மனக்கண்முன் கொண்டு வந்ததோடு உழவுத் தொழிலைப் போற்றியுள்ள பாங்கு கவிஞர் மண்ணின் மைந்தர் என்பதைச் சொல்லாமல் சொல்லும்.

கவிஞர் பாரதியிடத்து ஈடுபாடு மிக்கவர் என்பது பாரதி குறித்து அவர் வரைந்துள்ள கவிதை எடுத்துக்காட்டும். பாரதியார் என்ற தலைப்பில் அமைந்த நெடிய கவிதையில் ஒரு சில வரிகள்.

*மூண்டெழுந்த கவிவெறியில்*
*மூப்பில்லாத் தமிழ்க்கவிதை*
*முத்து முத்தாய்ப் பொறித்தவரே!*

*கணந்தோறும் வியப்புகளைக்*
*கண்டு கண்டு உண்டுவிட்டு*
*தினந்தோறும் வயிற்றுணவு*
*கிடைக்காமல் செத்தவரே!*

*வராத சூரியனைக்*
*கவிபாடி வரவழைத்து*
*அதிகாலை வணக்கம் செய்து*
*அதிகாரமாய்*
*அனுப்பி வைத்தவரே!* (பக். 74)

இதைப்போலவே இன்றைய உலகில் உலகமயமாக்கல் என்ற கோட்பாடு எத்தனை விபரீதமானது என்பதைப் பொருளாதார நோக்கில் எண்ணிப் பார்த்த கவிஞர்,

*அமெரிக்காவில்*
*குண்டு வெடித்தால்*
*அரசம் பட்டிக்கு*
*அண்டங் கட்டும்!*

*பாரிசில்*
*பேஷன்ஷோ நடந்தால்*
*பட்டுக்கோட்டையில்*
*துணிமணிகள்*
*அதிகம் விற்கும்!*

*இங்கிலாந்தில்*
*பட்ஜெட் போட்டால்*
*இலுப்பைத் தோப்பை*
*வந்து*
*இடித்துப் பார்க்கும்* (பக்.104-105)

என வல்லரசு நாடுகளின் ஆதிக்கத்தில் வளரும் நாடுகள் தங்கள் சந்தையைத் தாரைவார்த்துக் கொடுக்கும் நிலை ஏற்பட்டு விடும் என்பதோடு உலக மயமாக்கல் என்ற சிந்தனை வல்லரசுகள் பொருளாதார வளத்தில் மேன்மையுற வழிசெய்து வளரும்

நாடுகளின் உற்பத்திப் பொருள்கள் ஏற்ற விலை பெறாமல் செய்துவிடும். மேலும் வியாபாரச் சந்தையில் வளரும் நாடுகள் வல்லரசுகளுடன் போட்டியிட முடியாது என்பதை,

**காற்றுப்**
**போகாதவிடத்தும்**
**கொக்கக்கோலா**
**பயணம் செய்யும்** *(ப.105)*

என்ற அங்கத உத்தி மூலம் கவிஞர் எச்சரிப்பது உணரத்தக்கது. நகரவாசி கிராமவாசி என்ற கவிதையின் வாயிலாக மரபு போற்றுபவர்க்கும் நாகரிகம் என்ற பெயரில் மேலை நாகரிகத்தில் மோகங் கொண்டவருக்கும் உள்ள அடிப்படைக் கருத்து வேற்றுமைகளைக் கவிஞர் கவிநயத்துடன் கூறியுள்ளது இன்றைய சூழலுக்கு ஏற்ற கவிதையாகும்.

***நீங்கள் நிலத்தை***
***ப்ளாட் என்பீர்கள்!***
***நாங்கள்***
***பூமாதேவி என்போம்!***

***நீங்கள் உபயோகித்துப் போட்டதைக்***
***குப்பை என்பீர்கள்!***
***நாங்கள்***
***எரு என்போம்!***

***நீங்கள் மாட்டுச்சாணத்தை***
***மலம் என்பீர்கள்***
***நாங்கள்***
***திருநீறு என்போம்!***

***நீங்கள்***
***மின் விளக்கைப்போட்டு***
***நிலவொளியை மறைப்பீர்கள்!***
***நாங்கள்***
***சிம்னி விளக்கை அணைத்து***
***நிலவொளியை எரிய விடுவோம்!***

***நீங்கள்***
***எந்திரப்புகையை விதைத்து***
***ஓசோனை மறைப்பீர்கள்!***
***நாங்கள்***
***தாவர விதைகளை விதைத்து***
***ஓசோனின் தூசியைத்***
***துடைத்தெடுப்போம்!*** *(பக்.54-55)*

நாகரிகத்தின் வயப்பட்டு அறிவியல் கண்டுபிடிப்புகளின் பிடிக்குள் அகப்பட்டுக் கொண்டு இன்றைய சமூகம் சீரழிவை நோக்கிச் செல்கிறது என்பதை உரையாடல் உத்தியில் கவிதை நயத்துடன் கூறியுள்ளதைக் காணலாம். மரபு போற்றப்பட வேண்டும் அதேநேரத்தில் அறிவியல் மரபை அடிமைப்படுத்தி விடக்கூடாது என்பதே கவிஞரின் விருப்பமாக அமைகிறது.

## முடிவுரை

கவிஞர் சுந்தரமூர்த்தி சமூகநோக்கோடு இச்சமூகம் இன்றைக்கு அறிந்து கொள்ள வேண்டிய இயற்கையை நேசித்தல், இந்நாட்டின் முதுகெலும்புத் தொழிலாக விளங்கும் **விவசாயம்** மதிக்கப்படவேண்டும், விவசாயத்தில் மரபு முறைகளைக் கைவிட்டுவிடக் கூடாது, அந்நியர்தம் நாகரிகத்தில் அளவு கடந்து பற்று வைத்தற்கூடாது போன்ற கருத்துகளை வலியுறுத்தி உள்ளது எண்ணிப்பார்க்கத்தக்கது. இவரை நேர்காணல் செய்த போது,

> தற்போதைய தமிழ்ச் சமூகம் கவிதையின்றி வறண்டு கிடக்கிறது. இதற்குக் காரணம் இந்திய முதலாளித்துவ கலாச்சாரப் போக்குதான். அதனால் இனி ஒரு போதும் உயிர்ப்புள்ள படைப்பினை உருவாக்க முடியாது. அதற்கு மாற்றாக உள்ளது சோசலிச யதார்த்தவாதமே! இதனால் மட்டுமே தமிழ்ச் சமூகத்தைத் தலைதூக்கச் செய்ய முடியும். அதனால் சோசலிச யதார்த்த வாதத்தையே என் கவிதைக்கான மனமாகக் கொண்டியங்குகிறேன்

என்றார்.

### மூல நூல்

சுந்தரமூர்த்தி, தென்கிழக்குப் பருவமழை, அம்மாக்கண்ணுப் பதிப்பகம், காசாங்காடு, 2003

# க. இராமச்சந்திரன்

## வாழ்வும் பணியும்

கவிஞரிடமிருந்து 17-10-2005 அன்று தபாலின் வழியாகப் பெற்ற தன்விபரக்குறிப்பின் மூலம் அறிந்த செய்திகள். முனைவர் க. இராமச்சந்திரன் 15-06-1952ஆம் ஆண்டு பிறந்தார். இவர் தந்தையார் பெயர் வே. கந்தசாமி; இளங்கலை, முதுகலைத் தமிழ் இலக்கியமும், இளங்கலை கல்வியியலும் பயின்றுள்ளார். மு. மேத்தா கவிதைகளில் சமூகப்பார்வை என்ற தலைப்பில் ஆய்வியல் நிறைஞர் பட்டமும், 20ஆம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் புராண மரபுக் கூறுகள் என்ற தலைப்பில் முனைவர் பட்டமும் பெற்றுள்ளார். தற்சமயம் சாத்தூர் திரு. எஸ். இராமசாமி நாயுடு ஞாபகார்த்தக் கல்லூரியில் தமிழ்த்துறையில் இணைப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். பரணி என்பவரை மணந்துள்ளார். கார்த்திக், திலீப் குமார் என்ற குழந்தைகள் உள்ளனர்.

## படைப்புகள்

கவிஞர் 1987ஆம் ஆண்டு முதல் 2004 வரை பதினேழு நூல்களை இயற்றியுள்ளார். அவற்றில் **உன்னில் தான் இருக்கிறது, மழை பெய்த பிறகு, ஐக்கூபூக்கள்** போன்றவை கவிதைத் தொகுப்புகளாகும். கவிதை எழுதும் தன்னனுபவம் குறித்துக் கீழ்க்காணுமாறு உரைக்கிறார்.

> கூடுகட்டுவதற்காகப் பறவைகள் சுள்ளிகளைப் பொறுக்கிக் கொண்டு வருவதைப் போல புதுக்கவிதை நூல்களைத் தேடித் தேடி வாங்கி வந்தேன்.

நம் நாடு சுதந்திரமடைந்து ஐம்பது ஆண்டுகள் ஆகியும் வளர்ச்சி இல்லாமல் பின் தங்கிய நிலையில் உள்ளது. பல உயிர்களை இழந்து பெற்ற சுதந்திரம் ஏழை மக்களுக்குப் போய்ச் சேரவில்லை, ஏழைகளின் வாழ்க்கைத்தரம் உயரவில்லை. ஊழல் அதிகரித்துள்ளது போன்ற நிலைகளில் பாரத தேசம் பரிதாபமாக உள்ளதைக் கவிஞர் சுட்டிக் காட்டுகிறார்.

தேசத்தின் உதயத்திற்காக
தேகங்கள் ஆயிரம்
அஸ்தமனமாயின
ஆயினும்
சுதந்திர வெளிச்சம்
சேரிக்கு வரவில்லை
மாளிகை நிழல்களே
மறைத்துக் கொண்டன
லஞ்சப் பேய்கள்
லாவண்யம் பாட
சாதிமத நெருப்புச்
சாம்பல் மூட . . ..
பரிதாப நிலையில்
பாரத தேவி! . . . (உ.இ. ப. 78)

## சாதி மதப் போர்

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்பது சான்றோர் வாக்கு. நம் நாடு ஜனநாயக நாடு. எல்லா மதத்தைச் சார்ந்த மக்களும் வாழ்ந்து வருகின்றனர். இந்நாட்டில் சிலர் மதத்தின் பெயரால் அடித்துக் கொண்டு நாட்டை இரத்தக் களமாக்கி விடுகின்றனர். 1992ஆம் ஆண்டு திசம்பர் ஆறாம் தேதியன்று பாபர் மசூதி இடிக்கப்பட்டது. சமயப் போரில் ஈடுபடுவோரை மையப்படுத்திக் கவிதையாத்துள்ளார்.

அவர்கள்
ஒரு போருக்குத்
தயாரானார்கள்
எதிரிகள்
யாரென்று
அறியாமலே!

மோதினார்கள்-
உயிரில்லாத
சுவர்களின் மீது!

கணக்கிட முடியுமோ
உதிர்ந்த
உயிர்களை? (உ.இ: ப. 14)

என்று உயிர் இல்லாத சுவரை இடித்துத் தள்ளியதால் பல உயிர்கள் மடிந்ததை மனித நேயத்தோடு வெளிப்படுத்துகிறார். "சாதிகள் இல்லையடி பாப்பா" என்று பாடினார் பாரதி. மக்கள் கலப்புத் திருமணம் செய்து கொள்வதால் சாதிகள் ஒழிகின்றன.

சில நேரங்களில் இக்கலப்புத் திருமணமே சாதி மத மோதல்களை ஏற்படுத்துகின்றது. இதனை,

> **கலப்புத் திருமணம்**
> **கலவரத்தில் முடிந்தது**
> **சமத்துவபுரம்** (ம.பெ: ப. 37)

என்று சுட்டிக்காட்டுகிறார்.

### மனிதநேயம்

**அரிது அரிது மானிடராய்ப் பிறப்பது அரிது** என்று ஔவை பாடியுள்ளார். பகுத்தறிவுடைய மனிதன் பிறவற்றின் மீது இரக்கம் கொண்டு அன்பு செலுத்துதலையே மனிதநேயம் என்கிறோம். இதனையே **வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்** என்றார் வள்ளலார். கவிஞரும் மனிதநேயம் மிக்கவராக விளங்குகிறார் என்பதை,

> **உணவு சுவைக்கவில்லை**
> **பக்கத்தில்**
> **டேபிள் துடைக்கும் பையன்** (ம.பெ: ப. 27)

என்ற கவிதை வெளிப்படுத்துகின்றது.

### மனிதநேயமற்ற அவலநிலை

> **விபத்து நடந்தது**
> **மனிதன் ஒருவன்**
> **செத்து கிடந்தான்**
> **சோதித்தார்கள்**
> **அவனது உறவினர்கள்**
> **உயிர் இருக்கிறதா**
> **என்று அல்ல-**
> **ஏதாவது பையில்**
> **இருக்கிறதா என்று** (உ.இ: ப. 61)

இறந்த ஒருவனின் உறவினர் அவனுக்கு உயிர் இருக்கிறதா என்று பார்க்காமல் அவன் சட்டையில் பணம், பொருள் ஏதாவது இருக்கிறதா என்று பார்க்கின்றனர். மனித நேயம் இல்லாத மனிதர்களின் இரக்கமற்ற செயலை இக்கவிதையின்வழிக் கவிஞர் சுட்டிக் காட்டுகிறார்.

தொழிலாளர்கள் நிலை

உலகில் தோன்றிய தொழில்களில் வேளாண்மைத் தொழில் பழமையானது. இத்தொழிலையே மக்கள்அனைவரும் சார்ந்து வாழ வேண்டியுள்ளது. வேளாண்மக்கள் பிறருக்கு உழைத்து உணவு கொடுத்து உலகுக்கு அமுதசுரபியாக விளங்குகின்றனர். ஆனால் அவர்களின் வாழ்க்கை வறுமையினால் பின் தங்கி இருப்பதைக் கீழ்க்காணும் கவிதை விவரிக்கின்றது.

*உழைப்பால்*
*உலகுக்கு*
*ஒளியூட்டியவனே!*
*உன் வாழ்க்கை . . .*
*இருட்டிலா*
*எல்லோருக்கும்*
*உழைத்து*
*உணவு கொடுக்கின்ற*
*அமுத சுரபியே*
*உன் வயிற்றில்*
*எப்போதும் பசியா?*
*சிந்திய ரத்தத்தால்*
*பிறரை உயர்த்துகின்ற*
*ஏணிப்படியே*
*நீ மட்டும்*
*துயரத்தின் பிடிகளிலா?*
*கிடைத்த மூலதனத்தில்*
*துன்பத்தை எடுத்துக் கொள்கிற*
*புதிய அன்னப் பறவையே!*
*உனது பயணம்*
*என்றைக்கும்*
*பின்னோக்குப் பயணமா?*
*வியர்வையைச் சிந்தி*
*வினாக்குறியாய்ப் போனவனே!*
*வியப்புக் குறியாய்*
*எப்போது நீ*
*விழித்தெழப் போகிறாய்* (உ.இ: ப. 42)

என உழைப்பாளர் மத்தியில் விழிப்புணர்வை விதைத்துள்ளார். உழைக்கும் மக்களைச் சுரண்டுவோர்களை நோக்கி,

*கறையான் புற்று*
*பாம்புகுடி புகுந்தது*
*உழைப்புச் சுரண்டல்!* (ம.பெ: ப. 47)

எனச் சாடுகின்றார். நம் நாட்டில் தொழிலாளர் வாழ்க்கைத் தரத்தில் பின் தங்கிய நிலையிலேயே உள்ளனர். சிவகாசி போன்ற இடங்களில் பட்டாசுத் தொழில் நடைபெறுகின்றது. இவற்றில் வேலை செய்யும் தொழிலாளரின் எதிர்கால வாழ்க்கை கேள்விக் குறியாக உள்ளது.

*ஊரையெல்லாம்*
*மத்தாப்பூ வெளிச்சத்தில்*
*மகிழ வைத்தவர்கள்*
*இவர்கள்*
*இருப்பதோ இருட்டில்!*
*வானத்து நட்சத்திரங்களை*
*பூமிக்குக் கொண்டு வந்து*
*வேடிக்கை காட்டியவர்கள்*
*இவர்களின்*
*வாழ்க்கையே வேடிக்கையாய் . . .*
*எரியும் கந்தகத்தை*
*கூடுகளுக்குள்*
*செலுத்தியவர்கள்*
*இவர்களே*
*எலும்புக் கூடுகளாய்*
*சிவகாசி கேள் . . .*
*தீ வைத்தது போதும்*
*திரிகளுக்கு* *(உ.இ: ப. 77)*

என்று சிவகாசிக்கு விண்ணப்பம் விடுக்கிறார்.

## குழந்தைத் தொழிலாளர்

இந்திய நாட்டிற்குத் தூண்களாக இருக்கக் கூடிய குழந்தைகள் பள்ளிக்குச் செல்லாமல் சிறுவயதிலேயே வறுமையின் காரணமாக வேலைக்குச் செல்லுகின்றனர். நம் நாட்டில் குழந்தைத் தொழிலாளர்களை ஒழிப்பதற்கு அரசு முனைந்து செயல்பட்டு வருகிறது. ஆயின் இன்றும் சிவகாசி போன்ற இடங்களில் குழந்தைகள் வேலைக்குச் செல்கின்றனர்.

*அணைப்பதற்காகத் தீக்குச்சி செய்தான்*
*வயிற்றில் பசி*
*சிவகாசிச் சிறுவன்* *(ப: 28)*

பற்ற வைத்த தீக்குச்சியை அணைக்க முடிகின்றது. வயிற்றுப்பசித் தீயை அணைக்க முடியவில்லை எனக் குமுறுகிறார் கவிஞர். மேலும்,

உங்களுடைய
குழந்தைப் பருவம்
கந்தகக் கிடங்குகளில்
கரியாகியது . . .

உங்களுடைய
மத்தாப்புப் புன்னகைகள்
வண்ணப் பெட்டிகளில்
அடக்கம் செய்யப்படுகின்றன . . .

உங்களுடைய
கனவுகள்
உயிர்க்காமலே
உதிர்ந்து போகின்றன
பூ வானமாய் . . .

உங்களுடைய
கருவிழிகளின் ஓரத்தில்
கண்ணீர்க் குண்டுகள்
எவரை நோக்கி
எறியப் போகிறீர்கள்? (உ.இ: ப. 46)

என்று சிறுவயதிலேயே வறுமையின் காரணமாக வேலைக்குச் செல்வதால் அவர்களின் வாழ்க்கை முடிவு பெற்று விட்டதைக் கவிஞர் சுட்டிக்காட்டுகிறார்.

வரதட்சணை

பெண்கள் சமுதாயத்தில் எல்லா நிலைகளிலும் பாதிக்கப் படுகின்றனர். பெண்களுக்குத் திருமணமாகும் போது மணமகன் வீட்டார் வரதட்சணை கேட்கின்றனர். இதனால் சமுதாயத்தில் வறுமையில் இருக்கும் பெண்கள் திருமணமாகாமல் இருக்கின்றனர்.

வரதட்சணைச் சிலுவையில்
அறையப்பட்டவர்களே
உங்களில்
எத்தனை பேர்
உயிர்த்தெழப் போகின்றீர்கள்? (உ.இ: ப. 60)

என வினா எழுப்புகிறார். அத்துடன்,

ஜன்னல் கம்பிகள்
துருப்பிடித்தன
முதிர்கன்னி (ம.பெ: ப. 74)

என வரதட்சணையால் முதிர்கன்னிகள் பெருகி வருவதை மனவேதனையோடு வெளிப்படுத்துகிறார்.

## அரசியல்

ஜனநாயக நாட்டில் மக்கள் சிக்கல்களைத் தீர்ப்பதற்கு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசு ஆவன செய்து வருகிறது. அரசியலில் தேர்தலுக்கு முன் நடைபெறும் போலித்தனமான செயல்களைக் கவிஞர் நகைச்சுவையுடன் கூறுகிறார்.

**கருப்பு**
**வெள்ளையானது**
**தேர்தல் பணி** *(ம.பெ: ப. 43)*

மேலும் தேர்தல் காலக் காட்சிகளைக் கீழ்க்காணும் கவிதை படம்பிடித்துக் காட்டுகின்றது.

***ஐந்தாண்டுக் கனவுகள்***
***கையில்***
***வாக்குச் சீட்டு!***

***விரல் நுனியில்***
***ஜனநாயகம்***
***வாக்கு இயந்திரம்!***

***சுவர்களில்***
***ஒரே நாற்றம்***
***தேர்தல் வாசகம்!***

***குடிசைகளின் மீது***
***வெயில் படவில்லை*** *(ம.பெ: ப. 43)*

***கட்சிக் கொடிகள்***
***குனிந்து வணங்கியவர்களை***
***நிமிர்ந்து பார்க்கும் பரிதாபம்***
***தேர்தல் வெற்றி!*** *(ம.பெ: ப. 44)*

***கஞ்சி குடித்தார்***
***குடிசை வீட்டில்***
***ஓட்டு*** *(ம.பெ: ப. 45)*

மக்களுக்கு எல்லா வகையிலும் பயன்தருகிறேன். ஆனால் அரசியல் தலைவராகவும் சாதித் தலைவராகவும் உள்ளவர்களுக்கு மட்டும் என்னைச் சிலையாகச் செதுக்கிவிடாதே என்று சிற்பியிடம் கூறுவதாக வரும் கவிதையாவது:

சிற்பியைப் பார்த்து
பேசியது கல்
அம்மியாய்க் கிடந்து
அரைபடவும் சம்மதமே . . .

உரலாகக் கிடந்து
இடிபடவும் சம்மதமே . . .

வாசல் படிக்கட்டாய்
மிதிபடவும் சம்மதமே . . .

தலைவர்களின்
சிலையாக மட்டும்
சாதித் தலைவர்களின்
சிலையாக மட்டும்
செதுக்கி விடாதே (உ.இ: ப. 70)

## இயற்கை

மனிதன் இயற்கை சார்ந்து வாழ வேண்டியவன். மனிதன் காணும் இயற்கைக் காட்சிகள் பல உணர்வுகளை வெளிப்படுத்து கின்றன. ஆறு, மலை, தாவரம், சூரியன், நிலவு, கடல் போன்ற பல்வேறு இயற்கைப் படைப்புகளைக் கண்ட கவிஞன் அவற்றை உவமையாகவும், உருவகமாகவும் கவிதையின் வாயிலாக வெளிப் படுத்துகிறான். கவிஞரும் தம் படைப்புகளில் இயற்கையின் அழகைக் காட்சிப்படுத்தியுள்ளதை,

இரவு ராஜ்யத்தின்
இளவரசியே!
வானக்கடலில்
மேகத் தோணியில்
நட்சத்திரத் தோழிகளோடு
எங்கே செல்கிறாய்?
உன்
காதலன்
கதிரவனைக்
காணப் போகிறாயோ? (உ.இ: ப. 49)

என்று நிலவைப் பெண்ணாகவும், மேகத்தைத் தோணியாகவும், நட்சத்திரங்களைத் தோழிகளாகவும் கதிரவனைக் காதலனாகவும் உருவகித்துக் காட்சிப்படுத்துகிறார் கவிஞர். புல்லின் நுனியில் பனி இருப்பதை,

**தலையில் குடம்**
**ஒற்றைக் காலில் சுமந்தது**
**வயலில் புல்!**

என அழகாகக் காட்சிப்படுத்தியுள்ளார். மேலும்,

**தலையெங்கும்**
**கொப்புளங்கள்**
**மழைத் துளிகள்** (ம.பெ: ப. 33)

எனவும்,

**நட்சத்திரங்கள் மிதந்தன**
**குளத்தில்**
**அமைதியின் தெளிவு!**

எனவும் இயற்கையை அழகாகவும் ஆழமாகவும் வருணிக்கிறார்.

**காதல்**

ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் உள்ளங்களிலிருக்கும் அன்பைப் பரிமாறிக் கொள்வதே காதல். **வாழ்வு என்பது காதலிப்பதற்காக உருவானது. காதல் என்பது வாழ்வதற்காக உருவானது** என்று கவிஞர் குறிப்பிட்டுள்ளார். கவிஞர்கள் காதல் அனுபவத்தை வெளிப்படுத்தும் வகையில் காதல் கவிதைகளைத் திறம்பட எடுத்து இயம்புகின்றனர். இக்கவிஞரும் காதலைப் பற்றிப் பல கவிதைகளைப் படைத்துள்ளார்.

**உனது**
**இமைச்சிறகுகளை**
**இப்படி அசைக்காதே**
**பறக்கிறது என் இதயம்** (உ.இ: ப. 37)

என்றும்,

**தனிமையில்**
**அவளும் நானும்**
**நடுவே**
**திரை போட்டுக் கொண்டிருந்தது**
**மௌனம்**
**நீண்டது நேரம் . . .**
**திரையை**
**விளக்குவது யார்?** (உ.இ: ப. 93)

என்றும் காதலைப் பற்றிப் பேசுகிறார்.

**நகைச்சுவை**

மனிதனைச் சிரிக்க வைத்துச் சிந்திக்கச் செய்வது நகைச்சுவை யாகும். நகைச்சுவையைக் கவிஞன் தான் நினைத்த கருத்தை வெளிப்படுத்துவதற்கும் பயன்படுத்துகிறான். இக்கவிஞர் தன் கவிதைகளில் நகைச்சுவையைப் பல இடங்களில் கையாண்டுள்ளார். "மழை பெய்த பிறகு" என்ற கவிதைத் தொகுப்பில் வரும் ஐக்கூ கவிதைகளில்,

> கடன் வாங்க
> கற்றுக் கொடுத்தார்
> கணக்கு வாத்தியார் (ம.பெ: ப. 21)
>
> பணக்காரர்
> மகளுக்கு வைத்த பெயர்
> ரூபா (ம.பெ: ப. 44)
>
> பால் விலை குறைவு
> தண்ணீர் விலை அதிகம்
> சிங்காரச் சென்னை! (ம.பெ: ப. 48)
>
> காக்கும் கடவுளுக்குக் கலக்கம்
> கடற்கரையை நெருங்க நெருங்க
> விநாயகர் சதுர்த்தி

என்ற பல கவிதைகள் நகைச்சுவை உணர்வுடன் வெளிப் பட்டுள்ளன.

**முடிவுரை**

க. இராமச்சந்திரன் கவிதைகள் பெரும்பான்மையும் சம காலத்தில் உள்ள சமுதாயச் சிக்கல்களை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன. சமுதாயத்தின் மீது அக்கறை கொண்டவராக விளங்குவதால் சமூக முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கும் சமூக அவலங்களைத் தீர்வு காணும் வகையில் கவிதைகளை வடித்துள்ளார். சமூக முன்னேற்றத்தில் கவிதைக்குப் பங்குண்டு என்பது இவர் கவிதை வழி வெளிப்பட்டுள்ளது.

**முதன்மை நூல்கள்**

**உன்னில் தான் இருக்கிறது**, க. இராமச்சந்திரன், நர்மதா பதிப்பகம், சென்னை, 1998.

**மழை பெய்த பிறகு**, க. இராமச்சந்திரன், குமரன் பதிப்பகம், சென்னை, 2002.

# ச. இரகுநாதன்

*கவிஞர்*

ச. இரகுநாதன் 05.11.1953 அன்று சென்னையில் பிறந்தார். இவருடைய வாழ்க்கைத் துணைவியார் பிரேமா. தந்தையார் ஆர். சங்கரநாராயணன். தாயார் சந்திரா அம்மாள். இவரது எழுத்துப் பணி 1972இல் தொடங்கியது. 1973இல் பச்சையப்பன் கல்லூரியில் இளமறிவியல் பட்டம் பெற்றார். சென்னை வானொலியில் ஏறக் குறைய 100 நிகழ்ச்சிகளை அளித்துள்ளார். பொதிகைத் தொலைக் காட்சியில் சிந்தனைச்சுடர், புதிய புத்தகம், நேருக்கு நேர், தியாகச்சுடர் ஆகிய நிகழ்ச்சிகளில் பங்கேற்றுள்ளார். ஆன்மீகம், சுயமுன்னேற்றம், அறிவியல் போன்ற துறைகளில் நூல்கள் இயற்றியுள்ளார். இவர்தம் வானொலி நாடகங்கள், '**காற்றில் மிதந்த நாடகங்கள்**' என்ற தலைப்பில் வெளிவந்துள்ளன. கவிதை உறவு, உயிர்நாடி, சமராபுரி செய்திகள் ஆகிய பத்திரிகைகளில் பணியாற்றிய இவர், '**கவிதைப் பாலம்**' என்கின்ற தனிச்சுற்று இதழையும் நடத்தியுள்ளார்.

இவரது தமிழ்ப் பணியைப் பாராட்டிப் பின்வரும் பல பரிசுகள் வழங்கப்பட்டுள்ளன. அவை,

1. வி.ஜி.பி. கவிதை உறவு கேடயம்
2. எல்.ஆர். சுவாமி விருது
3. பைந்தமிழ்ப் பாமணி விருது
4. மனிதநேய மாமணி விருது
5. சேவா ரத்தனா விருது
6. சிந்தனைச் சிற்பி விருது
7. நேரு விருது
8. காந்தி விருது

இவை மட்டுமின்றி இன்னும் பல பரிசுகள் பெற்றுள்ளார்.

பல கவியரங்கங்களிலும், கருத்தரங்கங்களிலும் கலந்து கொண்டு சிறப்புச் செய்து வருகின்றார். 'பாரத் சஞ்சார் நிகாம் லிமிடெட்' நிறுவனத்தில் மேற்பார்வையாளராகப் பணி

புரிகின்றார். **கருணை மனு, அம்மா சிரிக்கிறாள்** என்னும் நூல்களிரண்டும் இவரது கவிதைத் தொகுப்புகள் ஆகும். **புதிய சகாப்தம், வசந்த உலா,** மற்றும் **ஒரு கூட்டுப் பறவைகள்** என்னும் நூல்களில் தமது கவிதைகளையும், பல கவிஞர்களின் கவிதைகளையும் தொகுத்து வெளியிட்டுள்ளார். இந்நூல்களை அடிப்படையாகக் கொண்டு இக்கட்டுரை அமைகிறது. சமூக எழுச்சி, சமத்துவம், சாதிய ஒடுக்குமுறை, அரசின் ஒற்றைப் பார்வை, கவிஞரின் உத்திகள் என்பவற்றைக் காண்போம்.

### சமூக எழுச்சி

'புதியதோர் உலகம் செய்வோம் கெட்டப் போரிடும் உலகத்தை வேரோடு சாய்ப்போம்' எனச் சமூகத்தின் புதிய பாதைக்குத் தீவட்டி ஏந்தி வழிகாட்டும் பாரதிதாசனின் கவிதை நவீனக் கவிதைக்குச் சிறந்த சான்றாகும். இதுபோன்று சமூகத்தின் எழுச்சியை ச. இரகுநாதனும் பாடுகிறார். அது:

**சமூக வீணையின்**
**உணர்ச்சி நரம்புகளை**
**மீட்டுவதற்காகவே**
**எங்கள் . . .**
**பேனாக் குழலிலே**
**மைநிரப்பி வைக்கிறோம்!** (கருணை மனு -ப.50)

இக்கவிதை வரிகள் சமூக ஏற்றத்திற்குத் தனது பேனா தலை சாய்க்கும் என்று கூறுவதை அறிய முடிகிறது. இதைக் கூறும்போது அவரது உணர்ச்சி; விருப்பம், சமூக நிலை இரண்டும் கலந்து கவிதையாக மலர்கின்றன. வாசகனுக்குப் புதிய சமூகப் பார்வை கிடைக்கிறது. சமூகத் தேக்க நிலையை அவன் மாற்ற முனைகிறான். இது கவிஞனுக்கு வெற்றியாக மாறுகிறது.

### சமத்துவம்

கவிஞர்கள் அன்பையும் மகிழ்ச்சியையும் வேண்டு கின்றனர். அதன் வெளிப்பாடாகவே கவிதையும் மலருகிறது. இல்லார் உடையார் என்ற நிலைதான் துன்பத்திற்குக் காரணமாக அமைகிறது. இதைக் கவிதைகளில் வெளிக்காட்டுகிறார். தனது காலத்துப் புறநிலையிலிருந்து கவிதை வரி உருக்கொள்கிறது. அது:

**நான்–நீ எனும்**
**குணமதைப் போக்கி**
**நாம் எனும்**
**உணர்வு கொண்டு**

**எல்லாமும் யாவர்க்கும்**
**பொது என்றே**
**தத்துவம் காணீர்** *(அம்மா சிரிக்கிறாள் - ப. 18)*

இக்கவிதை வழியாக நமக்கு உணர்த்துவது அனைவரும் பொதுவாக ஒன்றுபட்டு வாழ்வோம் என்பதாகும். கவிஞன் எப்போதும் பொதுமையை வலியுறுத்துபவனாக உள்ளான். இது கம்பனுடைய 'இல்லாரும் இல்லை. உடையாரும் இல்லை' என்னும் அயோத்தி நகரப் பெருமைக்கும், பாரதிதாசனுடைய 'ஒரு பொருள்தனி எனும் மனிதரைச் சிரிப்போம்' எனும் நகைக்கத்தக்க மனிதரை அடையாளப்படுத்துவதற்கும் இயைந்த கருத்தாகும்.

பொதுவானது மகிழ்வானது; அதுவே மனிதனுக்கு வேண்டும்; இதுவே கவிஞருடைய எண்ணமாக உள்ளது. இது எல்லாக் காலத்துக் கவிஞர்களுடைய எண்ணமாகவும் இருந்ததை அறிவோம். தாயுமானவரும் எல்லாரும் இன்புற்றிருக்கவே விரும்புவதாகப் பாடிப் போந்தார். அவ்வாறு, நூலகத்தின் சிறப்புகளைப் பாடும்போது இக்கவிஞர் சுதந்திரத்தின் இடமாக நூலகத்தைக் குறிப்பிடுகின்றார்.

**நிம்மதி நாடுவோர்**
**சுதந்திர நாயகராய்** *(கருணை மனு - 23)*

இவ்வரிகள் நூலகத்தின் பண்பாகக் கவிஞரால் சுட்டப்படுகின்றன. நூலகம் அறியாமையைப் போக்கும் இடம். அறிவுடையவராக நூலகம் செல்வோர் மாற்றம் கொள்கிறார். 'அறிவுடையார் எல்லாமும் உடையார்' அன்றோ!

கவிதை இயற்றுவதற்குப் பாடுபொருளும் பலவாக விரிந்து கிடப்பது நவீனக் காலக் கவிதையின் பண்பாகும். அதைப் போல் பாடுவதற்கும் இடப்பேதமில்லை. வேத்தியல், பொதுவியல் என இரண்டும் மறைந்து பொதுவியல் என ஒன்றாய் மாறுவது நவீனத்தின் முக்கிய அம்சமாகும். சிலி நாட்டுக் கவிஞர் **பாப்லோ நெருடா** ஒரு பேட்டியில்

**பொது இடங்களில் கவிதை வாசிக்கும்போதுதான்**
**கவிதையின் ஆற்றலை உணர்ந்தேன்**

என்கிறார். இப்பண்பு உலகளாவிய ஒன்றாகும். அதையே இக்கவிஞரும் பாடுகிறார். அது,

**பட்டிதொட்டி எங்கும் சென்று கவிதை பாடுவோம்**
**பண்புடைய மனிதராக மண்ணில் வாழுவோம்**
*(வசந்த உலா - ப. 17)*

இக்கவிதை வரிகளில் இடம்பெற்றுள்ள பாடுபொருளின் தன்மை கவிதை பாடுவதற்கு இடவரைமுறையைக் கூறுவதாக அமைந்துள்ளது. அவ்வரைமுறையானது அனைவரையும் உள்ளடக்கியதாகும்.

### சாதிய ஒடுக்குமுறை

சமூகத்தின் மிக மோசமான ஒடுக்கு முறை சாதிய ஒடுக்குமுறையாகும். இவ்வொடுக்கு முறையானது பிறவியிலேயே மேலோர், கீழோர் என்பதைத் தீர்மானிப்பதாகும். இம்முறையை எந்த மனிதனாலும் பொறுக்க இயலாது. சுதந்திரத்தின் குரலான கவிஞன் பொறுப்பானா? பொறுக்கமாட்டாது கவிதையில் வெளிப்படுத்தி, சமூகத்தை விழிப்புறச் செய்து, சாதியை அழிக்க முயலுகிறான். அவ்வாறு முடியாது போனால் தனக்குத் தானே நொந்து கொள்கிறான். பாரதிதாசனும், 'சாதிகள் இருக்கிறது என்பானும் உள்ளானே' என்று பாடியது இவ்வகையில் அமைந்ததாகும். சாதிக் கொடுமையை அழிக்கக் கவிதையைப் படைக்கிறார் இக்கவிஞர். ஆனால் சமுதாயம் சாதிகளை என்ன செய்கிறது என்பதைக் கூறுகிறார். அது:

**இந்த. . .**
**சமுதாயம் சாதிபேதங்களையும்**
**தாலாட்டி**
**கொண்டிருக்கிறது!** (கருணை மனு - ப. 34)

இவ்வரிகள் சமுதாயத்தின் நிலையைக் கூறுகின்றன. ஆனால் இருப்பதைப் பொறுப்பதல்ல கவிஞனின் கடமை. விரும்புவதைப் படைப்பதாகும். அதற்கு ஒரு கவிதை பதிலாக அமைந்துள்ளது.

**கவிதை. . .**
**காலத்தை மட்டும்**
**புதுப்பிக்க அல்ல**
**இந்தச்**
**சமூகத் துக்கங்களின்**
**கண்ணீரைத் துடைக்கும்**
**உணர்வுகளும் ஆகும்** (மேலது, ப. 35)

இது கவிதையின் பணி என்னவாக இருக்க வேண்டும் என்பதை அறிவுறுத்துவதாக உள்ளதை அறியலாம்.

### அரசின் ஒற்றைப் பார்வை

சமூகமாக ஒன்றுபடும் மக்கள்திரளைச் சமமாக நடத்துவது அரசின் கடமையாகும். மக்களின் சுக, துக்கங்களை

ஒரே மாதிரியாக அளந்து தக்கதைச் செய்ய வேண்டும். ஆனால் அரசியலில் தவறானவர்கள் புகுந்து விடுவதால் பாரபட்சமாக நடந்து கொள்கிறார்கள். அதிகாரத்தில் உள்ளவர்களை உயர்வாகவும், அதிகாரமற்று உழைத்து வாழ்ந்து, மக்களை வாழவைக்கும் விவசாயிகளைத் தாழ்வாகவும் நடத்துகிறார்கள், இதைக் கவிஞர் பாடுகிறார். அது:

> ***அதனால் பலனடைந்தது***
> ***அந்த***
> ***அரசு ஊழியர்களே!***
> ***அவர்களுக்கு மட்டுமே***
> ***வெள்ள நிவாரண***
> ***நிதி கிடைக்கிறது.***
> ***அந்த***
> ***பச்சை***
> ***வயல்களை எல்லாம்***
> ***நாற்றுப் பாய்களை***
> ***அல்லவோ***
> ***நெய்து வைக்கின்றன*** *(மேலது, ப.22)*

இவ்வரிகள் நமக்குச் சுட்டுவது அரசின் பாரபட்சமான போக்காகும். புயல் மழையில் பாதிக்கப்பட்ட மக்களில் ஒரு பிரிவினர் தமக்குரிய இழப்பைப் பெற்றுக் கொள்கின்றனர்; மற்றொரு பிரிவினர் ஏமாற்றப்படுகின்றனர். இந்த அநீதியை எதிர்க்கிறார்.

கல்வி என்பது மனிதர்களுக்குச் சமூகத்தைப் புரிந்து கொள்வதன் பொருட்டே கற்றுத் தரப்படுகிறது. ஆனால் அதுவே பிழையானதாகப் போனால், இந்தச் சமூகம் என்னவாகும். வெள்ளையர்கள் கொண்டு வந்த மெக்காலே கல்விக் கொள்கை இன்னும் நடைமுறையில் உள்ளது. இதன் காரணமாய்த் தலைமுறைகள் அல்லவா சாய்க்கப்படுகின்றன. கவிஞர் இதைக் கண்டிக்கிறார். அது:

> ***ஆனாலும். . .***
> ***எதையோ எழுதுகிறோம்***
> ***எங்களுக்கு அல்ல***
> ***எங்களை ஈன்றவர்க்கே***
> ***பலன். . .***
> ***வெற்றிப் படிதான்***
> ***பட்டமளிப்பு விழாதான்!***
> ***ஆனாலும். . .***
> ***திருப்தி இல்லை.*** *(மேலது, ப.53)*

வாழ்க்கையைக் கற்றுக் கொள்ளக் கல்வியைக் கற்றுக் கொள்கிறோம். அதுவே சுமையாகிப் போனால் மனிதர்களின் நிலை என்னவாகும்? இக் கேள்விகளை இவ்வரிகள் நமக்கு எழுப்புகின்றன.

### கவிஞரின் உத்தி

கவிஞர் தன்னுடைய உணர்வுகளைச் சொல்வதற்குப் பல உத்திகளைக் கையாண்டுள்ளார். உருவகம், உவமை போன்றவற்றைப் பயன்படுத்தி வீரம், காதல், அவலம், நகைப்பு போன்ற உணர்வுகளை ஏற்பட வைக்கிறார். சான்றாக வரும்,

> **தோட்டத்துச் செடிகள்**
> **எல்லாம்**
> **தென்றல் காற்றாலே**
> **அபிநயம் பிடித்து**
> **நாட்டியம் ஆடின!** (மேலது, ப.20)

என்ற கவிதை, ஒரு மாலை நேரத்து மழையின் வருகை என்னவெல்லாம் செய்கிறது என விளக்குகிறது. இதில் 'அபிநயம் பிடித்து, நாட்டியம் ஆடின!' என்று காட்சியைப் படிமமாக்கும் திறன் சிறந்து விளங்குகிறது. இது போல உருவகத்தைச் சிறப்புறக் கையாண்டுள்ளார். சான்றாக,

> **செவ்வந்தி நேர**
> **அல்லி மலர்ந்து**
> **பருவ நிலாவை**
> **நாணச் செய்ய**
> **காலத் தடாகப்**
> **பொய்கை பூமியில்** (மேலது, ப. 10)

என்ற இக்கவிதையில் காலத்தைத் 'தடாகம்' என உருவகப் படுத்துவது சிறப்பான கவித்துவமாகும். உணர்வுகளை வெளிக்காட்டுவதில் சிறந்து விளங்குகிறார்.

### முடிவாக

காலத்தின் குரலான கவிஞன் தன் முன்னால் காணும் சமூக அவலங்களைச் சாடுவதையும், நன்மை நாளும் படைத்து மக்கள் மேன்மையுற வேண்டும் என்பதையும் நோக்கமாகக் கொண்டு கவிதை படைக்கிறான். இப்பண்பே இவரின் கவிதை நெடுகிலும் விரவியுள்ளது. இவரின் சமூக விமர்சனங்களே கவிதையாக மலர்ந்திருக்கின்றன. அதற்கு என்ன நோக்கம் என்பதைக் கவிதையில் படைத்துக் காட்டுகிறார், அது:

**நாங்கள்**
**கோபிப்பதெல்லாம்**
**பண்ணைப் புதைப்பதற்கல்ல**
**அன்பை வளர்ப்பதற்கே!** *(மேலது,ப. 44)*

இக்கவிதையின் கருத்திற்கு வலுசேர்ப்பது போல வள்ளுவரும் குறள் ஒன்று கூறினார்; அது,

**அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்**
**மறத்திற்கும் அஃதே துணை** *(குறள். 76)*

இக்குறளின் பொருள் அன்பு கண்டிக்கவும், அன்பின் பொருட்டாகத் தண்டிக்கவும் செய்யும் என்பதாகும். ச. இரகுநாதனும் சமூகத்தின் மீதான அன்பால் அநீதிகளைத் தண்டிக்கிறார் எனலாம்.

### ச. இரகுநாதனின் நூல்கள்

**அம்மா சிரிக்கிறாள்**, சந்திரா பதிப்பகம், சென்னை, 1987.

**கருணை மனு**, சந்திரா பதிப்பகம், சென்னை, 1986.

**புதிய சகாப்தம்**, கவிக்குயில் அச்சகம், சென்னை, 2003.

**வசந்த உலா**, சந்திரா பதிப்பகம், சென்னை, 1988,

**ஒரு கூட்டுப் பறவைகள்**, லலிதா பதிப்பகம், 2002.

# கலைவாணி

## கவிஞர் வரலாறு

1953இல் கொங்கு நாட்டுப் பெருநகர்களில் ஒன்றான கரூர்தனில் பிறந்தவர். பாரம்பரியமிக்க கிறித்தவக் குடும்பத்தைச் சார்ந்தவர். தந்தை ஜே.எம். பெஞ்சமின், தாயார் திருமதி ரஞ்சிதம் பெஞ்சமின். இளங்கலை அறிவியல் பட்டத்தோடு இளங்கலை கல்வியியல் பட்டமும் பெற்றவர். ப. குலசேகரன் என்பார் இவரது துணைவர். இவர் பள்ளிக் கல்வி இயக்குநராகப் பணியாற்றி வருகிறார். கவிஞரின் தாயும், தந்தையும் ஓய்வு பெற்ற ஆசிரியப் பெருமக்கள். கவிதையின்பால் ஏற்பட்ட ஈர்ப்பின் காரணத்தால் கலாவதி என்ற தனது இயற்பெயரைக் **கலைவாணி**யாக அமைத்துக் கொண்டார்.

## கவிதை நூல்கள்

இவர் மூன்று கவிதைத் தொகுப்புகளைச் செய்துள்ளார். முதற் தொகுப்பு 'வேண்டாம் ஓர் உள்ளம்' என்ற தலைப்பில் அமைந்தது. இதில் 43 கவிதைகள் இடம்பெற்றுள்ளன. இந்நூல் 1985ஆம் ஆண்டு கவிதாபானு பதிப்பகத்தாரால் வெளியிடப் பட்டது. இரண்டாம் தொகுப்பு **பார்வைகள்** என்ற பெயரில் 42 கவிதைகள் கொண்டது. இந்நூல் 1988இல் சென்னை சித்ரா பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்டது. **நேற்று இன்று நாளை** என்ற தலைப்பிலான மூன்றாம் கவிதைத் தொகுப்பு 1993இல் சென்னை மகாகவி பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்டது. இது 31 கவிதைகள் கொண்டதாக இருக்கிறது. இவையன்றி **இணைப்பு கவிதைகள்** என்ற பெயரில் 7 கவிதைகள் இதில் இடம்பெற்றுள்ளன.

இந்த மூன்று தொகுப்புகளும் ஒருங்கிணைக்கப்பட்டுக் **கலைவாணியின் கவிதைத் தொகுப்பு** என்ற பெயரில் ஆசிரியராலேயே 2003இல் முதற்பதிப்பாக வெளியீடப்பட்டு உள்ளது. இந்த நூலே ஆய்வுக்குத் தரவு நூலாகக் கொள்ளப்பட்டது.

இரண்டாம் தொகுப்பான **பார்வைகள்** என்ற நூலுக்கு வி.ஜி.பி. சந்தனம் அம்மாள் அறக்கட்டளைப் பரிசும், ஸ்டேட்

வங்கியினரால் சிறந்த கவிதை நூல் என்ற பரிசும் 1988இல் கிடைக்கப்பெற்றன என்பது குறிப்பிடத்தக்கது. கவிஞர் சௌந்தரம் கைலாசம், முன்னாள் தஞ்சைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் ஔவை. நடராசன், கவிக்கோ அப்துல்ரகுமான், கவியரசர் இளந்தேவன், அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கத்தலைவர் கலைமாமணி டாக்டர் விக்ரமன் போன்றோர் இவரது இலக்கியச் சுற்றத்தாராக விளங்கினர் என மூன்றாம் தொகுதி முன்னுரையின் மூலம் அறியமுடிகிறது.

முதற் தொகுதியில் உள்ள கவிதைகள் பெரும்பாலும் **அமுதசுரபி, பல்லவநாதம், அமுதசுரபி தீபாவளி மலர், தாய், தாய் பொங்கல் மலர், தேவி, கவிதை, சுகந்தம் மாத இதழ், தீ பரவட்டும்** போன்ற பத்திரிகைகளில் வெளிவந்தனவாகும்.

இரண்டாம் தொகுப்பான பார்வைகள் என்ற தொகுப்பில் **அமுதசுரபி, கல்கி** விடுமுறை மலர் ஆகிய இதழ்களில் வெளிவந்த கவிதைகளும் சென்னை வானொலி நிலையத்தில் ஒளிபரப்பான கவிதைகளும் இதிலே அடங்கும்.

மூன்றாம் தொகுப்பைப் பொறுத்தமட்டில் ஓரிரு கவிதைகள் அமுதசுரபியிலும், ஓரிரு கவிதைகள் கவிதைப் போட்டிகளுக்காகவும் பாடப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத் தக்கது. இத்தொகுப்பில் மொத்தத்திலும் 123 கவிதைகள் அடங்கி யுள்ளன. இக்கவிதைகளைக் கீழ்க்காணும் பொருண்மைகளில் வகைப்படுத்தலாம்.

1. குழந்தைப் பாடல்கள், 2. அங்கதப் பாடல்கள், 3. பெண்மை குறித்த பாடல்கள், 4. சமூகச் சிந்தனைப் பாடல்கள் (நாட்டு நடப்பு) பரிசு பெற்ற கவிதைகள் என்பனவாகும். கலைவாணி சமூகத்தின்பால் அதிக அக்கறை கொண்டதனாலேயே ஒரு கவிதைப் படைப்பாளியாக மாறியுள்ளார்.

> எல்லோரும் எண்ணுவதைத்தான் நானும் எண்ணினேன். எல்லோரும் ஏங்கினதுக்கு நானும் ஏங்கினேன். எல்லோரும் நகைத்தற்கு நானும் நகைத்தேன். மனத்தில் தோன்றிய ஆழமான உணர்வுகளைக் கவிதைகளாக வடித்தேன். மனதை வெளிப்படுத்தும் வெளிப்பாடுகளே இந்தக் கவிதைகள்

என்ற கவிஞரின் கூற்று அவர் கவிஞர் ஆனதற்கான காரணத்தைக் கூறும். **என்றன் கவிதை** என்ற தலைப்பில் அமைந்த அவரது கவிதை இதை மேலும் வலுப்படுத்துவது போல அமைந்துள்ளது. இக்கவிதையில் அவரது எழுத்தாசையும், எதிர்கால நோக்கும் தெற்றெனத் தெரிகின்றன.

ஏட்டில் எழுதிக் குவித்தாலும்
வீட்டில் ஒருவரும் நாடவில்லை;
நாட்டில் உள்ள யாவருமென்
பாட்டில் மயங்கும் காலம் வரும்.
கவிதை என்றன் உயிர்மூச்சு; எதிர்
காலம் முழுதும் என் பேச்சு;
எழுதிக் குவிப்பேன் இந்நாளில் – அது
ஏற்றம் பெருமே பின்னாளில்!
நல்ல கருத்துகள் நாட்டுக்கு வழங்க
இல்லங்கள் தோறுமென் கவிதைகள் முழங்க
கலைமகளே உன் கடைக்கண் காட்டி
கருணை கூர்ந்து அருள்புரி வாயே!! (ப.19)

இன்றைய குழந்தைதான் நாளைய தந்தை (The Child is a Father of Man) என்ற ஆங்கிலக் கவிஞர் வோர்ட்ஸ் வொர்த் குழந்தையின் சிறப்பைப் பாராட்டிப் பேசுவார். பாரதி தொட்டு எத்தனையோ கவிஞர்கள் குழந்தையின் வளர்ச்சியிலே கவனம் செலுத்தி உள்ளனர். பாரதியின் பாப்பா பாட்டு, புதிய ஆத்திசூடி போன்றன இதற்கு ஏற்ற எடுத்துக்காட்டுகள். சமூகத்தின் ஓர் அங்கமாக விளங்கும் குழந்தையைப் பற்றிச் சிந்தித்தல் என்பது கவிஞனின் கடமையாகும். அவ்வகையில் கவிஞர் கலைவாணி தமது தொகுப்பில் ஏழு பாடல்களைத் (குழந்தைகளுக்காக) தந்துள்ளார். அவை ஏழும் அற்புதமான முத்துக்களே!

| | |
|---|---|
| காக்கையண்ணா | (I - 33... ப.51) |
| சின்ன பாப்பா | (I - 35... ப.53) |
| மேரியின் ஆட்டுக்குட்டி | (I - 38... ப.56) |
| எங்கள் வீட்டு முல்லைக் கொடி | (I - 8... ப.75) |
| பேசு கண்ணே | (II - 12... ப.79) |
| பள்ளி செல்லும் பாப்பா | (II - 21... ப.91) |
| ஒற்றுமையே உயர்வுக்கு வழி | (II - 35... ப.107) |

என்பன.

### சின்னபாப்பா

எளிய சொற்களைக் கொண்டு பின்னப்பட்ட கவிதை. கவிஞரின் அகவைக்கேற்ற பட்டறிவுச் சொற்கள். எந்தத் துன்பம் வந்தாலும் சொந்தக் கவலை இருந்தாலும் அழகிய மென்மையான தளிர் முகத்தைக் காணும்போது எண்ணமெல்லாம் இனித்திடு வதாகக் கூறுகிறார்.

எந்தத் துன்பம் வந்தாலும்
சொந்தக் கவலை இருந்தாலும்
கண்ணே உன்னைக் கண்டாலே
எண்ணம் முழுதும் இன்பம்தான் (I - 35. . . ப. 53)

குழந்தைச் செல்வத்தின் அருமையை இப்பாடல் எடுத்தியம்புகிறது.

## மேரியின் ஆட்டுக்குட்டி

மேரி என்கிற சிறுமி ஓர் ஆட்டுக்குட்டியின் மேல் அளவில்லாத அன்பு செலுத்தி வளர்த்து வருகிறாள். அதுவும் இவளது அரவணைப்பில் மகிழ்வுடன் இருக்கிறது. இந்த மகிழ்வுக்குக் காரணம் என்ன என்று நம்முள் எழும் வினாவிற்கு 'அன்புதான்' எனக் கவிஞர் எடுத்துரைக்கிறார். இந்தக் கவிதை தீ பரவட்டும் என்ற இலக்கிய இதழில் 2-8-1984இல் வெளியானது அக்கவிதை வருமாறு:

மேரி என்றொரு சிறுமி உண்டு
அன்பாய் வளர்த்தாள் ஆடு ஒன்று
பால்நுரை போலதன் வெண்மை நிறம்
பகலவன் ஒளியில் மின்னிடுமே!

மேரி ஆட்டுக் குட்டியின் மேல்
மாறா அன்பு கொண்டிருந்தாள்
ஆடும் அது போல் மேரியிடம்
அன்பும் பாசமும் காட்டியதே!

மேரி எங்கு சென்றாலும்
ஆடும் அவளுடன் சென்றிடுமே!
மேரி என்ன உண்டாலும்
ஆட்டுக்கும் அவள் தந்திடுவாள்!!

ஒருநாள் மேரி பள்ளிக்குத்
தெருவில் இறங்கி நடக்கையிலே
அவளறியாமல் பின்னாலே
ஆட்டுக் குட்டியும் வந்ததுவே!

பள்ளிக் குழந்தைகள் யாவருமே
துள்ளித் திரியும் ஆட்டினையே
பள்ளியில் கண்டு களிகொண்டு
உள்ளம் மகிழ்ந்து சிரித்தனரே!

ஆட்டுக் குட்டியைப் பள்ளிக்கு
அழைத்து வந்தது எதுவம்மா?
அளவில்லாமல் மேரியுமே
அதனிடம் காட்டிய அன்பம்மா!!

## பேசு கண்ணே பேசு

அகில இந்திய வானொலிக்காக எழுதிய பேசு கண்ணே என்ற பாடலும் நயம் மிகுந்த பாடலாகும். குழந்தைகளுக்கு நற் சிந்தனைகளைப் போதிப்பதாகும். அன்பாய்ப் பேசுவது உறவை வளர்க்கும். மெதுவாய்ப் பேசுதல் நல்லுதவி கிட்ட வழி வகுக்கும்; கனிவாய்ப் பேசுதல் உணர்வுக்கு உறுதுணை செய்யும் பேசும் நலம் ஒன்றே பிறவியை உயர்த்த வல்லது; நிறைவைத் தரவல்லது; என்பதனை

**அன்பாய்ப் பேசிடு பாப்பா – அது**
**ஆறுதல் அளித்திடும் பாப்பா**
**அறிவாய்ப் பேசிடு பாப்பா – அது**
**உறவை வளர்க்கும் பாப்பா.**

**மெதுவாய்ப் பேசுதல் நன்று – அது**
**மென்மையைத் தந்திடும் என்றும்**
**இதமாய்ப் பேசிடு கண்ணே – அது**
**உதவிடும் உனக்கும் முன்னே.**

**கனிவாய்ப் பேசிடு பாப்பா – அது**
**இனிமை அளித்திடும் பாப்பா**
**குறைவாய்ப் பேசிடு பாப்பா – அது**
**குணத்தை உயர்த்திடும் பாப்பா**

**பண்பாய்ப் பேசிடு பாப்பா – அது**
**பாசம் வளர்த்திடும் பாப்பா!**
**உண்மை பேசிடு பாப்பா!**
**உயர்த்தும் உன்னைப் பாப்பா!!**

**பேசும் திறமை ஒன்றே – நம்**
**பிறவியை உயர்த்தும் பாப்பா!**
**நேசம் கொண்டு பேசு – அது**
**நிறைவைத் தந்திடும் பாப்பா!!**

என்று பாப்பாப் பாட்டின் வாயிலாக நல்ல பண்பு வளர்வதற்கான கருத்துகளை எடுத்துக்காட்டுகிறார் கவிஞர் கலைவாணி.

## பள்ளி செல்லும் பாப்பா

சிறுவர் சிறுமியர்க்கு நல்லறிவுரைகளைத் தொகுத்துத் தருகிறது கவிஞரின் கவிதை "பள்ளி செல்லும் பாப்பா".

**பள்ளிக்கூடம் நோக்கிச் செல்லும் பாப்பாவே – நான்**
**பகருவதை நீயும் கொஞ்சம் கேட்பாயே!**

எனத் தொடங்கித் துடிப்புடன் சிரிக்க வேண்டும்; காலையில் எழ வேண்டும்; நாளும் குளித்து உடற்சுத்தம் செய்துகொள்ள வேண்டும்; பள்ளிக்குச் செல்லும்போது சாலையைக் கவனமாக இருபக்கமும் பார்த்துக் கடக்க வேண்டும்; சாலையில் காவல்துறை அதிகாரி காட்டும் பாதுகாப்பான திசையில் செல்ல வேண்டும்; பாடசாலையில் கவனமாய் இருந்து ஆசிரியர் சொல்லும் பாடத்தைப் பிழையறப் படிக்க வேண்டும்; பெற்றோர் மனங்குளிரப் பாங்காய் நடந்துகொள்ள வேண்டுமென்று சிறுவர் சிறுமியர் மேற்கொள்ள வேண்டிய பழக்க வழக்கங்களைக் கவிஞர் வரிசைப்படுத்திக் காட்டுகின்றார்.

ஒற்றுமையே உயர்வுக்கு வழி என்ற பிறிதொரு கவிதையில் அமைந்த நெடிய பாடலின் வாயிலாக எருது சிங்கம் கதையினைக் கவிதையாக வடித்து ஒற்றுமையுடன் வாழ்தலின் பயனை எடுத்தியம்புகிறார் கவிஞர்.

**ஒற்றுமையையே உயர்வென**
**உணர்த்தும் நல்ல கதையிது;**
**நட்புடனே இருந்திடல்**
**நாளும் நமக்கு நன்மையே!**

**ஒற்றுமையாய் வாழ்ந்திட்டால்**
**எந்த நாளும் இன்பமே;**
**வேற்றுமையை வளர்த்திட்டால்**
**வீழ்ச்சி என்றும் திண்ணமே**

என்ற கவிதையில் கண்ணதாசன் புறாவின் கதையை வைத்துப் பாகப்பிரிவினை என்ற திரைப்படத்திற்கு எழுதிய "ஒற்றுமையாய் வாழ்வதாலே உண்டு நன்மையே! வேற்றுமையை வளர்ப்பதினாலே விளையும் தீமையே"!! என்ற பாடலை நினைவுகூர்வதாக உள்ளது.

**சமூகச் சிந்தனை**

இக்காலக் கவிஞர்கள் சமூகத்தை உற்று நோக்கி அதில் காணும் மாசுமருள்களை நீக்கத் தவறுவதில்லை. கலைவாணியும் தம் கவிதையில் பல்வேறு பொருண்மைகளில் சமூகத்தில் காணும் குறைபாடுகளையும், தனிமனித அலட்சியங்களையும் அங்கதச் சுவையோடு நமக்கு வரைபடமாகப் பல கவிதைகள் மூலம் காட்டியுள்ளார். அவற்றில் ஒருசிலவற்றை ஈண்டுக் காண்போம்.

சமூகத்தில் உழைக்காமலே வாழத் துடிக்கும் ஒரு சிலரை, **கடனும் கையும்** என்ற பாடல்வழி நகைச்சுவையோடு கடிந்து கொள்கிறார் கவிஞர். பிறரது உழைப்பைச் சுரண்டி வாழ எண்ணும் எண்ணம் மூடநம்பிக்கையைவிடக் கொடுமையானது. அது

தன்னிடமுள்ள பொருளையும் வீணாக்கிவிடும் என்ற எச்சரிக்கை தொனியில் சொல்லப்பட்டுள்ள கவிதை படித்தறியத் தக்கது; பாடலைப் படிக்கும்போதே அதன் நகைச்சுவை விளிம்பில் அமைந்துள்ள விவேகக் கருத்துப் புலப்படும். அப்பாடல் வருமாறு:

> *'ஐம்பது ரூபாய் கடன் வாங்க'*
> *ஐந்து ரூபாய் இரவல் பெற்று*
> *அடுத்த ஊர் போனான் கணவன்.*
> *ஐம்பது பைசா கைமாத்து வாங்கி*
> *ஆலமர ஜோசியரை*
> *மனைவி கேட்டாள்;*
> *"போன கணவர்*
> *பணத்தோடு வருவாரா?*
> *கையைப் பார்த்துச் சொல்"!*

**விழிப்பு** என்ற கவிதை தீப்பரவட்டும் என்ற இதழில் *8-3-1984*இல் வெளிவந்துள்ளது. 'விழித்து கொண்டோரெல்லாம் பிழைத்துக் கொண்டார். பெருங்குறட்டை விட்டோரெல்லாம் கோட்டை விட்டார்' என்ற பட்டுக்கோட்டையாரின் சிந்தனையை ஒத்ததாக அமைகிறது இக்கவிதை. உறக்கத்தில் இருக்கும் போது பூமியின் இயக்கம் யாருக்கும் தெரியவருவதில்லை. ஆனால் சோம்பல் நீக்கிச் சுறுசுறுப்பாகி விட்டால் நேரம் போதுவதில்லை.

> "நான் உறங்கிக் கொண்டிருந்தபோது
> பொழுது எனக்குப் போகவில்லை;
> என் உறக்கம் தெளிந்த போது
> பொழுது எனக்குப் போதவில்லை"

என்ற பாடலின்வழிக் காலத்தின் அருமையைப் புலப்படுத்துகிறார் கவிஞர். ஓரினம் என்ற தலைப்பில் 4-3-84 அன்று "தாய்" பத்திரிகையில் வெளிவந்த கவிதை வர்க்க முரண்பாடுகளால், பொருளாதாரத்தில் ஏற்பட்ட சீர்கேட்டின் விளைவாகக் குண்டுமணித் தங்கத்திற்குக் கூட ஏங்கிக் கிடக்கும் பெண்களின் அவலநிலையை நாகரிகமாகச் சாடுகிறது. உணர்வுப்பூர்வமான அப்பாடல் வருமாறு:

> *மும்தாஜ் பேகம்,*
> *முத்துலட்சுமி*
> *எஸ்தர் ராணி*
> *நாங்கள் எல்லோரும் ஒரே ஜாதி,*
> *ஆம்*
> *கழுத்தில் குண்டுமணி*
> *தங்கம் கூட இல்லாத*
> *வெறும் கயிற்று ஜாதி*

இந்தப் பாடலில் சாதி சமயத்தால் வேறுபட்ட போதும் ஏழ்மையின் காரணமாக ஒன்றுபட்டு விளங்கும் மக்களிடையே பொருளாதாரச் சீர்குலைவு ஏற்படுத்தி உள்ள அவலத்தைச் சுட்டிக் காட்டும் 'வெறும் கயிற்று ஜாதி' என்ற தொடர் நம்மிடையே ஆழமான சிந்தனையை ஏற்படுத்துவதைக் காணலாம். **பரம்பரைச் சொத்து** என்ற தலைப்பிலான பாடலில் ஏழ்மைப்பட்ட ஆண்களின் நிலைகுறித்து ஆசிரியர் ஆதங்கப்பட்டுச் சொல்லி இருப்பது, சமூக அவலத்திற்கு நல்லதொரு எடுத்துக்காட்டு:

**எங்களுக்கு மட்டும்**
**பரம்பரைச் சொத்து**
**இல்லை யென்று**
**யார் சொன்னது?**
**இதோ இருக்கிறதே**
**நரையும் வழுக்கையும்**

இப்பாடலில் 'இதோ இருக்கிறதே' என்ற குறிப்பைக் கொண்டு அங்கதச் சுவையிற் சமூகத்தை எண்ணி வருந்துகிறார் கவிஞர். **அமுத சுரபியில்** ஆகஸ்ட் 84இல் வெளிவந்த **பசி** என்ற கவிதை நகைச்சுவை கூடிய விமர்சனம் ஆகும்.

**பிறந்தது முதல்**
**இறக்கும் வரை**
**ஆரோக்கிய நிலையில்**
**எத்தனை வேளை**
**மருந்து கொடுத்தும்**
**தீராத வியாதி!**

ஔவை பாடிய,

**ஒருநாள் உணவை ஒழி என்றாய் ஒழியாய்!**
**இருநாளைக்கு ஏழென்றாய் ஏழாய்!. . .**
**உடம்பே உன்னோடு வாழ்தல் அரிது"**

என்ற பாடலின் மறுஆக்கம் இது எனலாம். 'குடியரசு' என்ற தலைப்பில் அமுதசுரபியில் மே 84இல் வெளிவந்த கவிதை. இது தேசிய உணர்வு குறித்த கவிதையாகும். இன்னும் நம் நாட்டில் தேசியச் சின்னங்களுக்குக் குறிப்பாகத் தேசியக்கொடி, தேசிய கீதம் போன்றவற்றிற்கு முறையான மரியாதையைத் தர நம் மக்கள் அறிந்தாரில்லை. இந்தக் கவலை கவிஞரின் மனத்தையும் வருத்தி யுள்ளது. இந்த வருத்தம் ஒரு நல்ல கவிதையாக மலர்கிறது. யார் மனமும் புண்படாதபடி அங்கத உத்தியோடு இக்கவிதை அமைந்திருப்பது சிறப்பு. குடியரசுத் தினத்தன்று பல்வேறு

நிறக்கொடிகள் விற்கப்பட்டதாகவும் அரசியல் கட்சிகளின் கொடிகளை மக்கள் வாங்கிக் காட்டுவதில் உள்ள ஆர்வம் நம் நாட்டின் தேசியக் கொடியின் பால் இல்லை. நாட்டுப்பற்று பற்றிய விழிப்புணர்வு இல்லாததே இதற்கு அடிப்படைக்காரணம் என்பதைத் தம் கவிதையில் பதிவு செய்துள்ளார்.

நாற்பது கட்சியின்
கொடியும் உண்டு
நாட்டுக்கொடி
மட்டும் இல்லை
என்ற பதிலே
எங்கும் கிடைத்தது!. . .
விற்பனையாகும்
கொடிகளைத்தான்
விலை கொடுத்து
வாங்கி வைப்போம்!
விலை போகா கொடியை வாங்கி
வீணே வைப்பது இல்லை' என்றார்
வேதனையோடு திரும்பி நடந்தேன்

அடுத்து, **பிரசங்கம்** என்ற தலைப்பில் ஒரு கவிதை வடித்துள்ளார். இக்கவிதையில், பேச்சுக்கும் வாழ்க்கைக்கும் தொடர்பு இல்லாமல் வாழ்ந்து கொண்டு மனித சமூகத்திடத்து மிகுந்த அக்கறை உள்ளவர் போல் காட்டிக் கொள்ளும் வாய்ச் சொல் வீரர்களின் முகமூடியைக் கிழித்துக் காட்டுகிறார்.

அவர் ஓர் தேவாலயப் பிரசங்கம் (பேச்சாளர்) ஆலயத்தில் பிரசங்கம் நடைபெற்றுக் கொண்டு இருக்கிறது. சிறியவர் முதல் முதியவர் வரை ஒவ்வொருவருடைய மனத்திலும் ஒவ்வொரு வகையான சிந்தனைகள். மனம், ஆன்மீகச் சொற்பொழிவில் நாட்டம் கொள்ளாது வயதுக்கேற்ப எண்ண அலைகள் விரிந்து செல்கின்றன. சிறுமியர் 'பைபிள்' படிப்பது போலப் பாவனை செய்வதும்,

இரண்டாம் வரிசையில்,
இள நங்கை இருவர்
முக்காட்டில் முகம் மறைத்துப்
பாடற்குழு வாலிபனைப்
பரிவுடன் நோட்டம்
இடையிடையே குசும்பு மொழி;
மௌனச்சிரிப்பு; முகச்சிவப்பு;
பிரசங்கம் முடியவே வேண்டாம்!. . . .

பிரார்த்தனைக்கூட்டத்தில் கலந்து கொண்ட நங்கையர்களின் நிலைக்கு விளக்கம் தேவையில்லை. அதே போல, ஆண்கள் வரிசையின் நிலையை:

ஆண்கள் வரிசை
அதைவிட மோசம்.
ஆடவர் இருவர்
அவசர உரையாடல்
அநேகமாய், அது
அலுவலக விஷயமே!
முதியவர் மூவர்
மும்முர உறக்கம்
வாலிபர் குழு ஒன்று
மெல்ல நழுவி
சைக்கிள் வரிசை மேல் சாய்ந்து
பக்கம் பார்த்து,
சரக்கெனப் பற்ற வைத்து
அப்பப்பா! . . . இழுத்து விடுகிறார்
சுவை மிகு புகையை!!

என அப்பிராத்தனைக் கூட்டத்தில் கலந்து கொண்ட மக்களின் மனோபாவங்களைப் படம்பிடித்துக் காட்டி, 'பிரசங்கம்' என்ற பெயரில் காலத்தை வீணடிப்பதைக் கவிஞர் பின்வருமாறு விமர்ச்சிக்கிறார்.

காலங்காலமாய்க் கேட்ட செய்திகள்
ஞால முடிவுவரை இதே கதையா?
ஆக்கப்பணிகள் எதுவுமே இல்லையா?
ஆண்டவனுக்கும் அலுவல் இல்லையா?
விரைவில் முடியும் பிரசங்கம்!

எனக் கவிஞர் சாடுவதில் இருந்து நடைமுறைச் சடங்கில் 'கால விரையம்' தேவையற்றது என்று அவர் சுட்டிக்காட்டுவது குறிப்பிடத்தக்கது.

### பெண்ணியம்

இருபதாம் நூற்றாண்டின் பெரும்பாலான கவிஞர்கள் பெண்ணியத்தைத் தொடாது செல்வதில்லை. அவர்கள் பெண்ணியத்தைச் சிறப்பித்துப் பாடி உள்ள கவிதைகள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கன. "பெண்மை வாழ்க" என்ற நெடிய பாடலில்,

*அறியாப் பருவ நங்கையவள்*
*மருமகளாய் அடி வைக்கின்றாள்*
*அனுபவம் நிறைந்த தாயவளோ. . .*
*மாமி எனப் பெயர் எடுக்கின்றாள்!!*

இவ்வரிகளின் வாயிலாக மருமகளும் பெண்தான்; மாமியாரும் பெண்தான். ஆயின் குடும்பப் பொறுப்பை ஏற்கும்போது இருவருக்கும் வெவ்வேறு பெயர்கள் அமைந்துவிடுகின்றன. அதன் அடிப்படையில் இவர்கள் ஒருவருக்கொருவர் காட்டிக்கொள்ளும் ஆளுமை காரணமாக ஏற்படும் முரண்பாடுகளும், சிக்கல்களும், தடுமாற்றங்களும் குடும்பத்தில் விரிசல் ஏற்படுத்தி விடுகின்றன. அன்பு என்ற ஓர் இணைப்புப் பாலம் இவர்களிடையே அமைந்து விட்டால், 'அதிகாரம்' என்ற ஆணவ ஆயுதம் தூக்கி எறியப்பட்டு விட்டால், இவர்கள் வாழ்வில் என்றும் மகிழ்ச்சியும், நிம்மதியும் நிறைந்திருக்கும். எனத் தம் கவிதையில் குடும்பப் பிரச்சினைக்குத் தீர்வு கூறுகிறார் கவிஞர்.

*அன்பு என்னும் மந்திரத்தால்*
*எந்திரமாகச் சுழன்றிடுவாள்*
*ஆனால் அவளை அதிகாரத்தால்*
*அணுவும் அசைத்திட முடியாது*

என்ற பாடல் வரிகளிலே மேற்சொன்ன தீர்வு பொதிந்து இருப்பதைக் காணலாம். அமுதசுரபி இதழில் செப்டம்பர் 83இல் வெளிவந்த '*தாய்*' என்ற தலைப்பில் அமைந்த, கவிதை இக்கவிதைத் தொகுப்பிற்கோர் முத்தாய்ப்பான கவிதையாய் அமைந்துள்ளது எனலாம். பாடலை உரைநடைப் பொருளில் காண்பதை விட, கவிதையாய்ப் படித்திடும் போதுதான் அதன் உண்மை இன்பம் கிட்டும். அப்பாடல் வருமாறு:

*அம்மா பிசைந்த சாதம்*
*ஆசைப்பட்டு உண்பேன்*
*அதுபோல் நானும் பிசைந்தால்*
*அத்தனை ருசிப்பதில்லை.*
*இன்று சாதம் பிசைந்தேன்,*
*அந்த இனிய ருசியே வந்தது.*
*என்ன காரணம்?*
*ஓ! இன்று நான் ஒரு தாய்!*

முடிவுரை

சிறந்த குழந்தை இலக்கியக் கவிஞராக விளங்க வேண்டிய இவர், அல்லது சிறந்த பெண்ணியச் சிந்தனையாளராக விளங்க

வேண்டிய இவர், பல்துறைச் சிந்தனைகளில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டதால் ஒரு சில கவிதைகள் தொய்வு பெற்று உள்ளன எனக் கூறலாம். ஆயினும் கவிதை முயற்சியில் அவரது பட்டறிவுத் திறன் மேலோங்கி நின்று படித்ததும் நம்மை ஈர்க்கும்படியான சிறப்பினைக்கொண்ட கவிதைகளைத் தரவல்லதாக அமைந்துள்ளது என்றால் மிகையாகாது. அத்தகைய கவிதைகளில் அவரது நகைச்சுவை உணர்வும் அங்கத உத்தியும் நம்மை இரசிக்கவும் சிந்திக்கவும் வைக்கின்றன. அவ்வகையில் ஓரிரு எடுத்துக்காட்டுகள்.

1. சுற்று என்ற தலைப்பில் அமைந்த,

> **மருத்துவர் ஆலோசனைப் படி**
> **மாலைதோறும் பத்து சுற்று நடை!**
> **முன்னால் சுற்றும்**
> **பனியன் பாவைக்காக**
> **மேலும் இரண்டு சுற்று!!**

2. குணம் என்ற தலைப்பில் அமைந்த,

> **எனக்குக் கடுமையான**
> **நோய் வந்தது**
> **வைத்தியர் என்**
> **நோயைக் குணமாக்கினார்!**
> **இறைவன் என்**
> **மனதைக் குணமாக்கினார்!!**

3. போன் என்ற தலைப்பில் அமைந்த,

> **நேற்றுவரை நான்**
> **அரிச்சந்திரன்**
> **இன்று முதல் நான்**
> **அரசியல்வாதி, ஆம்**
> **எனக்கு 'போன்' வந்து விட்டது**

இன்னும் எத்தனையோ உள. அவற்றை நூலில் கண்டு இன்புறலாம். மக்கள் திலகம் 'எம்.ஜி.ஆர்.', எம்.எஸ். சுப்புலட்சுமி, போன்றோரைப் பாராட்டும் கவிதைகள் படித்து இன்புறத்தக்கன. இவரது 'உயில்' என்னும் கவிதை இயற்கை இடத்தும், சுற்றுப்புறச்சூழல் குறித்தும் எழுந்த அவரது மனப்பிரதிபலிப்பாகும்.

தன் மகனுக்குக் கவிஞர் உயில் எழுதுகிறார். என் தகப்பனும் பாட்டனும் அவரது முன்னோர்களும் ஆண்டு அனுபவித்ததும், முடிந்தவரை தூய்மையாக எனக்கு விட்டுச் சென்றதுமான சூரிய ஒளி, வெப்பம், சந்திர ஒளி, அதன் குளிர்ச்சி, நீலவானம், ஆறு, கடல், அருவி, ஏரி, குளம், குட்டை, நிழல் தரும்

மரங்கள், மணம் தரும் மலர்கள், இதமான தென்றல், மழை, மலை அவ்வப்போது வரும் புயல் இவை யாவற்றையும் நீயும் உனக்குப் பின் வழிவழியாக வரும் உன் சந்ததிகளும் சர்வ சுதந்திரமாய் ஆண்டு அனுபவித்துக் கொள்ள வேண்டியது. இத்தகைய 'உயில்' எல்லாராலும் எழுதப்பட வேண்டிய ஒன்று. நாமும் எழுதுவோம் இத்தகைய உயில்!!

### மூல நூல்

**கலைவாணியின் கவிதைத் தொகுப்பு**, கவிஞர் கலைவாணி, திருமதி கலாவதி குலசேகரன், அண்ணாநகர், பி-1, போகன்வில்லா அபார்ட்மெண்ட், சென்னை - 102 (ஆசிரியர் வெளியீடு, 2003)

# தமிழ் நாகை

## வாழ்க்கைச் சுருக்கம்

இந்து சைவக் குடும்பத்தில் பிறந்தவர். ஊர் நாகப்பட்டினம். இயற்பெயர் அன்பழகன். இலக்கிய ஆக்கத்திற்காகவும் தமிழ் மொழியின் பற்றிற்காகவும் ஊருடன் தமிழையும் சேர்த்து 'தமிழ் நாகை' எனக் காரணப் பெயராக வைத்துக் கொண்டார். இப் பெயராலேயே கவிதை நூல்களையும் வெளிக்கொணர்ந்துள்ளார். பெற்றோர் கோதண்டபாணி; கமலம்மையார். பெரியாரின் பகுத்தறிவு இயக்கத்தில் தந்தை செயல்பட்டு மகனுக்குச் சிறிய வயதிலேயே பகுத்தறிவுக் கருத்துகளை ஊட்டி வளர்த்துள்ளார்.

பள்ளியில் தமிழாசிரியராக இருந்த புலவர் சூசை என்பவரும், நாகையில் தமிழ்ச்சங்கம் நிறுவி, தமிழ் இலக்கியத்தையும் கவிதையையும் வளர்த்த கோவை இளஞ்சேரன் என்பவரும், தமிழ்மொழியின் மீதும் இலக்கியக் கல்வியின் மீதும் பற்று வரக்காரணமாக இருந்தவர்கள்.

தஞ்சை மருத்துவக் கல்லூரியில் மாணவனாக இருந்த போது அக்கல்லூரியின் தமிழ்மன்றம், முத்தமிழ் விழாக்கள் என அனைத்திலும் பங்கு பெற்றுள்ளார். கல்லூரியின் தமிழ் இலக்கிய விழாக்களுக்குச் சிறப்பு விருந்தினராக ஜெயகாந்தன், வீரமணி, குமரி அனந்தன், கண்ணதாசன் போன்றோரை அழைத்து நிகழ்ச்சிகள் நடத்தியும், பாடலாசிரியர் கண்ணதாசன் முன்பு கவிதை படித்தும் உள்ளார்.

அரசியலில் ஈடுபாடு உண்டு. பெரியாரின் தொண்டர். அவரின் ஆணைக்கிணங்கக் காமராசருடன் செயல்பட்டுள்ளார். இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்துகொண்டு இலக்குவனாருடன் சிறை சென்று திரும்பியுள்ளார். கல்லூரியில் பயிலும்போது பகுத்தறிவும் நாத்திகவாதமும் கொள்கைகளாக இருந்துள்ளன. பின்னாளில் இயேசு பக்தராக மாறியுள்ளார். பல்வேறு கருத்தரங்கம், கவியரங்கம் போன்றவற்றை நடத்தி யுள்ளார். தற்சமயம் தென்முனை கலை இலக்கியப் பேரவையின் தலைவராக உள்ளார். ஐம்பது ஆண்டை நெருங்கிய இவர் மருத்துவத் தொழிலைச் சென்னையில் செய்து வருகிறார்.

## படைப்புகள்

ஐந்து நூல்கள் இவரது படைப்புகளாக வெளிவந்துள்ளன. **ஒன்றே ஒளி ஒன்றே வழி, என் உயிரெழுத்துக்கள், ஒரு தமிழனின் தவம், கானல் தேசம்** என்ற நான்கும் கவிதை நூல்களாகும். **ஒன்றே ஒளி ஒன்றே வழி** என்னும் கவிதை நூல் மரபிலக்கணமான வெண்பாவில் இயற்றப்பட்டுள்ளது. இதே நூலை **ஒளி வழி ஒன்றே** என்ற பெயரில் ஓர் ஆன்மீக ஒப்பாய்வு நூலாக உரைநடையில் தந்துள்ளார். தமிழ்முனை வெளியீட்டகம் (சென்னை - 82) எனும் சொந்தப் பதிப்பகத்திலிருந்து இந் நூல்களை வெளியிட்டுள்ளார்.

## இலக்கியவாதிகளின் மதிப்புரை

கவிதை இயற்றுவது போன்றே அதனைப் படிக்க வைப்பதும் முக்கியமானது. முன்னதைக் கவிஞரும், பின்னதைத் திறனாய் வாளரும் செய்ய வேண்டும். அவ்வகையில் மு. மேத்தா, இராம. குருநாதன், வல்லிக்கண்ணன், வா.மு. சேதுராமன், க.ப. அறவாணன் போன்றோர் இவரைப் பற்றிய அறிமுகத்தையும், கவிதைகளின் சிறப்புகளையும் நூலின் முன்னுரைப் பகுதிகளில் வழங்கியுள்ளனர்.

## நவீன கவிதை

இதற்கு முன்பிருந்த கவிதைகளிலிருந்து இன்றைய கவிதை வேறுபட்டிருக்கும் முக்கிய அம்சங்களுள் ஒன்று தன்னுணர்ச்சி. இது நவீனக் காலத்தின் பண்பாகவும் பயனாகவும் உள்ளது. தன்னுணர்ச்சிக் கவிதை இரண்டு போக்குகளைக் கொண்டதாக உள்ளது. ஒன்று சமூக நலனை மேம்படுத்துவதற்கும் மக்களை மன உறுதியுள்ளவர்களாக மாற்றுவதற்கும் கவிதை படைப்பது. மற்றது கவியினுடைய சொந்த அபிலாசைகளை, துக்கங்களைக் கவிதையாக்குவது. இதில் எந்த நிலைப்பாட்டைத் தமது கவிதை களில் கொண்டுள்ளார் என்பதைக் கவிஞர் பின்வருமாறு கூறுகிறார்.

> வெற்றலங்காரச் சொல்லோவியங்களில் எனக்கு ஈர்ப்பு இல்லை. எழுத்து ஓர் இலட்சியத்தை எடுத்துச் செல்ல வேண்டும். அது ஓர் இலக்கைச் சென்று தாக்கவேண்டும் (அதாவது கொள்கைத் தாக்கத்தை ஏற்படுத்த வேண்டும்) என்ற கடப்பாடு என்னுடையது. தனி மனித உணர்வுகளின் வழியாகச் சமுதாயத்திற்குச் சேதி சொல்ல விழைகிறேன் (மேலது, ப. 16).

இக்கருத்து அவரது கவிதைச் சார்பைத் துலக்கமுறச் செய்து விடுகிறது. கவிஞர் தமிழ் நாகையின் **என் உயிரெழுத்துக்கள்**

(டிசம்பர், 2000), **ஒரு தமிழனின் தவம்** (டிசம்பர் 2001), **கானல் தேசம்** (டிசம்பர் 2003) என்னும் இம்மூன்று கவிதைத் தொகுப்புகளே இக்கட்டுரைக்கு அடிப்படையான நூலாதாரங் களாகக் கொள்ளப்படுகின்றன. என் உயிரெழுத்துக்கள் என்னும் தொகுப்பில் உள்ள கவிதைகள் மாணவப் பருவத்திலிருந்து (1975) எழுதப்பட்டவை. மற்ற தொகுப்பில் உள்ள கவிதைகள் இரண்டா யிரத்திற்குப் பிற்பட்டவை.

மேற்குறிப்பிட்ட இம்மூன்று தொகுப்பு நூல்களிலிருந்து இந்தியா-தமிழ்நாடு, இனம்-மொழி, சாதி-மதம், என்ற பொருண்மைகளையும் பிற பொருண்மைகளையும் வகை செய்து நோக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

## இந்தியா – தமிழ்நாடு

இந்தியா இன்றிருக்கும் பூகோளம், அரசியல், கலாச்சாரம் என்பனவற்றின் நடைமுறையும் அமைப்பும் 1947இன் சுதந்திரத்திற்குப் பின் அமைந்த ஒன்றாகும். இவ்வமைப்புப் பல தேசங்களையும், இனங்களையும், மொழிகளையும், கலாச்சாரங் களையும் கொண்ட ஒன்றாக அமைந்துள்ளது. எனவே இதில் உள்ள ஒவ்வொரு தேசிய இனத்தின் நிர்ணய உரிமையை மைய்ய அமைப்பு மதித்து நடத்த வேண்டியுள்ளது. அவ்வாறு இல்லாது போகும் போது முரண்பாடுகளும், மோதல்களும் தோன்று கின்றன. இவ்வகைப்பட்ட கருத்தோட்டங்களைக் கவிஞர் கவிதையாக்கித் தருகிறார்.

**'தென்முனை திரும்புமா?'** என்னும் நீண்ட கவிதை முப்பத்து மூன்று பக்கங்களைக் கொண்டது. இது, **ஒரு தமிழனின் தவம்** என்ற தொகுப்பில் இடம்பெற்றுள்ளது. இதில், திராவிடர்கள் வாழ்ந்த லெமூரியக் கண்ட வரலாறு, பாரத தேசத்தின் பழைய நிலை, தமிழ்ச் சமூகத்திலும் இந்தியச் சமூகத்திலும் உழைத்த பல்துறை அறிஞர்கள், தமிழ்ச் சமூகத்தின் பண்பாட்டு விழுமியங்கள், அவற்றின் உயர்வு, தாழ்விற்குக் காரணமானவர்கள் போன்றவை கவிஞரின் எண்ணவோட்டத்தில் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. இக் கவிதையில் பலவகையான நுணுக்க விவரங்கள் விரவிக்கிடக்கின்றன. இவை, இக் கவிஞரின் புலமைக்குச் சான்று பகர்வனவாக அமைகின்றன. இக்கவிதையில் இந்தியத் தமிழக உறவை,

> ***நாங்கள் திராவிடர்***
> ***நாங்கள் தமிழர்***
> ***நாங்கள் இந்தியர்***
> ***நாங்கள் மனிதர்கள் – மனுமறுக்கும்***
> ***மக்கள் என!***

*ஆனாலும்*
*மொழிப் பண்பாடுகள் முகங்கள் இனங்கள்*
*தனித் தனியாதலின்*
*நாங்கள் தமிழர் தமிழ்த் தேசியத்தவர்*
*இன்றைய இந்தியர் என்பது உண்மை!*
*(ஒரு தமிழனின் தவம், ப. 53)*

எனக் கூறி, இரண்டுக்குமான சமகாலத்து உறவையும் இதே கவிதையில் காட்டுகிறார் (இந்திய ஒருமைப்பாடு).

ஒன்றாம் இந்தியர் ஒருதாய்ப் பிள்ளையர்!
தமிழர் சீக்கியர் தீரம ராத்தியர்
தென்னகர் வடவர் திசைநான் கின்னவர்
பலமுக மாயினும்
பாரதிசொன் னாற்போல் நிலமது ஒன்றே
இன்றது 'இந்தியம்' என்பதன் பேர் *(ப. 30)*

என்றும், திராவிடர்களின் ஆயிரமாண்டு வரலாறுகள் பற்றிக் கூறும்போது,

*காலனி ஆதிக்கன் கயவன் வெள்ளையன்*
*காலத்திலும் பின்னும்*
*பிராமணர் உயரப்*
*பதவியில் பொருளில் அரசியல் அனைத்திலும்*
*மேலா ராகவும்*
*மண் இனத் திராவிட மக்கள்*
*ஆயிர மாண்டுகள் அடிமைகளாகவும்*
*சாதிகள் செய்ய சாய்ந்துகி டந்தார்*
*சரித்திர உண்மை!* *(ப. 34)*

என்றும் கூறி, இதற்குக் காரணமாக இருந்தவர் (தமிழ்) மன்னர்களான சேர, சோழ, பாண்டியரென்றும், தம்முள் பகைத்துக் கொண்டு சண்டையிட்டும், கோயில் அமைத்து அதை நிர்வகிக்கும் ஆரியருக்கு ஊரையும் கொடுத்தனர் என்றும்,

திராவிடர் உட்புகல் தீட்டென் றியம்பிட
வேதியர் காலடி வீழ்ந்துகி டந்தனர்!
*(ஒரு தமிழன் தவம்: ப. 48)*

என்றும், அவர்கள்மீது கொண்ட கோபதாபங்களை வெளிப் படுத்தும் கவிதைகளைக் கவிஞர் படைத்துள்ளார். 'தேசியம் - இறையாண்மை' என்னும் தலைப்பில் அமைந்த கவிதையில், வேற்றுமையில் ஒற்றுமையுடன் வாழ்வதற்கு மக்கள் பண்பட்டுள்ளனர் என்றும், இதற்கு மாறான கருத்திற்கு ஆதரவு இல்லை என்பதை,

**அகண்ட பாரதமும்
அகன்ற தமிழகமும்
அவரவர் கனவே
ஆனால்
மக்கள் ஆதரவு மருந்துக்கும் இல்லை!
(என் உயிர் எழுத்துக்கள்: ப. 116)**

என்ற கவிதை அடிகளில் தீர்க்கமாய்க் கூறுகிறார். இவ்வகையில் அமைந்த கவிதைகளின் வித்தாகவும் விரிவாகவும் இருப்பது, மத்திய மாநில அரசுகள் தங்களுக்குரிய உரிமைகளில், கடமைகளில் நிலைகெடாது நிற்க வேண்டும் என்பதாகும்.

## இனம்–மொழி

மொழி அதன் சமுதாயத்திற்குப் பொதுவாகப் பல்வளமீனும் அமுதசுரபியாக விளங்குகிறது. இவ்வாறு தமிழ்ச் சமுதாயத்திற்கு, 'தமிழ் எங்கள் விளைவுக்கு நீர்' என்னும் பாரதிதாசன் உணர்வு வழி நின்று, கவிஞரும் 'உயிர்த் தமிழே!' என்னும் தலைப்பில்,

**உதிர்நாள் என்றொன்று இல்லை உயிர்த்தமிழே!
உயர்நாள் ஒன்றுண்டு உலகினிலே – தமிழ்
பகைச்சாதி மதவெறியும் பாழாம்உட் பகை நீங்க
எதிர்நாள் எந்தமிழர் தமிழுக்கு! (கானல் தேசம், ப. 27)**

என்று, கூறி அமரத்தன்மை உடைய தமிழ் எதிர்காலத்தில் நீக்கமறத் தமிழ்ச் சமூகத்தில் நிறைந்து செழிக்கும் என்றுணர்த்துவது புலனாகிறது. மொழிக்குரிய வளமொடு வாழ்வது தமிழ். எனவே இம்மொழியினைச் செம்மொழியாக அறிவிக்க வேண்டி 'காவடி' என்னும் தலைப்பில்,

**தாலி பெற்றவளைத் தம் மனைவி என்றறிவி!
என்பதும்
சத்தியம் நிச்சயம் சரியே என்றால்
எம்
தமிழையும் செம்மொழி என்றறிவி!
வந்தவரிடம் சொந்தக்காரர்
வைக்கிறார் கோரிக்கை! (கானல் தேசம்: ப. 39)**

எனக் கூறி, சூரியன் வெம்மையுடைத்து என்பது போலத் தமிழ் மொழியும் 'செம்மொழி' என்பது கவிஞரின் கருத்துறுதி. இதை மெய்ப்பிக்கும் வண்ணமாக இன்று தமிழ் செம்மொழியென நாடறிய அறிவிக்கப்பட்டுள்ளது. கவிஞர்கள் முன்னோக்கிப் பாயும் ஜீவநதி என்பது மீண்டும் உறுதிப்படுத்தப்படுகிறது.

தென்முனை திரும்புமா? என்ற கவிதையில்,

> **தாளம் தூக்கு குருவை கூத்து பிண்டி பிணையில்**
> **ஆடல் கொட்டென ஆழத் தமிழிசை**

என்ற இசைக்கருவிகளை பற்றியும்,

> **தேவாரம் தமிழ் திருவாசகம் தமிழ்**

என இசைப்பா பற்றியும் கூறித் தமிழ்ச் சமூகத்தின் பல்வளத்தைப் பகரும் கவிதை வரிகளைத் தந்துள்ளார்.

'ஒளிர் வாளைக் களத்திலே முறுக்கிக் களிறு கொல்வதும், யாதும் ஊரே! யாவரும் கேளிர்' எனத் தழுவிக் கொள்வதும் சங்கத் தமிழர்களின் வீரத்தையும் ஈரத்தையும் உணர்த்துவன. ஆயினும் இன்று இங்கு இந்நிலை தாழ்ந்து விட்டது என்றும், ஈழத்தமிழரிடம் இன்றும் இப்பண்பைக் கண்டு பாராட்டி 'வாழ்த்துப்பா' பாடுகிறார்.

> **. . . . . . . . . . . . . . துவண்டுவிடத்**
> **தமிழகத் தமிழனல்ல தம்பி தன்மானம்**
> **பொங்கத் தலைமை தரும் போர்ப்புலி!**
>
> **புறம் இங்கே பழம்ஏடு பற்றிலாத் தமிழர்வாழ்**
> **நிலமிந்தத் தமிழ்நாடு நிஜ வீரம் வன்னிக்காடே!**
> **(என் உயிரெழுத்துக்கள், ப. 54)**

தமிழ்நாட்டில் உள்ள தமிழரை 'விழித்திரு' (**என் உயிரெழுத்துக்கள்,** பக். 38-39) என்னும் தலைப்பில்,

> **இனமான மிழந்தவனே**
> **என்தமிழா நீயுறங்கு!**
> **கண்ணுறங்கு கண்ணுறங்கு**
> **தமிழா கண்ணுறங்கு**

என்று எதிர்ப் பொருளில் தமிழர்கள் விழிப்புறப் பாடுகிறார்.

### மதம்-சாதி

இந்தியச் சமூகத்தில் சாதியும் மதமும் ஒன்றை ஒன்று தழுவிப் பிரிக்க முடியாத உறவு நிலையில் உள்ளன. இரண்டிற்கும் உள்ள பொதுத்தன்மை, மாற்றத்தை ஒப்புக் கொள்ளாதது எனக் கூறலாம். கவிதை, ஆன்மாவின் உணர்ச்சியின் உருவம்; உணர்ச்சியோ விருப்பத்தின் தந்தை; விருப்பமோ நாளும் புதுமையை வேண்டுவது; எனவே கவிஞனின் குரல் சுதந்திரத்தின் குரலாக ஒலிக்கிறது. இத்தர்க்க விளைவாகவே மாற்றத்தை ஒப்புக்

கொள்ளாத அனைத்தையும் சண்ட மாருதமாக வீசித் தாக்கு கிறான். எனவே சாதிக்கும் மதத்துக்கும் விரோதியாய் மாறிவிடுகிறான். இவ்வகையில் தமிழ்நாகையின் கவிதை அமைந்துள்ளது. மதத்தைப் பற்றி,

> **பிறருக் குதவிவாழ் அதுவே பெரும்மதம்!**
> **மானுட இனத்தின்**
> **எதிரியை வீழ்த்து என்பதே நல்மதம்!**

எனப் பாராட்டுவதையும்,

> **தமிழர்க்கு**
> **இயற்கை மட்டுமே இருந்தது உண்மை**
> **மதங்கள் பின்னர் மனிதர் செய்தது!**
> **அடக்கிப் பிழைக்க ஆரியர் செய்தது!**
> **அடிவரு டிகளாம் திராவிடர் வளர்த்தது!**
>
> **(ஒரு தமிழனின் தவம், ப. 50)**

எனக் காரணமானோரைச் சாடுவதையும் உணரமுடிகிறது. 'நவகாளி 2002' என்னும் தலைப்பில், நேரு, காந்தி போன்ற தேசத்தலைவர்களின் கொள்கை கெட்டுப் போகும்படியான செயலென மதவெறியைக் கூறி இறுதியில்

> **இருபத்தி யொருநூறு ஆண்டிலவமானம்**
> **இந்தியர்க ளென்றாலே இன்னுங் கற்காலம்**
> **எரிபற்றி எரியட்டும் இழிமதஇன வெறிகள்**
> **இலையெனிலோ இறுதியிலே இந்தியாநா டழியும்!**
> **தறிகெட்ட வெறியனைத் தாக்கட்டும் சட்டம்**
> **தரங்கொன்றா ரெந்தமத மானால்தா னென்ன?**
>
> **(கானல் தேசம், ப. 121)**

என்று தரமற்றுப்போகும் மதத்தை அழியட்டும் என்ற தீர்வைத் தருகிறார். மேலும் மதம் என்ற பொருண்மையில் 'பௌத்தம்' (**கானல் தேசம்,** ப. 112), சீக்கியம், இசுலாம், கிறித்துவம் போன்றன பேசப்படுகின்றன. அனைத்திலும் மதம் மக்களுக்குப் பயனற்றுப் போகும்போது அத்தகைய மதங்கள் வேண்டாம் என்பதாகக் கவிதைகள் அமைந்துள்ளன. சாதிய ஏற்றத்தாழ்வுகளை,

> **சாதியத் திருடர்**
> **சந்திக்க வருகின்றார்**
> **வெளிச்சத்தில் வருவதற்கு**
> **வெட்கமில்லை இருட்டுக்கு (என் உயிரெழுத்துக்கள், ப. 125)**

என வெளிப்படுத்துகிறார். கல்வி கற்றவரெல்லாம் மேலோர் என்பது பொதுக் கணக்கு; கவிஞர் தரும் புதுக்கணக்கு,

படித்த பாவிகளும் இன்று
முதலாய்ப் பார்ப்பதிந்த முகவரியைத்தான்!
அரசியல்வாதி கட்சிகோ அல்வா!
சாதிச் சாக்கடை நீர்
இன்று
எல்லாக்குழாய்களிலும் (கானல் தேசம், ப. 116)

என்று கவிதை சாதியின் சமூகத் தன்மையைக் கூறி விடுகிறது. இதுபோன்று வெளிப்படும் கவிதைகள் சாதியின் பன்முக உயிர்த்தலை வெளிப்படுத்துகிறது.

## பிற பொருண்மைகள்

தமிழ் நாகையின் பார்வையில் அமைந்த சில பொருண்மைகள்: பக்தி,

இப்போதெல்லாம்
பக்கிரி
அடிக்கடி கோவிலுக்குப் போகிறான்!
பக்தியில்லை
பசி!
ஆகா என்னதானம் (கானல் தேசம், ப. 111)

'வாஸ்து' சாஸ்திரம்,

வாசல் கிழக்குப் பார்க்கணும்
சன்னல் தெற்குப் பார்க்கணும்
ஈசானிய மூலையில இருக்கணும் இரும்புப் பெட்டி?
என்றார் தலைவர்!
ஏன் சாமி
இது எதுவுமே இல்லாத நான் எங்கே பார்க்கணும்?
(கானல் தேசம், ப. 134)

அகிம்சை,

இடிக்கப்படும் போது
ஏதும் செய்ய இயலாமல்
பாரதனே நீ
பார்த்துக் கொண்டிருந்தால்
உனக்குப் பாராட்டு
ஆகா நீ அகிம்சை! (மேலது, ப. 122)

தலைவர்,

எதற்கும் லாயக்கில்லை என்றார் அப்பா
ஏன் சுமந்தேனோ என்றாள் அம்மா
மகன் மந்திரியானான்! (மேலது, ப. 119)

காதல்,

விழுந்தால் கவிஞன்
வென்றால் கணவன்
தோற்றால் ஞானி
துவக்கவே இல்லை யென்றால் விவேகி
தொடர்ந்தால்
ஆயுள் தண்டனைதான்! (ஒரு தமிழனின் தவம், ப. 110)

கொள்கைச் 'சாயம்'

காவிகள் இழுத்தன கருப்புகள் வெளுத்தன
காதியும் கதர்களும் காணாமல் போயின
தமிழன்
சிவப்பைத்தான்
இனி சிந்திக்க வேண்டும்! (கானல் தேசம், ப. 60)

கவிதை,

சொல்லாற் கவிதை கரப்பர் கவிஞர்
சுகமண மலரைச் சூடிய தென்றல்
நில்லா தடிக்கும் நெடுமழை அலைகடல்
எல்லாம் அசைவினி லெத்தனை கவிதை!
(என் உயிர்ரெழுத்துக்கள், ப. 18)

தைத்திங்கள்,

பொலிவான இளநாற்றைப் போலிருப்பாள் என்தை
புத்தரிசி அடுக்கல் போற
பொங்கிச் சிரிப்பாள் என்தை!
(ஒரு தமிழனின் தவம், ப. 69)

வடிவம் : துளிப்பா,

அயோத்தி!
கிடக்கட்டும் மகளிர் மசோதா
கிழவியைத் தூக்கி மனையில் வை
அயோத்தி! (மேலது, ப. 129)

குறள்,

சொந்தப் பெயருக்கும் வெந்தச் சோற்றுக்கும்
நிந்தை வாழ்வுனதை நிறுத்து(கானல் தேசம், ப. 60)

**தலைப்பிடல்**

கவிதை உணர்ச்சியால் படிப்பவரை ஈர்க்கும் தன்மை உடையது. அதுபோல் சில சொற்களும், தலைப்புகளும் கூட ஈர்க்கும் ஆற்றல் உடையன. தமிழ் நாகையின் கவிதை தலைப்புகளில் சில: ஏழைக்கு ஏசு (ப. 33), கோழைக்குப்

**பெரியார்** (ப. 34), **வருண செபம்** (ப. 129), **ஏன் பெண்ணே ஏன்** (ப. 147) - மொத்தத் தலைப்புகள் 50, என் உயிரெழுத்துக்கள். **தொகுதி சாரிகள்** (ப. 41), **கலங்கல்பட்டி** (ப. 61), **பசுமை வேடம்** (ப. 62), **பன்னாடை** (ப. 63) **லப் டப்** (ப. 116), **நரிவிளையாடல்** (ப. 124), **வெள்ளி வெட்கம்** (ப. 128), **திரும்பிப்பார்** (ப. 132), **கன்மலைக் காதல்** (ப. 157) - மொத்தத் தலைப்புகள் 35, ஒரு தமிழனின் தவம். **துன்பியல் துரத்து** (ப. 35), **நறுக்குகள்** (ப. 43), **தள்ளாட்டம்** (ப. 45), **தில்லிச் செவிடு** (ப. 52), **காத்திருக்கிறோம்** (ப. 64), **வரிக்கழுதை** (ப. 74), **சுட்டப் பெண் சுடாத பெண்** (ப. 128), **மரணத்தின் மரணம்** (ப. 140) - மொத்தத் தலைப்புகள் 98, கானல் தேசம்.

## உரிப்பொருள்

நாட்டு மக்கள் சுதந்திரமுடன் வாழ வேண்டும் என்பதும், சுதந்திரத்திற்கு எதிராக உள்ள அனைத்தையும் போக்க நினைப்பதும் தொகுப்புகளின் சாரம். இதில், தமிழை ஆட்சி மொழியாக்குவது; தமிழ்மொழியின் தனித்தன்மையைப் போற்றுவது; தமிழ்ச் சமூகத்தின் பண்பாட்டு விழுமியங்களைக் காப்பது, துன்பத்திற்கும் துயரத்திற்கும் வித்தெனச் சாதி மதங்களைக் கூறி, அதனுடைய செயல்பாட்டை நிறுத்துவது; வறுமை, அறியாமை போன்றவற்றை நீக்க வழி தேடுவது; அரசியல்வாதிகளின் ஊழலை, அதிகாரத்தைச் சொந்த நலனுக்குப் பயன்படுத்துவது போன்றவற்றைக் கண்டிப்பது; காலத்துக்கு ஏற்ற கொள்கை எது எனத் தேடுவது போன்றன கவிதைக்கான பொருண்மைகளாக அமைந்து கவிஞரின் உணர்வின் வழியே கவிதைகளாக உருவம் கொள்கின்றன.

## முடிவாக

* தமிழ் நாகையின் மூன்று தொகுப்புகளின் முதல் இரண்டில் இந்திய நாடு, தமிழ்த் தேசியம் என்பன பற்றிய கவிதைகள் நிறைந்துள்ளன.
* இப்பொருண்மைகள் அதிகமான கவிதைகளில் இடம் பெறுகின்றன. எனவே 'கூறியது கூறல்' வந்துவிடுகின்றது.
* மூன்றாவது தொகுப்பு கவித்துவம் நிறைந்த கவிதைகளையும் கவிஞரின் முதிர்ச்சியையும் காட்டுவன.
* மானுடம் ஏற்றத் தாழ்வுகளைக் களைந்து இன்பமுடன் வாழாதா? என்னும் ஏக்கமே கவிதை எழுதுவதற்குத் தூண்டுகோலாக இருந்திருக்கின்றது.

# மரியதெரசா

## கவிஞர் அறிமுகம்

மரியதெரசா காரைக்காலில் 22.6.1955இல் கிறித்தவக் குடும்பத்தில் பிறந்தார். தந்தை ரொபேர் சேழான். தாயார் பிளான் ஷேத் சேழான். இளங்கலை ஆங்கில இலக்கியமும் முதுகலை தமிழ் மற்றும் இந்தியும் (பாராங்கத், சாஹித்ய ரத்னா, ஷிக்ஷா விஷாரத், ப்ரசாரக்) கற்றவர். இவர் தற்சமயம் சென்னை ஆவடியில் உள்ள திண் ஊர்தி தொழிற்சாலையைச் சார்ந்த 'விஜயந்தா சீனியர் செகண்டரி பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றுகிறார். இவர் **கவியருவி விருது** (26.3.2000), **கவிமதி விருது** (18.12.2001), **தமிழருவி விருது** (28.12.2001), **செயல் மறவர் விருது** (27.4.2003), **கவிக்குயில் விருது** (4.1.2004) **அரிமா சங்கத்தின் நல்லாசிரியர் விருது** (25.2.2004), **மனித நேயப் படைப்பாளர்** (28.8.2004) போன்ற பல விருதுகளைப் பெற்றுள்ளார்.

சென்னை வானொலியில் இவர் படித்த கவிதைகள் பலமுறை ஒலிபரப்பப்பட்டுள்ளன. பொதிகை, ராஜ், தமிழன் ஆகிய தொலைக்காட்சி நிகழ்ச்சிகளிலும் பங்கேற்றுள்ளார். இவரது கவிதைகளை, **புதுக்கவிதைகளில் இயற்கைப் புனைவு** எனும் தலைப்பில், மாநிலக் கல்லூரி மாணவி உமா 2004இல் ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்கான ஆய்வேடாகச் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளித்துள்ளார். கவிஞர் மரியதெரசா பலவகையான இலக்கிய அமைப்புகளில் தொடர்ந்து பணியாற்றி வருகிறார். பிரபலமான பெண்கள் என்ற நூலில் (ப.106) இடம்பெற்றுள்ளார்.

## படைப்புகள்

இவர் பல கவிதை நூல்கள், ஒரு சிறுகதை நூல் என இதுவரை பத்துக்கு மேலான நூல்களை எழுதியுள்ளார். அவை:

1. நிழல் தேடும் மரங்கள் (98)
2. இரவு தழுவாத பூமி (2000)
3. புல்வெளிப் புன்னகை (02)

4. காகித மேடை (03)
5. கரையைத் தொடாத அலைகள் (03)
6. முதலோவியம் (03)
7. தொட்டுச் செல்லும் தென்றல் (03)
8. முகில் பாடும் பூபாளம் (03)
9. துளிப்பா தோப்பு (04)
10. முதுகில் நெளியும் மின்னல் (04 - சிறுகதை)
11. மலர மறுக்கும் மொட்டுகள்

## வெளிவரவுள்ள படைப்புகள்

இவர் பின்வரும் பதினான்கு நூல்களை வெளியிட உள்ளார். **அக்னி வளையல், வானம் உதறிய நட்சத்திரங்கள், சிறகு மறந்த பறவைகள், நிறம் கேட்கும் மேகங்கள், வளையாத வானவில், கார் காலக் கனவு, மழைவிடு தூது, திருக்குறள் புகழ், அகரவரிசை அழகு, அடுப்பங்கரைப் புல்லாங்குழல், ஹைகூ கவிதைகள், ஹைகூ அந்தாதி, கட்டுரைத் தொகுப்பு, சிறுகதைத் தொகுப்பு.**

சொல் ஒன்று செயல் வேறாக இருத்தல் கூடாது எனும் உணர்வுடைய இக்கவிஞர் தம் வாழ்வில் எதிர்கொண்ட பல சமூகத் தீயபழக்கங்களைக் கண்டித்து உள்ளார்; அனாதைக் குழந்தைகள், வறுமையால் கல்வியைத் தொடர முடியாதவர்கள் போன்றோருக்குத் தன்னாலான உதவிகளைச் செய்து வருகிறார் (நேர் காணல், 9.4.05). உயிர்களிடத்து அன்பும், இரக்கமும் காட்டுதல் வேண்டும் எனும் நோக்கில் வாழ்ந்து வரும் இக் கவிஞரின் கவிதைகளை அறிமுகம் செய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

## பொருண்மை

கைக்கிளைக் காதல், இல்வாழ்வில் அன்பில்லாமை, கடந்த காலத்து நினைவுகளில் இன்பம் துய்ப்பது, நிகழ்கால வாழ்க்கைத் துயரங்களால் கரைவது, எதிர்காலம் நலமாக இருக்க வேண்டுமென விரும்புவது, செல்வமற்ற பெண்ணுக்குத் திருமணம் நிகழாதது, திருமணம் பணத்தால் தீர்மானிக்கப்படுவது, சாதி மதம் ஒழியட்டும், சமதர்மம் நிலவட்டும் என்பது, உரியவை உரிய நேரத்தில் கிட்டாது காலம் தாழ்ந்து கிடைப்பது, இயற்கை சார்ந்த காட்சிகளை மனித மன உணர்வின்வழிச் சித்திரிப்பது, சமூக மேம்பாட்டிற்குக் கலைகள் பயன்பட வேண்டுமென்பது, அதற்காகப் பாடுபட்டவர்களைப் பாராட்டுவது, உயிர்களிடத்து

அன்பு காட்டுவது, சமூகத்திற்குத் தீங்கு விளைவிக்கும் பழக்க வழக்கங்கள் ஒழிய வேண்டுமென்பது போன்றவற்றைத் தமது கவிதைகளில் பாடுபொருளாக்கியுள்ளார். இவற்றுள் சில பொருண்மைகள் குறித்த கவிதைகளைக் காண்போம்.

**காதலிக்கு மடல் வரைந்த போது**
**இதயம் ஊற்றி எழுதினேன்**
**கவிதை வடித்த போது**
**என்னை ஊற்றி எழுதினேன்** ***(நி.தே.ம.ப. 27)***

எனக் கூறும் கவிதையில், கவிதை உருவாக்கத்திற்கு அடிப்படையாகத் தான் அமைந்ததைக் கூறுகிறார். மேலும் தரையில் இடப்படும் கோலம் அழிந்து விடும் என்பதால், காகிதத்தில் அழகாய் இடப்பட்ட கோலம் கவிதை என்கிறார்.

**கவிஞர்**

**பார்க்கும் பொருள்களெல்லாம்**
**பார்வைகள் வேறுபட்டு**
**நற்பா புனைபவன் கவிஞன்**
**தீதெனக் கொள்வதை – தன்**
**சீர்ரெழுத்தால் அழிக்க**
**முனைபவன் கவிஞன்**
**சொல்லிய சொல்லை**
**எண்ணியே**
**வாழத் துடிப்பவன்**
**கவிஞன்** ***(கா.மே. பக். 7–8)***

என்ற இக்கவிதையில் சாதிக் கொடுமையை, பெண்ணடிமையைக் களைந்து அறம் உரைப்பவன் கவிஞன் என்கிறார்.

**சமுதாயம்**

மதங்கள் மறக்கடிக்கப்பட்டு உருவாகும் ஏற்றத் தாழ்வுகளற்ற சமூகத்தில் வாழவிரும்புவதை,

**மதங்கள் மறந்தும்**
**மொழிகள் கலந்தும்**
**ஜாதிகள்**
**மடிந்தும்**
**உருவாகட்டும் புதிய சமுதாயம்.** ***( க.தொ.அ. 26)***

என்ற கவிதை காட்டுகிறது. பின்வரும் கனலை உதிர்க்கும் கொலை வாளினை எடடா எனும் கவிதையில் கவிதாயினியின் சீர்திருத்த உள்ளம் வெளிப்படுகிறது.

மனித இன மேம்பாடு
அழித்ததடா ஜாதியக் குறைபாடு
கண்டிட சமத்துவ கட்டுப்பாடு
கொலை வாளினை எடடா !
வரதட்சணையின் கொடுங்கோல் ஆட்சி
மாய்த்து சாய்த்திடும் பெண்மையின் மாட்சி
காத்திட பெண்ணின அரசாட்சி
கொலை வாளினை எடடா !
சமுதாயத்தின் நலங் கெடுக்கும்
ஊழல் பேய் நடமாட்டம்
சாதல்கண்டு பொங்கிட பொற்காலம்
கொலை வாளினை எடடா !
நாடெங்கும் இலஞ்சம் தலைவிரித்தாட
நேர்மை குலைந்து சமூகம் நடைபோட
இக் கொடு நிலை மாற்றிட
கொலை வாளினை எடடா !
சமயம் கற்பிக்கும் நற்பண்புகள்
மறந்து மதவெறி தூண்டுதல்கள்
மனிதம் சாய்க்கும் மடமைச் செயல்கள்
ஒழிக்க கொலை வாளினை எடடா!
கள்ளிப்பால் வரலாறு
தேசத்தை இருட்டடிக்கும் இருட்டாறு
பகுத்தறிவு ஒளி பெருகிட
கொலை வாளினை எடடா ! (க.தொ.அ. பக். 17-18)

பெண் சமத்துவம் பெற, இலஞ்சம் ஒழிய, மடமை ஒழிய, கள்ளிப்பால் வரலாறு ஒழிய, பகுத்தறிவு பெறக் கொலை வாளினை எடுத்தால்தான் முடியும் என்ற தம் ஆசையை, எண்ணத்தை இதில் தெளிவுபடுத்துகிறார்.

காதல்

நித்திரையில் வாழ்ந்திருந்தேன்
நிம்மதியைச் சேர்ந்திருந்தேன்
நித்தம் வந்துஉன்
அலைக்கரங்களால் எனைநீ
தொட்டுவிட்டுச் செல்கிறாய் – உனைத்
தொடர்ந்து
வரமுடியவில்லை நான் தீண்டிய சுகம் உனதானது
நீங்காத சோகம் எனதானது (நி.தே.ம. 18)

*காதல் காதல்*

*என்*
*இதயப் பம்பரம்*
*உன் காதல்*
*கயிற்றில்*
*சுற்றி*
*சுற்றி*
*சுழல்கிறது* *(கா.மே. 23)*

இயலாமை

*மலை துளைத்து*
*வழி அமைத்து*
*பயணம் மலரும்*
*உன் இதயம் நுழைந்து*
*காதல் வளர்க்க இயலாது*
*என் மனம் துவளும்* *(ம.ம. மொ. 59)*

ஆவல்

*சிறுகதையாய்*
*நம் காதலை முடித்து விடாதே*
*முழு நீள நாவலாய்*
*நம் காதல் வளரட்டும்* *(கா. மே. 13.)*

காதல் அன்பின் ஐந்திணை அளவிற்கு வளர்ந்து செல்லாமல், கைக்கிளை அளவில் நின்று விடுவதாக அமைந்த இக்கவிதைகளில் காதல் நிறைவேறாத போது ஏற்படும் துயரம், காதல் உணர்வு ஏற்படுத்தும் மன நெகிழ்வு போன்றன காட்டப்படுகின்றன.

## வாழ்க்கை

முதிர்கன்னி

செல்வமில்லாததால்
செல்வியாகவே
வாழ்க்கை *(ம.ம.மொ. 28)*

திருமணம்

விலைக்கு வாங்கியவள்
அடங்கிப் போகிறாள்
விலைக்கு
வாங்கப்பட்டவன்
ஆதிக்கம் செலுத்துகிறான் *(மேலது, 59).*

தாயின் பணிவிடை, பின் மனைவியின் பணிவிடை என அனுபவிக்கும் ஆண், மனைவி வேலைக்குச் செல்பவள் ஆயினும் வீட்டு வேலைகளைப் பகிர்ந்து கொள்ள வேண்டியதன் அவசியத்தை உணர முன் வருவதில்லை. ஆனால் தன் மகள் திருமணத்திற்குப் பின் கணவன் வீட்டில் பணிகள் பல செய்து துன்புறும் நிலை வரும்போது இவன் மனம் கலங்குகிறது. இவனுக்கு மனமாற்றம் வந்தால்தான் மகள் வாழ்வு இன்புறும். இதனைக் காட்டுவதாய்ச் சொல்லாட்சி சிறக்க, சிறுகதை அமைப்பில் அமைந்த நாளைய கரங்களில் நாயகனே எனும் கவிதையின் சில அடிகள் :

> கட்டிய கணவனுக்கும்
> மாமியார் நாத்திகளுக்கும்
> அல்லும் பகலும்
> சேவை புரிந்தே
> பெண்ணின் கண்களில் கண்ணீர்
> உன் கண்களில் செந்நீர்
> நீ நடத்திய ராஜாங்கம்
> அங்கே அராஜகமாய்த் தோன்றுகிறது
> உன் மகளின் மகிழ்ச்சி
> நாடுபவன் எனில்
> உன்னில்
> மாற்றம் வேண்டும்
> இன்றே இப்போதே வேண்டும் (நி.தே.ம. 26)

**அயல் நாட்டில் கணவன்**

> கால்கள் நடக்காது மகிழ் ஊர்திப் பயணம்
> நாள் நளினமாக நடை பயிலும்
> சேய்கள் எல்லாம் வளமாக வளரும்
> நாய்கள் கூட நாற்காலியில் அமரும்
> அயல்நாட்டில் கணவனின் வாசம்
> கயல்விழியில் கண்ணீரின் ஓட்டம்
> இயல்பான வாழ்வில் இமாலய மாற்றம்
> இவள் நெஞ்சமோ தலைவனிலாது சாகும் (கா.மே. 25)

> வீடு நிறையப் பொருள்
> பெட்டி நிறையப் பணம்
> அயல் நாட்டில் கணவன் (து.தோ. 26)

**ஒதுங்கல்**

> நேசிக்காமல்
> காலம்
> என்னை வெறுத்ததால்

வாசிக்காத
கவிதை
ஆனேன் (கா.மே. 23)

## இழப்பு

வசந்தம்
என் வீட்டு வாசலைத்
தேடி
வாய்ப்பை
வழங்கும் போது
என் மனம்
மூப்பை அடைந்து விடுகிறது (மேலது, 59)

பொருள் இல்லாக் காரணத்தால் இல்லற வாழ்வு அமையாது போதல், பெண்ணடிமையாதல், பெண்ணுக்குச் சம உரிமை தரும் மனப்பாங்கு ஆணுக்கு இன்மை, அனைத்தும் பெற்றும் அனுபவிக்க முடியாத பிரிவு நிலை, உரிய காலத்தில் உரியது கிட்டாமை போன்றன இக்கவிதைகளின் வழி வெளிப்படுத்தப் படுகின்றன.

## மனம்

### ஏக்கம்

தாய் தந்த சோறு – அது
தன் நிகரில்லா அமுது –
இன்று
தட்டில் இட்டாலும் சாதம்
எடுத்து உண்ண ஏது நேரம் (நி.தே.ம. 29)

### முரண்பாடு

என்னடி
சில நேரம்
கடலாய் ஆர்ப்பரிக்கின்றாய்
பல நேரம்
ஆகாயமாய் மௌனம் சாதிக்கிறாய் (மேலது, 42)

### உறங்காத கண்களுக்குத் தாலாட்டு

இரவோடு உனக்கென்ன பேச்சு
இது முழுநேர ஓய்வாச்சு
. . . . உன் படுக்கையின் பக்கத்தில்
பிரச்சினைக்குத் தலையணை எதற்கு (க.தொ.ஆ. 23)

எதிர்கால நம்பிக்கையில் மனத்தைச் செலுத்தாது கடந்த காலத்தில் நிம்மதியைத் தேடுவது, நிகழ்கால உணர்வுகளில் மகிழ்ச்சி, மௌனம் போன்றவற்றின் காரணங்களை அறிவதில் இடர்ப்படுவது, ஓய்வு நேரத்திலும் கவலைகளால் துன்புறுவது போன்ற மனத்தின் செயற்பாடுகள் காட்டப்படுகின்றன.

## சான்றோர்

வாழ்க்கையின் வழிகாட்டி திருவள்ளுவர்; தன்மானத்தை, விடுதலை உணர்வைச் சமூகச் சமத்துவத்தை, நேர்மையைப் பறைசாற்றியவர் பாரதியார். பெண்ணுரிமை, பெண்விடுதலை, பெண்கல்வி வேண்டுமெனப் பாரதிக்குப் பின் குரல் கொடுத்தவர் பாரதிதாசன். தனக்கென வாழாமல் பிறருக்கெனத் தொண்டு செய்து வாழ்ந்த நெஞ்சம் அன்னை தெரசா என்று சான்றோர்களின் பெருமைமிகு செயல்களைத் தன் கவிதைகளில் பலவாறாகப் போற்றுகிறார். பாரதியின் செயல் விளக்கம் பற்றிக் கூறும் போது,

**இவன்**
**சொல் பட்டறையில் தான்**
**வளைந்திருந்த**
**முதுகுகள்**
**நிமிர்த்தப்பட்டன** *(க.தொ.அ. 10)*

என்கிறார். மேலுமிவர்

**இவன்**
**பெண்உரிமைப்**
**போராட்டத்தின்**
**முதல் திறவு கோல்** *(மேலது)*

என்றும் கூறுகிறார். இது நிமர்ந்த நன்னடையும் நேர்கொண்ட பார்வையும், அஞ்சாத நெஞ்சமும், ஞானச் செருக்கும் உடைய புதுமைப் பெண்ணைக் காட்டிய பாரதியின் 'ஆணுக்குப் பெண் இளைப்பில்லை காண்' என்ற கும்மியடியைக் காதில் ஒலிக்கச் செய்கின்றது.

## இயற்கை

நிலா, சூரியன், வானம், மழை, நட்சத்திரம் போன்ற பொருண்மைகளின் அழகைப் பல்வேறு கோணங்களில் சொல் லோவியப் படுத்துகிறார். நிலவுக்கு அம்புலி எனும் சொல்லை அதிகமாகப் பயன்படுத்துகிறார். சான்றோரை இயற்கைச் சூழலோடு ஒப்பிடுகிறார். இவரின் எதிர்பார்ப்பையும்,

ஏக்கத்தையும் இயற்கையின்மீது ஏற்றிப் பாடுகிறார். தொட்டுச் செல்லும் தென்றல், புல்வெளிப் புன்னகை, முகில் பாடும் பூபாளம், முதலோவியம் ஆகியவை இயற்கையைப் பாடுபொருளாகக் கொண்டவை.

*மரம்*

**யானையின்**
**கால்கள்**
**மயிலின்**
**தோகை**
**விசால**
**மனதை**
**விளம்பரப்படுத்தும்**
**விரிவுரையாளன்** *(மு.ஓ. 40)*

**விழைவு**

**ஆகாயக் கனியைச்**
**சுவைக்க**
**விழைந்தேன்**
**மேகத் தோல்களை**
**உரிக்க இயலவில்லை** *(மு.ஓ. 40)*

எதிர்பார்ப்பு, இயலாமை போன்ற மனஉணர்வுகளை இயற்கையின் மீது ஏற்றிவைப்பதை இக்கவிதைகள் உணர்த்துகின்றன.

**துளிப்பா தோப்பு காட்டும் சில பொருண்மைகள்**

**சகோதரப் பாசம்**
**பெருக்கெடுக்கிறது**
**பாகப்பிரிவினை**
**நேரம்** *(ப. 14)*

**ஆயிரங்கள் செலவு செய்து**
**அடிமை வாழ்க்கை ஆரம்பம்**
**திருமணம்** *(ப. 21)*

**குற்றமும் இல்லை**
**கைதும் இல்லை**
**பெண் விடுதலை**
**ஏன்** *(ப. 41)*

**மாடிவீட்டுக் காரன்**
**பிச்சை எடுக்கிறான்**
**லஞ்சம்** *(ப. 36)*

வயல்களில்
பசுமை
உழைத்தவன் வாழ்வு வெறுமை (ப.37)

கரைபடாத
உடல்
சோரம் போன மனம் (ப. 26)

செல்வம் மனித உணர்வின் மேன்மைகளை அழிக்கும் கொடிய வடிவாய் மாறியதை, அதனுடைய பொருத்தமின்மையை இக்கவிதைகளின்வழிக் கவிஞர் தெளிவாக உணர்த்துகின்றார்.

## கவிதையாக்கத் திறன்

கவிஞர்கள் தான் வாழும் சமூகத்தின் ஆன்மாவாக உள்ளனர். காலத்தின் தேவைக்கு வடிவம் கொடுப்பதில் அவர்களின் பணி முழுமை பெறுகிறது. அவர்கள் கற்ற கல்வி, வாழ்ந்த வாழ்க்கை, எதிர்கால இலட்சியம் போன்றவையும், இவற்றில் இருக்கும் செம்மை, தெளிவு என்பவையும் கவிதை ஆக்கத்திற்குத் துணை செய்கின்றன. கவிஞரின் பிறப்பு கடற்கரைப் பகுதியான காரைக்காலாக அமைந்ததால் கடற்கரைச் சூழல், அங்கு நடக்கும் நிகழ்வுகள் போன்றவற்றோடு அவரின் உணர்வுகளைப் புலப்படுத்துகின்றார். **கரையைத் தொடாத அலைகள்** என்றே ஒரு நூல் பெயர் பெறுகின்றது.

கல்விப் புலமை என்பது சிந்தனையைப் பெறுவதற்கும், அதனைச் செம்மையாக்கிக் கொள்வதற்கும் துணை செய்வது. பாரதி, வள்ளுவர், அன்னை தெரசா போன்றோரைப் பற்றி இவர் எழுதிய கவிதைகள் இவரது கல்விப் புலமையை வெளிக்காட்டி நிற்கின்றன. நோக்கங்களையும் அதற்குரிய செயல்முறைகளையும் கூறுவது கலையின் பொதுத்தன்மை. அதுபோல் மரியதெரசாவும் சாதி மத பேதமற்ற புதிய சமுதாயம் உருவாக வேண்டு மென்கின்றார். அதற்காகக் கொலை வாளினை எடடா என்று பாரதிதாசனைப் போன்று உணர்த்தவும் செய்கிறார். படைப்பாளியின் கற்பனை படைப்பாக உருமாறுகிறது. இதற்கு, உவமை, உருவகம், குறியீடு போன்றன துணைசெய்கின்றன.

## உவமை

சிலப்பதிகாரத்தில் வரும் வழக்காடு பகுதியின் முக்கிய நிகழ்வான சிலம்பு உடைப்பு வானியல் காட்சியோடு ஒப்புமைப் படுத்தப்படுவதை,

கற்புக்கரசி
கண்ணகியின்
கரம் நின்று
உடைந்து சிதறிய
காற்சிலம்பும்
முத்துப் பரல்களும் (மு.பா.பூ. 16)

என்ற கவிதை காட்டுகிறது. இதில் காற்சிலம்பு நிலவுக்கும், முத்துப் பரல்கள் நட்சத்திரங்களுக்கும் உவமையாகின்றன. இதே நிலவுக்கு மணிமேகலையும், நட்சத்திரங்களுக்குக் கற்புடைப் பெண்டிரும் உவமைகளாவதை,

வெண்ணிற ஆடை உடுத்தி
பொற்புடைச் செல்வி
நற்துறவறம் பூண்டிட
கற்புடைப் பெண்டிர்
அற்புதம் கண்டிட
சூழ்ந்து நின்றனரோ (மு. ஓ. 52)

என்று கவிதையில் காட்டுகிறார். வைகறையில் நாய்க்குட்டி யாகவும், நண்பகலில் சிங்கமாகவும், அந்தி வேளையில் வெள்ளைப் பூனையாகவும் சூரியன் தோற்றமளிப்பதாகக் கூறுகிறார். அரிசிப் பணியாரம் ஒத்த சூரியன் என்று கூறும்போது வடிவத்தையும், வண்ணத்தையும் அடிப்படையாகக் கொண்ட உவமையை வழங்கியுள்ளார்.

திருக்குறளிலுள்ள அறவுரைகளுக்கு ஐப்பசி மழையையும், அன்னை தெரசாவிற்குப் பொதிகைத் தென்றலையும் உவமை களாக்குகிறார். சாதிக்கு அரக்கனையும், கையூட்டிற்கு நய வஞ்சக னையும், வரதட்சணைக்குச் சாக்கடையையும், வன்முறைக்குப் படம் எடுக்கும் பாம்பையும் உவமைகளாக்கியுள்ளார்.

**உருவகம்**

தப்பும் தவறுமாய்
கணக்குப் போட்டு
அழித்து
அழித்து
எழுதியதால்
இரவு கணக்கு வாத்தியார்
வருகை புரிந்து
நிலவு
முட்டை இட்டார்

இதில் இரவுக்குக் கணக்கு வாத்தியாரும், நிலவுக்கு முட்டையும் நகைச்சுவை உணர்வோடு உருவகப்படுத்தப் பட்டுள்ளன.

> **நிலவுப் பிள்ளையாருக்கு**
> **உடைத்த**
> **சிதறு தேங்காய்கள்** *(மு.ஒ. 66)*

என்ற கவிதையில் நிலவு பிள்ளையாராக உருவகப்படுத்தப் பட்டுள்ளது.

> **வெள்ளி நிலா**
> **கிணற்று நீரை**
> **வெளியே இறைத்து**
> **ஊற்றியது யாரு?** *(மு.ஒ. 27)*

என்ற கவிதையில் வெள்ளி நிலவைக் (வெள்ளிக்) கிணறு எனவும், நட்சத்திரங்களைக் கிணற்று நீர் வாரி இறைக்கப்பட்டதால் சிதறிக் கிடக்கும் (வெள்ளி) நீர்த்துளிகளாகவும் கவிஞர் உருவகப்படுத்தி யுள்ளார். கவிப்பேரரசு ஓர் வெண்ணிலவு எனும் கவிதையில் கவிப் பேரரசு அருமைநாதன் வெண்ணிலவாகவும், வெண்ணிலா ஒரு கவிப்பேரரசாகவும், இரு பொருள்பட உருவகப்படுத்தப்படு கின்றன (மு.ஒ. 35).

### குறியீடு

> **தமிழ்நாடு**
> **சோரம் போனது**
> **கண்ணகி சிலை மறைவு** *(து.தோ. 35)*

கற்பின் அடையாளமான கண்ணகிக்கு வைக்கப்பட்ட சிலை அகற்றப்பட்டதைத் தமிழ்நாட்டின் கற்பு போனதாகக் குறியீட்டுத் தன்மையில் கவிஞர் விளக்குகிறார்.

கவிதைக்குரிய பண்புகளில் ஓசை நயம் முக்கியமானது. இதுவே உரைநடையிலிருந்து கவிதையைப் பிரித்துக் காட்டுகிறது. எதுகை, மோனை, இரட்டைக் கிளவி என்பன பொருத்தமுற அமையும்போது ஓசைநயம் சிறப்புறுகிறது. உவமை, உருவகம், குறியீடு போன்றவற்றை மிகுதியாகக் கையாளுவது போன்றே இவற்றையும் தம் கவிதைகளில் பயன்படுத்தியிருக்கிறார்.

### சொல்லடுக்கு

> **பசும் புல்லிற்கு உண்டு பணிவு**
> **நெற்கதிருக்கு உண்டு குனிவு**

**வானவில்லுக்கு உண்டு வளைவு**
**பணிவிழந்த மனிதன் காண்பதோ சரிவு** (தொ.செ.தெ. 19)

இதே போல் குளிர், பளிர், தளிர், மிளிர் (36) எனத் தொடங்கும் அடிகளையுடைய கவிதையில் அடுக்குச் சொல்லும், எதுகையும் இடம்பெற்றுள்ளன.

### எதுகை - மோனை

சிற்றாடை, வற்றாத, பற்றாத, முற்றான, குற்றால, சற்றேனும், பற்றற்றே, உற்ற, முற்றம், சுற்றம், கற்றாழை, நற்றாய் எனத் தொடங்கும் அடிகளையுடைய அழைப்பு (மேலது. 34) எனும் கவிதை முழுமையிலும் எதுகையும், சிகப்பு, சிரிக்க, சிலவற்றை, சிதைத்து, சினந்து, சீறு, சிணுங்கி, சில நேரம், சிறிதும், சிரசில், சிந்தை (41) எனத் தொடங்கும் அடிகளையுடைய நெருப்பு என்ற கவிதை முழுமையிலும் மோனையும் இடம்பெற்றுள்ளன.

இச்சொல்லோவியங்கள் கவிஞர் தம் புலமை நலனையும், மரபு வழி நிற்கும் மாட்சியையும், கற்பனைத் திறத்தையும், புதுமை விளைக்கும் படைப்புத் திறனையும் வெளிப்படுத்துபவை; உணர்ச்சிகளையும், எண்ணங்களையும் சிறப்புற ஒப்பிடுபவை. விழுமிய எண்ணங்களைக் கொண்டவை; விழிப்புணர்வை வேண்டுபவை; இனிமையானவை; எளிமையானவை; பொருட் சிறப்பு நிறைந்தவை.

மேற்கூறிய சிறப்புகளை உடைய இவரது கவிதைகளில் சில தடுமாற்றங்களும், கவிநயக் குறைவும், கூறியது கூறலும் உள்ளதைக் காணமுடிகிறது. உணர்வுகளைச் சொல்லாக்கம் செய்யும்போது முழுமை பெறாது சில இடங்கள் முறிந்து விடுகின்றன. அல்லது பொருத்தமில்லாத சொற்களால் நிரப்பப்படுகின்றன. அத்துடன் சமூகத்தினரின் அல்லலுறும் உணர்வுகளைப் பெரும்பாலும் தவிர்த்து, தனக்குரிய தானறிந்த துயரங்களைக் கவிதையாக்க முயலுவதும் கவிதையின் சிறப்பைக் குறைக்கின்றன. இயற்கையை எவ்வித நோக்குமின்றி அழகுணர்ச்சிக்காகவே மிகுதியும் பயன்படுத்தியுள்ளார். சிக்கலுக்கான தீர்வுகள் சரிவரத் தரப்படவில்லை.

**துளிப்பா தோப்பு** எனும் நூலிலும், பிற தொகுப்பு களிலும் ஹைகூ எனப்படும் துளிப்பாக்களை நடைமுறை நிகழ்வுகளின் துல்லிய வெளிப்பாடாகச் சிறப்புறக் காட்டினாலும் சிறுசிறு துணுக்குகளைப் படித்த உணர்வு ஏற்படுகின்றதே அன்றி, கவிதையைப் படித்த நிறைவு ஏற்படவில்லை. இவற்றில் சிறு நிகழ்வு அல்லது ஒரு சிந்தனை விடுகதை அமைப்பிலுள்ளன.

தலைப்பின்றிக் கவிதையைப் படிப்பின் அவர் கவிதையில் தந்துள்ள பொருண்மையை அறிவது கடினம். இப்படிக் கவிதை விடுகதையாகவும், தலைப்பு விடையாகவும் அமைந்துள்ள பாங்கு கவிதைக்குரிய உணர்வு எழுச்சியை மட்டுப்படுத்துகின்றது.

காட்டு

ரோஜா
சின்னக் குழந்தை
கைகால்கள் முடக்கி
உறங்குகிறதோ (நி.தே.ம. 87)

இவற்றில் சமூக வளர்ச்சிக்கு இலக்கியப் பங்களிப்புச் செய்ய வேண்டுமென்ற கோட்பாடு இவரது கவிதைகளில் ஊடுருவிச் செல்கிறது. இருப்பினும் இடம்பெற்றுள்ள தனி மனித சோகம், சமுதாய அவலம், கற்பனையின் சிதறல்கள், இயற்கை போன்ற பொருண்மைகள் பலராலும் கவிதைச் சிறப்புடன் முன்பே கூறப்பட்டவை. புதுமையானதைக் கூறுவது என்பது எளிதன்று. மகாகவிகள் சில சிறப்புக்குரியதைப் படைத்து விட்டுச் செல்லும் ஆற்றலுடையவர்கள். அதினினும் உயர்வானவை தோன்ற மற்றோர் யுகமாற்றம் வரை சமூகம் காத்திருக்க வேண்டியிருக்கிறது.

பாரதி, பாரதிதாசன் போன்றோருடைய கவிதைகள் சிறப்புற்று விளங்குவதற்குக் காரணம் அன்றைக்கிருந்த சமூகம் நெருக்கடி மிக்கதாகவும், விடுதலை உணர்வு வேண்டுவதாகவும், வெள்ளையரை வெளியேற்றும் அவசியமுடையதாகவும் இருந்தது. அதற்கு மொழி, இன அடையாளங்களை மீட்டெடுக்கும் வரலாற்றுப் பணியினைச் செய்ய வேண்டிய தேவையும் இருந்தது.

இன்றும் சமூகம் சிக்கல் நிறைந்ததாகத்தான் உள்ளது. எனினும் சமூகம் முழுமைக்குமான தீதும் நன்றும் எதுவெனக் காட்டுவதில் தெளிவற்ற குழப்பநிலையே நிலவுகின்றது. சமூக நெருக்கடிகளிலிருந்து மெல்லமெல்ல விடுபடும்போது சமூகக் கூட்டுணர்வு மழுங்கி மறைகிறது. இத்தகைய சூழல்களில் உருவாகும் கவிதைகள் ஆற்றல் மிக்கதாக அமைவதில்லை.

இத்தகைய சூழ்நிலையிலும் சமூகத் துயரைக்களைய வேண்டுமென்ற முயற்சியில் கவிதை படைத்து வருபவர் கவிஞர் மரிய தெரசா. இனிவரும் இவரது படைப்புகள் சமூகத்தின் தேவையை நிறைவு அடையச் செய்ய முயலும் வகையில் அமையும் என எதிர்பார்க்கலாம்.

## முதன்மை நூல்கள்

1. **துளிப்பா தோப்பு**, புதுவசந்தம் பதிப்பகம், சென்னை, 2004.

2. **மலர மறுக்கும் மொட்டுகள்**, புதுவசந்தம் பதிப்பகம், சென்னை, 2005.

3. **முதலோவியம்**, திருமலா பதிப்பகம், சென்னை, 2003.

4. **புல்வெளிப் புன்னகை**, மணிமேகலைப் பிரசுரம், சென்னை, 2002.

5. **கரையைத் தொடாத அலைகள்**, ஐயப்பன் கணபதி அடுக்ககம், சென்னை, 2003.

6. **காகித மேடை**, மேலது.

7. **தொட்டுச் செல்லும் தென்றல்**, திருமலா பதிப்பகம், சென்னை, 2004.

8. **முகில் பாடும் பூபாளம்**, ஐயப்பன் கணபதி அடுக்ககம், சென்னை, 2003.

9. **நிழல் தேடும் மரங்கள்**, வில்லிவாக்கம், சென்னை, 1998.

# பாலு

## வாழ்வும் பணியும்

கவிஞருடைய இயற்பெயர் மோ. பாலகிருஷ்ணன். இவர் 13-08-1958 ஆம் ஆண்டு பிறந்தார். இவருடைய பெற்றோர் மோகன், மோகனா. இவர் கட்டடப் பொறியாளர் (D.C.E) பட்டயப் படிப்புப் படித்தவர். கவிஞர் ஆரம்பப் பள்ளியை நம்மாழ்வார் பேட்டை மாநகராட்சி உயர்நிலைப் பள்ளியில் பயின்றவர். படிக்கும் காலத்தில் தமிழ் இலக்கிய மன்றச் செயலராகவும், பள்ளி மாணவர் தலைவராகவும் இருந்துள்ளார். கவிஞர் 1975ஆம் ஆண்டுகளில் கண்ணதாசன், காசி ஆனந்தன் கவிதைகளைப் படிப்பதில் ஆர்வம் கொண்டிருந்தார். இவர்களுடைய கவிதைகளைப் படித்த பின்புதான் கவிதை எழுதும் ஆர்வம் ஏற்பட்டது என்கிறார். ஆரம்பக் காலத்தில் திராவிட இயக்கத்தின் ஈடுபாட்டின் காரணமாக 1982ஆம் ஆண்டு மே மாதம் மகேஸ்வரி என்பவருடன் திராவிடர் கழகத் தலைவர் கி. வீரமணி, துணைவேந்தர் நெ.து. சுந்தர வடிவேலு ஆகியோரது தலைமையில் சுயமரியாதைத் திருமணம் நடத்தி வைக்கப்பட்டது. பின்னர் ஹிப்னோ தெரபி என்னும் யோகக் கலையைக் கற்றதன் காரணமாக ஆன்மீகத்தில் ஈடுபாடு உடையவராக விளங்கி வருகிறார். இவருக்கு நான்கு பிள்ளைகள் உள்ளன. இவருடைய வாழ்க்கை வரலாறு 30.6.2005 அன்று நேர்காணலின்போது அறியப்பட்டது

கவிஞரின் **இந்தக் கணத்தில்**... என்ற கவிதைத் தொகுப்பு எழுபத்து மூன்று தலைப்புகளை உள்ளடக்கியதாக உள்ளது. இவற்றில் பெரும்பான்மையாகத் தன்னுணர்ச்சிப் பாடல்களே அமைந்துள்ளன. மற்றும் தாய்மை, காதல், இல்லறம், உழைப்பு, தமிழ் மொழி, அரசியல், ஆன்மீகம் போன்றவற்றையும் கவிதையாக்கியுள்ளார். கவிஞருடைய படைப்பின் நோக்கம் சமூகத்தை ஏதாவது ஒரு வகையில் மாற்ற வேண்டும் என்பது தான். கலைஞன் உயர்வானவன். மனிதனால் படைக்கப்படுவது தான் கலை. கலை ஒரு அங்குலமாவது சமூகத்தை உயர்த்த வேண்டும் என்கிறார். இவர் தற்பொழுது மனோவசியக் கலையைக் கற்றதன் காரணமாக நோயாளிகளுக்குச் சிகிச்சை அளித்து வருகிறார். இவற்றைச் சார்ந்த "வாழ்வும் தியானமும்" என்னும் தலைப்பில் நூலொன்று வெளியிட இருக்கின்றார்.

### சமூகச் சிந்தனை

மனிதன் சமூகத்தில் வாழ்கிறான். இச்சமூகத்தில் தினந்தோறும் பல்வேறு சிக்கல்கள் உருவாகிக் கொண்டே உள்ளன. அற்றைக் கண்டு பொறுக்க முடியாது உணர்வுகளை வெளிப்படுத்தும் கவிஞன் கவிதைகளை உருவாக்குகின்றான்.

### அரசியல்

இந்நாட்டில் 'அரசியல்' காலங் காலமாக நடைபெற்று வருகிறது. அவ்அரசியலை வழி நடத்திச் செல்பவர்களைப் பற்றிய கவிதைகளை அரசியல் கவிதைகள் எனலாம். 'பதவி' என்ற தலைப்பில் 'அரசியலுக்கு நேர்மையாகச் செல்லும் அரசியல் வாதிகள் பின்னாளில் நேர்மைக்கு மாறாக மாறுவதை,

**அரசியல் ராமன்கள்**<br>**ஆர்வத்தோடு**<br>**தேடி ஓடும்**<br>**ஒரு மாரீச மான்** (ப. 88)

என்று கூறுகின்றார். 'ஜனநாயகம்' என்ற தலைப்பில் இயற்கைக்கு முரணாக ஜனநாயகம் அமைந்து விட்டது என்பதைக் கீழ்வரும் கவிதையில் எழுதுகிறார்.

**ஏழைக் குழந்தைகளும்**<br>**நடுத்தர இளைஞர்களும்**<br>**தோற்க**<br>**பணக்கார கிழவர்களே**<br>**என்றும் 'ஜெயிக்கும்'**<br>**ஒரு ஒலிம்பிக்**<br>**மைதானம்** (ப. 88)

ஒலிம்பிக் மைதானத்தில் இளைஞர்களே வெற்றி பெறுவார்கள். ஆனால் நம் நாட்டு ஜனநாயகத்தில் இளைஞர்கள் ஓட்டுப் போட்டு வயதானவர்களை வெற்றி பெற வைக்கிறார்கள் என்று இயற்கைக்கு முரணமாக அமைந்துள்ளதைக் கூறுகின்றார். அந்நியன் சுதந்திரம் தருவதும், இந்திய அரசியல் தலைவர்கள் சுதந்திரத்தைப் பறிப்பதும் எவ்வளவு கொடுமை. இதனைப் பொறுக்காது கவிதையில்

**இந்திய**<br>**அரசியல் வாதிகளிடம்**<br>**மக்கள் அடிமைப்பட**<br>**வெள்ளையன்**

*'விடுதலை'*
*தந்த நாள்!* *(ப. 88)*

என எள்ளல் சுவையுடன் குறிப்பிடுள்ளார்.

## வரதட்சணை

திருமணம் நடைபெறுவதற்குப் பெண்வீட்டார் மாப்பிள்ளைக்கு வரதட்சணையாகப் பொன், பொருள் போன்றவை வழங்குவர். ஆனால் இவ்வழக்கும் இன்று சில சுயநலவாதிகளால் கட்டாயப்படுத்தப்படுகிறது. இதனால் இன்று பொருளாதார வசதியற்ற கன்னியர் முதிர்கன்னியராய்ப் பிறந்தகத்திலேயே துறவிகளாக வாழ்கின்ற அவலம் நேர்ந்துள்ளது. இதனைக் கவிஞர் கீழ்வருமாறு எழுதுகிறார்.

*கனவுத் தேரிலேறி*
*கற்பனை உலகில்*
*உல்லாச நினைவில்*
*பறக்கும் கன்னிகள் யாம்!*

*எமது வருடப் பூக்கள்*
*சூட யாருமின்றி*
*வாடி வாடி உதிரும்*
*எமது கனவு 'மணத்தில்'*

*காவியக் கணவர்களாக*
*...........................................*
*...........................................*
*தாராளமாக வருவார்கள்!*

*நிஜ வாழ்க்கையில்*
*எம்மை திருமணம் புரிய*
*'குள்ளமணிகள்' கூடக்*
*கூலி கேட்பார்கள்!* *(பக். 14)*

வரதட்சணையைக் கட்டாயப்படுத்திக் கேட்கும் போது பெண்கள் பிறந்த வீட்டு வறுமையும், புகுந்த வீட்டுக் கொடுமையும், நினைத்துத் தனக்கு யாரும் உதவி இல்லை என்பதை எண்ணி வருந்தித் தற்கொலை செய்து கொள்ள முயலுகின்றனர். அதனைக் கவிஞர் கீழ்வருமாறு கவிதையாக்கியுள்ளார்.

*பெண்ணாய் மண்ணில்*
*பிறந்தநாள் முதல்*
*மண்ணாய் பூமியில்*
*மறையும் நாள் வரை*

*தியாக மலராய்*
*வாழும் பெண்மையை*
*மெழுகுவர்த்தியை*
*வரதட்சணையால்*
*எரித்துக் கொல்ல*
*மிருகங்களுக்குதான்*
*மனம் உருகுதென்றால்*
*அதற்கு உடன்பட*
*மண்ணெண்ணை உனக்கு*
*மனம் வந்ததெப்படி? (ப. 90)*

உயர்திணையாகிய மனிதர்களுக்குக் கொல்ல மனம் வந்ததே என வருந்தி அஃறிணையாகிய உயிரற்ற மண்ணெண்ணையிடம் கவிஞர் தன் ஆதங்கத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

## மொழிப்பற்று

தமிழ் மொழி மேம்பாடு அடைய வேண்டும் என எண்ணுகின்ற கவிஞரின் கவிதை கவனத்துக்குரியதாக உள்ளது. பெற்றோர்களைக் குழந்தைகள் ஆங்கிலத்தில் அழைப்பதும், நீதி, நிர்வாகம், ஆராய்ச்சி மற்றும் மருத்துவம் ஆகியவை ஆங்கிலத்தில் பயிற்றுவிக்கப்பட்டு நடைமுறையிலும் கோலோச்சுகின்றமை கவிஞரால் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. தமிழின் நிலை இன்னும் திண்டாட்டம் தான் என்பதைக் கவிஞர்

*எந்தக் குழந்தையும்*
*தன் தாய் தந்தையை*
*"அம்மா" "அப்பா" என்று*
*அழைக்கும் போது*
*எனக்கு ஏனோ*
*அதுகளே*
*"மம்மி", "டாடி" என்று*
*கத்தும் போது*
*அந்த ஐரோப்பிய*
*ரயில் பெட்டிகளே*
*நினைவுக்கு வருகின்றன.*
*எப்போது வேண்டுமானாலும்*
*இறங்கிக் கொள்ள*
*கழன்று செல்ல! (பக். 26)*

ஆலமரம் தனது விழுதுகளால் நிலத்தைப் பற்றிக் கொண்டு தன் தாய் மரத்திற்கு வலுச்சேர்ப்பது போல் தமிழில் அம்மா அப்பா என்று அழைக்கும் குழந்தைகள் இருப்பதாகத் தெரிவித்துள்ளார்.

ஒவ்வொரு மனிதனும் பிறக்கும் போது இறப்பை எதிர் நோக்கி வாழ்கின்றான். தன் வாழ்நாளில் இச்சமூகத்திற்குப் பயன்தரும் வகையில் இருத்தலைக் கூறுதலாக உள்ள கவிதை வருமாறு:

*அழகிய காளான்*
*ஒன்று*
*ஆலமரத்தின் கீழ்*
*குற்றுயிராக*
*அறுபட்டுக்*
*கிடந்தது.*
*எனக்கோ கவலை*
*காளான் மீதல்ல*
*நம்மீது*
*இன்றோ*
*நாளையோ*
*நமக்கு மரணம்!*
*வளர்த்த நம்*
*சமூகத்திற்கு*
*பயனேதும்*
*தராமல்*
*வீண் கதை பேசி*
*உடலை வளர்க்கவே*
*உண்டு, உறங்கி*
*உண்டதை*
*கழிந்து . . . .*
*மீண்டும் உண்டு*
*உண்டதை . . . .*
*சே சே*
*நாமென்ன*
*தமிழுக்காகவும்*
*ஈனம் போக்கவும்*
*ஈழம் காக்கவும்*
*உரிமைப் போரில்*
*உயிர் விடப்*
*போகிறோமா?*
*வரலாற்றில்*
*அழிவின்றி*
*வாழப் போகிறோமா?*
*கௌரவமான நகரும்*
*காளான்கள் நாம்!*
*இன்றோ—*
*நாளையோ—*
*நமக்கு*
*மரணம்*

(பக். 99)

காளான்கள் முளைத்த சில நாட்களில் இறப்பை எய்தி விடுகின்றன. அதைப்போல மனிதருக்கு மரணம் என்பது எப்பொழுது வேண்டுமானாலும் வரலாம் என்பதை உணர்ந்த கவிஞர் வாழும் நாளில் தமிழுக்காவும், தமிழ்ச்சமூகத்திற்காகவும், ஈனத்தைப் போக்குவதற்காகவும், ஈழத்தைக் காப்பதற்காகவும் ஒன்றும் செய்யவில்லையே என்று கவிதையின் வாயிலாக வருந்திக் கூறியுள்ளார். இவற்றிற்கு ஏதாவது செய்ய வேண்டும் என்ற இவரின் பெருவிருப்பமும் இக்கவிதையில் வெளிப்பட்டுள்ளது.

## இறைத்தத்துவம்

மனிதனுக்கு இயற்கைச் சீற்றங்களால் அழிவு நேரும் போது நமக்கு அப்பாற்பட்டு ஒரு சக்தி நம்மை இயக்குவதாகக் கருதிய மனிதன் இறைவழிபாட்டை மேற்கொள்கிறான். இவற்றின் உண்மைநிலை அறிவதே தத்துவமாகும். இவ்வுலகத்தில் தோன்றி அனைத்துப் பொருட்களும் இறைவனால் படைக்கப்பட்டவை அவற்றை ஏற்கவோ மறுக்கவோ எனக்கென்ன உரிமை என்பதைக் கூறும் கவிதை கீழ்வருமாறு.

*அணுவில் இருந்து*
*அண்டம் வரைக்கும்*
*கட்டியாளும் சொந்தக்காரன்!*
*எல்லா நிலங்களும்*
*உனது பிரபஞ்சத்தின்*
*எல்லைக் கோட்டுக்குள்!*
*ஏற்கவோ மறுக்கவோ*
*எனக்கென்ன உரிமை?*
*உன்*
*சூத்திரக் கயிறுகளில்*
*உன் விருப்பப்படி ஆடு*
*சின்னஞ்சிறு பொம்மையாய்*
*நான்!* *(பக். 44)*

என்று இறைவனைச் சூத்திரதாரியாகவும், மனிதர்களைப் பொம்மைகளாகவும் சித்திரித்துள்ளார். **"அண்டத்திற்குள் பிண்டமும் பிண்டத்திற்குள் அண்டமும்"** உள்ளதைச் சைவ சமய மூலவரான திருமூலர் கூறுவார். ஆனால் இந்த நவீனக்கால ஆன்மீகக் கவிஞர் இறைவனை அறிய முடியவில்லையே என்று அல்லலுறுகிறார். இதனை,

*எந்தன் இறைவனே!*
*நானோ அறிவிலி,*
*நீ படைத்துத் தந்த பொருள்கள்*

*அதுவும்,*
*என் அருகில் இருக்கும் பொருள்கள்*
*பற்றியே எதும் அறியா*
*நிலையில் வாழ்பவன்!*
*இன்னும், உன்*
*அண்டசராசரம் முதலும் முடிவும்*
*கண்டபாடில்லை!*

*உன்னை எங்கே காண்பது*
*கண்டு எப்படி அறிவது?*
*அறியப்படுவது அறிபவனை விட*
*சிறியப்படுவது பிரபஞ்ச எல்லை*
*அறிய முயல்பவன் புள்ளியிலும் இல்லை? (பக். 59-60)*

கவிஞருடைய ஆன்மீக உணர்வு தேடுகின்ற நிலையிலேயே உள்ளதைக் கவிதையின் வாயிலாக உணர்த்துகிறார்.

**காதல்**

மனித இனம் எதிர் பாலினங்களாக அமைந்து ஒன்றில் ஒன்று ஈர்ப்பு எய்தி முழுமை அடைகிறது. இவ்விதமான ஈர்ப்பு நிகழ்வை அன்பு என்கிறோம். இக்கவிஞரும் காதலைப் பற்றிக் கீழ்வரும் கவிதையில் கூறுகின்றார்.

*நான்*
*எத்தனை மந்தம்*
*என்று*
*எனக்குத்தான் தெரியும்!*
*ஆனால் . . .*
*உன் விரசைப்பில்*
*விழிகளின் ஜாடையில்*
*ஆயிரம் விஷயங்கள்*
*உடனே புரிகின்றன! (பக். 30)*

கருத்தும், சிந்தனையும் மொழியால் விளக்கப்படுகின்றன. காதலோ சைகையால் விளக்கம் பெறுகிறது பேசுகிறது. காதலன் முதன் முதலில் காதலியைச் சந்திக்கும் போது கண்களால் காண்கின்றான். காதலியைக் கண்டுபிடித்து அடையாளம் கொடுத்த கண்களே பிற உறுப்புகளிலும் பெருமை பெற்றவை என்பதைக் கீழ்வரும் கவிதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

*எனது*
*ராஜாங்கத்தில்*
*இந்த கண்களுக்கு*
*மட்டும்*

*ரொம்பத்தான்*
*பெருமை!*
*காரணம்*
*அவர்கள்தான்*
*உன்னை*
*எனக்குக்*
*கண்டுபிடித்து*
*அறிமுகப்படுத்தினராம்* *(பக். 50)*

காத்திருத்தல் வேதனையானது. ஆனால் காதலில் அக் காத்திருத்தல் சுகமான வேதனையாகும். காதலிக்காகக் காத்திருக்கும் காதலன் நீண்ட நேரமாவதால் கோபத்துடன் இருக்கிறான். ஆனால் அவள் தூரத்தில் வருவதைக் கண்டவுடன் மனம் உருகுகிறான் என்பதைக் கீழ்வருமாறு:

*காத்திருத்தல்*
*வேதனை!*
*சுகமான வேதனை!*
*ஆனால் . . . .*
*ஒவ்வொரு முறையும்*
*இப்படியா?*
*இதோ . . . .*
*இன்று உன்னை*
*கடித்துக்குதற*
*காத்திருக்கிறேன்!*
*இதோ*
*நீ தூரத்தில் வருகிறாய்!*
*என் மார்புக் கூட்டில்!*
*நீ வருகின்ற வழியைப்*
*பார்த்துப் பார்த்து*
*சோர்வடைந்திருந்த கண்கள்*
*அன்பே!*
*இதோ சாந்தம் அடைந்து விட்டன!* *(பக். 70)*

காதல் அனைத்தையும் மாற்றும் மாயக்கத்தியைக் கொண்டது என்பது இக்கவிதையில் வெளிப்பட்டுள்ளது.

### உழைப்பு

மனிதர்களாகப் பிறந்தவர்கள் அனைவருமே உழைத்து வாழ்தல் வேண்டும். பிறர் உழைத்தவற்றில் உண்டு வாழ்தல் கூடாது. தாமே உழைத்து முன்னேற வேண்டும். இதுவே அகில உலகக் குரலாக என்றைக்கும் இருந்து வந்துள்ளது. இவ்விதமான

சிறப்புப் பெற்ற உழைப்பை இக்கவிஞர் கீழ்வருமாறு கவிதை யாத்துள்ளார்.

அன்று உன்
தந்தையின் உழைப்பே
இந்த நிலமும்
ஒவ்வொரு பொருளும்!
தந்தை இங்கே
வந்து சேர்கையில்
கொண்டு வந்தது
ஏதும் உண்டோ?
வெற்றுக்கைகள்
உழைப்பு, தைரியம்
முயற்சி இவைதான்!
உன்னைக் கேட்டால்
தொழிலைத்துவங்க
பணத்தைக் கேட்பாய்
பொருளைக் கேட்பாய் (பக். 24)

முதலில் உந்தன்
உழைப்பைத் துவங்கு
அடுத்தவள் இடத்தில்!
உந்தன் முயற்சி
மேலும் தொடர்க!

உழைப்புதான் முன்னேற்றத்திற்கு அடிப்படை என்பதை இக் கவிதை கூறுகிறது. ஓர் இளைஞன் தொழிலைத் தொடங்குவதற்கு விடாமுயற்சி இருந்தால் அவனுடைய வெற்றி நிச்சயமாகும் என்பதை,

தொழிலைத் துவங்க
பணத்தைக் கேட்பாய்
பொருளைக் கேட்பாய்
முதலில் உந்தன்
உழைப்பைத் துவங்கு (பக். 24)

தொழிலைத் தொடங்குவதற்கு மூலதனம் உழைப்பே என்பதை வலியுறுத்துகின்றார்.

## வாழ்க்கை

ஒரு செல் உயிரினம் பரிணாம வளர்ச்சியில் மனிதனாக மாற்றம் பெற்றுள்ளது. மனித வாழ்க்கை அவனுக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத நாகரிகத்தை, பண்பாட்டைப் படைத்துக் கொடுத்துள்ளது. இத்தகு வாழ்க்கையைப் பற்றி இக்கவிஞர்

ஒரு நீள்வட்டப் பாதையில்
தொடர்ந்த வண்ணம்
இந்த இரயில் பயணம்!
திடீரென்று ஒரு நாள்
இந்தப் பெட்டிக்குள்
தன்னுணர்வின்றி
ஏற்றப்பட்டேன் . . .
சில நாட்களுக்குள்
ஏற்கனவே,
இரயிலில் இருப்பவர்கள்
நன்றாக பரிச்சயம்
ஆகும் நேரத்தில்,
அவர்களிடம் சொல்லிக் கொண்டு
விடை பெறக் கூட
நேரமில்லாமல்
நான் இடையிலேயே
திடீரென்று பலவந்தமாய்
இறக்கப்பட்டு
விடைபெறுகிறேன்!

கையில் அள்ளிய நீர் விரல் இடுக்கில் வழிந்து ஓடுவது போல் மனித வாழ்க்கை மனிதனிடம் நழுவி விடுவதாக உணர்ந்து பலரும் கூறும் இரயில் பயணத் தத்துவத்தைக் கவிதையாக்கியுள்ளார். மனித பந்தத்தில் மிகவும் நெருக்கமாக இருப்பது தாய் பிள்ளை உறவாகும். பெண்களைப் பலவாறு பழித்துப் பாடிய பட்டினத்தாரும் தன் பாடலில்

வட்டிலிலுந் தொட்டிலிலு மார்மேலுந் தோண்மேலும்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து - முட்டச்
சிறகிலிட்டுக் காப்பாற்றுச் சீராட்டுந் தாய்க்கோ
விறகிலிட்டுத் தீ மூட்டுவேன்

இவரைப் போலத் தன் தாயின் மரணத்தைத் தாங்காது அரற்றிய கையறு சோகம் இலக்கியத்தில் அமரநிலை எய்தியுள்ளது. இக்கவிஞரும் தாய்க்கும் சேய்க்குமான உறவை மிக உயர்வான நிலையில் வைத்து எண்ணுகிறார். அக் கவிதை கீழே தரப்படுகிறது.

ஈரைந்து மாதங்கள் சுமந்து
கருப் பிள்ளைக்கு ஏற்றதை
மட்டுமே உண்டு
நாளும் பலப்பல கனவுகள் கண்டு
மரணத்தை யாசித்து ஈன்றவர் அன்றோ?

இவ்வாறு துயருற்று ஈன்ற பொழுதிலும் சான்றோன் எனப் போற்றப்படும் போது ஒரு தாய் மிகுந்த மகிழ்ச்சி அடைவாள். இதனை,

> **எந்தன் ஒவ்வொரு அணுவின் வளர்ச்சியும்**
> **கண்டு பரவசம் அடைகிறாய் அறிவேன்** *(ப.19)*

எனக் கூறுகின்றார்.

கவிஞர் சமகாலச் சமூக வாழ்வில் மனிதனுக்கு ஏற்படும் துன்பங்களை, துயரங்களை, விருப்பங்களை, இலட்சிய நோக்கங்களைத் தன்னளவில் வெளிப்படுத்தியுள்ளார். அடையாளம் கடந்த ஆன்மீகம், நாடுகள் கடந்த மனிதநேயம் என்பதைக் கவிதை யாக்கத்தின் அடிப்படைக் கண்ணோட்டமாகக் கொண்டு கவிதை படைத்துள்ளார். சமூக முன்னேற்றத்தில் கவிதைக்குப் பங்குண்டு என்பது இவர் கவிதை வழி வெளிப்பட்டுள்ளது.

## முதன்மை நூல்

**இந்தக் கணத்தில்,** கவிஞர் பாலு, மணிமேகலைப் பிரசுரம், 4, தணிகாசலம் சாலை, தியாகராய நகர், சென்னை - 17, முதற் பதிப்பு - 1997

# பைம்பொழில் மீரான்

புதிய தீக்குச்சிகள் என்ற கவிதைத் தொகுப்பை எழுதி வெளியிட்டுள்ள 'பைம்பொழில் மீரான் என்பவரை அறிமுகப் படுத்துவதும் அவருடைய கவிதைகளைத் திறனாய்வு செய்வதும் கட்டுரையின் களமாக அமைகின்றன.

## கவிஞரைப் பற்றி - நூல்வழி அறிந்தவை

**பைம்பொழில்** என்ற ஊர் மேற்குத் தொடர்ச்சி மலையின் பச்சைச் சேலை முந்தானையில் முடிந்துவைத்த வெள்ளிக் காசாகவும் தமிழக - கேரள இடைப்பகுதியில் இருக்கும் அரைப்புள்ளியாகவும், தமிழகத்தின் கடைக்கோடி கிராமங்களின் கடைசிக் கிராமமாகவும், அருவிகள் இல்லாத அழகு குற்றாலமாகவும், உயரம் குறைந்த ஊட்டியாகவும், ஏழைகள் வாழும் ஏற்காடாகவும் திகழ்வதாகும். காலத்தூரிகை கலைத்துப் போட்டதால் **பைம்பொழில்** என்ற அழகு தமிழ்ப் பெயர் இன்று **பம்புளி**யாகச் சிதைந்து வழங்கி வருகின்றது. இந்த ஊரில் பெரியார் என்ற **காதர் மைதீனுக்கும் புதூராள் பீவிக்கும்** மகனாகப் பிறந்தவர் மீரான். இவரின் தந்தை இயற்கையாகவே கொடுமைகளைக் கண்டு கோபம் கொள்ளுகிற, சிறந்த சித்தாந்தங்களைத் தன்னுள்ளே அடக்கி வைத்திருந்த ஒரு நல்ல மனிதராவார். தந்தையின் சிந்தனைகள் மகனை ஒரு நல்ல மனிதனாக்கின. ஆனால் தந்தையைச் சிறைப்பறவையாக்கியது. அதனால் குடும்பத் தலைவர் நாற்காலியில் எப்போதும் வறுமையே உட்கார்ந்திருந்தது. பள்ளிப் படிப்பே பாதியில் நின்று விடுமோ என்று அஞ்சிய நிலையில் கல்லூரிப் படிப்பு கனவாகவே ஆகிப்போனது. கவிஞர் தன் தந்தையாரால் 1985ஆம் ஆண்டு ஏப்ரல் 20ஆம் தேதி கையில் 60 ரூபாயுடன்,

> **பொய் சொல்லாதே, திருடாதே, பிச்சை எடுக்காதே, ஏமாற்றிப் பிழைக்காதே, எங்களுக்குப் பணம் எதுவும் அனுப்ப வேண்டாம். ஆனால் எங்கே இருந்தாலும் நன்றாக இருக்கிறேன் என்று கடிதம் மட்டும் போடு**

என்ற அறிவுரைகளுடன், '**இந்தியாவின் எந்த மூலைக்குச் சென்றாவது பிழைத்துக் கொள்**' என்ற ஆசியுரையுடன்

அனுப்பி வைக்கப்பட்டவராவார். இருளிலேயே நடந்து வந்தவருக்கு மதுரை தினகரன் அலுவலகத்தில் ஒரு வெளிச்சம் கிடைத்தது. வெளியிடப்படாத சிறுகதையைத் திரும்பப் பெறுவதற்காகத் தினகரன் அலுவலகம் சென்றவருக்குத் திருப்புமுனை என்ற தலைப்பிலான அந்தச் சிறுகதை திரும்பக் கிடைக்கவில்லை. ஆனால், அவர் வாழ்வில் ஒரு திருப்புமுனை ஏற்பட்டது. அலுவலகத்திலிருந்த அய்யா ஆதித்தனாரின் மகள் சரசுவதியை மணந்த மருகரும் தினகரன் இதழின் நிர்வாக இயக்குநருமான பேராசிரியர் **கே.பி. கந்தசாமி** அவர்கள்[1] கவிஞர் மீரானைத் தன் சொந்த ஊரான தண்டுபத்தில் வந்து சந்திக்குமாறு கூறி அவ்வெள்ளை வேங்கை புறப்பட்டுச் சென்றது. தண்டுபத்து மண்ணிலிருந்து மீரான் தகுதியான இடத்துக்கு அனுப்பி வைக்கப் பட்டார். அந்த இடம் திருச்சி தினகரன் அலுவலகம். திருச்சியில் அவருக்குத் தினகரன் அலுவலகத்தில் வாழ்வும் கிடைத்தது; வாழ்க்கைத் துணையும் கிடைத்தது.

### கவிஞரைப் பற்றி – நேர்காணல்வழி அறிந்தவை

4-9-2004 சனிக்கிழமை 11 மணி அளவில் சென்னை தினகரன் அலுவலகத்தில் கவிஞரை நேரில் சந்தித்ததன் மூலம் அவரைப்பற்றிய செய்திகளை அறிந்து கொள்ள முடிந்தது. அவை: மெய்ப்புத் திருத்தப் பணியாளராகத் தொடங்கிய கவிஞரின் வாழ்வு இன்று 'தமிழ் முரசு' இதழின் ஆசிரியர், கரன் தொலைக்காட்சியின் நிகழ்ச்சி அதிகாரி, திரைப்படம் தொடர்பான நிகழ்ச்சிகளின் அமைப்பாளர் என விரிந்துள்ளது. 23 ஆண்டுக் கால இதழியல் அனுபவம் உள்ளது. **புதிய தீக்குச்சிகள்** கவிதைத் தொகுப்பினை அடுத்து, இதுவரை 56 கவிதைகள் **தினகரன், தேவி, தமிழ் முரசு, மாலை முரசு, சாவி** போன்ற இதழ்களில் வெளிவந்துள்ளன. இவற்றைத் தொகுப்பாக வெளியிடும் எண்ணம் உள்ளது. இவரது கவிதைகளின் மையக்கருவாகச் சமுதாயச் சிக்கல்கள் அமைகின்றன. இவரால் எழுதப்பட்ட 80-க்கும் மேற்பட்ட சிறுகதைகள் தினகரன் மற்றும் பல இதழ்களில் வெளியாகியுள்ளன. பொருளாதாரம் மற்றும் பதிப்பகம் தொடர்பான சிக்கல்களால் இவற்றை நூலாக வெளியிடுவதில் தாமதம் ஏற்பட்டுள்ளது.

1000 ஆண்டுக்கால வரலாற்றை உள்ளடக்கிய திருச்சி மாநகரம் குறித்த, **நடந்தாய் வாழி திருச்சிராப்பள்ளி**[2] என்ற வரலாற்று நூலின் ஆசிரியர்களுள் ஒருவராகக் கவிஞர் திகழ்கிறார். இந்நூலுக்கு 2002இல் வெளியான சிறந்த வரலாற்று நூலுக்கான தங்கப்பதக்கம் கிடைத்துள்ளதை மகிழ்வுடன்

தெரிவிக்கிறார். இந்நூலுக்குத் திருச்சி மாவட்ட நலக்குழு மூலம் அளிக்கப்பட்ட ரூபாய் ஐயாயிரம் திருச்சி மாவட்ட ஆணையரால் வழங்கப்பட்டுக் கௌரவிக்கப்பட்டது.

மீரான் **தலைநிமிர்ந்த தமிழச்சிகள்** என்ற நூலை வெளியிடுவதற்கான தரவுகளைத் திரட்டிக் கொண்டிருக்கிறார். சங்க கால ஔவை முதல் 21ஆம் நூற்றாண்டு வரையிலான துறை சார்ந்த சாதனைப் பெண்மணிகளின் வாழ்வியல் சாதனைகளை வெளிப்படுத்துவதாக இந்நூல் அமையும். முதல் தொகுதி 21ஆம் நூற்றாண்டுப் பெண்களான **மனோரமா, எம்.எஸ்.சுப்புலட்சுமி** வரையிலான 100 பெண்களின் சாதனைகளை உள்ளடக்கியதாக அமையும். புகைப்படங்களுடன் இந்நூல் வெளிவரத்தக்கதான ஏற்பாடுகளைச் செய்து வருகிறார். திரைப்படத்தில் பெண்கள் என்ற ஒரு நூலை வெளியிடும் முயற்சியையும் செய்து வருகிறார். தரவுகளைத் தொகுக்கும் பணி நடைபெறுகிறது.

கவிஞர் இஸ்லாமிய மதக்கோட்பாடுகளை வலியுறுத்திக் கூறித் தன் வருங்காலச் சந்ததியினரை வளர்க்கவில்லை. தன் மகளுக்கும், மகனுக்கும் மதிவதனி, கதிரவன் என்று இவர் சூட்டியுள்ள பெயர்களே அதற்குச் சாட்சி.

**புதிய தீக்குச்சிகள் – கவிதை நூல் அறிமுகம்**

**தினகரன்** நாளிதழில் அவ்வப்போது வெளிவந்த கவிதைகள் தொகுக்கப்பட்டுத் திருச்சி கதிர்மதி பதிப்பகத்தில் ஜூன் 1998இல் நூலாக வெளியிடப்பட்டுள்ளது. கவிஞரே சிறந்த புகைப்படக் கலைஞர் என்பதால் அட்டைப் படம் அவரின் கைவண்ணத்தில் மிளிர்கிறது. தினகரன் சென்னைக் கிளையின் நிருவாக இயக்குநர் க. குமரன் ஆசியுரையும் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனகர்த்தர் பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அணிந்துரையும் அளித்துள்ளனர். அணிந்துரை அளித்துள்ள பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள் இக்கவிதை நூலின் முதல் திறனாய்வாளராக அமைந்து கவிதைகள் பற்றிக் குறிப்பிடும் கருத்துகளாவன: பைம்பொழில் மீரானின் கவிதைகள் வாழ்வின் எதார்த்த உண்மைகளைத் தாங்கி வரும் எழுத்து ஓவியங்கள். காலங் காலமாய் ஒடுங்கிப்போன மானுடத்தின் மனிதநேய உரிமைக் குரல். இவை தலைவர்களைத் தழுவிக்காய்ந்து உதிர்ந்த மலர்த் துகள்கள் அல்ல. முள்ளின் மேல் அமர்ந்து கொண்டும், கொட்டும் குருதியில் குளித்துக் கொண்டும், முனகல் ஒலி இன்றியும் மூச்சின் ஒலி மிகுந்து ஒலிக்க அஞ்சியும் உயிர்ப்பிணமாய் வாழும் ஏழைகளின் அவலத்தை அடையாளம் காட்டுபவையாகும்.

அடையாளம் காட்டுவதோடு மட்டுமல்லாமல், அவர்களின் பிரச்சினைகளின் ஆணிவேரை அகற்றும் ஆலோசனைகளுமாகும்.

இந்நூல் 128 பக்கங்களில் 37 கவிதைகளை உள்ளடக்கியதாக உள்ளது. நூல், பெற்றெடுத்த தாய்க்கும், பேணிக்காத்த தந்தைக்கும், வாய்ப்பளித்து வளர்த்த கே.பி. கந்தசாமி அய்யாவுக்கும் சமர்ப்பணம் செய்யப்பட்டுள்ளது.

## கவிதைத் திறனாய்வு

சமூகச் சிந்தனையற்ற ஒருவர் கவிஞராக இருக்க இயலாது. அவர் வடிப்பதும் கவிதையாக இருக்காது. சமூக அக்கறையில்லாத கவிதைகள் காலச் சக்கரச் சுழற்சியில் காணாமல் போய்விடும். **சமுதாயப் பிரச்சினைகளே என் கவிதைகளின் மையக்கரு** எனப் பைம்பொழில் மீரான் அவர்கள் தெரிவித்ததற்கு ஏற்ப, இக்கவிதைத் தொகுதியிலுள்ள அனைத்துக் கவிதைகளுமே சமூகச் சிந்தனையுடன் எழுதப்பட்டவையாகவே உள்ளன. சமூக நிகழ்வுகளை உள்ளடக்கியதாகவே எல்லாக் கவிதைகளும் இருப்பினும், வகைப்பாட்டு வரிசைக்கு ஏற்ப இவர் கவிதைகளை ஆறு வகைப் பொருண்மைக்குள் அடக்க இயலும். அவை :

| | |
|---|---|
| 1. சமூகச்சிந்தனையுடைய கவிதைகள் | 22 |
| 2. குறிப்பிட்டோரின் மரணத்தின்போது பாடப்பட்டவை | 4 |
| 3. தன்னனுபவம் அல்லது தன்னுணர்ச்சிப் பாடல்கள் | 5 |
| 4. காதல் தொடர்பானவை | 3 |
| 5. இயற்கை பற்றியவை | 2 |
| 6. பெண்ணிய விழிப்புக் கவிதை | 1 |
| ஆக மொத்தம் | 37 |

## சமூகச் சிந்தனைக் கவிதைகள்

இவ்வகையுள் அடக்கப்பெறத்தக்க 22 கவிதைகளையும்[3] ஆய்வு செய்வது இக்கட்டுரையில் இயலாது என்பதால் ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சில பருக்கைகளைப் பதம் பார்ப்பது போலச் சில கவிதைகளின் சில பகுதிகள் மட்டும் எடுத்து விளக்கப்படுகின்றன.

முரண்பாடுகளையே உடன்பாடுகளாகக் கொண்டு வாழ் பவர்கள் பற்றியும் பிச்சைக்காரர்கள் பற்றியும், மனச்சோர்வால் மரணத்தைத் தழுவும் இளைஞர்கள் மற்றும் காதலுக்கும் காமத்துக்கும் வேறுபாடு தெரியாமல் கலங்கும் காளையர்கள் குறித்தும், குழந்தைத் தொழிலாளர்கள், தெருவோரச் சிறுவர்கள், அரசியல்வாதிகள் மற்றும் தீண்டாமை, நகர வாழ்கையின் நரகத்

தன்மை, சுற்றுப்புறச் சூழல் கேடு, இயற்கையழிப்பு, சாதி, சமயப் பிணக்கு, விடுதலைக் கொண்டாட்டங்கள், தேர்தல் தினங்கள், அறிவியல் சாதனங்களான தொலைக்காட்சி, கணினி, வறுமை, பசி என்ற பலவும் சமூகச்சிந்தனைக் கவிதைகளின் பாடுபொருள்களாக ஆகியிருக்கின்றன.

முரண்பாடுகளையே உடன்பாடுகளாகக் கொண்டு வாழும் வாழ்க்கை எள்ளி நகையாடப்பட்டுள்ளது. கற்பு பற்றிக் கவர்ச்சி நடிகைகளிடம் கருத்துக் கணிப்பு நடத்துவதையும் காவிக்குள் காலிகள், கதருக்குள் கள்வர்கள் இருப்பதையும் எடுத்துரைக்கிறார்.

*காவல் நிலையங்கள்*
*கற்பழிப்புக் கூடங்கள்*
*காக்கி உடைக்குள்*

*காமுகர்கள்*
*பத்து ரூபாய் வரி*
*கட்டச் சொல்லிப்*
*பாடம் நடத்தும்*
*சினிமா நடிகருக்கு*
*பாக்கிவரி பலகோடி*

*முரண் பாடுகளே – இங்கு*
*உடன் பாடுகள்* (பக்கம் 26–27)

என்றிருக்கின்ற சமூக நிலை எள்ளல் சுவையுடன் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. இன்றைய இளைஞர்கள் கல்வி கற்கச் செல்லும் கல்லூரியும், வேலை வேண்டிப் பதிவு செய்யச் செல்லும் வேலை வாய்ப்பகமும்கூடச் செல்லத்தகாத இடங்களாக ஆகிவிட்டதைக் கீழ்க்காணுமாறு சுட்டிக் காட்டுகிறார்.

**ஓ. . . இளைஞனே!**
**எங்கே போகிறாய்?**
**கல்லூரி வாசலுக்கா**
**அங்கே வாழ்க்கையைப்**
**போதிப்பதை விட**
**வார்த்தைகளே அதிகம்**
**போதிக்கப்படுகிறது.**

**சம்பள சாதிகளைச்**
**சப்தமில்லாமல் விற்கும்**
**சந்தை அது.**
**அங்கே மனிதர்கள் தொலைந்துபோய்**
**மாமாங்கமாச்சு. . .**

உன்னை
அய்ந்து வருடம்
அடைத்து வைத்து
புத்தக அடிமையாக்கி
விடுதலை யாகும்போது
காகிதக் கட்டுகளைக்
கையில் கொடுத்து
அகன்ற அகிலத்தின்
நிரந்தர அடிமையாக்கி
அனுப்பி வைப்பார்கள்.

ஓ இளைஞனே! எங்கே போகிறாய்?
வேலைவாய்ப்பு அலுவலகத்துக்கா?
அது ஒருவழிப் பாதை
பதிவு செய்ய மட்டுமே முடியும்
பணியில்சேர முடியாது
பிறக்கும் போதே . . . .
பதிவு செய்திருந்தால்
இறந்த பிறகு
வெட்டியான் வேலைக்கு
அழைப்பு வரும் *(பக். 43-44)*

வாழ்வின் நெருக்கடிகளை எதிர்கொள்ள இயலாமல் தற்கொலை செய்துகொள்ள எண்ணும் இளைஞர்கள் அதற்குக்கூடத் தகுதியற்றவர்களாக உள்ளதை எடுத்துக் காட்டுகிறார்.

ஈன்ற தாய்க்கு
இயன்றதைச் செய்தவன்
வளர்த்த தந்தைக்கு
வலிந்து உதவியவன்
ஒரு நாளாவது
பிறருக்காக வாழ்ந்தவன்
தன் உழைப்பால்
ஒரு வேளையாவது
தானே உண்டவன்
ஒரு தவறுக்காகவாவது
தானே வருந்தியவன்
தான் பூத்த பூமியில்
ஒரு பூவையாவது
பூக்க வைத்தவன்
இத்தனை நாள்
வாழ உதவிய
காற்றுக்கும் - நீருக்கும்

கடன் தீர்த்தவன்
இவன்தான்
தற்கொலை செய்யக்கூடத்
தகுதியானவன்
இந்தத் தகுதி
உனக்கிருந்தால்
தாராளமாகத்
தற்கொலை செய்து கொள் (பக். 49)

என்பதன் மூலம் தம் தகுதிகளை வளர்த்துக் கொள்ள இளைஞர்கள் முயலவேண்டும் என வலியுறுத்தியுள்ளார். குழந்தைத் தொழிலாளர் குறித்து,

குழந்தை + தொழிலாளர்
இந்த வார்த்தை இணைப்புக்குத்
தமிழே தற்கொலை
செய்து கொள்ளும் (பக்.70)

எனக்கூறும் கவிஞர், அவர்களைச் சிவகாசி மத்தாப்பில் கருகிப் போனவர்களாகவும், ராஜஸ்தான் கயிறுகளில் காணாமல் போனவர்களாகவும், தாய்ப்பால் மறக்குமுன்பே தாய்க்குப் பால் வாங்கப் புறப்பட்டவர்களாகவும், இருபதாம் நூற்றாண்டிலும் இன்னும் மிச்சமிருக்கும் காட்டுமிராண்டித் தனத்தின் கருப்பு அடையாளமாகவும் (பக்.67) சித்திரித்துள்ளார். குழந்தைத் தொழிலாளர் ஒழிப்பு முறைக்கு ஊக்க மருந்தாகக் கவிதை திகழ்கிறது. தெருவோரச் சிறுவர்கள் குறித்த **தெருச் சோலைப் பூக்கள்** என்ற கவிதை தலைப்பிலேயே உருவகத்தைக் கொண்டுள்ளதைப்போலக் கவிதையுள் தெருவோரச் சிறுவர்கள் பல உருவகங்களாகக் குறிக்கப்பட்டுள்ளனர்.

எதிர்காலத்தைக் கேள்விக் குறியாக்கி
நிகழ்கால அடைப்புக்குறிக்குள் இருக்கும்
ஆச்சர்யக் குறிகள்
நாங்கள்

மகரந்தச் சேர்க்கை
மாறியதால்
சமுதாய மரங்கள்
உதிர்த்த உதிரப்பூக்கள்
நாங்கள்

சாதிமாறிச்
சங்கமித்தவர்களால்
சாலையில் வீசியெறியப்பட்ட
சகதிப்பூக்கள்

*படுக்கைப் போர்க்களத்தில்*
*தசைகளின் மோதலில்*
*செத்து விழுந்த*
*பிணங்கள் நாங்கள்* *(பக். 108)*

இக்கவிதை தெருவோரச் சிறுவர்களுக்காக இரக்கப்படவைத்து, அவர்களுக்காக, எதையாவது செய்யவேண்டும் என்ற உணர்வைத் தூண்டுவதாக உள்ளது. இக் கவிதையின் வெற்றி எனக் கூறலாம். பிச்சைக்காரர்கள் குறித்த உழைக்கும் சோம்பேறிகள் என்ற கவிதை எள்ளல் மற்றும் இரக்கச் சுவைபட அமைந்து சிந்தையைத் தூண்டுவதாக உள்ளது.

*யாரைப் பார்த்து*
*பிச்சைக்காரன் என்கிறீர்கள்?*

*கொட்டும் மழையில்*
*கொளுத்தும் வெயிலில்*
*உங்களால்*
*ஒருநாள் – தொடர்ந்து*
*நிற்க முடியுமா?*

*ஒருகால் ஊனத்தோடு*
*ஒருகண் பார்வையோடு*
*ஒருகை உதவியோடு*
*உங்களால்*
*ஒரு பேருந்திலாவது*
*ஏறி இறங்க முடியுமா?* *(பக். 38)*

எனப் பிச்சைக்காரர்கள் கேட்பர் எனக்கூறும் கவிஞர், இவர்கள்,

*நல்வழிப் படுத்த*
*நாதியில்லாததால்*
*நடுத்தெருவில் வாழ்பவர்கள்*
*உழைத்தும் சோம்பேறிகளாய்*
*உருகிப் போனவர்கள்* *(பக்.41)*

என உருகி இறங்குகிறார். மேலும்,

*இவர்கள்*
*சமுதாயம் பெற்றெடுத்த*
*சவலைப் பிள்ளைகள் – கொஞ்சம்*
*சத்து கொடுத்துப் பாருங்கள்*
*சாதித்துக் காட்டுவார்கள்* *(பக். 42)*

எனப் பிச்சைக்காரர்கள் பிரச்சினைக்குத் தீர்வும் கூறியுள்ளார். சேலம் மாவட்டம் மலையோரக் கிராமம் ஒன்றில் தனம் என்ற ஆதிதிராவிடச் சிறுமி பொதுத் தொட்டியில் தண்ணீர் குடித்தாள்

என்பதற்காக அவளது கண்ணைக் குத்திய ஆசிரியர் கைது செய்யப்பட்டபோது எழுதப்பட்ட கவிதை தீண்டாமைப் பேயை மனித மனம் தீண்டாத இடத்துக்குத் துரத்தத் தூண்டுவதாக அமைந்துள்ளது.

தீண்டாமை
அரக்கனாய்
இருந்தது ஒருகாலம்
இப்போது ஆசிரியராக அல்லவா
மாறிவிட்டது
சாதி மதங்களின்
சாக்கடை விதிகளுக்குப்
பூஜிக்கப்பட்டது - உன்
கண்மலரா தாயே. . .
உனது கண்மணியைக் கலைத்த கயவனை
காலனே கவர்ந்திட்டாலும்
அவனது
பிணத்தைக் கொண்டுவந்து
தூக்கிலிடுவோம் . . . (பக். 102-103)

என்பது கவிதையின் சில வரிகளாகும். சுதந்திரப் பொன்விழா நாளில் எழுதப்பட்ட அடுத்த நூற்றாண்டில் அடிமையாவோம் என்ற கவிதை சுதந்திர தினக் கொண்டாட்டங்களை எள்ளி நகை யாடுவதாகவும், சிந்திக்கத் தூண்டுவதாகவும் உள்ளது. சுதந்திரம் பெற்றுத் தந்த மகாத்மாவின் கொள்கைகள் எவ்விதம் பின்பற்றப் படுகின்றன என்பதைக் கூறுவதாய் அமைந்துள்ள கவிதை வரிகளாவன:

உன் கொள்கைகளில் சில
இன்னும் செத்துப் போகவில்லை
மகாத்மா

உன் உடைக் கொள்கையை
அரிசன சேரிகள்
அட்சரம் பிசகாமல்
அரங்கேற்றம் செய்கிறது
அரைக் கோவணம்
அங்குதான்
தேசிய உடையாய்த்
தேர்வு செய்யப்பட்டிருக்கிறது.

கைதிகளுக்கு மட்டுமே
கதர் உடைதந்து
உன் கதர் கொள்கை
காப்பாற்றப் படுகிறது

*நீ கனவு கண்ட*
*பாரதப் பெண்*
*வெள்ளித் திரையில்*
*நள்ளிரவில்*
*துணிச்சலுடன் நடமாடுகிறாள்* *(பக்.96-97)*

இத்தகு வரிகள் சுதந்திர நாட்டின் சீர்கேடுகளைச் சீர்தூக்கிப் பார்த்துச் சீர்திருத்த வேண்டும் என்ற போக்கைத் தூண்டுவதாக உள்ளன. 1995ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தலின்போது எழுதப் பட்ட நல்ல தீர்ப்பு எழுதுவோம் என்ற கவிதை இதுவரை நடந்த தேர்தல்களையும் தற்போது தேர்தல் விழிப்புணர்வு பெற்ற வாக்காளர்களையும் வடித்தெடுத்துத் தருகிறது.

*அய்ந்தாண்டுக்கு ஒருமுறை*
*நம்மை நாமே*
*அடகு வைத்து*
*அதிகாரத்தோடு*
*நம்மைச் சுரண்ட ஒரு அரசியல் கட்சிக்கு*
*அனுமதி தரும்நாள்*

*வாங்கிய காசுக்கு*
*வாக்கை அளித்துவிட்டு*
*வாழ்வைக் கழிக்க*
*வருங்கால சந்ததிக்கு*
*வாக்கரிசி போட்ட நாள்* *(பக்.79-80)*

என இருந்த தேர்தல்நாள் அல்ல 1995 பொதுத் தேர்தல் நாள். நாம்,

*வேட்பாளரின்*
*சட்டையைப் பிடிக்கும்*
*வேகம் பெற்றுவிட்டோம் . . . .*
*சொன்னதைச் செய்யாமல் போனால்*
*அடுத்த தேர்தலில்*
*'ஆவன' செய்வோமென*
*அனைவருக்கும்*
*அறிவித்து விட்டோம்* *(பக். 81)*

என வாக்களர்கள் பெற்றுள்ள விழிப்புணர்வை, சமூக மாற்றத்தை வெளிப்படுத்தியுள்ளார். சாதி, சமய ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் முகமாக,

*மதச் சாலையில்*
*சாதிச் சந்துகளை உருவாக்கிச்*
*சகோதரர் ரத்தம் குடித்தா*
*தாகம் தீர்க்கிறீர்கள்?* *(பக். 62)*

என வினவி,

சடங்குகள் இங்கே – உன்
சடலத்தைக் கூட
சங்கடப்படுத்தும்

சாதிகள் உன்
சந்ததியையே
பலிகேட்கும் (பக்.63)

என விளைவைக் கூறியுள்ளார். இருப்பதோ ஒரு தீபாவளிப் பண்டிகை. ஆனால், அது ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மாதிரியான தீபாவளியாக்க் கொண்டாடப்படவேண்டியது என்பதை யாருக்கு தீபாவளி? என்ற கவிதை வெளிப்படுத்துகிறது.

வாக்குறுதி
மத்தாப்பு
கொளுத்தி – அதில்தன்
வாழ்க்கையை வெளிச்சமாக்கும்
அரசியல்வாதிக்கு
அனுபவத் தீபாவளி . . .
அரிசிக்கும் கல்லுக்கும்
கலப்பு மணமுடித்து
மறுவீடு அனுப்பும்
கலப்பட மாமாவுக்கு இது
கற்கண்டுத் தீபாவளி (பக்..65)

சிறுவர்களைத் திரியாக்கி
அவர்களின்
கனவுகள் மீது
கார்பன் தடவி
விற்பனைக்கு அனுப்பும்
சிவகாசிச் சீமான்களுக்கு இது
சிறப்புத் தீபாவளி (பக். 66)

என விரிந்து கொண்டே செல்கிறது கவிதை. யாருக்கெல்லாம் தீபாவளி கொண்டாடப்படவேண்டும் என்பதை வெளிப்படுத்திச் சமூக விழிப்புணர்வை ஊட்டுவதாக இக்கவிதை அமைந்துள்ளது. பொதிகை மலையைப் பார்த்து, உன் குணங்களைக் கொஞ்சம் தள்ளிப்போடு எனக் கூறிக் கவிதை படைத்துள்ள கவிஞர் அம்மலையில் நிகழ்ந்துள்ள இயற்கைச் சீரழிவுகளை எடுத்தியம்பியுள்ளார்.

உன் தலையில் உள்ள
பசுமைக் கேசங்களை
அறுத்தெரியும்
தறுதலைகள்

தளர்ந்துவிடக் கூடாதென்றா
குளிர்ந்த காற்றால்
இன்னும் அவர்களைக்
குதூகல மூட்டுகிறாய் (பக்.91)

எனக் காடுகளை அழிப்பது குறித்தும்,

பாழும் மனிதனின்
அழுக்கைப் போக்க
எத்தனை பாறைகளில்
முட்டி மோதி
அருவியாய் ஓடி வருகிறாய்
ஆனால் அவனோ
உன்னையே அழுக்காக்கியல்லவா
ஊருக்குள் அனுப்புகிறான் (பக்.91)

என நதிநீர் மாசு குறித்தும்,

இப்போதெல்லாம்
குளிக்க வருபவர்களை விடக்
குடிக்க வருபவர்களே அதிகம்.
அதனால்
மலைப் பொருட்களை விட
மதுக்குப்பிகளுக்கே
கிராக்கி அதிகம்

மந்தி சிந்திய
கனிகள் கிடந்த - உன்
மடியில் - இன்று
மதுப்பாட்டில்களல்லவா
குவிந்து கிடக்கிறது (பக். 92)

என இயற்கைச் சூழல் கேடு குறித்தும்,

உனக்குத் தெரியுமா?
உன் மயிர்பிடித்து
விளையாடும்
மந்திகளைக் கூட
மதுக்குடிக்கப் பழக்கிவிட்டார்கள்
மனிதர்கள் (பக். 92)

என வன விலங்குப் பாதுகாப்பின்மை குறித்தும் பேசும் சமூக சிந்தனைக் கவிதைகளைப் படைத்துள்ளார். சொர்க்கத்தை விற்று நரகமெனும் நகரத்தில் வாழும் மனிதர்கள் **கான்கிரீட் குகைக்குள் வசிக்கும் காட்டுமிராண்டிகள்** (பக். 116) எனக் குறித்துள்ளார். நகரத்தில்,

பூமியெங்கும்
பிளாஸ்டிக் வேர்கள்
வானமெங்கும்
புகை கூரைகள் . . .
சாலைகளில்
சாக்கடை
சாக்கடைகளே
சாலைகள்
கழிப்பிடங்களே
வசிப்பிடங்கள்
வசிப்பிடங்களே
கழிப்பிடங்கள் . . .
மனிதாபிமானம்
மரணத்தின் பிடியில்
பணாபிமானம்
பாக்கெட் மணியில் (பக். 114)

என உள்ள அலங்கோலத்தை விவரித்துச் சுற்றுச் சூழல் மாசு குறித்த விழிப்புணர்வை ஊட்டியுள்ளார். இரு மனங்கள் இணையுமிடமாம் திருமண மண்டபம் குறித்த கவிதை முழுக்கவும் உருவக அமைப்பிலான கவிதையாகும்.

ஆயிரங் காலத்துப் பயிர்
அறுவடையாகும்
வயல்வெளி

எதிர்ப்பில்லாத
காதலர்களுக்குக்
கனவுப் பூங்கா
எதிர்ப்புள்ள
காதலர்களுக்குக்
கசப்புப் பூங்கா

பட்டுச் சேலைகள்
பளபளக்கும்
சேலைச் சோலை
புன்னகைகள்
மட்டுமே பூத்திருக்கும்
புதுமைப் பூங்கா (பக். 118–119)

எனக் கவிதை விரிந்துகொண்டே சென்று கவிச் சுவையையும் கவிச் செறிவையும் வழங்குவதாக உள்ளது. இவ்வாறு பல்வேறு விதமான கோணங்களில் சமூகச் சிந்தனையுடன் வடிக்கப் பட்டுள்ள கவிதைகள் காலத்தை வென்று நிற்கும் ஆற்றல் படைத்தவை என்பதில் ஐயமில்லை.

## குறிப்பிட்டோரின் மரணத்தின்போது படைக்கப்பட்டவை

தனக்கு வேண்டப்பட்டவர், சமூகத்துக்குத் தொண்டாற்றி யவர், உலகப் புகழ் பெற்றவர்கள், திரைப்பட உலகைச் சார்ந்தவர்கள் போன்றோரின் மரணங்கள் தனிப்பட்டவர்களைத் தாக்கக்கூடியவை. அந்தச் சோகம் ஒருநாள் இருக்கலாம்; ஒரு மாதம், ஒரு ஆண்டு கூட இருக்கலாம்; ஒருவருடைய வாழ்நாள் முழுதும் கூட இருக்கலாம். அவரோடு அது மறைந்துவிடக்கூடியது. ஆனால் அத்தகு சோகங்களும், இழப்புகளும் ஒரு கவிஞரைத் தாக்கும்போது அது ஒரு கவிதையாகத் தோன்றிக் காலாகாலத் துக்கும் நின்று நிலை பெற்றதாக ஆகிவிடுகின்றது. அந்த வகையில், வாழ வழிவகுத்துக் கொடுத்த தினகரன் இதழின் நிர்வாக இயக்குநர் பேராசிரியர் கேபி.கந்தசாமியின் மரணத்தின் போது எழுதப்பட்ட '**சூரியனுக்கு ஏதய்யா மரணம்**' என்ற கவிதையே தொகுப்பில் முதல் கவிதையாக உள்ளது.

தண்டுபத்து தாயின்
கருப்பை சுமந்த
கண்ணியமே . . .
திருச்செந்தூர்
கடல் தந்த
மூன்றெழுத்து முத்தே . . .

அரசின் கால்பிடித்து
அர்ச்சனைகள்
செய்துவந்த
பத்திரிக்கை உலகை
பத்திரமாய்க் கொண்டு வந்து
மக்கள் பக்கம்
சேர்த்தவரே . . .
நெற்றியைச் சுருக்கி நீங்கள்
சிந்தித்த தெல்லாம் – இன்று
வெற்றியாகும் போது
சுற்றி வந்து வாழ்த்துரைக்க – நின்
சுடர்முகம் இல்லையய்யா (பக். 17–19)

அன்னை தெரசா மறைந்தபோது :

தாய் என்பதற்கும்
மேலான சொல்
தமிழில் இல்லை
என்றிருந்தோம்
“தெரசா” – என்ற சொல்லை
தமிழுக்கு
தத்துக் கொடுத்தவள் நீ. . . .

*வெள்ளுடை*
*விதவையுடை என்றிருந்தோம்*
*ஆனால் அதனை*
*அன்னையின் உடையாய்*
*அங்கீகரித்தவள் நீ* *(பக். 50-51)*

நடிகை சில்க் சுமிதா மறைந்தபோது :

*இது ஒரு*
*கவர்ச்சி நடிகைக்கு*
*எழுதப்பட்ட*
*இரங்கற்பா அல்ல.*

*இருபதாம் நூற்றாண்டின்*
*கடைசி பகுதியில்*
*ஆபாச கலையால்*
*அழிந்துபோன - ஒரு*
*அபலையைப் பற்றி*
*அடுத்த தலைமுறைக்கு*
*சொல்லும் ஓர்*
*அறிவிப்புப் பலகை* *(பக். 109)*

இத்தகு கவிதைகள் இரக்கவுணர்வை எழுப்பி மனத்தை, நெகிழ வைப்பதாயும், நிலையாமைக் குறித்துச் சிந்திக்கத் தூண்டுவன வாகவும் உள்ளன.

## தன்னனுபவம் அல்லது தன்னுணர்ச்சிக் கவிதைகள்

கவிஞர்கள் உணர்வு மயமானவர்கள். தம்மைப் பாதிக்கும் சமூக நிகழ்வுகளை உள்வாங்கிப் பல கவிதைகளைப் படைக்கும் கவிஞர்கள் ஓரிரண்டு பாடல்களிலாவது தம் சொந்த வாழ்வின் பக்கங்களைத் திறந்து காட்டி விடுவது உண்டு. இக்கவிஞரும் இத் தொகுதியில் 5 கவிதைகளில்[4] தம்சொந்த அனுபவத்தை, தன்னுணர்வைப் பதிவு செய்துள்ளார்.

சிறுவயதில் ஒரு பெண்ணின்மீது ஏற்பட்ட ஈர்ப்பு, பிளேடு வாங்கக் காசில்லாமல் தாடி வளர்த்தது, மனைவி இன்னொரு அழகான குழந்தை கேட்டது, அழகு உருவத்தில் இல்லை என உரைத்தது, தன் சொந்த ஊர் பற்றியது என்பவற்றை உள்ளடக்கியதாக அக் கவிதைகள் உள்ளன.

பள்ளிப் பருவத்தில் கல்லுடைக்கும் பெண்ணுக்கும் கவிஞருக்கும் ஏற்பட்ட மன ஈடுபாட்டைப் **பாறையில் பூத்த மலர்** என்ற கவிதை மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

கல்லுடைக்கும் சுத்தியல் ஓசை தனக்கு இரண்டாவது தாலாட்டாக இருந்ததாகவும், அவள் தந்த சோளக் கஞ்சியில் சொக்கிப் போனதையும் குறிப்பிடும் கவிஞர் மேலும் கூறுகிறார்.

*உன் கனிவான பேச்சும்*
*கவர்ந்திழுக்கும் சிரிப்பும்*
*கணீரென்று ஒலிக்கும்*
*சுத்தியல் சத்தமும்*
*எனக்குக் கேட்கும்*
*பாறையை மட்டுமல்ல*
*பாறையாய் இருந்த*
*என் மனதையும்*
*செதுக்கியவள் நீயல்லவா?*

*வயதில் மட்டுமல்ல*
*வனப்பிலும்*
*என்னில் மூத்தவள் நீ*

*என்னைச் செதுக்கிய*
*உளிகளில் உன்*
*விழிகளும் உண்டு*
*என்மீது நீ கொண்டது*
*காதலா. . . ?*
*பாசமா. . . ?*
*பரிவா. . . ?*
*புரியவில்லை எனக்கு* (பக். 59)

எனப் பிற்காலத்தில் நினைவுகூர்ந்துள்ளார். எந்த ஊரிலிருந்தாலும் எந்த நாட்டுக்குப் போனாலும் சொந்த ஊரின் நினைவு பலரையும் புவியீர்ப்பு விசைபோன்று இழுத்துக் கொண்டே இருக்கக் கூடிய தாகும். பிறந்த மண்ணின் வாசம் இறப்பு வரை ஊனோடும் உயிரோடும் ஒட்டிக் கொண்டிருப்பதாகும். இக்கவிஞரும் இதற்கு விதிவிலக்காக இல்லை. கவிஞர் பிறந்து, வளர்ந்த 'பைம்பொழில்' கிராமத்தைக் குறித்த கவிதை தன்னுணர்வுப் பாடலாகப் பதிவாகி யுள்ளது.

*எப்போதும் வீசும் தென்றலும்*
*அவ்வப்போது வானம்*
*தூவி விட்டுப் போகும் சாரலும்*
*என் எண்ணப் பேனாவில்*
*மை நிரப்பிக் கொடுத்த*
*மலர் பூமி . . .*
*இந்த*
*பசுமை தேசத்து*
*பறவைகள்*

பாலைவன தேசங்களுக்கும்
பரபரப்பு நகரங்களுக்கும்
பறந்து போய்விட்டன.
அதனால்
பராமரிக்கப்படாத
பூங்காவாய் இப்போது
பட்டுப்போய் விட்டது
பைம்பொழில் (பக். 128)

என்பது கவிதையின் சில வரிகளாகும்.

## காதல் குறித்த கவிதைகள்

காதலைப் பாடாத கவிஞர்கள் இல்லை என்பார்கள். காதலே சிலரைக் கவிஞர்களாகவும் ஆக்கியுள்ளது. இத்தொகுப்பில் காதல் குறித்து 3 கவிதைகள் (பக். 29, 100, 123) இடம்பெற்றுள்ளன.

நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே

என்பது சங்க காலக் காதலாகும். இது போன்றே கவிஞரின் காதலனும், காதலின் ஆழத்தைக் கீழ்க்காணுமாறு உரைக்கிறான்.

அன்புக் காதலியே
நான் சாகத்தயார்
நீயே
புதைகுழி யாகும்போது . . .
அப்போதும்
உனக்குள் நான் இருப்பேனே. . .

என்பது கவிதையாகும். மற்றும் இரு கவிதைகளும் காதலர்களுக்குள் ஒருவருக்கு ஒருவர் துரோகம் செய்வது குறித்தும், கள்ளக் காதல் குறித்தும் அமைந்தவையாகும்.

## இயற்கை பற்றிய கவிதைகள்

கவிஞர்கள் இயற்கை விரும்பிகள் என்ற கருத்தை வலியுறுத்துவது போன்று இயற்கையைப் பாடுபொருளாகக் கொண்ட இரு கவிதைகள் (பக். 35, 106) இந்நூலில் அமைந்துள்ளன. மழையை மங்கையாக உருவகப்படுத்தியுள்ள கவிஞர் மேலும் மழையை,

வான் உதிர்க்கும்
வசந்த கண்ணீர்

எனவும்,

கார்மேக
கலவரத்தில் சிந்தும்
வெள்ளை இரத்தம்

எனவும் நயம்பட உரைத்துள்ளார். 'காளான்' குறித்து எழுதப் பட்டுள்ள,

மழைக் காதலன்
தன் பூமிக்காதலியை
நீராட்டி
சூட்டி மகிழும்
வெள்ளை ரோஜா

என்ற கவிதை, பொருத்தமான கற்பனை நயம் கொண்டதாக உள்ளது.

### பெண்ணியவிழிப்பு குறித்த கவிதை

'வா தோழி வா' எனப் பெண்ணை அழைத்துப் பெண்ணிய விழிப்பு பற்றிப் பேசும் ஒரு கவிதை (பக். 21) பெண்ணைப் புதிய வரலாறு படைக்கப் புதிதாய்ப் புறப்படு என ஆணையிடுகிறது. அத்துடன்,

தூணுக்குப் பின்னால் நின்று
துரும்பாகிப் போனவளே
தூணைக் கையிலெடு
துருப்பிடித்த சமுதாயத்தை
தூசி தட்ட

என்றும்,

வாசலைப் பெருக்க
வாரியலை எடுத்தது போதும்
வாழ்வைப் பெருக்க
அதைக் கொஞ்சம்
திருப்பிப் பிடி – உன் வாசல் தேடிவரும் வாழ்க்கை

என்றும், பெண்ணிய எழுச்சி பேசுகின்றது.

### கவிதைக் கட்டமைப்பும் கருத்தாக்கமும்

'புதுக் கவிதைகள் இலக்கண வரம்புக்குட்படாதவை' என்பதற்கொப்ப, இக் கவிதைத் தொகுப்பிலுள்ள அனைத்துக் கவிதைகளும் புதுக் கவிதைக்குரிய இந்த இலக்கணத்தைப் பின்பற்றியே அமைந்துள்ளன. 'உரைநடையை உடைத்துப்

போட்டால் அது புதுக்கவிதை' என்று கூறுவார் கூற்றுக்கு ஏற்பவே **புதிய தீக்குச்சிகள்** கவிதைகளும் அமைந்திருந்தாலும் இக்கவிதைகளில் அமைந்துள்ள மோனை அழகும் சிந்தித்துத் தேர்ந்தெடுத்தாண்டுள்ள உருவக அமைப்புகளும், சொற்செட்டு களும் கவிதை வடிவை நல்கிக் கவித்துவம் கொண்ட கவிதை களாக ஆக்கியுள்ளன.

சமூக அக்கறையுடன் செயல்பட்டுச் சமூக விழிப்புணர்வை ஏற்படுத்துதலை மையக் கருவாகக் கொண்டு சமூகச் சீர்திருத்த ஆற்றலை ஏற்படுத்துவதால் உயர்ந்த இலக்கை நோக்கிய கவிதை இலக்கியமாகவும் இக்கவிதைகள் திகழ்கின்றன. சமூகச் சிக்கல்களுக்குத் தீர்வு கூறுவதால் எதிர்காலச் சமுதாயத்தை உருவாக்குவதில் முக்கியப் பங்காற்றுவனவாகவும் இக்கவிதைகள் காணப்படுகின்றன.

## கவிஞரின் பார்வையில் கவிதைகள்

தன் கவிதைகள் குறித்துக் கவிஞர் தானே சில மதிப்பீடுகளை நூலில் தெரிவித்துள்ளார். பல்வேறு காலக்கட்டங்களில் உருவான உணர்வுச் சுமைகளே தன்னை எழுதத் தூண்டின எனக் குறிப்பிடும் கவிஞர்,

> சமுதாயத்தில் என்னைச் சுற்றி நடக்கும் விஷயங்களின் மீது எனக்கு எழும் தார்மீகக் கோபங்களை, உணர்ச்சிகளை எனக்குத் தெரிந்த தமிழ் வார்த்தைகள் மீது இறக்கி வைத்திருக்கிறேன் (பக். 12)

எனத் தெரிவித்துள்ளார். இவை கவிதைகளா? என்ற கேள்வியைத் தானே எழுப்பிக் கொண்டு 'இல்லை' என்று விடையும் இறுத்துள்ளார். **கவிஞனாவதற்கு நான் எழுதிய ஆரம்பத் தேர்வு** எனக் கூறி மேலும்,

> இவைகளைக் கவிதைகள் என்று நானே முழுமையாக ஒப்புக்கொள்ளாத பட்சத்தில் மற்றவர்கள் மீது இவை கவிதைகள் என்று திணிக்க விரும்பவில்லை. அதனால் தான் பல ஆண்டுகளாக இவைகளை என் குறிப்பேடுகளுக் குள்ளேயே சிறைப்படுத்தி வைத்திருந்தேன். எனது எழுத்துக்களில் சில அவ்வப்போது தினகரனில் வெளிவந்த போது எனக்கு நெருக்கமான நண்பர்கள் 'ஆகா பிரமாதம்' என்று என் அனுமதியில்லாமலேயே என்னைக் கவிஞனாக அங்கீகாரம் செய்து விட்டார்கள் (பக்கம் 12-13)

எனக் கவிஞர் குறிப்பிடுவது 'அவையடக்கம்' என்பதைக் கவிதைகளைப் படிப்பவர்களும், திறனாய்வு செய்பவர்களும்

அறிவார்கள். இந்நூலுள் உள்ளவை கவிதைகள் இல்லை என்றால் பின் இவை யாவை எனக் கூறும் கவிஞர் இவை,

> **எழுதுகோலெனும் குச்சியில்**
> **கன்னித்தமிழெனும் கார்பன்தடவி**
> **என் சிந்தனைப் பெட்டியில் உரசிப் போட்டிருக்கும்**
> **தீக்குச்சிகள் . . . .** (பக். 14)

எனக் குறித்துள்ளார். இப் புதிய தீக்குச்சிகளின் பணியாகக் கவிஞர் கூறுவது:

> சமூகக் கொடுமைகளைச் சுட்டெரிக்கத் துடிக்கும் இளைஞர்கள் கையில் இந்தக் குச்சிகள் தீப்பந்தங்களைக் கொழுத்திக் கொடுக்கட்டும் அல்லது இருண்டு கிடக்கும் சில உள்ளங்களில் சிந்தனை விளக்கையாவது ஏற்றி வைக்கட்டும் (பக்கம் 14)

என்பதாகும். தன் கவிதைகள் இதைச் செய்யாத நிலையில்,

> **எதுக்குமே பயன்படாததை எழுதிய**
> **என் விரல்களையே – அது**
> **சுட்டுக் கொள்ளட்டும்** (பக். 14)

எனச் சூளுரைத்துள்ளார். இவர் கவிதைகள் இவர் எண்ணிய இலக்கை எட்டியுள்ளன என உறுதியாக உரைக்கலாம்.

இவருடைய கவிதைகளில் யாருடைய கவிதைகளின் சாயல் உள்ளது என நாம் கூறுவதற்குமுன் இவரே, '**கவியரசு வைரமுத்துவின் சாயல் இருக்கும் எனக் கூறுவீர்கள்**' எனக் குறிப்பிட்டுள்ளார். அத்துடன் அவ்வாறு கூறினால் தான் மறுக்கப் போவதில்லை என்றும் தன் கவிதைகளுக்கு மட்டுமல்ல; தன் எழுத்து ஒவ்வொன்றுக்கும் ஞானத் தந்தை வைரமுத்து என்பதை ஒத்துக் கொண்டு தந்தையின் சாயல் மகனிடம் இருப்பது தவறல்ல என்றும், இல்லாமலிருந்தால்தான் அது விவாதத்திற்குரியது என்றும் விளம்பியுள்ளார். '**கவியரசின் நூல்களில் தமிழ் படித்துத் தான் எழுதியிருக்கும் தேர்வு**' என்றும் குறிப்பிட்டுள்ளார் (பக். 13).

இதனால் பாரதிதாசன், கண்ணதாசன், வாணிதாசன் என்ற 'தாசன்' கவிஞர்கள் வரிசையில் வரும் வைரமுத்து தாசனாகப் பைம்பொழில் மீரான் திகழ்கிறார் எனலாம். தாசன்களாக இருந்தாலும் தங்களின் தனித்தன்மை எனும் ஒளியை இழக்காத உதய சூரியன்களாகக் கவிஞர்கள் காணப்படவேண்டும். அப்பொழுதுதான் கவிஞர்களும் அவர்களின் கவிதைகளும் காலத்தை வெல்லும் வலிமையைப் பெறும் என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்க இயலாது.

**கவிதைகள் – சில முடிவுகள்**

பைம்பொழில் மீரானின் **புதிய தீக்குச்சிகள்** - கவிதைகள் மோனை நயத்தால் கவி ஓசையையும் உருவகத் தன்மை, கற்பனை நயங்களால் கவிச் செறிவையும் பெற்றுக் கவிச்சுவை நல்குவனவாக உள்ளன. சமுதாயச் சிக்கல்கள் கவிக்கருவாகக் காணப்படுகின்றன. சமுதாயச் சிக்கல்களுக்குத் தீர்வு கூறும் முறையிலும் தீர்வு காணத் தூண்டும் நோக்கிலும் கவிதைகள் அமைந்துள்ளன. கவிதைகளில் எள்ளல், இரங்கல் சுவைகள் மிகுந்துள்ளன. இளைஞர் சமுதாயம், பிச்சைக்காரர், தெருவோரச் சிறுவர், குழந்தைத் தொழிலாளர், அரசியல்வாதி, கவர்ச்சி நடிகை, சமூகச் சேவகி, நகரமாந்தர் ஆகிய பலரும் கவிதைப் பாத்திரங்களாகியுள்ளனர். கிராமம், மலை, மழை, காளான், தொலைக்காட்சி, கணினி, வறுமை, பசி, காதல், அழகு, திருமணமண்டபம், தீண்டாமை, இயற்கை, சுற்றுச் சூழல் கேடு போன்ற பலவும் பாடுபொருளாகியுள்ளன. இவை கவிஞரின் விரிந்து பரந்த நோக்கை வெளிக்காட்டுவனவாக உள்ளன. கவிதைகள் காலத்தின் கண்ணாடி என்பதற்கேற்ப 20ஆம் நூற்றாண்டுச் சமுதாயத்தை இக்கவிதைக் கண்ணாடியில் காணமுடிகின்றது. எதிர்காலச் சமுதாயத்தை வழி நடத்த, சீர்படுத்த, செம்மைப் படுத்த, இக்கவிதைகள் சிறந்த வழிகாட்டியாக அமையக்கூடியவை. இப்புதிய தீக்குச்சிகளின் ஒளியில் சமுதாயம் வெளிச்சம் பெறும்; வீறு கொள்ளும்.

**குறிப்புகள்**

1. குறிப்புகள் எடுத்தநூல் : இதழாளர் ஆதித்தனார் அ.மா.சாமி உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடு, ஜூலை 1990, பக். 182.
2. சு. முருகானந்தம், தி.மா. சரவணன், பைம்பொழில் மீரான், கவிஞர் நந்தலாலா காவிரி பதிப்பகம், திருச்சிராப்பள்ளி, ஏப்ரல், 2002.
3. பக்கங்கள் 25, 38, 43, 61, 65, 67, 71, 74, 77,. 78, 79, 83, 85, 89, 95, 101, 102, 107, 113, 114, 118, 120.
4. பக்கங்கள் 55, 64, 76, 105, 124.

# முகிலை இராசபாண்டியன்

## வாழ்க்கைக் குறிப்பு

கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள முகிலன் குடியிருப்பு என்னும் கிராமத்தில் 9-10-1960இல் எஸ். ரெத்தினசாமி - பத்மாவதி தம்பதியருக்கு மகனாகப் பிறந்தார். இவர் நங்கைநல்லூரில் வசித்து வருகிறார். தமிழ் இணைப்பேராசிரியராக மாநிலக்கல்லூரியில் பணியாற்றிக் கொண்டிருக்கிறார். இதற்கு முன்பு பல கல்லூரிகளில் விரிவுரையாளராகவும், தரமணியில் உள்ள தமிழ் இணையப் பல்கலைக்கழகத்தில் உதவி இயக்குநராகவும் (மூன்று ஆண்டுகள்) பணியாற்றி உள்ளார்.

தமிழ் இலக்கியக் கல்வியில் புலமை மிக்கவர். தமிழ் முதுகலையில் (எம்.ஏ.) இலக்கியமும், இதழியலும் பயின்றுள்ளார். ஆய்வு நிலையில் ஆய்வியல் நிறைஞர் (எம்.ஃபில்) முனைவர் பட்டம் (பிஎச்.டி.,) போன்றனவும் ஆசிரியர் பயிற்சி (பி.எட்.) பட்டமும் பெற்றுள்ளார்.

சிறுகதை தொகுப்பு (இரண்டு), நாவல் (நான்கு), கவிதை (இரண்டு), வாழ்க்கை வரலாற்று நூல்கள் இரண்டு (**காலம் தந்த காமராசர், அருந்தமிழ் காத்த அறுவர்**), இலக்கிய ஆய்வு (இரண்டு), திறனாய்வு (இரண்டு), சிறுவர் நூல் (நான்கு), இலக்கணம் (பாவை தமிழ் இலக்கணம்), உரைநூல்கள் (நன்னூல் - எழுத்து, சொல், தண்டியலங்காரம்) போன்றனவும் குழந்தைகளுக்காக, Kannagi என்னும் ஆங்கில நூலும் படைத்துள்ளார் (மொத்தம் - 23). மேலும் ஆய்வுக் கட்டுரைகள் ஐம்பத்து மூன்று படைத்துள்ளார்.

இவரது படைப்புகளுக்கு ஆறு விருதுகள் இதுவரை கிடைத்துள்ளன. இவ்விருதுகள் சிறுகதை, நாவல், ஆய்வுக்கட்டுரை, கவிதை போன்ற படைப்புகளுக்கு வழங்கப்பட்டுள்ளன. வழங்கிய நிறுவனங்கள் இராசபாளையம் திருவள்ளுவர் மன்றம், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தில் உள்ள பாரதிதாசன் அறக்கட்டளை மற்றும் பாரதியார் அறக்கட்டளை, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், மற்றும் இதே மன்றத்தின் வாயிலாகத் தமிழ் வளர்ச்சித்துறை போன்ற

அமைப்புகள் விருதுகளை வழங்கியுள்ளன. தமிழ்க்கலை இலக்கியப் பேரவையும், தாராபாரதி அறக்கட்டளையும் இணைந்து வழங்கிய 'தாராபாரதி கவிதை விருது - 2003' என்பதனைக் கவிதைக்குப் பெற்றுள்ளார்.

இவரது படைப்புகளை ஆய்வு செய்து ஐந்து பேர் ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளனர் (எம்.ஃபில்). இருவர் தற்சமயம் ஆய்வு செய்து வருகின்றனர். ஒருவர் இவரது நாவல்களை தில்லிப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வு செய்து வருகின்றார்.

**கவிதை நூல்கள்**

**உன்னைத் தேடி ஓர் உலா** - 1991 (ஏப்ரல்) **பெருக்கல்குறி** - 2003 (டிசம்பர்) (15 ஆண்டுகளாக எழுதிய கவிதைகளின் தொகுப்பு) கவிஞர் தன்னுடைய கவிதைகளை வாசகரின் பயன்பாட்டுக்கு ஏற்றவையாக இருக்கும் என நம்புகிறார். "சரிகை பளபளக்கும் பட்டு அல்ல. பசியால் வாடும் பஞ்சைக்கைகள் நெய்த கைத்தறிதான்" என்றும், இக்கவிதைகள் எதனை உணர்த்த முனைகின்றன என்பதனைக் குறிப்பால் கவிஞர் உணர்த்த முனைவதையும் அறியமுடிகிறது. இவ்விதமான நிலையில் முகிலை இராசபாண்டியனின் கவிதைகள் எவ்விதமாய் அமைந்துள்ளன என்பது பற்றிச் சில பொருண்மைகள்வழிக் காணலாம்.

**காதல்**

இளைய சமூகத்தின் தேசியகீதம் காதல். இத் தேசத்தில் மலர்களும் வண்ணத்துப்பூச்சிகளும் நிறைந்திருக்கும். இங்கு மலர்பறிக்கப் போனவர்கள் நிறையப் பேர், பறித்தவர்கள் எண்ணிக்கையை எண்ணிவிடலாம். மற்றவர்களெல்லாம் மண்ணாய் மரமாய் மாறி அத்தேசத்திலேயே தங்களுடைய மோட்சத்தை அடைந்து விடுவர். முகிலை இராசபாண்டியன் "**உன்னைத்தேடி ஓர் உலா**'வில் காதலில் வென்றாரோ இல்லையோ தெரியவில்லை. ஆனால் காதல் பற்றிய எண்ணம் எவ்விதம் அவர் கொண்டார் என்பதற்குக் கவிதையில் தடயம் நிறைய உள்ளது. அதில் ஒரு சில மட்டும்:

**தயார்**

நான்
குருடனாகவும் தயார் - நீ
நடத்திச் செல்வாய் என்றால்
நான்
முடவனாகவும் தயார் - நீ

தூக்கிச் செல்வாய் என்றால்
நான்
ஊமையாகவும் தயார் – உன்
விழியாலே பேசுவாய் என்றால்
நான்
திருடனாகவும் தயார் – உன்
நெஞ்சத்தைத் திருடலாம் என்றால்
நான்
மாப்பிள்ளை ஆகவும் தயார் – நீ
மணப்பெண் ஆவாய் என்றால் (உ.தேடி.ஓர் உலா., ப. 19)

காதல் பற்றிய கற்பனை பலவாறான உணர்வுகளைக் கிளருவதை அறியமுடிகிறது (இதில் உள்ள ஒவ்வொரு பகுதியும் கிட்டத்தட்ட ஒரு திரைப்படமாக இன்றுவரை வெளிவந்துள்ளது).

என்னைக் கேட்டால்
என்னைக் கேட்டால் –
நான் கற்ற கம்பனைக் காட்டிலும்
நீயே சிறந்த கவிதை என்பேன் (மேலது, ப. 29)

இராமனின் பாதம்
ஒரு
கல்லைத்தான் பெண்ணாக்கியது
அன்பே
உன்பாதம்
பூமியையே புனிதமாக்குகிறது (மேலது, ப. 30)

என்றும், கண் சிமிட்டும் மீன் கூட்டம் என்னும் கவிதையில்,

நீ
நடைதவறி நடந்தால்
அதுதான் நடனம்
உன் பாடலில்
பா மாறினாலும்
அதுதான் இன்பம் (மேலது, ப. 32)

என்றும், 'உன்னைத்தேடி ஓர் உலா' என்னும் நூல் தலைப்பாக அமைந்த கவிதையில்,

அர்த்த ஜாமத்தில்
அத்தனை மீன்களுக்கும் நடுவில்
முழுநிலாவின்
பவனியின் போதெல்லாம்
என் மனம்
உன்னை நோக்கி உலா வருகிறது . . .
சொல்லாமல் வருவது

*தும்மல் மட்டும் அல்ல –*
*நீயும்தான்*
*அடிக்கடி வந்து என்னைக்*
*'கிச்சு' 'கிச்சு' மூட்டுகிறாயே!*

*காதல்*

*ஆதி மனிதனும்*
*அடுத்த மனிதனும்*
*வேதகாலத்தவனும்*
*வேலைக்காரனும்*
*விண்ணைத் தேடுவோனும்*
*மண்ணை மலர்விப்போனும்*
*மயங்கும் மயக்க மருந்து* *(மேலது, பக். 45)*

என்றும்,

*நனவே வேண்டாம்*

*எனக்கு*
*நனவே வேண்டாம்*
*என்பேன் –*
*கனவில் மட்டும்*
*உன்னோடு கலப்பதாலே* *(மேலது, ப. 54)*

என்றும்,

*சூடு*
*தொட்டால்*
*தெரிகிறது*
*நெருப்பின் நாக்கு*
*விட்டால்*
*அன்றோ தெரிகிறது*
*காதல் நாக்கு* *(மேலது, ப. 54)*

என்றும், ஆண்பால் கைக்கிளை அளவினதாய்க் காதலைப் பற்றிய பல்வேறு உணர்வு வெளிப்பாடுகளைக் காணமுடிகிறது. இதில் மனத்தில் இருத்திக் கொள்ளும் அடிகளைக் காண முடியவில்லை. இதே போன்ற உணர்வு உடைய ஒரு கவிதை மட்டும் பெருக்கல் குறி தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.

*காதல்*

*வலையை*
*விரித்தவனையே*
*விழச்செய்யும்*
*விசித்திர வலை* *(பெருக்கல் குறி, ப. 27)*

வாழ்க்கை

ஒவ்வொரு மனிதரும் பெற்றிருக்கும் வரம். இவ்வரம் புதையல் காடாக அமைந்திருக்கிறது. சிலபேர் பொன்னையும் பொருளையும் தோண்டி எடுக்கின்றனர். மகிழ்ச்சியாக வாழ்கின்றனர். பலபேர் வரம் பெற்றதை அறியாது தவிக்கின்றனர். கையில் அள்ளிய நீர் விரல் இடுக்கில் வழிந்து செல்வதைப் போல வாழ்க்கை வழிந்து ஓடி விடக்கூடாது என்று முயலுகின்றனர். எனினும் பலருக்கும் வாழ்க்கை கைவசப்படாமல் கண்ணாமூச்சிக் காட்டுகின்றது. துன்பத்தை உண்டாக்குகிறது. ஆனால், கவிஞர்கள் காலத்தைப் பிடித்து உழுது பயிர் செய்யவே முயற்சி செய்கின்றனர்.

பெருக்கல் குறி (X)

**இடது பக்கம் கோடு ஒன்று**
**வலது பக்கம் கோடு ஒன்று!**
**இடது கோடு**
**வலது செல்லும்**
**வலது கோடு**
**இடது செல்லும்**
**இரண்டும்**
**ஒன்றில் ஒன்றி நிற்கும்!**
**இணையும் வரையில்**
**நெருங்கி வந்து**
**இணைந்த பிறகு**
**எங்கோ செல்லும்!**
**நீயும் நானும்**
**பெருக்கல் குறிதான்**
**இணையும் வரைக்கும்**
**நெருங்கி வந்தோம்**
**இணைந்த பிறகு**
**எங்கோ சென்றோம்** (மேலது, ப. 11)

இரண்டாவது நூலுக்குத் தலைப்பாக அமைந்த கவிதை. இதில் கவிஞருக்குத் தெரிந்த, வேண்டிய ஒருவருடன் வாழ்க்கையில் சேர்ந்து பயணிக்கலாம் என்று பயணத்தைத் தொடங்கியதும் ஆனால் அது இயலாது போய்விட்ட பிரிவு சோகமும் இழையோடக் கவிதை அமைந்துள்ளது. ஆனால் எவ்விதமான துணை என்பது வாசகனுக்குத் தெளிவுபடுத்தப் படவில்லை. கவிஞரின் அகவயமான (subjective) கருத்தின் வெளிப்பாடாக உள்ளது.

'உணவுக்காக' என்னும் தலைப்பில் அமைந்த கவிதையில் வாழ்க்கை உணவு உண்பதற்காக அமைந்து விட்டதென அவலச் சுவையை வழங்குகிறது கவிதை.

*உண்ணுவதற்குத் தான்*
*வாழ்கின்றேனோ?*
*காலையில்*
*எழுந்தது முதல்*
*மாலை வரை*
*செய்யும்*
*தொழிலே தெய்வம்!*
*கூலியை*
*வாங்கி விட்டால்*
*அது*
*அரிசியாயும் பருப்பாயும்*
*உலையில் கொதிக்கிறது*
*அடுத்த நாளும்*
*அதற்கு அடுத்த நாளும்*
*அப்படியே!*
*இப்போது*
*தெளிவாகப் புரிகிறது –*
*உண்பதற்காகத்தான்*
*உழைக்கிறேன்*
*உழைப்பே வாழ்க்கையாகிவிட்டது* (மேலது, ப. 19)

தன்னுணர்ச்சிக் கவிதையான 'சானட்' (Sonnet) போன்று இது அமைந்துள்ளது. உண்ணுவதற்குத்தான் வாழ்கிறேனா? என்கிற ஐயம். அதற்குக் காரணமாக அமைகிற வாழ்க்கை நிகழ்ச்சிகள்; அனைத்தையும் தொகுத்துப் பார்க்கும்போது ஐயம் தீர்க்கும் விடையும் கிடைத்துவிடுகிறது. வாழ்வதற்காக உழைப்பது என்பது மாறி உழைப்பதற்காக வாழும் விலங்குகள்போல், எந்திரம்போல் மனிதன் மாறிவிட்ட அவலம் மேலோங்கக் கவிதை வெளிப்பட்டுள்ளது. கவலைகள் அற்ற வாழ்க்கை கைவருமா? என்று ஏங்கிக் கவிதை ஒன்று இயற்றியுள்ளார். தலைப்பு 'ஏக்கம்' என்பதாகும்.

*ஓயாத அலைகள் போல்*
*எனக்குக் கவலைகள்*
*ஒன்று போனால் இன்னொன்று*
*ஒவ்வொரு நாளும் . . .*
*என்து கோரிக்கைகள்*
*சுழன்று அடிக்கும்*
*காற்றில்*

*கேட்காமலே போய்விட்டன . . .*
*என் எண்ணங்கள்*
*எழுதப் பெறாமலே*
*இற்றுப் போயின*
*என் வாழ்க்கை*
*நேற்றாய்க் கழியாமல்*
*இன்றாய் அரும்பி*
*நாளையாய் மலருமா?* (மேலது, பக். 40, 41)

என்ற கேள்வி எல்லாருடையதும்தான். எனினும் நாம் கவிஞரிடம் கேள்வியை எதிர்பார்ப்பதில்லை. பதிலைத்தான். இதற்கு விடையாக அவர் ஒரு கவிதையும் எழுதியுள்ளார்.

**துயருற்றோரின்**
**துயர்கண்டு**
**துன்பம் துடைக்க**
**துடித்தெழும்**
**இதயம் இருப்பவர்கள்**
**எல்லாரும் கவிஞர்களே! (உன்னைத் தேடி ஓர் உலா, ப. 49)**

இக்கவிதைக்குத் தலைப்பு 'கவிஞர்கள்' என்பதாக அமைத்துள்ளார். இக்கவிதையில் புத்தர், நபிகள் நாயகம், இயேசு கிறிஸ்து போன்றோர்அனைவரும் இதுபோன்ற செயல்கள் செய்தமையால் அவர்களையும் கவிஞர் என்றே குறிப்பிடுகிறார். வாழ்க்கையை எழுதுகிறேன். நீங்கள் அதைக் கவிதை என்று ஒப்புக்கொண்டாலும் கொள்ளாவிட்டாலும் பரவாயில்லை எனும் பொருள்படும்படி, 'கவிதை அல்ல -கனல்கள்' என்று தலைப்பிட்டுள்ளார். கவிதை பின்வருமாறு அமைகிறது.

*நான்*
*எழுதுவது எல்லாம் கவிதை*
*என்று சாதிக்கவில்லை . . .*

*இருபதில் இருந்த*
*வசந்தத்தை*
*முப்பதில் தொலைத்து விட்டு*
*மூடாங்கு போட்டு உலவும்*
*முதிர்க்கன்னிகள்*

*பாதையோரத்தில்*
*பத்தும் பறந்த நிலையில் இருக்கும்*
*பசித்த ஜீவன்கள்*

*கோடி கோடியென்று பேசும்*
*கோமான்களின்*

பேச்சைக் கேட்டுக் கொண்டே!
எட்டாத கொட்டாவிகளை
விட்டு வரும் குமாஸ்தா

என வாழ்க்கையினை வாழ முடியாது கழித்துக் கொண்டிருக்கும் மக்கள் பகுதிகளைக் காட்சிப்படுத்துகிறார். அதாவது தற்கால சமூகத்தின் நிலையைக் காட்டுகிறார். ஒரு கூலித் தொழிலாளியின் குடும்ப நிகழ்ச்சிகளை விளக்க 'விளக்கிருந்தும் இருளே' என்ற தலைப்பில் கவிதை எழுதியுள்ளார். சிறுகதை போன்று ஒரு 'மனித நிலை'யைக் கவிதை வடிவில் தருகிறார். வெள்ளிக்கிழமை காலையிலிருந்து இரவு வரை அந்தக் குடும்பத் தலைவிக்கும் தலைவனுக்கும் நடக்கும் நிகழ்ச்சிகளை மனத்திரையில் தெரிய வைக்கிறார். தலைவன் நாளெல்லாம் வேலை செய்து மாலையில் குடித்து விட்டு, தினமும் அதேபோல வீடு திரும்புகிறவன். வெள்ளிக்கிழமை நல்ல நாள் என்பதால் இன்று மட்டும் மதுவுக்கு விடுமுறை விட்டுவிடும்படிக் கேட்டுக்கொள்ளப்பட்டும் அதையும் மீறித் தினத் திருவிழாவாக தலைவனின் வருகை அமைகிறது. தலைவியின் எதிர்பார்ப்பு ஏமாற்றமாக மாறிய சோக உணர்வு கவிதையில் வெளிப்படுகிறது.

சந்தேகம் முகத்தில்
கோடாய் விழுந்தது
தினமும் நடக்கும்
திருநாள் இன்றும் . . . . . . . .

'நாளும் கோளும்
நலிந்தோர்க்கு இல்லை'
என்பது உண்மைதான்

தூரத்தில் . . .
நாய் குரைக்கும் ஓசை
முன்தேர்க்குரவையாய்
ஒரு நாய் ஒலியெழுப்ப
பின் தேர்க்குரவையாய்
ஒரு நாய் ஊளையிட
நடுவில் ஒரு நாய்
தள்ளாடி
தள்ளாடி

கனவுச் சுமைகளோடு
காத்திருந்தவள்
நனவே வேண்டாம்
என்று

**நடுங்குகிறாள்**
**எம்நாட்டு மங்கையருக்கு**
**நனவில் நம்பிக்கையே இல்லை -**
**வாழ்வே கனவாகி விட்டதாலோ!**
**(உன்னைத் தேடி ஓர் உலா, பக். 65-66)**

'விதைக்கப்பட்ட வியர்வைகள்' என்னும் கவிதை ஏழு பக்க அளவில் நீண்டு அமைந்துள்ளது. இதில் உழைக்கிற மனிதர்களின் நிலைமைகள் சித்திரிக்கப்படுகிறது. அவற்றுள் ஒரு சில பகுதிகள்:

**'கைகாட்டி மரமாய்க்**
**கைகாட்டி நிற்பவன் அல்ல நீ!**
**கல்லையும்**
**மண்ணையும்**
**கடலையும்**
**காற்றையும் கைவசப்படுத்தியவன்! (பெருக்கல் குறி, ப. 58)**

'உலகுக்கு உயிர் கொடுப்பவன்' என்று போற்றப்பட்ட உழைப்பாளியின் நிலையைக் கூறுவது:

**அறுத்ததை**
**அள்ளிக் கொடுத்து விட்டு**
**அள்ளித்தின்ன**
**சோறு இல்லாமல் அலைபவன்**
**பிறர்**
**எள்ளலுக்கு இறையானவன்**
**ஊருக்கு**
**உழைத்து விட்டுச்**
**சேரிக்குள்**
**உழல்பவன் (மேலது, ப. 59)**

உழைப்பாளிக்குக் கவிஞர் மரியாதை செய்ய விரும்புகிறார்.

**வாருங்கள்**
**உலகுக்கு**
**உயிர் கொடுப்பவனுக்கு**
**மானுடத்தை**
**மலரச் செய்தவனுக்கு**
**மணிமாலை சூட்டுவோம் (மேலது, ப. 63)**

உழைப்பவன் நிலை தாழ்ந்திருந்தாலும் உழைப்பவன் உலகின் இரத்தமும் சதையுமாக இருக்கிறான் என்பதைக் கூறிப் பாராட்டும் விதமாகக் கவிதை நிறைவடைகிறது.

*முரண்*

மனித அடிப்படை உணர்வுகளோடு (Instincts) கவிஞன் புறஉலகில் உறவு கொள்கிறான். இவ்வாறான உறவு நிலையில் ஏற்படும் இழுப்பு (Tension) நிலை கவிதையைத் தோற்றுவிக்கிறது. அதாவது மனித உணர்வுகளுக்கும் புறவுலக நிலைமைகளுக்கும் பொருத்தமில்லாது போகும்போது கவிஞன் மனித உணர்வில் அமைந்த மாய உலகினைப் (Mockworld) படைத்து அதில் தனது சுதந்திர உணர்வுகளோடு வலம் வருகிறான். 'வேர்களின் விலாசங்கள்' என்னும் கவிதையில்,

*கலசங்களுக்கு*
*மட்டும்தானே குடமுழுக்கு*
*அஸ்திவாரங்கள் இங்கே*
*அமைதியாய் அழுகின்றன!* *(மேலது, ப. 14)*

*உழைத்தவன்*
*பசித்து இருக்கிறான்*
*உறிஞ்சுபவன்*
*உண்டு மகிழ்கிறான்* *(மேலது, ப. 15)*

உழைப்பிற்கும் அதனைப் பயன்படுத்துவதற்கும் உறவுகளற்று எதிரான நிலையில் உழைத்தவன் பொருளை இழப்பதும் எடுத்துக் கொள்கிறவன் உழைப்பைத் தவிர்த்து இன்ப வாழ்வு வாழும் சூழல் முரண்பட்ட நிலையினைத் தோற்றுவிக்கிறது. இந்நிலையில் பாட்டாளியின் வாழ்க்கை பெருந்துயராக மாறுவதைக் காட்சிப் படுத்துகிறார். தேசமுரண் பற்றிய கவிதை, 'பிள்ளையார் பிடிக்கப் போய்' என்னும் தலைப்பில்,

*நாங்கள்*
*பிள்ளையார்தான்*
*பிடிக்க எண்ணினோம்*
*அதுதான்*
*குரங்காகி விட்டது*

*சிக்கனத்தைப் பிரச்சாரம் செய்ய சிறப்பு விமானத்தில்*
*தினந்தோறும் பயணம் செய்கிறோம்*

*விலைவாசியைக்*
*கட்டுப்படுத்த*
*விழா நடத்தி விட்டு*
*தொழில்களை மட்டும் முடக்கி விடுகிறோம்*

*வன்முறையை ஒழிக்க*
*நாள்தோறும்*

துப்பாக்கிச்சூடும்
தடியடியும் தவறாமல்
நடத்துகிறோம்

எங்கும் தமிழ்
எதிலும் தமிழ் முழங்க
'இங்கிலீஷ் மீடியம் ஸ்கூலுக்கு'
அடுத்தடுத்து
அனுமதி வழங்குகிறோம் (மேலது, பக். 77-78)

நாடு முரண்படும் போது அதன் குறைந்தபட்ச அலகான குடும்பம் அதில் உள்ள மனிதர்களின் வாழ்க்கை என்பது முரண்பாடாய் அமைந்துவிடுகிறது. முரணுக்கு இதுவே மூலகாரணியாய் அமைகிறது. இதற்கு மாற்று எது என்று கவிஞரால் கூற இயலவில்லை.

கடவுள் பக்தி

கடவுளுக்காகப் பிள்ளைக்கறியையும், இறைத்தொண்டருக்காக விதை நெல்லையும் சமைத்துப் போட்டது பக்திக் காலத்து அடியார்களின் தொண்டு. நரியைப் பரியாக்கியதும் பிட்டுக்கு மண் சுமந்ததும் நாயன்மார் காலத்துக் கடவுள் தொண்டு. இப்போது பக்தி என்பது பொருளற்ற வெறும் சடங்காக மாறி விட்டது. இதனையே கவிதை ஆக்குகிறார் கவிஞர். கவிதை தலைப்பு 'வீண் நோக்கு'

பழநி மலைக்குப்
பால் காவடி எடுத்தான்
போன வருடம்!
திருப்பதி
உண்டியலில்
பத்தாயிரத்தைப் பத்துமாதம்
பாக்கியுடன் சேர்த்துப் போட்டான்
போன மாதம்! (பெருக்கல் குறி, ப. 20)

அரிசி வாங்குவதற்குப்
பணம் இல்லை என்று
ஐந்து ரூபாய்
கடனாகக் கேட்ட
அடுத்த வீட்டுக்காரனிடம் சொன்னான்
இல்லவே இல்லை என்று (மேலது, ப. 21)

கல்வி

நவீனக் காலத்துச் சமூக இயக்கத்திற்கு அடிப்படையாக அமைவது பொதுக்கல்வி, பொது அறிவு என்பதாகும். இதனைப்

பெற்றால்தான் நவீனக் காலத்தில் வாழ முடியும். எனினும் இதனைப் பெறுவது அத்துணை எளிமையானதாக இல்லை. இதனையே 'பட்டமும் பட்டாவும்' என்னும் கவிதை,

கட்டம் போட்ட சட்டை
அத்றகுப் பொருத்தமாய்
முழுக் கால்சட்டை

இடது கையில் எச்.எம்.டி.
வலது கையில் புத்தகம்
ஐந்து மைலுக்கு அப்பால் உள்ள
கல்லூரிக்குச் செல்ல
புது மிதி வண்டி

மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு
நான் பட்டதாரி
என் தந்தையிடம் இருந்து
கை மாறிப் போயிருந்தது
இருந்த ஒரே ஒரு வயல் பட்டா

என்று கல்வி சந்தைச் சரக்காக மாறியதைக் கூறுகிறது. இவ்வாறான நிலை கல்வித்துறையில் நிகழ்ந்ததால் கல்வி அறிவைத் தருவதில்லை என்பதாய்ப் பின்வரும் 'பட்டம்' என்னும் கவிதை விளக்குகிறது.

படிப்புக்கு வழங்கப்பட்ட
பட்டம் - இன்று
பதவிக்கு என்றாகி விட்டது
பகுத்தறிவுப் பாதை போட்ட
பல்கலைக்கழகங்கள்
இன்று பட்டங்களை
மட்டுமே கொடுக்கின்றன (மேலது, ப. 28)

மதுவைப் பற்றிய கவிதை

குடிப்பவனையே
குடிக்கும்
திரவம் (மேலது, ப. 39)

பால்சமத்துவம்

ஆணும் பெண்ணும்
சமம் என்றால்
அன்பால் சமுதாயம் மலரும்
ஆணுக்குப் பெண்
அடிமை எனும்
ஆணவச் சமுதாயம் அழியும் (மேலது, ப. 42)

திருக்குறள்

ஈரடியால்
உலகை அளந்தவன் அல்ல நீ
ஈரடிக்குள்
உலகை அடக்கியவன்
(நீண்டக் கவிதை) (மேலது, ப. 68)

பேனா

குனிந்து
எழுதும் வரை பேனா-
நிமிர்ந்து
எழுந்து நின்றால் ஆயுதம் (மேலது, ப. 83)

முதல் தொகுப்பில் காதல் உணர்வைப்பேசும் கவிதைகள் நிறைந்துள்ளன. இரண்டாவது தொகுப்பு பதினைந்து ஆண்டு காலத் தொகுப்பு என்கிறார். இதில் வாழ்வின் அனைத்து விதமான ஏற்ற இரக்கங்களைச் சுமந்து வரும் உணர்வு கவிதையாக வந்து செல்கிறது. நாம் கருத்து ஒத்தவர்கள் என்று குறிப்பிடுவோர் எல்லாம் கருத்து வேற்றுமை குறைவாகக் கொண்டவர்கள் என்றுதான் பொருள். அந்த வகையில் ஒவ்வொரு மனிதனும் தனித்துவம் கொண்டவனாகவே விளங்குகிறான். அந்தத் தனித்துவம் என்ற கோட்டை இழக்காமல் இருவர் கொள்ளும் நட்பே நிலைத்து நிற்கும். ஒருவரின் தனித்துவத்தை அழித்து அதன் மேல் அமைக்கும் நட்பு மாளிகை ஆதிக்க மனப்பான்மையாக அமையுமே தவிர, கருத்தொற்றுமையைக் காட்டாது. 'அவரவர் கோடு' என்ற கவிதையில் இந்தத் தனித்துவச் சிந்தனையைத் தெளிவுபடுத்தியுள்ளார் கவிஞர்.

உனது மூளையால்
என்னை யோசிக்கலாம்
எனது மூளையால்
உன்னையும் யோசிக்கலாம்.

எனது யோசிப்பு
உனது கோட்டைச் சுற்றட்டும்
உனது யோசிப்பு
எனது கோட்டைச் சுற்றட்டும்.

என்னை
உனது கோட்டிலும்
உன்னை
எனது கோட்டிலும்

யோசித்தால்
நீயும் பூஜ்யம்
நானும் பூஜ்யம்

என்று நட்புக்கு இடையில் தனித்துவங்கள் நீடிக்கவேண்டும் என்கிறார். ஒவ்வொருவரின் கருத்தும் மதிக்கப்படவேண்டும் என்ற கவிஞர் நட்புக்கு இடையே இடைவெளி வேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளார். நட்புக்கு இடையில் எந்தப் பேதமும் இருக்கக் கூடாது என்றுதான் எல்லோரும் கூறுவார்கள். ஆனால் இவரோ நட்புக்கு இடையில் இருக்கும் இடைவெளி இருந்தால்தான் பழைமையான நட்பு நீடிக்கும் என்று பாடுகிறார்.

சாதி, மதம், மொழி, நாடு, பால் வேற்றுமைகளைக் கடந்து தோன்றி மலர்வது நட்பு. இந்த நட்புக்காக முன்னர்க் குறிப்பிட்ட அனைத்து வேற்றுமைகளையும் களைந்துவிட முடியாது. இவற்றை எல்லாம் களைந்து விட்டோம் என்று கூறுவது இன்றைய சூழ்நிலையில் பொய்யுரையாகத்தான் அமையும். இதை உணர்ந்தே இந்த இடைவெளிகளை அப்படியே விட்டுவிடுங்கள் என்கிறார் 'இடைவெளி' என்ற கவிதையில்.

உன்னை நானும்
என்னை நீயும்
உணர்ந்து உயிர்த்திடத் தான்
இந்த இடைவெளி

இந்த இடைவெளி
அப்படியே இருக்கட்டும்

இதில்தான்
நமது இருபது ஆண்டுகால நட்பு
இறக்காமல் இருக்கும்

என்கிறார். மரத்தின் தழைகளை வெட்டி, வயலுக்கு உரமாக்குவது மரபுதான். தழைகளும் சிறுசிறு கொம்புகளும் வெட்டப்பட்ட பிறகு அந்த மரங்கள் எல்லாம் எவ்வாறு காட்சியளிக்கின்றன என்பதை,

வயலில் இருந்து
வருகின்ற வழிகளில்
மரங்கள் எல்லாம்
மொட்டை மொட்டையாய்—
அப்பா இறந்ததும் இருந்த
எனது தலையைப் போல

என்று கவிதைப்படுத்தியுள்ளார்.

தலைகளை இழந்த மரங்கள் மொட்டையடிக்கப்பட்ட மரங்கள் என்று கூறி அப்படியே விட்டுவிடாமல் தமது தந்தையார் இறந்ததற்குத்தான் போட்டுக்கொண்ட மொட்டையுடன் இணைத்துப் பேசுகிறார். எனது தந்தையின் இழப்பிற்கு நான் மொட்டையடித்தேன். மரமே நீ யாருடைய இழப்புக்காக மொட்டையடித்தாய்? என்று நேரடியாகச் சொல்லாமலேயே நமது சிந்தனைக்கு விட்டுவிடுகிறார். கவிதையில் சொல்லப்பட்ட சொற்களைக் காட்டிலும் சொல்லாமல் விடப்பட்ட சொற்களே, சொல்லுக்கு இடையிலான வெற்றிடங்களே பல செய்திகளைச் சொல்லும். அந்த வகையில் 'மரத்தின் மொட்டை' என்ற இந்தக் கவிதையை வடித்திருக்கிறார்.

படைப்பாளியின் சோகங்களைக் குறைப்பதற்கும் படிப்பவரின் சோகங்களைக் குறைப்பதற்கும் கவிதைகள் பயன்படும் என்பதற்கு 'இடிந்த சுவர்' என்ற கவிதை எழுந்து நிற்கிறது.

**அடைமழையும்**
**நான்கு நாள் விடுமுறையும்**
**மகிழ்ச்சிதான் என்றாலும்**
**இடிந்த சுவர்**
**மனத்தை என்னவோ செய்தது.**

என்னும் கவிதையில் இடிந்து போன நமது வீட்டின் இழப்பை, துயரை எளிதாகும் வகையில் தொடர்ந்து பெய்த மழையைப் பார்த்து மகிழ்ச்சி அடைகிறார் கவிஞர். மண்ணோடு கலந்து நிற்பவன் கவிஞன். கவிஞனைப் போன்றே மண்ணோடு பொருந்தி வாழ்பவன் உழவன். மழையால் எத்தனை இழப்புகள் இருந்தாலும் மழையை வரவேற்பதற்கு உழவன் தவறுவதில்லை. அதைப் போன்றே தமது சோகத்தைத் தள்ளிவைத்துவிட்டு மழைக்கு மகிழ்ச்சிக் கவிதை பாடியுள்ளார் கவிஞர்.

வீடு நமக்குச் சுகம். ஆனால் நத்தைக்கு வீடே சுமை. ஆமாம். அதன் கூட்டைச் சுமந்தபடிதானே அது செல்கிறது. சுமை என்று கூட்டை உதறித் தள்ளிவிட்டால் நத்தை எந்தப் பறவைக்கோ விருந்தாகப் போவது உறுதி. இந்த உண்மைக்குள் ஒரு கவிதையை நுழைத்திருக்கிறார் கவிஞர். 'நத்தைக் கூடு' என்னும் கவிதையில்

**நானும் சுமைதான் உனக்கு**
**நத்தையும் நீயும் ஒன்று**
**கூடும் நானும் ஒன்று**

என்று கணவனும் மனைவியும் ஒருவருக்கு ஒருவர் சுகமாகவும் சுமையாகவும் வாழ்வதைக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். எவ்வளவுதான் சுமையாக இல்லறம் தோன்றினாலும் அது சுமை என்று உதறித் தள்ளக் கூடியது அன்று. சுமக்க வேண்டிய ஒன்று என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார் கவிஞர்.

மனத்தின் நிலைக்கு ஏற்பவே தூக்கம் வரும் - வராமல் வாட்டும். மனத்தில் கவலை இல்லாமல் இருந்தால் நிம்மதியான தூக்கம் வரும். மனத்தில் கவலை நிறைந்திருந்தால் தூக்கம் வருகிறது என்று படுத்தாலும் வந்த தூக்கமும் போய்க் கொட்டக் கொட்ட விழித்திருப்போம்.

நடுத்தர மக்கள் பிரச்சினைகளையே வரவுகளாக்கி அதில் வாழ்ந்து வருகிறவர்கள் முள்ளின்மேல் படுப்பது, தண்ணீரில் நடப்பது எதுவும் எளிதுதான். பிரச்சினைகளுடன் வாழ்வதைக் காட்டிலும் என்னும் அளவிற்குப் பொறுக்க முடியாத பிரச்சினைகளைத்தாங்கி நிற்கும்மனிதன் தூக்கம் வராமல் தவிப்பதைப் பெருக்கல் குறி என்னும் கவிதைத் தொகுப்பில் 'வராத தூக்கம்' கவிஞர் காட்டியுள்ளார். கொடுக்க வேண்டிய வங்கிக்கடன், சொல்ல மறந்த செய்தி, இயக்குநரின் கோபம், பஸ் டிரைவர் திட்டியது, மனைவி வாங்கிக் கேட்ட புடவை என்று ஒருவனது நினைவில் வந்த அனைத்தையும் தெரிவித்த கவிஞர் தூக்கம் வரவில்லை என்பதையும் குறிப்பிட்டுள்ளார்.

**எல்லாம் வந்தன –**
**தொலைந்துபோன தூக்கத்தைத் தவிர**

என்ற கவிதையில் ஓர் ஏக்க வெளிப்பாட்டைக் காணமுடிகிறது. இருளை அடர்ந்த பொருளாகவும் கருமை நிறம் கொண்ட பொருளாகவும் திடப்பொருளாகவும் காண்கிறார் கவிஞர். அதற்கு அவர் மூன்று உவமைகளைப் பயன்படுத்தியுள்ளார். அமாவாசையை விட அடர்த்தியானது என்றும் சிம்னி விளக்கின் கருகலுடனும் அறுக்கப்பட்ட அல்வாத் துண்டுடனும் உவமித்துள்ளார்.

**எனது இருள்**
**அமாவாசையை விட**
**அடர்த்தியானது.**

**எண்ணெய் இல்லாத**
**சிம்னி விளக்கின்**
**கருகிய திரியை விடக்**
**கருமையானது.**

**அறுத்தால் அல்வாத் துண்டுபோல்**
**கறுப்பாய்**
**வரும் அளவுக்குக்**
**கட்டியானது**

என்னும் அடிகளை ‘வேலை’ என்னும் கவிதையில் வடித்துள்ளார். நம்பிக்கைதான் வாழ்க்கை. எல்லா இரவுகளும் விடிகின்றன என்னும் நம்பிக்கை இப்போது இருக்கிறது. முதன் முதல் இரவைப் பார்த்த மனிதன் அதன் இருளைப் பார்த்து அஞ்சியிருப்பான். இருண்ட இந்த உலகம் இப்படியே இருளிலேயே அமுங்கி விடுமோ என்று அரற்றியிருப்பான். இரவு முழுவதும் தூங்காமல் கவலையோடு இருந்திருப்பான். அன்று அவன் அடைந்த இன்னலை இன்று யாரும் இரவைப் பார்த்து அனுபவிப்பதில்லை. ஏனென்றால் எல்லா இரவுகளும் விடிவதைப் பார்த்துப் பழகிவிட்டோம். அதனால் விடியும் என்ற நம்பிக்கை இருக்கிறது. எந்த முனிவராவது நமது கண்முன் தோன்றி இன்றைக்கு இரவு விடியாது என்று சத்தியம் செய்தாலும் நாம் நம்பமாட்டோம். ஏனென்றால் எல்லா இரவுகளும் விடியும் என்ற நம்பிக்கை நம்முள் ஆழ வேரூன்றியுள்ளது.

இன்றைக்கு நாம் அனுபவிக்கும் இன்னல்கள் யாவும் கதிரவனைப் பார்த்ததும் பயந்தோடும் பனியைப்போல் அகன்று விடும் என்ற நம்பிக்கையில் வாழ்கின்ற தன்மையைக் கவிஞர் தமது ‘என்றாவது ஒரு நாள்’ என்ற கவிதையில் பதிவு செய்துள்ளார்.

**இன்று இல்லை என்றாலும்**
**நாளை.**
**நாளை இல்லை என்றாலும்**
**நாளை மறுநாள்.**
**நாளை மறுநாள் இல்லை என்றாலும்**
**என்றாவது ஒரு நாள்**
**எழுந்து நிற்போம்**
**என்ற நம்பிக்கை**
**எங்கள் நரம்புகளில்.**

என்று நம்பிக்கையை மனத்தில் மட்டும் அல்ல நாடி நரம்புகளில் ஏற்றியுள்ளதைத் தெளிவுபடுத்தியுள்ளார். பெருமையும் சிறுமையும் அறிவால் அளக்கப்பட வேண்டியவை. உருவம், செல்வம் போன்ற புறக்காரணிகளால் இவை கவனிக்கப்படுவதில்லை. எனவே தான் ‘உருவு கண்டு எள்ளாமை வேண்டும்’ என்னும் பழமொழி இங்கு நிலவுகிறது. ஆணியின் கூர்மையான பகுதி சிறியதுதான். அதன் தலைப் பகுதி அகன்று விரிந்து பெரிதாகத்தான் இருக்கிறது.

இங்கே பெரியது, சிறியது என்ற பேதத்திற்கு இடமில்லாமல் ஆணியின் கூர்ப்பகுதிதான் சிறப்பிக்கப்படுகிறது.

பெரிதாக இருப்பதால்
பெருமை வந்து
சேர்வதில்லை.

பெரிதாக இருந்தாலும்
அடிபடுவது
ஆணியின் தலைதான்

சிறிதாக இருப்பதால்
சிறுமை எதுவும்
இருப்பதில்லை.

சிறிதாக இருந்தாலும்
பெருஞ்சுவரையும்
துளைப்பது
கூர்ப்பகுதிதான்.

பெருமையும்
சிறுமையும்
உருவத்தால் அல்ல.
உன்னை அறியும்
அறிவால் மட்டுமே!

என்று பாடியுள்ளார் முகிலை இராசபாண்டியன். கறந்த பால் மடி புகாது. உதிர்ந்த பூ காம்பேறாது. அதுபோலக் கடந்துபோன காலமும் மீண்டும் வருவதில்லை. நமது ஒவ்வொரு பிறந்த நாளின் போதும் நாம் நம் வாழ்நாளில் ஒவ்வோர் ஆண்டை இழந்து விட்டோம் என்றுதான் பொருள். வாழ்ந்த காலத்தையும் வாழ்கிற காலத்தையும் கேட்டால் யாரும் திருப்தியான பதிலைச் சொல்வ தில்லை. அதற்குக் காரணம் வாழும் வகையையும் காலத்தின் அருமையையும் நாம் இன்னும் உணரவில்லை என்றே சொல்ல வேண்டும். இதை அறிந்த கவிஞர் காலத்தின் அருமையை உணர்த்து வதற்காக,

காலம்
கண் போன்றது அல்ல!
கண் போனால் வரும்–
கண்தானம்.
காலம் உயிர் போன்றது–
போனால் வராது

என்கிறார். 'எண்ணம் போல் வாழ்வு' என்பார்கள். அந்த எண்ணம் போல் வாழ்வு எல்லோருக்கும் வாய்ப்பதில்லை. நினைப்பது

ஒன்றாகவும் நடப்பது வேறாகவும் தான் பெரும்பாலானவர் களுக்கு நடக்கிறது. விரும்பியது கிடைக்கவில்லை என்றால் கிடைத்ததை விரும்பு என்ற தொடரை நினைவில் கொண்டுதான் எல்லோரும் தன்னிறைவு கொண்டு வாழ்கிறார்கள்.

**பஞ்சு போல்**
**மனம் வேண்டும்**
**என்றுதான் கேட்டேன்-**
**கிடைத்ததோ**
**பஞ்சுபோல் உடல்**

என்று 'கேட்டதும் கிடைத்ததும்' என்ற கவிதையில் பாடியுள்ளார்.

**கவிதையாக்கம்**

கவிஞரின் முதல் தொகுப்பிற்கும் இரண்டாம் தொகுப் பிற்கும் இடையே வளர்ச்சி உள்ளது. முதல் தொகுப்பில் குடித்து விட்டு வரும் தொழிலாளியை 'நாய்' என்று வருணித்திருக்கிறார். இரண்டாவது தொகுப்பில் உலகிற்கு 'உயிரளிப்பவன்' என்கிறார். இராசபாண்டியனின் கவிதைகளில் தமிழ்க்கல்வியின் மேன்மை, ஈழத்து அகதிகளின் அவல நிலை, ஆண் பெண் சமத்துவம், தொழிலாளர்களின் பெருமை என்பது எல்லாம் காலம் கடந்த, வேறொரு நிலையை அடைந்து விட்ட பொருண்மைகள். அது கவிதைக்குரிய பொருளாக இன்னும் இருப்பது சமூகநிலையாக இருக்கிறது. எனினும் அவை கவிதைக்கு உரிய அழகான மாற்றம் பெறுவதற்கு உணர்வு நிலைகளில் ஒருமிப்பும், அழகியல் இலட்சியங்களில் இதனிலும் மேல்நிலைக்குச் செல்ல வேண்டியிருக்கிறது.

## முதன்மை நூல்கள்

1. **உன்னைத் தேடி ஓர் உலா**, சூரியன் பதிப்பகம், சென்னை, 1991.

2. பெருக்கல் குறி, கோவன் பதிப்பகம், சென்னை, டிசம்பர், 2003.

# ராஜ முருகுபாண்டியன்

## கவிஞரைப் பற்றி

பிறந்த ஊர் கிராமத்து மேடு. 1960ஆம் ஆண்டு ராஜவேல், கிருஷ்ணாம்பாள் இவர்களின் புதல்வனாகப் பிறந்தவர் ராஜமுருகு பாண்டியன். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சிப் பட்டம் பெற்றவர். 1980களிலிருந்து கவிதைகள் எழுதத் தொடங்கியவர். அம்பேத்கர் சிந்தனையில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவர். தலித்துகளின் விடுதலையே நிஜமான விடுதலை என்பது இவரது எண்ணம். இன்று தரங்கம்பாடியில் உள்ள தரங்கைப் பேராயர் மாணிக்கம் லூத்ரன் கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிபவர்.

1985இல் வெளியான **வெகுதூரம் இல்லை**, 1989இல் வெளியான **தீபங்கள் தீப்பந்தங்கள்**, 1992இல் வெளியான **'கவியரங்கக் கவிதைத்'** தொகுதி, **ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் மற்றும் சில தலித் கவிதைகளும்** போன்றன இவரது கவிதைத் தொகுப்புகள். ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப் பட்ட **சில தலித் கவிதைகளும்** என்ற இக்கவிதைத் தொகுப்பு 1994இல் சிவகங்கையில் வெளியானது.

## நூலின் அமைப்பு

இந்நூல் 28 கவிதைகளும், 16 பக்க அளவில் கவிஞர் மீராவின் ஒரு நீண்ட முன்னுரையையும் கொண்டது. பின்னுரையாக வெற்றிச் செல்வன் என்பவர் 'எங்களில் அவன் பெயர் கவிஞன்' என்ற தலைப்பில் கவிதை பற்றியும், கவிஞரைப் பற்றியும் நான்கு பக்க அளவில் மதிப்பீடு செய்துள்ளார். கவிஞர் ராஜ முருகுபாண்டியன் கவிதையின் இயல்பு சமூக வளர்ச்சிக்கு உதவும்படி அமைய வேண்டும் என்னும் பொருளில் ஏழு பக்க அளவில் மற்றொரு பின்னுரையைத் தந்துள்ளார். இந்நூல் கவிஞர் மீராவின் பதிப்பகமான அன்னம் வெளியீட்டில் 1994ஆம் ஆண்டில் சிவகங்கையில் வெளியாகியுள்ளது. இந்நூலில் இடம் பெற்றுள்ள கவிதைகள் பொருண்மை நோக்கில், வாழ்க்கை, இலட்சியம், எதிர்காலம், அரசியல், கல்வி, காதல் என்னும் தலைப்புகளில் அமைக்கப்பட்டுள்ளன.

வாழ்க்கை

குடும்ப உறவில் மையம் கொள்கிறது மனித வாழ்க்கை. இவ்வாழ்க்கையில் தோன்றும் சிக்கல்களை விமர்சனமாகக் கவிஞர்கள் கவிதையில் இயற்றுகின்றனர். இதில் இருக்கும் குறை களைச் சுட்டிக்காட்டுவது அல்லது குறைகளற்ற எதிர்காலத்தைக் குறித்துக் காட்டுவது கவிதையின் பண்பாக அமைகிறது. அவ்வாறு தலித் வாழ்க்கையைக் குறிப்பதாக அமைந்த,

**முதலாளியம்மாவின்**
**பழம்புடவை**
**அம்மாவிற்குப் புதுப்புடவை**

**அம்மாவின்**
**பழம்புடவை**
**அக்காவிற்குப் புதுப்புடவை**

**அக்காவின்**
**கிழிந்த புடவை**
**தங்கைக்குப் புதுத்தாவணி**

**தங்கையின்**
**கிழிந்த தாவணி**
**தம்பிக்குப் புதுக்கோவணம்** *(தலித் 1, ப. 72)*

என்ற இவரது கவிதை தலித் மக்களின் வறுமை எவ்விதம் உள்ளது என்பதனைப் படம்பிடித்துக் காட்டுவதாய் அமைந்துள்ளது.

பொருளாதாரத்தில் பின்தங்கி வறுமையில் வாழும் மக்கள் தங்களுக்குப் பெண் குழந்தை என்பது சுமை என்றும், ஆண் குழந்தை என்றால் எந்த வேலையாவது செய்து பிழைத்துக் கொள்வார்கள் என்றும் எண்ணுகிறார்கள். அதற்குக் காரணம் சமூகத்தில் பெண்களின் வாழ்க்கையில் முன்னேற்றம் என்பது சுயசார்பு அற்றதாக ஆணையோ அல்லது குடும்பத்தாரையோ சார்ந்து இருக்க வேண்டிய சூழல் உள்ளது. இதன் காரணமாகக் குடும்பத்தவருக்குப் பெண் குழந்தைகளை வளர்ப்பது என்பது பெரும்பாரமாக ஆகிவிடுகிறது. பெண் குழந்தைகளை ஒன்றுக்கு மேல் வைத்துக் கொள்ள விரும்புவது இல்லை. மீறிப் பிறந்து விட்டால் கொன்றுவிடுகின்றனர். அவ்வகையில், ஆணாதிக்கச் சமூகத்தின் பிடியில் தலித் இனப் பெண்களும் அவதியுறும் காட்சியினைப் பிரசவம் என்ற கவிதை வழியாக ஆசிரியர் கோடிட்டுக் கட்டியிருப்பது பெண்ணியத்தின் மீது கொண்டிருந்த அக்கறையைக் காட்டும்.

**ஒரு மணிநேரம் உயிர் நடுக்கம்**
**ஓய்ந்த பிறகு**
**ஒரு புல்லாங்குழல் சத்தம்**
**மருத்துவச்சி சொன்னாள்**
**மறுபடியும் பொட்டப்பா** *(ப. 23)*

இங்கே புதிதாய்த் தோன்றிய சிசுவை இனிமையான புல்லாங்குழலுக்கு ஒப்பிட, மருத்துவச்சி 'மறுபடியும் பொட்டப்பா' என்ற அறிவிப்பின் மூலம் பொட்டைப் பிள்ளை என முகம் சுழித்துக் கூறுவதாகக் கவிதையை அமைத்துள்ளார். இதன்வழிப் பெண் குழந்தையை இச்சமூகத்தில் ஒரு பகுதியில் வெறுக்கப்படுவதையும் அப்படிப் பிறந்த குழந்தையைத் தனது சமூக, பொருளாதார நிலைக்கு வளர்க்க முடியாது என்ற கருத்தில் குழந்தையைக் கொன்றுவிடுவதாகச் சொல்லும் இடத்தில்,

**புல்லாங்குழலின் ஓட்டைகளைத்**
**தாயே அடைத்தாள்**
**கண்ணில் கட்டியிருந்த**
**கறுப்புத்துணி நனைந்து போனது!** *(ப. 24)*

என்ற வரிகளின் வாயிலாகச் சமூகச் சட்டத்தையும் மீறி இத்தகைய கொடுமைகள் அறியாமையாலும், வறுமையாலும், சமூகக் கட்டுப்பாடுகளாலும் நடைபெறுகின்றன என்பதை 'நீதி தேவதையின் கறுப்புத்துணி நனைந்து போனது' என்ற கவிதைப் பதிவின் மூலம் காட்டியிருப்பது ஈண்டு எண்ணத்தக்கது.

பெண்கள் சமூக வாழ்க்கையைத் தொடங்கும் போது பல்வேறு நெருக்கடிகளை எதிர்கொள்கின்றனர். இதனைத் தடுக்கவே பெண் சிசுக்கொலை செய்யப்படுகிறது. இப்பொருளை மேற்சொன்ன கவிதை தெளிவாகக் காட்டுகிறது. இக்கவிதைத் திருமணப் பருவத்தில் உள்ள பெண்ணிற்குப் 'பெண்பார்க்கும் படலம்' எவ்விதமான உணர்வுகளைத் தோற்றுவிக்கிறது என்பதனைக் காட்டுவது பொருத்தமாக அமைந்துள்ளது.

**மேலோட்டமாய்**
**என்**
**மேனியைப் பார்ப்பவனே**
**உள்ளே உதைபடும்**
**உள்ளத்தை அறிவாயா?**

**கற்பனையில்**
**நான்**
**கட்டி அவிழ்த்துக் கொண்ட**
**தாலியின்**

எண்ணிக்கை
தெரியுமா உனக்கு?

கல்யாணம்
இந்தியப் பெண்ணுக்கு
ஒரு
கட்டாய உடன்கட்டை
வரதட்சணைத் தீ
அதில் மூட்டப்படுகிறது
(ஒரு மௌனம் மொழியாகிறது, பக். 43, 44)

மனித வாழ்க்கை பலவாறு தாழ்ந்து போகும் போதும் கலை மனம் படைத்தவர்கள் அவ்வாழ்வை மேல்நிலைக்குக் கொண்டுவரவே முயலுகிறார்கள். இவ்விதமான வாழ்வைப் பற்றியதாய் உள்ளது பின்வரும் கவிதை.

வணங்கச் சொன்னால்
வணங்கவும்
இணங்கச் சொன்னால்
இணங்கவும்
நான்
தயாராய் இருக்க வேண்டும்
என் வாழ்க்கை
அவர்கள் இழுப்பில்
இயங்க வேண்டும்
அவர்கள் இயல்புகளோடு
நான்
முரண்படுகிற போது
அவர்களில்
மனிதனாகிற தகுதியை
நான்
இழந்து போகிறேன்
இன்னும்
இவர்கள் கண்டுபிடிக்கப்படாத
கிரகமாய்
எனக்குள் மனிதன்.... மனிதன் (சங்கிலித் தொடர், ப. 46)

கவிஞர் கூறும் இலட்சிய மனிதனின் வாழ்க்கையைக் கீழ்வரும் கவிதை உணர்த்துகிறது.

வேண்டாம் சகோதரனே
சுவர்களால் மானுடத்தைச் சேதப்படுத்தாதே
உன் சுவர் ஒன்றும்
சீனச்சுவர் அல்ல

பெர்லின் சுவர்தான்
உடைத்துத்தகர்த்து வெளியே வா
எல்லைகள் எழுதிக்கொள்ளாமல்
எல்லோரையும் அன்பு செய்
மானுடம் முழுமைக்கும்
சொந்தம் கொண்டாடு
காற்றாய்ப் பிரபஞ்சத்தில் கலந்து நில்!
வெளிச்சமாய் பூமியில் கரைந்து போ! (சுவர்கள், ப. 79)

*காதல்*

மனித வாழ்க்கையில் இன்றியமையாத கூறுகளுள் ஒன்று காதல். இக்காதல் மனித சமூகத்தை உயிர்ப்பிப்பதையும், தொடர்ந்து வாழவைப்பதையும் தொழிலாகக் கொண்டுள்ளது. இக்கவிஞனும் காதலைப் பற்றிப் பின்வருமாறு வெளிப்படுத்துகிறார்.

அது
அவளின் புகைப்படம்
மட்டுமல்ல
என்
கனவின் வரைபடமும் கூட
ஒரு
நீண்ட தேடலுக்குப் பின்
என்
வாழ்க்கையின் முகவரியாய்க்
கிடைத்தது
அவள் புகைப்படமே (ப.53)

நான்
காணாமற் போகும்
ஒவ்வொரு முறையும்
அதிலிருந்துதான்
என்னைக்
கண்டுபிடித்துக் கொள்கிறேன்
நான்
கேள்விக்குறியாகிறபோதெல்லாம்
அது மட்டுமே
விடையாகி நிற்கிறது (ப.55)

என்றாவது ஒரு நாள்
அந்தப் புகைப்படமும்
காணாமல் போகும்
அப்போது
அவள் என் அருகிலிருப்பாள்
(நானும் அவள் புகைப்படமும், ப.57)

இவ்வரிகள் காதலின் மேன்மையைப் புலப்படுத்துவதைக் காணமுடிகிறது.

## கல்வி

மனித வாழ்வின் அனுபவங்களைத் தொகுத்து அடுத்த தலைமுறைக்குக் கொடுப்பது கல்வியின் பணியாக உள்ளது. எனினும் இவ்வாறான ஆற்றல் பொருந்திய கல்வி அனைவருக்கும் கிட்டுவது இன்னமும் எட்டாக் கனியாகத்தான் உள்ளது. சமூகத்தில் பெண்கல்வியின் நிலை என்ன என்பதை ஆசிரியர் பின்வரும் கவிதை வழியாகக் கூறியுள்ளது ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

**பாட்டி**
**அடுப்பங்கரையில்**
**காப்பியம் படித்தாள்**
**அம்மா**
**கூடத்தில்**
**நாவல்கள் படித்தாள்**
**சகோதரி**
**திண்ணையில்**
**சினிமாப் பாட்டுப் படித்தாள்**
**யாரும் துணிந்து**
**வெளியில் வந்து**
**வாழ்க்கையைப் படிக்க**
**விரும்பவும் இல்லை**
**விடுதலையும் இல்லை** *(பெண்கல்வி, ப. 32)*

இக்கவிதைவழிப் பெண்களின் சமூகநிலை ஒவ்வொரு காலக் கட்டத்திலும் எவ்விதமாய் இருந்தது என்பதையும், மனிதனின் சிந்தனை சமூக நிலைக்கு ஏற்றவாறு எங்ஙனம் அமைகிறது என்பதையும், கவிதை வெளிப்படுத்துகிறது.

## தலைவர்கள்

ஒவ்வொரு தலைமுறையும் தலைமக்களின் துணையுடன் முன்னேறுகின்றனர். அதேபோல் இலக்கியப் படைப்பாளிகளுக்கும் பல தலைவர்கள் வழிகாட்டியாக உள்ளனர். இக்கவிஞருக்கு டாக்டர் அம்பேத்கர், புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் போன்றோர் வழிகாட்டியாக உள்ளனர். இவர்களைப் பற்றியும் கவிதைகள் எழுதியுள்ளார். டாக்டர் அம்பேத்கர் பற்றிக் கீழ்வரும் கவிதை,

**அவன்**
**மகாத்மா அல்ல**
**மனிதன் . . .**

மனிதனை
மனிதனாகப் பார்த்த
இந்தியன். . . .
அவன்
தேசப்பிதா அல்ல
மக்கள் தலைவன் . . .
அவன் ஞானியல்ல
குனிந்தே வாழ்ந்தவர்களுக்கு
முதுகெலும்பை ஞாபகப்படுத்திய
சமூக விஞ்ஞானி (ப. 58)

அன்று
அம்பேத்கர் எழுதிய
கோப்புகளில் கூட
தீண்டாமை கற்பித்தவர்கள்
இன்று
அவன் புகைப்படத்தை வைத்து
பூஜை செய்கிறார்கள்
ஆம்
அவரைச் சொல்லியும்
வாக்குகள் பொறுக்கலாமே
அம்பேத்கர்
இந்துக்களுக்காக
விடுதலை கேட்டவரல்ல
இந்தியர்களுக்காக
விடுதலை கேட்டவர் . . .
ஆடுகளாயிருப்பதாலல்லவா
பலியிடப்படுகிறீர்கள்
சிங்கங்களாகுங்கள் என்று
எழுச்சி கொள்ளச் சொன்னவர் (டாக்டர் அம்பேத்கர், ப.60)

இக்கவிதை அம்பேத்கரின் பல்வேறு பரிமாணங்களையும், வரலாற்று முக்கியத்துவமுடைய நிகழ்ச்சிகளையும் கூறுவதாக அமைந்துள்ளது. கவிஞருக்குப் புரட்சிக்கவி பாரதிதாசன் மீது மிகுந்த ஈடுபாடு உண்டு. அவரைப் பற்றிய கவிதை:

சூரியனுக்கு
பெற்றோர் இட்டபெயர்
கனக சுப்புரத்தினம்
சூரியன்
தனக்கே வைத்துக்கொண்ட பெயர்
பாரதிதாசன்
சராசரிகளின் அகராதியில்

*தாசன் என்றால் அடிமை*
*அவனுடைய அகராதியிலோ*
*தாசன் என்றால் வீரன்.*
*யாருடைய பாடல்*
*பல்கலைக் கழகங்களைவிட*
*பாமர உதடுகளால்*
*உச்சரிக்கப்படுகிறதோ -*
*சமூக அமைப்பின்*
*அடித்தளத்தையே*
*அசைத்துப் பார்க்கிறதோ-*
*கேட்பவர்*
*நரம்பு வயல்களில்*
*உணர்ச்சி விதையைத்*
*தூவுகிறதோ -*
*யாருடைய பாடல்*
*கிழக்கின் இருட்டைக்கிழித்து*
*வெளிச்சக் கீற்றுகளை*
*வீதிக்கு அழைக்கிறதோ -*
*அவனே புரட்சிக் கவிஞன் ;*
*அவன் தான் பாரதிதாசன்!* *(பாரதிதாசன், பக். 65,66)*

இக்கவிதையில் புரட்சிக் கவிஞரைப் பற்றிய கவிஞரின் எண்ணம், கவி வீச்சுடன் வெளிவந்துள்ளது என்பது புலனாகிறது.

## அரசியல்

மக்களுக்குச் சேவை செய்ய ஏற்படுத்தப்பட்ட அமைப்புகளில் அரசியல் என்பது மிகவும் முக்கியமானது. எனினும் அது ஊழல் பேர்வழிகளிடம் சிக்கி அதனுடைய உண்மைத் தன்மை இன்று சிதைந்து விடுகிறது எனக் கவிஞர் கவிதை யாத்துள்ளார் அதனைப் பற்றிய கவிதையாக,

*இந்தியனே*
*உனக்கு வாழத்தான் தெரியவில்லை*
*வாக்களிக்கவுமா ?*
*இது*
*பிணங்களின் தேசம்*
*பிணங்கள் போஸ்டர்களில் நின்று*
*வாக்குகள் கேட்கும்*
*பிணங்கள் வாக்குச்சாவடிக்கு வந்து*
*வாக்களித்துப் போகும்*
*அப்படியே*
*ஆட்சியையும்*

பிணங்கள்
அலங்கரிக்கும்
மனிதனை விடவும்
பிணங்களுக்கே மரியாதை
நமக்கும்
பிணங்களை அலங்கரிப்பதில்
பிரியம் அதிகம்
இந்தியா
இந்தியனை நம்பவில்லை (தேர்தல் வருகிறது, ப. 35)

உயிர் இருந்தும் பிணங்களைப் போல வாக்குச் சாவடிக்குச் சென்று கள்ள ஓட்டுப்போடும் மனிதர்களை அங்கதத்தோடு எள்ளி நகையாடுகிறார் இக்கவிஞர். இந்திய ஜனநாயகம் வாக்குப் பெட்டிகளால் தீர்மானிக்கப்படுகிறது. வாக்குகளை ஊழல், அதிகாரம் போன்றவற்றின் மூலமாகப் பெற்று விடுகின்றனர். எனவே இந்த ஜனநாயகம் இந்தியனை நம்பவில்லை என்று கவிஞர் அரசியல் அமைப்பில் தோன்றியுள்ள சீர்கேட்டை எடுத்துக் காட்டுகிறார். தேர்தல் முறைகேடாக நடத்தப்படுகிறது. தலைவர்கள் எவ்விதம் உருவாகின்றனர் என்பதனையும் இதனால் ஒரு தேசம் என்னவாக மாறும் என்பதனையும் சுட்டும் கவிதை கீழ்வருமாறு:

காலில் விழுந்தவர்கள்
நாற்காலியில்
அமர்த்தப்பட்டார்கள்
விழ மறுத்தவர்கள்
வெளியில்
நிறுத்தி வைக்கப்பட்டார்கள்
காலில் விழுவது
தேசிய குணம் (ப. 40)

காலில் விழாதவர்கள்
தேச விரோதிகள்
என்று தூற்றப்பட்டார்கள் . . .
உலகப் படத்தைப் பார்க்கிறேன்
எனது தேசம்
யார் காலிலோ
விழுந்து கிடக்கிறது (எங்கே சுயமரியாதை, ப. 41)

## எதிர்காலம்

இன்றைய துயரங்கள் நாளைய நம்பிக்கையில் துடைத்தெறியப்படுகின்றன. இதனைக் கருப்பொருளாகக் கொண்டு படைப்புகள் எழுவதைப் பின்வரும் கவிதை காட்டுகிறது.

எப்போதாவது
வரும் திருவிழா நாளில்
எங்கள்
அடுப்புகள் சூடேறும்
தேரில் கடவுள்
தெருவில் நாங்கள் . . . .
என்றும் (ப. 25)

உழைக்கும் விளக்குகள் எல்லாம்
கால் வலிக்க வீதியில் நிற்கும்
அதன் வெளிச்சம் மட்டும்
மாளிகைக்குள் கைதாகும் . . .
ஒரு மாற்றம் வரும்
அப்போது
இருட்டுகள் இல்லாத
வெளிச்சம் வரும்
அதற்காக
இப்போதிலிருந்தே
நாம்
கந்தகங்களைச் சேகரிப்போம் (விளக்குத் தூக்கிகள், ப. 26)

உழைக்கும் மக்களின் நிகழ்கால நிலைமையும், எதிர்கால வாழ்வும் பற்றிய சித்திரமாகக் கவிதை பிறந்துள்ளது. 1967இல் வெண்மணியில் நடந்த தீவைப்புச் சம்பவம் மற்றும் அதுபோன்று நடந்த சம்பவங்களும் கவிதையாக மாறியுள்ளன. மேலும் நிகழ் காலத்து வாழ்க்கை நிலைமை எதிர்காலத்து நல்வாழ்க்கைக்கான அடிப்படையாக அமைகிறது எனக் கட்டியம் கூறுவதாக அமைகிறது கீழ்வரும் இக்கவிதை.

அடிக்கடி
தலித்துக்கள் குடிசையில்
சாதி குளிர்காயும்
தீயின் முகவரி
ஆலப்பாக்கம் . . . போடி . . . வெண்மணிகள் (ப. 30)

நாம்
அடிமையாய் வாழும்
விடுதலையின் குழந்தைகள்
அதனால்தான்
நமது குடியிருப்புகள்
காலனி என்றே
அழைக்கப்படுகிறது; (ப. 30)

இந்த
ஆதிக்க நரிகளின்
பற்களைப் பிடுங்குவோம்
ஒரு
அக்கினி மழையைப்
பந்தி வைப்போம்
அங்கு
சாதி மதங்களின்
வெறித்தனத்திற்கும்
சுரண்டலின்
நரித்தனத்திற்கும்
புதைகுழி பறிப்போம்
அந்த நாளை
பூமி
காலண்டரில் குறித்துக்கொள்ள
நாம்
கரங்களை உயர்த்துவோம் (வெறித்தனமும் நரித்தனமும்
மறைவதெந்நாளோ?, ப. 31)

காத்திருப்புகளில் வாழ்க்கை கழிகிறது என்றும், எதிர்காலம் நல்ல முறையில் வரும் என்றும் நம்பிக்கை கொள்வதைக் கீழ்வரும் கவிதை காட்டுகிறது.

பள்ளிக்கூட வாசலில்
கல்விக்காகக் காத்திருந்தோம்
பல்கலைக்கழக மண்டபங்களில்
பட்டத்திற்காகக் காத்திருந்தோம்
இப்போது வேலைக்காகக் காத்திருக்கிறோம் (ப. 37)

ஏதாவது
ஒன்றிற்காகக்
காத்திருப்பதே வாழ்க்கையாய் போச்சு
ரேஷன் கடையில்
அரிசிக்காகக்
காத்திருந்ததில்
முகம் காணாமல் போனது
சினிமாக் கொட்டகையில்
சீட்டுக்காகக் காத்திருந்ததில்
ஆடை காணாமல் போனது
அலுவலகத்தில்
ஊதிய உயர்வுக்காகக் காத்திருந்ததில்
வாடகை வீடும் காணாமல் போனது (ப. 38)

*இனி*
*இழப்பதற்கு*
*ஏதுமற்ற வாழ்க்கையில்*
*எதற்காகக் காத்திருப்பது?*
*விலகுங்கள்*
*அதோ*
*ஒரு போராட்டம்*
*அங்கேதான்*
*நமக்கான*
*வாழ்க்கையும் காத்திருக்கிறது*
*விலங்குகளற்று* *(காத்திருப்புகள், பக். 38,39)*

## இறுதியாக

எடுத்துக்கொண்ட பொருளைக் கவிதையாக மாற்றும் ஆற்றல் கைவரப்பெற்றுள்ளார்.

விடுதலை என்பது பாதிக்கப்பட்டுள்ள அனைத்து மக்களுக்கும் என்பதில் உறுதியாக உள்ளார் (பின்னுரையில் தெளிவாகக் கூறுகிறார்)

மேற்கூறிய பொருளை அடிப்படையாக வைத்தே தலைப்பை, 'சில தலித் கவிதைகளும்' - என எச்சமாக முடித்து மீதமுள்ள பொருளை வாசகரின் ஊகித்து அறியும் திறனுக்குக் கவிஞர் ஊக்குவித்துள்ள பாங்கு அவரது கவிதை உத்தியாக அமைகிறது.

இத்தொகுப்பில் உள்ள கவிதைகள் சமூகத்தில் சாதி, மதம், அறியாமை, பொருளாதார ஏற்றத்தாழ்வு, பாலியல் ஒடுக்குமுறை என அனைத்து விதமான சமூகச் சீர்கேடுகளைக் களைவதாக அமைந்துள்ளன. இனம் சார்ந்த கவிதைத் தொகுப்பு என்றாலும் குணம் மாறிப்போன சமூகச் சீர்கேடர்களுக்குச் சாட்டையடி தரும்படியாக முருகு பாண்டியனின் சிந்தனைகள் அமைந்துள்ளன. அவையே இக்கவிஞரை வாழவைப்பதாக விளங்குகிறது.

### முதன்மை நூல்

**சில தலித் கவிதைகளும்**, ராஜ முருகுபாண்டியன், அன்னம் பதிப்பகம், சிவகங்கை, ஜூலை, 1994.

# யூமா. வாசுகி

இருபதாம் நூற்றாண்டின் இறுதிப் பத்தாண்டுகளில் **உனக்கும் உங்களுக்கும்** *(1993)*, **தோழமை இருள்** *(1997)*, **இரவுகளின் நிழற்படம்** *(2001)* ஆகிய கவிதைத் தொகுப்பு நூல்களையும், 2001இல் நூல் வடிவம் பெற்ற அமுத பருவம் **வலம்புரியாய் அணைந்ததொரு சங்கு** என்ற கவிதைத் தொகுப்பு நூலையும், **உயிர்த்திருத்தல்** என்ற சிறுகதைத் தொகுப்பையும் **ரத்த உறவு** என்ற நாவலையும், **Marooning thickets** என்ற ஓவிய நூலையும் படைத்தளித்திருப்பவர் யூமா. வாசுகி.

> தக்ஷிணாமூர்த்தி அல்லது மௌனச்சாமி என நண்பர்களால் விளையாட்டாக அழைக்கப்படும் தினகரன் மாரிமுத்து, முப்பத்து நான்கு வயதை அடைந்த தாடிக்காரர் (Sunday Express, *13 மே 2001)*

என **ரத்த உறவு** நாவல் விமரிசனத்தில் சிவக்குமார்[1] அறிமுகப் படுத்துவதிலிருந்து, யூமா. வாசுகியின் இயற்பெயர் தினகரன் மாரிமுத்து என்பதையும் இன்றைய நாளில் 37 வயதை அடைந்தி ருப்பவர் என்பதையும் அறிய முடிகிறது. இவர் கும்பகோணத்திற்கு அருகில் உள்ள திருவிடைமருதூரைச் சேர்ந்தவர் என்றும், கும்பகோணம் ஓவியக் கல்லூரியில் (Kumbakonam Fine Arts College) பட்டயம் பெற்றவர் என்றும், **கணையாழி** இலக்கிய மாத இதழில் உதவி ஆசிரியராகவும் / ஓவியராகவும் பணியாற்றியவர் என்றும் இவரைப் பற்றிய அறிமுகத்தை மேலும் வழங்குகிறார்.

நவீன இலக்கிய உலகில் பதினைந்து ஆண்டுகளாகச் செயல்படும் யூமா. வாசுகி குதிரை வீரன் பயணம் என்ற இதழை நடத்தியவர். மழை என்ற இலக்கியச் சிற்றிதழில் முக்கியப் பங்காற்றியவர். செறிவான இலக்கியப் படைப்பில் தனிப்பாதை அமைத்து, இலக்கியவாதிகளுக்கு நன்கு தெரிந்த யூமா. வாசுகி, ஆரம்பத்தில் சொன்னதுபோல அமைதியானவர்; படைப்பில் தவிரப் பேட்டிகளில் பேசாதவர்.

> ஏதோ ஒன்று என்னைப் பாதிக்கும் போது, சிறு கல் ஒன்று இருதயத்திலே அமர்ந்து கொண்டது போலாகிவிடுகிறது. எழுத்து மட்டும் வெளிப்படுத்தும் வாயிலாக உள்ளது[2]

என்ற கருத்தைத் தவிர, இவரது படைப்பைப் பற்றி இவர் பேசியதாக வேறு ஆதாரங்கள் கிடைக்கவில்லை. ஓசையுடையதும், பேச முடியாததைப் பேசிச் செல்வதும், அந்தரங்கம் முதற்கொண்டு அனைத்து விசயங்களையும் நீரோட்டம் போல் பரவி வெளிப் படுத்தும் சொல்வளம் நிறைந்ததுமான யூமா. வாசுகியின் கவிதை முழுமையை உணர்த்த முற்படுகிறது இக்கட்டுரை.

யூமா. வாசுகியின் கவிதைகளைப் படிப்பவர்கள், அவற்றின் சுவையை உணர முடியவில்லை என்றாலும் படிமம், குறியீடு, ஏனைய வழிகள் மூலம் யூமா. வாசுகியின் கவிதைகளை இரசனைப்படுத்தலாம். இவையன்றியும் இரசனைக்குரிய கவிதைகள் பல, ஆழமான மனத்தில் தேடுதல்களை விரைவு படுத்துவதன் மூலம் கிடைக்கும்.

**விளக்குமரத்தோடு விளையாடி முடிவதற்குள்**
**விட்டில்கள் விழுந்திறந்தன**[3]

என்ற கவிதையை இரண்டு வழிகளில் அணுகலாம்.

**தீப மரத்தின்**
**தீக்கனி உண்ண**
**விட்டில் வந்தது**
**கனியோ**
**விட்டிலை உண்டது** (பால் வீதி)

என்ற அப்துல்ரகுமான் கவிதையை மறுவாசிப்பாக்கும் ஒரு தொடர்ச்சியான கவிதை வாசிப்பாக அணுகுதல் ஒன்று. மற்றொன்று, கவிதையின் உள் நுழைந்து ஆராய்தல். இங்கு விளக்குமரம் என்பது உருவகம். விட்டில்கள் விளக்கில் மோதி நடக்கும் ஒரு நிகழ்வு அப்துல்ரகுமானுக்கும், யூமா. வாசுகிக்கும் கவிதையாகியிருக்கிறது. **கனியோ விட்டிலை உண்டது** என்பதும், **விளையாடி முடிவதற்குள் இறந்தன** என்பதும் முந்தைய உருவகத்தோடு இணைந்து நின்று கவிதையான வரிகள். விளக்கு எரிகிற (உருவகக்) காட்சி படிமமாக்கப்பட்டு அதனோடு உறவு கொண்டதால் இறப்பைத் தழுவிய விட்டிலின் இறப்பு குறியீடாக்கப்பட்டுக் கவிதைச் சுவையைத் தருகிறது.

கருத்துகளையோ, காட்சியையோ இன்னொரு உருவக அல்லது உவமைக் காட்சியின் மூலம் தெளிய வைப்பவை படிமம் ஆகின்றன. சான்றாக,

**உங்கள் எதிரே நான்வரும் பொழுது**
**என்னைப் பிடித்துக் கொல்லப் பார்க்கிறீர்**
**'எப்படி உயிர்க்கலாம் எங்கள் காற்றை நீ?'**

**நீங்கள் என்னை விட்டுப் போனதும்**
**ஒளித்து வைத்த மூக்கை எடுத்துப்**
**பொருத்திக் கொண்டு உயிர்க்கத் தொடங்கினேன்[4]**

என்பதில் வலிய சமூகத்திற்கு எதிராக, எளிய சமூகத்தின் குரல் நசுக்கப்படுவது கேட்கிறதென்றால் குறியீட்டைப் புரிந்து கொண்டதாகிவிடும்.

**நள்ளிரவில்**
**மௌனமான கப்பல் தளத்திற்கு மேலே**
**கப்பலின் உயர்ந்த கூம்பில் சிக்கியிருக்கிறது நிலா[5]**

கூம்பின் முனையில் சிக்கியிருக்கும் நிலவைக் காட்சிப்படுத்தியதால் இது படிமக் கவிதையாகிறது.

> கவிஞன் பயன்படுத்தும் சொற்களின் பொருளுக்குட்பட்ட எல்லையிலிருந்து கவிஞன் உணர்த்த விரும்பும் பொருளின் எல்லைக்குள் நம்மை அழைத்தேகும் உத்திகளே குறியீடும் படிமமும் ஆகும்[6]

என்பதால் இவற்றின் பயன்பாட்டையும் உணர முடியும். இவ்வாறு படிமம் குறியீடு வழியாக யூமா. வாசுகியின் கவிதைகளிலிருந்து இரசனையைப் பெறலாம்.

**கல்லெறிந்தால் குளம் ஒரு சொல்லெறியும்**
**அதன் தவம் தவறச் செய்யும் திடமில்லை**

**தெளிநீர்ப்பரப்பின் சிற்றலைக்குள்**
**சுருளும் நிலவு[12]**

என்பதில் முன்னது குளத்தில் கல்லெறிவதால் அது சலனம் (என்ற பதிலை) எழுப்பும் என்பது குறியீடு. **அலைகளுக்குள் நிலவின் காட்சி சுருளுதல்** - படிமம் என யூமா. வாசுகியின் கவிதைகளிலும் படிமங்களையும், குறியீடுகளையும் கவிதைதோறும் கண்டெடுத்துக் கொண்டே போகலாம். நுட்பமான பார்வை, இயற்கையையும் மனித உணர்வுகளையும் கலையார்வத்தோடு பதிவு செய்தல் போன்றவற்றில் படிமத்தின் பங்கு விரிவானது. என்றாலும் படிமக் குறியீடுகளுக்கு மேலும் விரிந்து செல்லும் யூமா. வாசுகியின் கவிதைகள் பொருள் பொதிந்தவை. செறிவும், தொனி நயமும் கலந்தவை.

புரிதல்கள் வசமானால், மேற்கொண்டு, வலிகளைப் பதிவு செய்யும் கவிதையின் பொருள்களைப் பிரித்துணர்வது எளிதாகும். யூமா. வாசுகிக்குப் பசி, தனிமை, மௌனம், சுயத்தை இழக்காத

கழிவிரக்கம், நாட்களோடும் இரவுகளோடும் உள்ள தொடர்பு என ஒரு பகுதியும், தொலைவில் இருந்து மனத்தைச் செலுத்தி அருகாமையில் இயற்கையைக் கவனிக்கும் திறன், அதன் இயக்கம் கெட்டுவிடக் கூடாது என்ற தன்னிரக்கம், எதிர்கால நிகழ்வுகள் இறந்த காலத்தின் எச்சமாய் நிச்சயமாய் இருக்கும் எனத் தெரிந்த பின்னும் வாழ்ந்து தீர வேண்டும் என்ற முரண் வாழ்வு, கவிஞனாய் வாழ்ந்ததால் நேர்ந்த இழப்புகள், இழப்புகளை மீறி வெறியுடன் செயல்படுவதால் கவிஞனாக மாறுதல், மரணத்தை ஓயாது வாசித்தல் என்ற இன்னொரு பகுதியும், விசுவரூபமாய் விரிந்து நிற்கும் பெண்மையின் சகல அசைவுகளையும் அடிமையாக, அன்பனாக, கவிஞனாக, விரக்தனாக, பித்தனாகப் பதிவு செய்யும் மூன்றாவது பகுதியும் என மூன்று முகம் உண்டு.

வளர்ச்சியாக வகுத்தால் **உனக்கும் உங்களுக்கும் கவிதை வரை** உள்ள ஒரு கட்டம் (1993), **தோழமை இருள் வரை** அடுத்த கட்டம் (1997), **அமுதபருவம்..** மூன்றாவது கட்டம் (2000). ஒரு கட்டத்திலிருந்து அடுத்த கட்டத்திற்குக் கவிதைகள் பரிபூரண வளர்ச்சியடைந்து வந்திருப்பதைத் தெளிவாக உணர முடிகிறது.

அறை, அறையின் சுவர்கள், இருள் ஆகிய யாவும் தனிமையை உணர்த்தும் குறியீடுகளாகவும், சிகரெட், மது தனிமையைத் தாங்கிக் கொள்ளப் பயன்படுத்தும் கேடயமாகவும், வெறுமனே போகிற பொழுதுகளும், வெறுமே வருகிற வார்த்தைகளும் வேலையற்ற வாலிபனது குரல்களாவும் இருந்து கவிதையை நகர்த்துகின்ற அமைப்பியலாக இருக்கின்றன.

> இவருடைய (யூமா. வாசுகி) எல்லா எழுத்து முயற்சிகளையும் ஒரு சேரப்படித்து முடித்துப் பின்னர் அவருடைய எழுத்துலகின் மையத்தை உருவகப்படுத்த முனையும் போது, தன்னையே நிராயுதபாணியாக்கிக் கொள்பவனுடைய குரல் அல்லது தன்னையே இழப்பவனுடைய குரல் என்கிற எண்ணம்தான் எழுகிறது[8]

என்கிற தீர்வு மிகச் சரியானது.

> **ஒரு நிலவுக்காலத்தின் மகிழ்வுப் பெருக்கில்**
> **நீர்ப்பரப்பின் மேலே பரவசமாய்**
> **பொன்மின்னலெனத் துள்ளிவிழும் என்மீன்**
> **அதை எனதாக்கும் முயற்சியில்**
> **எட்டியிருந்து பார்த்துவிட்டு**
> **எட்டாத் தொலைவிற்கு**
> **என்றைக்குமாய்ப் போய்விடுவேன்[9]**

என்கிறபோது விலகியிருந்து, ஆசைகளைத் தனக்குள் மூட்டை கட்டி வைத்துத் தன்னுடைய வெறுமையான பாதையை என்றைக்குமாகத் தொடரும் பயணியாக இருக்கிறார். இந்தப் பயணம் எங்குப் போகிறது என்பது பயணிக்கே தெரியாது. கவிதையில் வரும் மனிதன் முறையான வாழ்க்கைக்கு உட்படாததால் அவனுடைய மீனைக் கூட எட்டியிருந்தே பார்க்க வேண்டிய நிலை.

**ஊடுருவும் அகப்பையொன்றை**
**மனதுட்புகுத்தி**
**அள்ளி வெளியில் கொட்டி வெற்றிடமானால்**
**எனக்கு**
**இரவுக்கும் பகலுக்குமிடையில்**
**வேறுபாடு கிடைக்கும்**[10]

என்பதும் அதே விரக்தியான வாழ்க்கை நிலை. இதுபோன்றே கவிதைகளில் தொடரும் தனிமனித அவலங்களும், புலம்பல்களும் ஏராளம். அதற்கான காரணம் விவரிக்கப்படாது. அது தேவையும் இல்லை. கவிதைகளின் வழியாக அதனைத் தெரிந்து கொள்ளும் முயற்சியில் இறங்கவும் கூடாது. அது உரையாசிரியர்களின் பணியைப் போல் தொடங்கி, முழுக்கப் பொருளை மட்டுமே விதந்து ஓதும் நிலைக்குத் தள்ளி விடும்.

யூமா. வாசுகியின் கவிதைகளில் அதிகப்பட்சமாக எதிர்பார்ப்பது உணர்தல்; அகவுணர்வில் கவிதையின் வளமை வலியையுண்டாக்கும் ஒரு மின்னல் வெட்டு; கவிஞன் பார்த்த நுண்மையான பார்வை; அது ஒரு ஞானியின் தேடலைப் போல் அமைந்திருக்கும் தன்மை அதோடு முடிகிறது.

**தீ முளைத்து காற்று எனும்**
**பூமியிலே வேரைவிட்டால்**
**பூக்கிறது எத்திசையில்?**[11]

என்கிற பிரமிளின் கவிதையில் வெளிப்படையான ஐயம் இருக்கிறது. அதை வைத்து அவர் தேடும் பொருள் பற்றின கருத்துகளை எடுத்து வைக்க முயலலாம். ஆனால் யூமா. வாசுகியின் கவிதையில் பிரமிளின் 'நடை' சாயல் இருந்த போதும், வேறுபாடு மிக அதிகம். காட்டாக,

**பனைமரச் சிகரங்களை வாஞ்சையில் தடவி**
**கடக்கிறது நிலவு**
**மரக் கைகளால் ஏறி**
**நட்சத்திரங்களைப் பறிக்கிறது**

ஏற்கனவே நீரில் ததும்பி
சிதறுபவை போதாமல்[12] – யூமா. வாசுகி

வானத்தில்
பரிதியே நின்று
கிணற்றுள் தன் பிம்பத்தை
பட்டம் விட்டாலும்
குடி தண்ணீர்
வாளி வீச்சில்
நடுங்காது நிற்குமா?[13] பிரமிள் (லௌகீகம்)

இவற்றுள், பிரமிளின் கவிதையில் கேள்வி இருக்கிறது. அது எதனை விரல் நீட்டி நிற்கிறது என்பது ஓரளவு ஊகிக்க முடிகிறது. ஆனால் யூமா. வாசுகியின் கவிதையில் வருபவை ஓர் இயற்கை அல்லது வறுமை அதோடு முடிவு நிகழ்ந்து நமது புரிதல்களை மட்டுமே எதிர்பார்க்கின்றன. உணர்தல் அதற்குமேல் புரிதல் அதற்கு மேல் மெல்லிய திரை. வாசிப்பு வகையை உணர்ந்த பின்னால் திரை விலகிப் புரிதலும் பிறகு உணர்தலும் எளிதாகின்றன.

> கவிதையாக்கம் என்பது, வாசிப்பவனுக்குக் கவிதை தனது ஒலி-வார்த்தை அமைப்பாகத் திறந்து காட்டுவதாக அமையவிருப்பதைப் பார்க்க வேண்டும். இவ்வமைப்பு திறந்தவுடன் அர்த்தங்கள் முடிவாக ஏதுமின்றி, ஒன்றிலிருந்து மற்றதற்கான அமைப்பியல் - மாற்றம் (Structural Transformation) அடையவே வழிகோலுகின்றன. வாசிப்பவன் இந்த மாற்றங்களை அடையாளம் கண்டு கொண்டு சென்றால், கவிதையின் புரியாத முகம் கிழித்து எறியப்படுகிறது. கவிதை புரியப்படுவதாக ஆகிறது[14]

என்று நாகார்ஜுனன் கூறுவது இவண் உதவும். அர்த்தங்களைத் தர வேண்டும் என்ற முனைப்புக் காட்டாமல், கவிதையைக் காட்டும் பிரமிள், யூமா. வாசுகி ஆகியோரது கவிதை நிகழ்த்துதல் ஒரே தளத்தில் நடந்தபோதும் பிரமிள் கவிதைகள் தத்துவ விசாரங்களாய் நிற்கின்றன. யூமா. வாசுகியின் கவிதைகள் அனுபவப் பதிவுகளாகி விடுகின்றன. இளைய கவிஞர்களில் இவர் வித்தியாசப்படுவதற்கும் இந்த அனுபவப் பதிவே காரணமாயிருக்க வேண்டும்.

> சமரசங்களில்லாத கவிதையின் தீவிரமும், சிக்கலான ஆனால் வசப்படுத்தும் சொற்களும் - இவற்றின் ஆழத்தில் அழுத்தமாய் வேர் கொண்டிருக்கும் பசியும் வாசகனுக்குள் ஊடுருவி நிற்கும் தீட்சண்யத்துடன் வெளிப்பட்டுள்ளன. கண்ணுக்கு முன்னாலிருக்கும் காட்சிகளை மட்டும்

சொற்களால் விவரிக்கும் கவிதைகள் தொகுப்பில் இல்லாமலிருப்பது பெரும் ஆறுதல் - தமிழின் நிறையத் தொகுப்புகளில் ஊடுருவியிருக்கும் பொதுவான தன்மையைத் தவிர்த்திருப்பது தொகுப்பின் (தோழமை இருள்) பலம். நிகழ்வெதுவும் அனுபவப்படாமல் பதிவாகவில்லை[15]

என்று விமர்சகர் இவரைப் புகழும்போது மேற்சொன்னது உண்மையான முடிவாகவே தெரிகிறது. குறியீடு, படிமம், அக உணர்ச்சி வெளிப்பாடு என்பனவற்றைக் கடந்து யூமா. வாசுகியின் கவிதைகளில் கவனிக்கப்பட வேண்டிய கூறுகள் பல இருக்கின்றன. சொல் தேர்ச்சி, வெளிப்பாடு எனக் குறிப்பிட்ட தலைப்புகளில் அடக்கி விவரிக்க முடியாத இரசனையைக் கொண்டவை அவை. ந. பிச்சமூர்த்தி, பிரமிள், சுந்தர ராமசாமி, அபி, தேவதேவன், வைதீஸ்வரன் என்ற தலைமுறை கடந்து அடுத்த தலைமுறையான யூமா. வாசுகி வைக்கும் கலைத்தேவை என ஒருவாறு அழைக்கலாம்.

**பறிக்க முடியாத**<br>
**பட்டுப் பூச்சியை**<br>
**மறக்க**<br>
**பறக்க முடியாத பூக்களை**<br>
**வெடுக்கெனக் கிள்ளி**<br>
**வீசின விரல்கள்[16]**

என்று கல்யாண்ஜி கூறுமிடத்திலும்,

**ஒற்றையடிப் பாதை**<br>
**எந்த ஊரிலும்**<br>
**இரை எடுக்காமல்**<br>
**இளைத்து இளைத்து**<br>
**எங்கோ போகிற**<br>
**ஒற்றையடிப் பாதை[17]**

என்ற அபியின் கவிதையிலும்,

**நக்ஷத்திரங்களைவிட**<br>
**நிறையவே பேசுவது**<br>
**அவற்றின் இடையேயுள்ள**<br>
**இருள்[18]**

என்ற பிரமிள் கவிதையிலும் தெரியும் இதன் வடிவம், சொல் சாதாரணமானவை. ஆனால் வெளிப்படுத்தும் நிலையில் மௌனங்களைக் கடந்து, பொருள் கடந்து, கற்பனையின் கடைசிவரை சென்று காலத்தைத் தாண்டி நிற்பவை. இதையே நாகார்ஜுனன் உணர்ந்ததாகச் சொல்லலாம். யூமா.வாசுகியின்

கவிதைகளிலும் இதுபோன்ற எளிய சொற்கள் ஏற்படுத்தும் அசாதாரண பெருமை மலைக்கச் செய்வது. மேற்கண்ட கவிதைகள் அமைதியைப் பொருண்மையாகக் காட்ட, யூமா ஆவேசத்தையும், தாளாமையையும், விரக்தியையும் ஒரு சேரக் காட்டுகிறார். உண்மையில் படிமங்கள், குறியீடு என்பன இதுபோன்ற கவிதைகளில் முழுவீச்சில் செயல்படுகின்றன எனலாம் அல்லது சொற்கள் எல்லாவற்றையும்விட வலுவானவை என்பதை உணரலாம்.

**பழம் உதிரும் என்று**
**கிளையை அசைக்க**
**மேலிருந்து**
**பறவையின் கூடு**
**விழுந்தது கீழே**
**இப்போது**
**கூடு கலைத்த பாவமும் வேறு**[19]

**நேற்றிரவு**
**நான் துவேஷித்த மனிதனின்**
**தரிசனத்திற்காகக்**
**காத்திருக்கிறது இன்றைய பகல்**[30]

**மீன் பிடிக்கத்**
**தூண்டில் போட்ட போது-என்**
**தூண்டிலைப் பிடிங்கிக் கொண்டது**
**ஒரு மீன்**[21]

**இரண்டு சிகரெட்டுகளிருந்தால்**
**எந்தக் கவலையுமின்றி**
**ஒன்றைப் புகைக்கலாம்**[22]

என்ற வரிகளில் முந்தைய தலைமுறையின் சொற்கள் மேலும் மெருகு கூடியவையாக யூமாவிடம் எதிரொலிப்பதை எளிதாக உணரலாம். கொஞ்சம் வலியையும். . . !

யூமா. வாசுகியின் இன்னொரு கட்டமான மூன்றாவது கட்டத்தை அடையும் முன்பாக இரசனைக்குரிய இன்னொரு கவிதையை இவ்விடத்தில் பார்ப்பது நலம். அழகியல் தன்மையுடைய கவிதை; குழந்தைகளைப் பற்றிக் கூறும் சொற்கள், குழந்தைகளாகவே மாறிக் கவிதையில் விளையாடும் விதம் படிக்கும்போதே தொற்றிக் கொள்ளும்.

**என் வீடு பூரணமாய் உருவாகிவிட்டது**
**மிக விலாசமான தூய்மையான வீடு. அதில்**

சிரிப்பதே செயலானவள் செல்வம் சேர்க்கிறாள்
பந்து மட்டைகளில் படும்போதெல்லாம் ஊடுறுவும்
பேரிரைச்சலுக்கு வீடு நெளிகிறது கூச்சத்துடன்
பந்து பயணிக்கும் திசைகளில் கூட்டமாய் ஓடும்
குழந்தைகளை நோக்கியே தன் வாசலை
அடிக்கடித் திருப்பிக் கொள்கிறது
அவர்களின் வழக்குளில், வசவுகளில்
புதுப்புது அறைகள் உண்டாயின[23]

என மிக மெலிதாக விரியும் கவிதை, படித்து இன்புற்று அகத்தில் ஓர் உலகத்தைக் கட்டும் தன்மையை விழைபவை.

மூன்றாவது கட்டம் என்பது யூமா.வாசுகியின் மூன்றாவது கவிதைத் தொகுப்பான **இரவுகளின் நிழற்படம்** விடுத்து **அமுதபருவம் வலம்புரியாய் அணைந்ததொரு சங்கு** என்ற நெடிய தலைப்பின் கீழ் வருகின்றது. மந்திரச் சொற்களையும், செறிவான வருணனைகளையும்,

உள்ளே உருகி நைவேனை உளளோ இலளோ என்னாத
கொள்ளை கொள்ளி குறும்பனைக் கோவர்த்தனனைக் கண்டக்கால்
கொள்ளும் பயனொன்று இல்லாத கொங்கை தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட்டு அவன்மார்பில் எறிந்தென் அழலைத் தீர்வேனே[24]

என ஆண்டாள் மொழியாய் உருக்கங்களையும் கொண்டவை. முன்னைய கவிதைகள் பசியையும், விரக்தியையும் பேச, இத்தொகுப்பில் உள்ள கவிதைகள் காதலையும் விரகத்தையும் பேசுகின்றன. தேர்ந்த சொல்வளமும் கற்பனை வளமையும் கூடி யூமாவை ஒருபடி முன்னேற்றி நிறுத்துபவை இக்கவிதைகள். அனைத்தும் சொற்களைச் சற்றே தடுமாற விட்டிருந்தாலும் கீழிறங்கியிருக்கும் சாத்தியக்கூறு மிகுந்த கவிதைகளின் தொகுதி இது.

விதந்து ஓதிய பின்னால் படிக்கப்படுவதைவிட மௌன வாசிப்பை எதிர்நோக்குபவை. காதல், விரகம், கதறல் என்பதோடு கலவியையும் சுயஇன்பத்தையும் கூட விட்டுவைக்காமல் புனையப் பட்டிருக்கும் இக்கவிதைத் தொகுப்பில் விரசம் தெரியவில்லை. அலை அலையாய்க் கட்டப்பட்டிருக்கும் அழகியல் சொற் கூட்டங்களுக்குள் உள்நுழைந்துகொண்டேயிருக்க வைத்து, கடைசியாக ஒரு முத்தைக் கையில் வைத்து 'முடிந்தது போ'வென முடிகின்றன கவிதைகள்.

மீன் கொத்திப் பறவையின்
அலகுபட்ட நீர்த்தலமாய்
மெல்லதிர்கிறது உன் பின்புறம்[25]

உச்சிக்கிளை இலவங்காய் வெடித்து–பிஞ்சுப் பிசுறு
மெல்ல நிலமணைவது போல்
சிமெண்டுத் தரையின் சிகையொப்பனை
சிதையாதபடி போலும் நடந்தாய்[26]

உதித்தபோது உணரவில்லை – உன் நெற்றியில்
நிலைத்தபோதே நோக்கினேன்,
சீதளச்சூரியன் சுருங்கியதாய் ஒரு பொட்டு[27]

எனப் பெண்மையை நுண்மையாய் வருணிக்கிறது கவிதை. பெண்ணைத் தவிரவும், பிற உணர்வுகளையும் அதே ஈடுபாட்டுடன் காட்சிப்படுத்தும்போது இவரது பிரம்ம பிரயத்தனம் வெற்றியின் பாதைக்கு அழைத்துச் சென்றுவிடுகிறது

நான் இறந்த குழந்தை–என் உதடுகளை
கன்னத்தோடு ஒற்றிக்கொண்டால்
முத்தம் பெற்றதாகிவிடாதென்று புரிந்து என்னைக்
கைவிடுகிற இன்றின் முற்றத்தில்[28]

என்கிறபோது முடிவுபெறும் 'பகல் பொழுது' புதிய காட்சியைத் தந்துவிட்டுச் செல்வது அழகு என்றால், அடுத்த கவிதையில் வரும் உவமை அழகோ அழகு,

இரவிடம்
சொல்லிப் பயனில்லை என் காதல் பெண்ணே
தலைமகன் பாடையைத் தொடர்ந்தோடும் இளந்தாயாக
இரவென்னைத் துரத்துகிறது[29]

யூமாவின் சொற்சித்திரம் முழுமையான கற்பனை வீரியத்துடன் இயங்கும் 'அமுதபருவம்...' சில இடங்களில் சங்க இலக்கியத்தையும், சில இடங்களில் சிற்றிலக்கிய வருணனைகளையும் ஏற்றுக் கொள்ளும் அதே நேரத்தில் அடர்த்தியான சொற்கட்டில் வாலிபப் பெண்ணாய் மாறிவிடுகிறது. வேதம்போலும் காதலைச் சொல்லும் அவரது கவிதையைச் சொல்லிக் கட்டுரையை நிறைவு செய்யலாம்.

எவ்வுயிர்க்கும் இறைத்துவம் உன்னிலிருந்தே தருவேன்
உயிர்த்தொன்னையில் ஆன்மத்தேறல் நிவேதிப்பேன்
கதிர் நலம் குழாவி உன் தலைமேல் பந்தலாகட்டும்
நன்முகூர்த்தம் பொலிந்தருளட்டும் உன் திருமுகம்

காலம் உன்னிடம் தன் ஆயுள் அறிய வரட்டும்
உன் மனப்பூரணம் பெருகுக
குனிந்தவனுக்குக் கனிவது கொடை மரபு
என் தாழ்மையில் தழைக நின் கருணை[30]

இனி, கட்டுரையின் தொடக்கத்தைப் படிக்கவும். முடிவுரையும் தெளிவும் கிடைக்கும்.

## குறிப்புகள்

1. Dinakaran Marimuthu is jokingly called 'Dakshinamurthy' or Mouna Swami by his friends. The bearded, bespectacled 34 years old author.
2. அதே இதழ்.

   When something bothers me, it sits like a stone in my heart. Writing offers the only release, யூமா.வாசுகி.
3. யூமா.வாசுகி, **இரவுகளின் நிழற்படம்**, தமிழினி பதிப்பகம், சென்னை.
4. ஞானக்கூத்தன், **அன்று வேறுகிழமை**, அகரம் (2ம் பதிப்பு), 1980, ப. 54.
5. மு. சுதந்திரமுத்து, **Imagist poetry**, ஹூயும், மேற்கோள் ஆதாரம் : படிமம்.
6. சு.அரங்கராசு, **தமிழ்ப் புதுக்கவிதை ஒரு திறனாய்வு**, ப286.
7. யூமா. வாசுகி, இரவுகளின் நிழற்படம், ப. 13.
8. பிரம்மராஜன், **இளம் படைப்பாளிகள் ஒரு பார்வை**, ஜூலை-ஆகஸ்டு, 2003, ப. 45.
9. யூமா. வாசுகி, **இரவுகளின் நிழற்படம்**, ப. 32.
10. மேற்படி, ப. 33.
11. **பிரமிள் கவிதைகள்**, லயம் வெளியீடு, சத்திய மங்களம், 1998, ப. 14.
12. **இரவுகளின் நிழற்படம்**, ப. 128.
13. **பிரமிள் கவிதைகள்**, ப. 26.
14. நாகார்ஜுனன், **கலாச்சாரம் அகலாச்சாரம் : எதிர் கலாச்சாரம்**, கார்முகில் பதிப்பகம், 1999, ப. 92.
15. சூத்திரதாரி, **"என்னைக் கவர்ந்த புத்தகம்"**, தினமணி, பிப். 5, 1998.

16. கல்யாண்ஜி, **புலரி**, அகரம் பதி., சிவகங்கை, 1981, ப. 23.
17. அபி., **மௌனத்தின் நாவுகள்**, அகரம், (இரண்டாம் பதிப்பு), சிவகங்கை, 1980.
18. பிரமிள், **பிரமிள் கவிதைகள்**, லயம் வெளியீடு, சத்திய மங்களம், 1998, ப. 46.
19. இரவுகளின் நிழற்படம், பக். 62-65.
20. மேற்படி, ப. 75.
21. மேற்படி, பக். 62-65.
22. மேற்படி, ப. 73.
23. மேற்படி, ப. 131.
24. ஆண்டாள், **நாச்சியார் திருமொழி**, முல்லை நிலையம், 2002, சென்னை, பா. 131.
25. **அமுத பருவம் வலம்புரிபாய் அணைந்ததொரு சங்கு**, ப. 7.
26. மேற்படி, ப. 18.
27. மேற்படி, ப. 19.
28. மேற்படி, ப. 17.
29. மேற்படி, ப. 49.
30. மேற்படி, ப. 53.

# வா.மு.சே. ஆண்டவர்

## படைப்பாளி – அறிமுகம்

வா.மு.சே. முத்துராமலிங்க ஆண்டவர் 1967ஆம் ஆண்டு மார்ச் 26ஆம் நாள் இராமநாதபுரத்தில் பிறந்தார். இவருடைய தந்தையார் வா.மு. சேதுராமன். தாயார் திருவாட்டி சேதுமதி. தற்பொழுது சென்னை பச்சையப்பன் கல்லூரியில் முதுநிலை விரிவுரையாளராகப் பணிபுரியும் ஆண்டவர், இளமையிலேயே கவிதை இயற்றும் ஆற்றல் பெற்றிருந்தார். தனது 14ஆவது வயதில் ஐயப்பன் கோயில் செல்லும் வழியில் இருந்த இரப்பர் மரங்களைப் பார்த்து,

> இரப்பர் தாயின் மடியில்
> சிரட்டாங்குச்சிக் குழந்தைகள்
> பால் குடிக்கின்றன[1]

என்று கவிதை கூறியதை வேர்களும் விதைகளும் நூலின் வாழ்த்துரையில் வி.எஸ். குணரத்தினம் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது. இவர் மனத்தை மயக்கும் மரபுக் கவிதைகளும், தான் வாழும் சமகாலத்தின் பதிவுகளாகப் புதுக்கவிதைகளும் படைத்துள்ளார். இவர் உலகளாவிய இயக்கங்களில் தொடர்பு கொண்டு பன்னாட்டுத் தமிழ் உறவுப் பணிகளை ஆற்றி வருகிறார். உலகத் தமிழ்க் கல்வியாளர்களிடம் தொடர்புள்ளவர். இவர் சென்னைப் பல்கலைக்கழகக் கல்வியாளர் பேரவையில் உறுப்பினராகச் செயலாற்றியுள்ளார்.

மாநிலக் கல்லூரியில் இளங்கலைத் தமிழில் 1988ஆம் ஆண்டு முதல் மாணவனாகத் தேர்ச்சி பெற்றார். 1990ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழக முதுகலைத் தேர்வில் முதல் மாணாக்கனாகத் தேர்ச்சி பெற்று ஐந்தாம் ஜார்ஜ் பரிசினை வென்றார். கலையியல் முதுநிலைப் பட்டத்துக்கு, "தமிழ் பொது மக்கள் தொடர்பு சாதனை; கையெழுத்துப் படிகள் ஒளி ஒலி நாடாக்கள் (வீடியோ) - மதிப்பீடு" என்பதனை ஆய்வுப் பொருளாக எடுத்துக் கொண்டார். சென்னைப் பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தர் டாக்டர் பொன். கோதண்டராமன் மேற்பார்வையின் கீழ் உலகளாவிய தமிழ் அமைப்புகள் என்னும்

தலைப்பில் ஆய்வியல் நிறைஞர் பட்டமும், தமிழ்க் கவிதைகளில் சமகால வரலாறு என்னும் தலைப்பில் முனைவர் பட்டமும் பெற்றார்.

இவர் மொழியியலிலும், ஒப்பியல் இலக்கியத்திலும் பட்டயங்கள் பெற்றுள்ளார். மொழியியல் பட்டயத்துக்கு, **கணினி வழித் தமிழ் ஒலியத்தைக் கண்டறிதல்** என்னும் ஆய்வுக் கட்டுரை அளித்தார். கலைஞர் அவர்களால் நடத்தப்பெற்ற உலகத் தமிழ் இணைய மாநாட்டில் **நன்னூலையும்** கணிப்பொறியையும் இணைத்து ஆய்வுக் கட்டுரை வழங்கினார். மேலும் இன்றுள்ள பல மக்கள் தொடர்புச் சாதனங்களில் பங்கேற்றுச் சிறப்பித்துள்ளார்.

இவர் தன் முதல் நூலான **வேர்களும் விதைகளும்** என்ற கவிதை நூலினை ஜெர்மனியின் தலைநகர் பெர்லினில் நடைபெற்ற பன்னாட்டுத் தமிழ் உறவு மன்ற மூன்றாம் மாநாட்டில் கி.ஆ.பெ. விசுவநாதம் திருக்கரத்தால் வெளியிடும் பெருமை பெற்றவர். ஜெர்மனி, இத்தாலி, பிரான்ஸ், மலேசியா, சிங்கப்பூர், தாய்லாந்து போன்ற நாடுகளுக்குக் கல்விப் பணி தொடர்பாகவும், தமிழ்ப் பணி தொடர்பாகவும் சென்று வந்துள்ளார்.

2000ஆம் ஆண்டு சப்பானில் நடைபெற்ற உலகக் கவிதைத் திருவிழாவில் தெற்காசிய பேராளனாகக் கலந்து கொண்டு தமிழ்க் கவிதைகளில் ஓசை, அசைவு, நகர்வு என்ற ஆய்வுக் கட்டுரை வழங்கினார். பல்வேறு இதழ்களிலும் இவருடைய படைப்புகள் வெளிவந்துள்ளன. கவிதையும் வரலாறும், ஒப்பிலக்கியம், தமிழியலும் கணிப்பொறியியலும் போன்ற பன்முக ஆராய்ச்சிப் பணிகளில் ஈடுபாடு கொண்டவராகத் திகழ்கிறார்.

### இதுவரை இவர் வெளியிட்டுள்ள நூல்கள்

1. **வேர்களும் விதைகளும்** (கவிதைத் தொகுப்பு), 1993
2. **உலகளாவிய தமிழ் அமைப்புகள்**
3. **தமிழ்க் கவிதைகளில் சமகால வரலாறு**
4. **துறைதோறும் தமிழ்**
5. **அன்புள்ள திரு திருடனுக்கு (கவிதை நூல்), 2000**

**வேர்களும் விதைகளும்** என்ற இவரின் முதல் கவிதை நூல் பற்றிய அறிமுகமும் அடுத்து வெளிவந்த **அன்புள்ள திரு திருடனுக்கு** என்ற கவிதை நூல் காட்டும் சமூக உணர்வினையும் ஆய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

## வேர்களும் விதைகளும்

கவிஞனின் தமிழ்ப்பற்றினையும் தமிழ் இனத்தின்மீது கவிஞன் கொண்டுள்ள பற்றினையும் இக்கவிதைகள் படம் பிடிக்கின்றன. இக்கவிதைத் தொகுப்பில் **வேர்கள், விதைகள், நாற்றுகள்** என்று மூன்று வகையாகக் கவிதைகளைப் பாகுபாடு செய்துள்ளார். வேர்கள் என்ற பகுப்பு மரபுக் கவிதைகளையும், விதைகள் என்ற பகுப்பு புதுக்கவிதைகளையும் நாற்றுகள் என்பது ஐக்கூ கவிதைகளையும் கொண்டதாக அமைந்துள்ளது. மரபு வழியில் ஒலிநயத்தோடு கவிதைகள் படைத்துள்ளார். 'இயற்கையைக் காப்போம்' என்ற கவிதையில்,

> **முத்துமழை பொழிகின்ற வானம் – நிலா**
> **முற்றத்தில் குயில்கூவும் கானம் – கண்ணைக்**
> **கொத்துகின்ற பச்சைவயல் காட்சி – எங்கும்**
> **கொலுவிருக்கும் அழகரசி ஆட்சி![2]**

என இயற்கை வருணனையுடன் தொடங்கித் தொடரும் கவிஞர் கற்பனைக்கும் வருணனைக்கும் மட்டும் கவிதை படைக்காமல் சிந்திக்கவும் தூண்டுகிறார். கற்பனை நயத்துடன் தொடங்கும் கவிதை கருத்துச் செறிவுடன் செயற்கைக் கண்டுபிடிப்புகளால் ஏற்படும் அபாயத்தையும் அறிவுறுத்தி எச்சரிப்பதாக உள்ளது.

அறிவியல் வளர்ச்சி மகிழ்ச்சியளிக்கக் கூடியதாக இருப்பினும் எந்திரத்தன வாழ்க்கைக்கு மனிதனைத் தள்ளிச் சென்று கொண்டிருப்பது கண்கூடு. மனிதனின் அறிவியல் மேம்பாட்டு நுகர்வினால் இயற்கை பல்வேறு வகைகளில் மாசுபட்டு வருகிறது. செயற்கைக் கண்டுபிடிப்புகளால் இயற்கை அழிந்துவிடக் கூடாது என்று அறிவுறுத்தும் போக்கும், விழிப்புணர்வை ஏற்படுத்தும் நோக்கும் இக்கவிதைக்கு உள்ளடக்கமாகியுள்ளன. இச்சிந்தனையின் தொடர்ச்சியாக விதைகள் என்ற பகுப்பில் 'விழிப்பது எப்போது?' என்று கவிதை படைக்கிறார். **நாற்றுகள்** என்ற பகுப்பில் ஹைக்கூ பாணியில் இவர் எழுதியுள்ள கவிதைகள் எளிய சொற்களில் சுவை பயப்பனவாக அமைந்துள்ளன.

> **சுதந்திர முதலுக்கு**
> **வட்டி வசூலா?**
> **தியாகிகள் பென்சன்[3]**

என்பது சான்று.

## அன்புள்ள திரு திருடனுக்கு

இந்தக் கவிதைத் தொகுப்பில் 29 தலைப்புகளில் கவிதைகள் தொகுக்கப்பட்டுள்ளன. இந்நூலில் இடம்பெற்றுள்ள முதல் கவிதையின் தலைப்பையே நூலின் தலைப்பாக அமைத்துள்ளார் ஆண்டவர். இந்நூல் புதுக்கவிதைகளின் தொகுப்பாக அமைந்துள்ளது.

> **மனித நேயத்தை, கசக்கிப் பிழிந்து வணிக மயமான ஆதிக்க உணர்வுகள், சுயநலத்துக்காக சுற்றுப்புறத்தை மாசுபடுத்தும் சுயநலக்கூட்டம், எந்த விதமான புதுமையான சிந்தனைகளையும் வெளிக்கொணர மாட்டோம் எனக் கங்கணம் கட்டிக் கொண்டு சமுதாயக் கட்டமைப்பில் நின்று இயங்கும் மேலாதிக்க உணர்வுகள், எல்லாத் துறைகளிலும் போலிகளால் சூழப்பட்டுள்ள அவலம், அரசியல், சமயம், வணிகம், குடும்பம் என்ற போர்வைகளில் இயங்குபவர்கள், பொதுநலன்கள் புதைக்கப்படும் அவலம் போன்றவையே இக்கவிதைகளின் அடிப்படைக் கருப்பொருள்கள்[4]**

என்று இந்நூலின் என்னுரையில் குறிப்பிடும் ஆண்டவர், இந்நூல் பாடுபொருள் அடிப்படையில் ஒரு புதிய முயற்சி என்றும் கூறுகிறார்.

இக்கவிதைகளைப் பாடுபொருள் அடிப்படையில் பகுத்து நோக்கின், வளர்ந்து வரும் அறிவியலினால் ஏற்படும் இயற்கைச் சீர்கேடுகள் மற்றும் இயற்கை பற்றியதாக ஏழு கவிதைகள் உள்ளன. வாழ்க்கையில் காணப்படும் முரண் பற்றி ஒரு கவிதை பேசுகிறது. மனித இயல்பு பற்றியதாக மூன்று கவிதைகளும் காதல் கவிதைகள் நான்கும் மனித உறவுகள் பற்றி மூன்று கவிதைகளும் பகுத்தறிவு சிந்தனையாக ஒரு கவிதையும் சாதீய எதிர்ப்பாக ஒரு கவிதையும் தமிழ், தமிழர் குறித்தனவாக மூன்று கவிதைகளும் தன் அனுபவக் கவிதை மற்றும் புத்தாண்டு குறித்து இரண்டு கவிதைகளும், அரசியல், ஊழல், சட்டம் ஆகியவற்றை அலசுவதாக ஐந்து கவிதைகளும் பதிவு செய்யப்பட்டுள்ளன. இக்கவிதைத் தொகுப்பினுள் சுட்டத்தக்க, சிறந்த கவிதைகள் சிலவற்றை இங்குக் காணலாம்.

இயற்கையின் சீற்றத்தை **இயற்கையின் கலிங்கத்துப்பரணி** என்ற நெடுங்கவிதையில் வருந்திக் கூறுகின்றார். இக்கவிதை ஒரிசாவில் வீசிய புயல் உயிர்களைப் பலிகொண்ட துயரமான நிகழ்ச்சியைக் கருவாகக் கொண்டுள்ளது. இயற்கை அன்னை

தென்றலாய்த் தவழும் போது மனித உயிர்கள் மகிழ்கின்றன. தென்றலைத் தங்கள் கவிதைகளில் தாலாட்டுகின்றனர் கவிஞர்கள். ஆயின் தென்றலே புயலாக மாறிவிடும் போது இயற்கையின் கோரதாண்டவத்தால் எண்ணற்ற மனித உயிர்கள் மடிகின்றன. இயற்கையின் சக்திக்கு முன் மனிதன் செயலற்றவனாகி விடுகிறான். உலகெங்கும் புயலும் மழையும் பூகம்பமும் எரிமலைகளின் சீற்றமும் மனித வாழ்வை உருக்குலைத்துக் கொண்டுதான் உள்ளன. இயற்கையின் சீற்றம் கண்டு குமுறுகின்ற ஆண்டவர் இயற்கையைச் சாடுகின்றார்.

இயற்கையின்
கோர நர்த்தனத்தால்
ஓரிசாவில்
உதிர்ந்தன உயிர்ப் பூக்கள் . . . .
இந்தக்
காற்றின்
கைகளுக்கு
கை விலங்கு
இட வேண்டும்.
புன்னகை மாறா
பிஞ்சு மழலைச் சாவுகள்
ஏதுமறியா
கால் நடை
இழப்புகள்
சிதறிய
மனிதப்
பிணங்களைக்
குதறும்
ஓநாய்கள்
இயற்கையின்
கொடூரத்தை
என்ன சொல்ல
தண்ணீர் மேல்
கண்ணீர்த் தீபங்களாய்
சதை மெழுகுவர்த்திகளாய்
மக்கள்
உருகும்
கொடுமை
எங்கள்
இதயங்களை
அரிக்கிறது[5]

வெறும் செய்திகளையோ கருத்துகளையோ கூறும் படைப்பாக அமையாமல் இக்கவிதையில் தன்னலம் மிக்க பொய் வேடதாரிகளையும் காட்சிப்படுத்துகிறார்.

கடற்கரைக் காடுகளை
அழித்து
சுற்றுச் சூழலுக்கு
சூடு வைத்தவர்கள்
சுண்ணாம்புக் கால்வாய்
வெந்து கொண்டிருக்கும்
மனிதர்களைப்
பார்க்காமல்
தங்கள்
அரசியல் வெற்றிலைக்கு
கால்வாயில்
சுண்ணாம்பு சுரண்டி
சிவக்கச்
சிவக்க
வசனம் பேசினர்
ஐந்து நட்சத்திர
விடுதிகளில்
குளிர் அறைக்குள்
சமூகசேவை
செய்யும் ஆத்மாக்களே
அரிமாக்களே
காகித மலர்களை
அலங்கரித்தது போதும்
கசங்கிய மலர்களை
காப்பாற்ற
வாருங்கள்[6]

நிறமற்றவர்கள் என்ற கவிதையில் இயற்கையில் காணப்படும் முரணையும், உள்ளொன்று வைத்து வெளித்தோற்றத்தில் வேறு மாதிரி செயல்படும் மனிதர்களையும் ஒப்பிடுவது சிறப்பாக உள்ளது.

புன்னகை முத்துக்களால்
பூரிக்கும் கடல்தான்
அடிவயிற்றில்
திமிங்கலங்களையும் புயல்களையும்
கருக்கொண்டு
உருவாக்குகின்றது
பூக்களாய்ச் சிரிக்கும்
மண்மகள் தான்

பூகம்பத்தையும்
அடை காக்கிறாள் . . . .
வானம் மின்னலுக்கு
பின்னாலேயே
இடியையும் ஏவுகிறது
இத்தகைய இயற்கையின்
முரணைப் போலவே
உள்ளம் நிறைய
முட்களை
நிறைத்துக் கொண்டு
உதடுகளில்
சாயம் பூசியபடி
நிறமற்றுக் கிடக்கும்
மனிதர்கள்
எத்தனை பேர்?[7]

ஏங்கும் மானுடம் என்ற கவிதையில் பச்சைப் பட்டாடை அணிந்து கண்களுக்குக் குளிர்ச்சியாய்த் திகழ வேண்டிய நிலமகள், செயற்கை முறைகளாலும் செயற்கைக் கண்டுபிடிப்புகளாலும் தன் தனித் தன்மையை இழந்து வறண்ட பாலைவனத்தினைப் போல் காணப்படுவது கண்டு குமுறுகிறார். இதே நிலை தொடர்ந்தால் வருங்காலத் தலை முறையினர்க்கு வாழ்க்கையே கடினமாகிவிடும். நம்மைப் பரவசப்படுத்தும் இயற்கையை நாம் பாழ்படுத்திக் கொண்டிருக்கிறோமே என்ற ஏக்கமே கவிதையாகியுள்ளது.

வருங்காலத்
தலைமுறை
வைப்புநிதியான
இயற்கையினை
நிகழ்கால
வியாபாரம்
சூறையாடும்
அவலம்
மண்ணின்
மார்பகங்களில்
தாய்ப்பாலாய்
தண்ணீரை
உறிஞ்சும்
போர்பம்புக் குழந்தைகள்
தாய்ப்பால் வற்ற
குருதிச் சேற்றில்
அலறும் தாய்மண்
பசுமை போர்த்திய

நிலமகள்
மேனியெங்கும்
சாம்பலாய்
தேமல்கள்
பூக்கும்[8]

மனிதர்களுக்கு வான், நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகியன வேண்டும். மனிதர்களுக்கு மட்டுமல்லாமல், இந்தப் பிரபஞ்சத்தில் வாழும் அனைத்து உயிர்களுக்கும் பஞ்சபூதங்கள் ஆதாரமானவை. ஆயின் மனிதன் இயற்கையை இயந்திரங்களின் மூலம் நாசமாக்கிக் கொண்டிருப்பதைக் கண்டு குமுறுகிறார் ஆண்டவர். **மரணிக்கும் மனிதம்** என்ற கவிதை மனிதத்தை உயிர்ப்பிக்க நம்மைச் சிந்திக்க வைக்கிறது.

பச்சை நிறங்கள்
பட்டுப் போக
திரும்பிய இடமெலாம்
முகங்களை இருளாக்கும்
கரியமிலக் கழிவுகள்
மரங்கள்
என நினைத்து
மின் கம்பங்களில்
கூடுகட்டும் பறவை
புதிய கலாச்சாரம்
என்ற போர்வையில்
பாலிதீன் பைக்குள்
நம் உலகம்
தோட்டங்கள்
எல்லாம்
தொழிற்சாலை ஆனதால்
மனிதம் செத்து
இயந்திரங்களின்
இனிய ஆட்சி[9]

கேள்விக்குறியாகும் மனிதம் என்ற கவிதை பல கேள்விகளை நம்முள் எழுப்பி மனிதத்தை மீட்டெடுக்கும் வழியினை ஆராயச் சொல்கிறது.

கிராமங்களைப்
பலியிட்டு
தின்று கொழுத்திருக்கும்
ராட்சதனாய்
வளர்ந்திருக்கும்
சிமெண்டு காடுகளான
நகரங்கள்[10]

நாகரிக உலகில் அறிவியலின் வியத்தகு முன்னேற்றம், புதுப்புது சாதனைகள், கண்டுபிடிப்புகள் எனத் தொடர்கின்றன. இந்த ஆக்கம் ஒருபுறம் மகிழ்ச்சியளிக்கக் கூடியதாயிருப்பினும் மறுபுறம் இயற்கை அழிவுப் பாதையில் சென்று கொண்டிருப்பது மறுக்க முடியாததாகும். வா.மு.சே. ஆண்டவரின் கவிதைகள் மனித வாழ்வின் அவலங்களைக் கண்டு வெம்புவனவாக உள்ளன. மனிதன் செய்யும் இயற்கை நாசம், மனித வாழ்வில் காணப்படும் அறியாமை, இயலாமை, அரசியல் அநீதி, தமிழ்ப்பற்று, மனிதாபிமானம் போன்றவற்றை விளக்குவனவாக இவரின் கவிதைகள் அமைந்துள்ளன.

**வேலிகளாகப் போலிகள்** என்ற கவிதை இன்று காணப்படும் சனநாயகத்தின் உண்மை நிலையை வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது.

***1947 – ஆகஸ்டு 15***
***வெள்ளையரை ஓட்டிய***
***வேகத்திலேயே***
***கொள்ளையருக்கு***
***குடியுரிமை கொடுத்தோம். . .***
***இந்த நாட்டில்***
***என்று***
***பண நாயகங்கள்***
***புதைக்கப்படுகின்றனவோ***
***அன்றுதான்***
***சனநாயகம் விதைக்கப்படும்!"***

அரசியலில் காணும் அநீதி, விமர்சன அடிப்படையில் இக் கவிதையில் கருவாகியுள்ளது. **தேனீக்களாய் மாறுங்கள்** என்ற கவிதை அரசியல்வாதிகளைக் கடுமையாக விமர்சித்து, அவர்களுக்குக் கட்டளையிடும் கவிஞனின் தார்மீகக் கோபத்தைக் காட்டுகிறது.

***குப்பைகளைச்***
***சுற்றும்***
***ஈக்களாய்***
***மக்களைச்***
***சுற்றுபவர்களே!***
***சனநாயகப்***
***புற்றுக்குள்***
***நுழைந்து கொண்டு***
***பால்வார்க்கும்***
***கைகளினைப்***
***பதம்பார்க்கும்***
***பாம்புகளே***

என்று தொடங்கித் தொடரும் கவிஞர்,

*இதுவரை*
*உறிஞ்சியது*
*போதும்!*
*ஈக்களாய்*
*இல்லாமல்*
*சனநாயகப்*
*பூக்களைச்*
*சுற்றும்*
*தேனீக்களாய்*
*மாறுங்கள்*

என்கிறார். அரசியலைச் சாடும் இவர், ஓட்டையாகிப் போன சட்டத்தின் தலையிலும் குட்டத் தவறவில்லை.

*மிசாச் சட்டம்*
*விசா இல்லாத*
*பாஸ்போர்ட்டுகளாய்*
*எத்தனை பேரின்*
*விலா எலும்புகளைப்*
*பதம் பார்த்துள்ளது*
*தடா*
*என்னும்*
*விஷக்கத்தி*
*எத்தனை முறை*
*தவறுதலாகப் பாய்ந்துள்ளது . . .*
*மனிதர்களுக்காகச் சட்டமா*
*சட்டத்திற்காக மனிதனா*
*தேவை இனி*
*பல திருத்தம்*

மனிதன் உயிரோடு வாழும் காலத்தில் சாதி, மதம் என்பதற்காய்ச் சண்டையிடுகிறான். ஆயின் மரித்த பிறகும் சாதியாலும் மதத்தாலும் மனிதன் அடையாளப்படுத்தப்படுவது கண்டு குமுறுகிறார் கவிஞர். கவிஞனின் புதிய பார்வை இங்கு பதிவு செய்யப்பட்டுள்ளது.

*மனித நேயங்கள்*
*புதைக்கப்பட்டு*
*மயானத்தில்*
*மதங்கள்*
*முளைக்கின்றன*
*சிலுவை சுமக்கும்*

சமாதி
பட்டை நாமங்களுடனும்
பிறைகளுடனும் தெரியும்
கல்லறைகள். . .
புழுத்துப் போன
சாதிக்குள்ளே
நமது உலகம்
இருந்தால்
அடுத்த நூற்றாண்டில்
நாம்
எவ்வாறு
அடி எடுத்து
வைப்பது
பழைய
மொந்தையில்
புதிய கள்ளாக
இருந்தோம்
இனி
புதிய மொந்தையில்
புதிய கள்ளாக
புறப்படுவோம்
ஊற்றெடுப்போம்

இன்றைய சூழலில் மனிதநேயம் மறைந்து வருவதையும், அறிவியலில் முன்னேறினாலும் மனிதன் மனத்தில் பின்தங்கி, சாதி, மதம் என்று முத்திரை குத்திக்கொண்டு சண்டையிடுவதும் வருங்காலத் தலைமுறையினர் பற்றிய கவலையைக் கவிஞனுக்குள் தோற்றுவிக்கின்றன.

தாயானவள் எவ்வளவு கோரமான தோற்றமுடன் அழகற்றவளாக இருந்தாலும், குழந்தையின் கண்களுக்கு அழகான வளாகவே தெரிவாள். ஒருவன் பிறந்து வளர்ந்த மண் பசுமையா யில்லாமல், வறண்ட நிலமாக இருப்பினும் அவன் கண்களுக்குக் குளிர்ச்சி தருவதாகவே, தாயைப் போல அவனுக்குள் பாசத்தைப் பொழியச் செய்வதாகவே இருக்கும். கவிஞரின் என் மண் என்ற கவிதை இதற்குச் சான்றாகிறது.

உலர்ந்து
இருக்கும் இப்பூமியில்
கள்ளிப்பால் முனைகள்தாம்
கனமாய்ச் சுரக்கும்
குத்தும் முள் மரங்கள்

வசந்தத்தின்
கருவறைக்குள்
வரும்பொழுது
மயிலிறகால்
பூ
ஆடை நெய்யும்
இந்த மண்ணை
துளைக்கத் துளைக்க
கிடைக்காத
ஈரம்
இம்மக்களின்
மனங்களை உரசினால்
ஈரம் சுரக்கிறது

வேர்த்திருவிழா என்ற கவிதை தமிழர்களின் பொங்கல் திருநாளைப் பற்றி எழுதப்பட்டதாகும். இயற்கைக்குத் தமிழன் எடுக்கும் இவ்விழாவினைப் பற்றிக் கூறுகையில் பகுத்தறிவுக் கருத்துக்களையும் பதிவு செய்கிறார்.

கல்லுக்கும்
மண்ணுக்கும்
கற்பூரத்தைக்
காட்டி
போலிக் கதையும்
புனை சுருட்டும்
மலிந்த
தமிழ்ப் பூமியில்
சோர்வில்லா
சூரியனுக்கு
கற்பூரம்
காட்டும்
நாள் . . . .
வடமொழி
புராண புளுகுகளை
சுமந்து
வளைந்த
தமிழ்த் தாயின்
முதுகை
நிமிர
வைக்கும்
நாள்
எல்லா

அடையாளங்களையும்
தொலைத்த தமிழன்
அடையாளம் காணும்
ஒரே நாள்
இந்த நாளில்
மூடநம்பிக்கை திணிக்கும்
உருவங்களை
மறப்போம்
இருக்கின்ற
இயற்கையினை
மதிப்போம்

சமூகச் சிக்கல்களைக் கண்டு ஆவேசப்படும் கவிஞர், வெறும் புலம்பலாய்த் தன்னுடைய கவிதைகளை நிறுத்திக் கொள்ளாமல், படிப்போரின் உணர்வினைத் தூண்டிச் சிந்திக்கச் செய்து அவர்களாகவே தீர்வு காணப் பாதை அமைக்கிறார்.

தூரத்தில்
இரும்பு வலைகளைப்
பிய்த்தெறியும் புயலின்
காலடிச் சத்தம்
கேட்ட பிறகும்
அமைதியாய்
எச்சில் இழைகளால்
தொங்கு பாலமாய்
மும்முரமாய் வலை
பின்னும் சிலந்தி . . .
இனி வரும் உலகம்
நீங்கள்
வாழ்ந்த நாள்களில் இல்லை
இனி வாழும் நாள்களில்[25]

என்று இளைய தலைமுறையினர்க்குத் தன்னம்பிக்கையையும் துணிவையும் ஊட்டுகிறார். தமிழின் உரிமைக்காகவும், தமிழர் உரிமைக்காகவும் குரல் கொடுக்கிறார் கவிஞர் . தமிழின் மேல் இவர் கொண்டுள்ள தீராக் காதலை **வேரையா வெட்டுவது?** என்ற கவிதை உணர்த்துகிறது.

தாய் மொழியை
தாய்ப்பாலை
தாய்நாட்டை
அழிக்க
தமிழ்க் குழந்தைகளுக்கு

நச்சுப் பால்
ஊட்ட
அந்நிய இராட்சசிகளின்
அணி வகுப்பு. . . .
உங்களுக்கு
மொழி
வியாபாரம் – பொழுதுபோக்கு
ஆனால்
எங்களுக்கோ
அதுவே
உயிர், – உணர்வு,
அன்பு, – அறிவு,
வளர்ச்சி, – வாழ்வு
இனி
தமிழோ
கருவறைக்கு
தமிழ்ப் பகையோ
கல்லறைக்கு

இத்தொகுதியில் இடம் பெற்றுள்ள அன்புள்ள திரு திருடனுக்கு (ப. 15), பூப்பெய்திய மண்மகள் (ப. 37), வானவில் (ப. 45), மலேசிய நாட்டின் மகுடம் (ப. 70) போன்ற கவிதைகள் ஆண்டவரின் அழகியல் பார்வையையும் கவிதைத் திறனையும் சிறப்பாக எடுத்துக்காட்டுவனவாக உள்ளன. இவரின் கவிதைகளில் காதலும் பாடுபொருளாகிறது. தன்னை வருத்திய சமுதாயப் பிரச்சினைகளைப் பாடும் கவிஞர் தன் இதயத்தை மென்மையாய்த் தீண்டிய குழந்தைச் செல்வம், உறவுகள், தாய்மண் போன்றவற்றையும் கவிதையாக்கியுள்ளார். **வேர்களும் விதைகளும், அன்புள்ள திரு திருடனுக்கு** ஆகிய நூல்கள் மூலம் கவிஞராக அடையாளம் காணப்பட்ட ஆண்டவர், தம் கவிதைப் பணியில் சமூக உணர்வு கொண்ட படைப்புகளை, மனித நேயச் சாரத்துடன் தொடர்ந்து படைத்தளித்து வருகிறார்.

## அடிக்குறிப்புகள்

1. வா.மு.சே. ஆண்டவர், **வேர்களும் விதைகளும்**, (வி.எஸ். குணரத்தினம் வாழ்த்துரை), ப. 11.
2. மேற்படி, ப. 28.
3. மேற்படி, ப. 94.
4. வா.மு.சே. ஆண்டவர், **அன்புள்ள திரு திருடனுக்கு**, ப. 13.

5. *மேற்படி, பக். 99-100.*

6. *மேற்படி, பக். 101-102.*

7. *மேற்படி, பக். 22-23.*

8. *மேற்படி, பக். 30-31.*

9. *மேற்படி, பக். 35-36.*

10. *மேற்படி, ப. 43.*

11. *வா.மு.சே. ஆண்டவர்,* **அன்புள்ள திரு திருடனுக்கு**, *பக். 50-53.*

## முதன்மை நூல்கள்

**அன்புள்ள திரு திருடனுக்கு** *(கவிதைத் தொகுதி), வா.மு.சே. ஆண்டவர், சேதுச்செல்வி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2000.*

**வேர்களும் விதைகளும்** *(கவிதைத் தொகுதி), வா.மு.சே. ஆண்டவர், கவியரசன் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1993.*

# பச்சியப்பன்

## வாழ்க்கைச் சுருக்கம்

பெரிய ஐயம்பாளையம் (திருவண்ணாமலை மாவட்டம்) என்னும் கிராமத்தில் 25-06-1968இல் பிறந்தார்.

கல்வி : இளங்கலைத் தமிழ் ஊரிஸ் கல்லூரியிலும் (வேலூர்), முதுகலையும், ஆய்வியல் நிறைஞர் பட்டமும் சென்னையில் உள்ள மாநிலக்கல்லூரியிலும் பயின்றவர். தற்சமயம் முனைவர் பட்ட ஆய்வைச் சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் செய்து வருகிறார்.

பணி : சென்னையில் உள்ள SRM கல்லூரியில் விரிவுரை யாளராகப் பணியாற்றுகிறார்.

இயற்றிய நூல்கள்:

> **கல்லால மரம், உனக்குப் பிறகான நாட்களில்** என்பன இரண்டும் கவிதை நூல்கள். பாரதியின் **புதுவை வாழ்க்கை** வரலாற்று நூல். இதில் **உனக்குப் பிறகான நாட்களில்** என்னும் கவிதை நூல் மட்டுமே கட்டுரைக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.

கவிதை நூல் பற்றிய அறிமுகம் கே.எம். வேணுகோபால் மற்றும் பாரதிபுத்திரன் (கிறித்துவக் கல்லூரி, தாம்பரம்), பேரா. சுப. வீரபாண்டியன் போன்றோர் அளித்துள்ளனர். இதில் கவிஞரின் எளிய பண்பு நலன், சிந்தனையின் பின்புலம், கவிதை யாக்கத் திறன் போன்ற செய்திகள் சிறப்பாகத் தரப்பட்டுள்ளன. கே.எம். வேணுகோபாலின் அறிமுக உரையில் கவிஞரைப் பற்றிக் கீழ்வருமாறு கூறுகிறார்.

> தமிழ்நாட்டில் புதிதாக எழுதிக்கொண்டிருக்கும் கவிஞர்களில் எவருடைய கவிதை நன்றாக இருக்கின்றன? என்று இலங்கை ஆய்வியல் அறிஞர் கா. சிவத்தம்பி உசாவியபோது, அவரிடம் கவிஞர் இன்குலாப் குறிப்பிட்ட கவிஞர் பட்டியலில் பச்சியப்பன் பெயரும் இடம்பெற்றிருந்தது. இதை இன்குலாப் சொல்லக் கேட்ட பொழுது நான் அகமகிழ்ந்தேன் (ப. 8).

பேரா. பாரதி புத்திரன், கவிஞரின் கவிதையாக்கத் திறன் என்பது பற்றிச் சிறப்பாகக் குறிப்பிடுகிறார். அது கீழ்வருமாறு:

> ஆழமானவற்றை எளிமையாகக் கூறிவிடுவது கலையாக்கத் திறனின் உயர்நிலை. அது பச்சியப்பனுக்கு வாய்த்திருக்கிறது என்பதைப் பல கவிதைகள் உணர்த்துகின்றன. (ப. 20)

இவ்வாறான கவிதைகளைக் கொண்ட இத்தொகுப்பின் சில பொருண்மைகளை வெளிக்கொணர்வதாகக் கட்டுரை அமைகிறது.

**காதல்**

காதலியின் பிரிவு சோகம். காதலிக்கும் போது வாழ்க்கை வசப்படுகிறது. மகிழ்ச்சியும் நம்பிக்கையும் இணைந்து ஆராவாரம் செய்கிறது. ஆனால் காதலில் ஒருவர் பிரிந்தாலும் இருவருக்கும் சோகம். இங்குக் காதலி அற்றுக் காதல் வாழும் காதலனின் சோகம் கவிதையில் வடிவம் கொள்கிறது.

> **நீ உடைத்துப் போன**
> **என் வாழ்க்கையை**
> **வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும்**
> **என்னை**
> **எப்படிப் புரிய வைப்பது உனக்கு**
> **(உனக்குப் பிறகான நாட்களில், ப. 26)**

காதல் 'மானுடத் தலைமை இன்பம்' என்பது இன்னும் பாரதியின் கவிதை வரியாகத் தான் இருக்கிறது. நிகழ்காலத்தில் காதல் பிரிவில்தான் முடிகிறது. அதனை விளக்கும் கவிதை:

> **உன் கல்யாணத் தேதிக்குப் பிறகு**
> **எழுதப்படாமலே இருக்கின்றன**
> **என் ஏடுகள் (உனக்கும் சேர்த்து, ப. 35)**

> **ஓடும் போது**
> **கல்லடித்துப் பெயர்ந்த கால் விரல் நகத்தில்**
> **அருகம்புல் மாட்டி இழுத்ததாய்**
> **அப்படி வலி**
> **உன் திருமணப் பத்திரிகை பார்த்தபோது (கடன், ப. 67)**

உணர்வுகளின் சங்கமத்தில் காதல் மலருகிறது. கணிதத்தைப் பொய்த்துப் போகச் செய்யும் காதல். இங்கு இரண்டு உயிர் இருப்பதில்லை. ஒன்றுதான் என்னும் உள்ளுணர்வுகளைக் கூறும் கவிதை. இதில் பிரிந்தவர் சந்திக்கின்ற நேரம் வருகிறது. அவ்வாறு நேர்வதற்கு முன்பு எவ்வகையில் தேடுதல் நடக்கிறது என்பதைக் கூறும் கவிதை அடிகள் கீழ்வருமாறு:

நாய் குரைப்புகளுக்கிடையே
என் செருப்புச் சத்தம் கேட்க
உன் செவிப்பறையின்
சல்லி வேர்கள்
தெருவெங்கும் படர்ந்திருக்கும்.

பெரும் பொங்கலின்
பனி விடியலில் இருந்து
பெரிய தெருவில்
உன் பாதச்சுவடு நிரம்பி வழியும்

அந்தக் கரும்புத் தோட்டத்தின்
வரப்புகளிளெல்லாம்
உன் தேடல்கள் காய்ப்பேறியிருக்கும்

மாட்டுப் பொங்கலன்று
கூந்தலில் பூ சிரிக்கும்
முகம் உதிர்ந்து வாடும்

காணும் பொங்கலில்
தாழ்வாரக் கம்பத்தில்
அடியறுந்த கொடியாய் வதங்கிக் கிடப்பாய்

(உனக்கு வராத கடிதம், பக். 40, 41)

கிராமங்கள் வரப்புகளும் வாய்க்காலும் பச்சை வயல்களும் மட்டுமே இருக்கும் என்று நினைக்கும் சிந்தனையை அடியோடு மாற்றிவிட்ட காதல் கதையாக அமைகிறது. இறுதி அடி செத்துப் போவோம் என்று / சொன்னால் கேட்டாயா? என்று கேட்டுத் துன்பத்திற்குக் காரணமானவள் நீதான் என்பது போல் முடித்திருக்கிறார் கவிஞர். காதலின் மேன்மையை உணர்த்தும் கவிதையாக அமைந்திருக்கிறது.

*சாதி*

சாதி ஒழியுமென்று சுதந்திரப் போராட்டம் நம்பிக்கை ஊட்டியது. எனினும் 'குலக்கல்வி' சென்ற பிறகும் சாதிக்கு வீரியம் இருக்கத்தான் செய்கின்றது கிராமங்களில். இதைக் கண்ட கவிஞர் எப்படிப் பொறுத்துக்கொள்வார். அவர் கண்ட காட்சிகளை அனுபவித்து வாசகனுக்குப் புது அனுபவம் கொடுக்கும் சில காட்சிகள்:

முண்ட
பல்லுமேல நாக்கு போட்டு பேசற தான்னு
சேலையை உருவிட்டானாம்
மேல்ஜாதிக்காரன்!

அம்மணமா அழுத குப்பாத்தாவுக்காக
சேரியே தெரண்டுடுச்சு

இரத்தக்களறி ரணகளறி
இரும்புத் தொப்பி வந்தப்புறம்தா அடங்கிச்சு

இருந்தாலுமென்ன இப்போ சேரிதாண்ட வழியில்ல
கூலி செய்ய நிலமில்ல (அகதி, ப. 24)

சேரியில போயா
சம்பந்தம் பேசுவேன்
அதைவிட நாண்டுகிட்டு
சாவேண்டா என்கிற
என் அப்பா போலவே
தாத்தாவும் எகிறினாராம் (வாழையடிவெறி, ப. 57)

எசமான் தோட்டத்தில்
எத்தனை இலையிருந்தாலும்
எங்க எசமானியம்மா மட்டும்
கையத்தான் நீட்டச் சொல்லுவா (கீழ்வரப்பு, ப. 61)

நம்பிக்கை

கவிஞர்கள் நிகழ்காலச் சோகவாழ்வை வெற்றி கொள்ள முனைவார்கள். உடனடியாக முடியாது போகும்போது எதிர்காலத்தில் முடிக்கும் எண்ணத்துடன் கவிதைகளை ஆக்குவர். இதனாலேயே கவிஞர்களிடம் நம்பிக்கை என்பது மேலோங்கி இருக்கும். இவரது நம்பிக்கைகள் சில.

உச்சிக்கிளையை உடைத்துவிட்டு
எனை
ஊனமாக்கி விட்டதாய் முடிவுக்கு வராதே
இனி
அத்தனை கணுக்களும்
ஆயிரமாய் தளிர்க்கும்
பொறு (இது உனக்கு மட்டுமான வரிகள், ப. 27)

ஈரம் நோக்கி
என் வேர்கள் நீளும்
நாளைய கிளைகளுக்காய்(மற்றுமொரு பொழுது, ப. 31)

நிகழ்காலத்துக் குழந்தைகள்:

பசிக்கு அழும் குழந்தையைத் தள்ளி அமிலம்
சுரக்கும் மார்பை மூடும் தாய்! . . . .
தொட்டிலே பாடையாகிப் போனது மாதிரி
மிதந்து மிதந்து நதியோடு போகும் மீன்
(காற்றுக்கு உயிர் போகிறது, ப. 33)

அடுத்த தலைமுறை குழந்தைகள்

ஓடையில் தூண்டில் போட்டு
அயிரை மீன்களைச் சுட்டுப் பார்க்கட்டுமே!
மழையில் தொப்பட்டையாய் நனைந்து
சளி ஒழுகித் திரியட்டுமே!
புல்வெளியில் புரளட்டுமே
தும்பியைத் துரத்தட்டுமே! (ப. 33)

கவிஞனின் நம்பிக்கை சமூகத்திற்கு ஏற்றதாக இருக்கும்போது உண்மையானதாக மாறுகிறது. மகாகவி பாரதியின் 'சுதந்திரப் பள்ளும்' அப்படித்தான். கவிஞர் பச்சியப்பனின் கனவும் மெய்யாக மாற வேண்டிய கனவுதான்.

நம்பிக்கை

காதலில் தோற்றுப் போனால் வாழ்க்கையில் தோற்றுப் போய்விட்டதாக நினைக்கும் சூழ்நிலையில் கவிஞர் கூறுவது வேறாக இருக்கிறது. அது.

ஒரு
அவசரத் தேவைக்காக
நாற்றுக்களை மேய்ந்து
வயிறு நிரப்பியாயிற்று . . .

கானம் இசைத்த
இதழ்களைக் கிழித்து
நீண்டு கிடந்தன
கோரைப் பற்கள்

என் சதைகளைக் குடித்துக்
கிறங்கிய நீயோ
என்னைத் துப்பினாய்
உடைந்து போய்விடவில்லை
என் சேமிப்புகள்

நீ அறைந்த
சிலுவையை உதறி
எழுந்து நடந்தேன்
புதிய திசையாய்!

இறைந்து கிடந்த
என் மீதங்களை
வாரிக்கொண்டு வந்து விட்டேன்
ஒரு வன்முறை தேசத்து
அகதியைப் போல (மற்றுமொரு பொழுது, ப. 30, 31)

தோல்வி வெற்றியின் முதல் படி என்பது போல் தோற்றுத் தோற்றுத்தான் மனிதன் வெல்கிறான். சமகாலத்துக் காதல் துரோகத்தால் அழிவது கிடையாது. மாறாக ஏமாற்றத்தால் புடம்போடப்பட்டு மனிதன் ஆற்றல்மிக்கவனாகவே மாறுகிறான். இது நவீனக் காலத்துப் பண்புகளில் ஒன்று. அதனை உவமை, உருவகம் போன்றவற்றைப் பயன்படுத்திக் கவிதையை மிகச் சிறப்பாகப் படைத்துள்ளார்.

## குடும்பம்

காலங்காலமாய்க் கூட்டுக் குடும்ப வாழ்க்கை. நவீன வாழ்க்கை மனைவி மக்களோடு குடும்பத்தைச் சுருங்கச் சொல்லி விட்டது. எனினும் இரத்த நாளங்களெல்லாம் கூடி வாழ்ந்ததில் தோன்றியது அல்லவா? அவை கேட்க மறுக்கின்றன. இந்த எண்ணம் கவிஞரின் மனத்தில் கவிதையாக வடிவெடுத்த போது,

> தாத்தா கட்டிய ஓட்டு வீடு
> இரண்டாய் உடைந்தது
> உனக்கான ஒரு புதுவாயிலோடு . . .
> நரம்பில் தட்டிய தேங்காய் மாதிரி
> எல்லாம் சரியாகத்தான் பிளந்து கொண்டது
> . . . . . இருந்தும் என்ன
> எத்தனை முறை துரத்தியும்
> என் வீட்டிலேயே வந்தடங்கும் உனது
> கோழிக்கு
> பதில் சொல்லத் தெரியாமல்
> கிடக்கிறேன்
> நான் (நரம்பு, ப. 90)

மற்றுமொரு கிராமத்துக் குடும்பம்

> ஒட்டிய கன்னமும்
> உலர்ந்த தலையுமாய்
> நாலு சுவர்களுக்குள்
> குடும்ப மானம் காக்கும்
> மனைவிமார்களும்
> பழுக்க மஞ்சள் பூசி
> கொண்டை நிறைய பூவோடு
> ஒய்யார நடை நடக்கும்
> வப்பாட்டிகளும்
> எப்போதும் கிடைத்து விடுகிறார்கள்
> அப்பாக்களுக்கு (காலத் தொடர், ப. 108)

குடும்ப ஒழுங்கு சீராக இல்லாததை அதனுடன் கூடவே எள்ளலும், இளைத்தாலும் வலுத்தாலும் சோகமாய் மாறிவிட்ட

பெண்களது நிலையைக் காட்டுவதாய் முழுமை பெறுகிற வகையில் கவிதை அமைந்து இருக்கிறது.

### சுதந்திரம்

இந்தியச் சுதந்திரம் 'கத்தி இன்றி இரத்தமின்றி' அகிம்சையில் பெற்றது. சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியா பல துறைகளில் தன்னிறைவு அடையாத நாடாக உள்ளது. அதனை ஒரு புதுக்கவிஞர், "இரவில் வாங்கினோம் இன்னும் விடிய வில்லை" என்று பாடினார். இவ்வாறான உணர்வு வடிவாகவே இவரும் ஒரு கவிதை படைத்துள்ளார்.

**எம் மக்களோ சிறையில்**
**நாடு மட்டும் எப்படி**
**சுதந்திரத்தில் . . .**

**ரத்தத்தில் மிதக்கும்**
**எங்களின் பிணத்தைச்**
**சுமந்துவரச் சம்மதிப்பீர்களா**
**தியாகிகளின் ஊர்வலத்தில்**

**(உனக்கு கிடைத்த சுதந்திரம், ப. 79)**

இக்கவிதையில் சுதந்திரம் ஒரு தரப்பினர்க்குப் பயனுடையதாகவும், மற்ற தரப்பினருக்குப் பயனின்மையும் விளைவதாக அமைகிறது என்ற பொருள்படக் கவிதை படைத்துள்ளார். ஆனால் தெளிவாக யார் இப்பிரிவினர் என்பது படிக்கும் வாசகர்களுக்குப் புரியும் வண்ணம் உருப்பெறவில்லை.

### கவிதையாக்கம்

காதல், கவிதைகளைச் சுரக்கும் அமுதசுரபி போலும். இவருடைய காதல் உணர்வு மனத்தைச் சில்லிட வைக்கிறது. முடிவு நம் மனத்தைச் சுக்கு நூறாய்ச் சிதற வைக்கிறது. முழுக்கவிதையும் கீழே.

### ஒத்தச்சுவடு

**நீ கடைசியாய் வடித்த**
**கண்ணீர் வார்த்தைகளில்**
**மூழ்கி மரித்தது**
**என் காதல்**
**நீ**
**போடும் கோலமின்றி**
**வெறுமையில் கிடக்கும்**
**உன் வீட்டு**

*வாசலாய்*
*என் நாட்கள்*

*தாவணி தொடாமல்*
*மக்கிக் கிடக்கிறது*
*மொட்டை மாடிக்*
*கயிறும்*
*மனசும்*

*மாலையோடு நீ*
*யாரின் விரல் பிடித்தோ*
*உன் வாசல்*
*நின்ற போது*
*திருஷ்டி கழித்த*
*சூறைத் தேங்காயாய்ச் சிதறியது*
*கனவு*
*என் வெற்றுத் தோள்களில்*
*எதை வாரிச் சுமப்பது?*
*அப்படி கழித்தாயோ*
*மீதியாய் நான்*

*இனி. . . .*

*நீ வைத்துப் போன நினைவு மரங்களில்*
*இளைப்பாறியே கழியும்*
*மரணம் வரைக்குமான தூரம்* *(பக். 96-97)*

தமிழ்மொழி இன்று வரை ஆட்சி மொழியாகவும் அருச்சனை மொழியாகவும் ஆவதற்குப் போராடிக் கொண்டிருக்கிறது. அதனைக் கம்பீரமான கவிதையாக மாற்றியுள்ளார். முழுக் கவிதை கீழே.

## எந்த மொழி அவனுடையது

*காத்தவராய பம்பைக்கு*
*இறங்காத சாமி இல்லை*
*சுருட்ட முடிசிலுப்பி*
*கருத்த உடல் முறுக்கி*
*அடிக்கும் பம்பைக்கும்*
*சன்னக் குரலுக்கும்*
*மயங்காத சாமி*
*அது என்ன சாமி!*
*ஊமைக் கன்னியோ*
*ஒத்தமலைத் தஞ்சியோ*

எட்டித் தோப்பிருக்கும்
பச்சையம்மஞ் சாமியோ
காத்தவராயன் பாட்ட
கேட்டு ஆடாம
கற்பூரம் கையில் வாங்கி
மலையேறிப் போனதா
எங்க ஊரு சனங்களில்
எவனுஞ் சொன்னதில்லை
மண்ணு சொன்ன பாட்டு
மக்க சொன்ன பாட்டு
இன்னிக்கு அதோட நெலமை
கடவுளுக்குப் புரியாப் பாட்டு (ப. 104)

*திருமணம் இளைய சமூகத்தின் ஈர்ப்பு மையம். ஓர் இளைஞனுக்குத் திருமணம் எத்தனைக் காரணங்களைக் கொண்டு நடத்தப்படு கிறது; எத்தனைப் பொறுப்புகளை அவனுக்கு அது வழங்குகிறது என்பதைக் கீழ்வரும் கவிதை உணர்த்துவதாக உள்ளது:*

ஆகவே. . .

அடுப்பங்கரை இருட்டில்
தட்டுத்தடுமாறுகிறது
என் அம்மாவுக்கு
ஆடு மேய்த்த கோலே
ஊன்று கோலாய்ப் போனது
அப்பாவுக்கு
அழுவத்துக் கோழியெழுப்பி
மதியத்தில்
இரைபோட ஆளில்லை!
மழை நாளுக்குப் பிறகு
வதங்கிக் கிடக்கிறது
என் தோட்டத்துப் பூசணிக்கொடி
வெளியே போக நேர்ந்தால்
கட்டுத்தறியிலேயே
கிடக்கிறது
கிழட்டுப் பசு
கிணற்று மண் இழுத்த களைப்பில்
முன்போல்
கூழுக்கு
கம்பு இடிக்க முடிவதில்லை
உன் மேலும் ஆசைதான்
மறுக்காமல்
சொல்லியனுப்பு
நாள் பார்த்து வாரேன் (ப. 107)

உருவகப் படிமம்

காட்சிப் பிம்பங்களால் ஆனது உவமை. இது எளிதில் உணரக்கூடியதாக அமையும். கருத்துப் பிம்பங்களால் ஆனது உருவகம். இது எளிதில் பொருளை உணர்த்தாது. உருவகத்திற்குத் துணையாக உவமை அமைந்தால் மட்டுமே இதனுடைய பயன் வாசகர்களுக்குக் கிட்டும். பச்சியப்பனின் கவிதைகளில் உருவகம் தனியாக இருப்பதால் உணர்வு ஆழமானதாக உள்ளது. வாசகருக்குக் கவிஞரின் உணர்வு என்ன என்பது பிடிபட மறுக்கிறது. காட்டாக:

**இருளின் கரிய உதடுகள் ஊதி**
**விடியல் அணைந்து விடாது**
**உன் சிறைக் கம்பிகள் உரசி**
**என் சிறகுகள் உதிர்ந்து விடாது. . . .**
**வைகறையைப்**
**பிரகடனப் படுத்திய உன்னிடம்**
**எஞ்சி நின்றது**
**வெறும் நட்சத்திரக் குப்பைகள்தான்**

**புதிய வரலாறு என்றுன்னைப் புரட்டினால்**
**அதே பஞ்சாங்கமும்**
**மஞ்சள் எழுத்துக்களும்தான்**

**வேண்டாம்**
**எங்களுக்கான போரை**
**நாங்களே நடத்திக்கொள்கிறோம்**
**நீ எமக்கு**
**எதிரியாகவே இரு**

***(இது உனக்கு மட்டுமான வரிகள், ப. 27, 28)***

இது அரசியல் பற்றிய கவிதை; வரலாற்றுச் சம்பவங்களை உருவகப் படுத்தியே எழுதியுள்ளார். வாதங்கள் உண்மையைக் கண்டெடுக்கப் பயன்படாமல், அதனைக் கொன்று விடுவதாகப் பொருள்படும் கவிதைகளில் உருவகம் உச்சத்திற்குச் செல்கிறது. காட்டாக:

**அந்தரங்கத்தில் மலம் தின்று**
**வார்த்தைகளில் தேனெடுக்கும் பிழைப்பை**
**எப்படி வாழப் பழக்கிக் கொண்டோம்**

***(ஒரு நட்பின் கடைசியில், ப. 42)***

**வாதங்களின் கோரப் பசிக்கு**
**உண்மைகளைத் தானே**
**வாரி விழுங்கினோம்.** ***(ப. 42)***

ஒன்றாம் தேதி வைக்கோல் கன்று முட்டச்
சுரக்கப் பழகிக் கொண்டது
வாழ்க்கை (வேர்பெயர்தல், ப. 45)

நம் பருவ வாசலில்
வெற்றுப் பாத்திரத்தோடு கிடக்கும் காதலை
அடுத்த வீடு பார்க்கச் சொல். (ப. 46)

மௌனமாய்க்கூட இருந்து பார்த்தேன்
விதையின்றிச் செடிமுளைக்க வைக்கும்
வித்தை அறிந்திருக்கிறாய் (சந்தனக்கூண்டு, ப. 54)

வார்த்தை விதைத்து
வாழ்க்கை முளைக்க வைக்கும்
சித்துவேலை கைவந்துவிட்ட பிறகு
இருக்கலாம்
இந்தக் கவிதையிலும்
சில பொய்கள் (வாய்த்தல், ப. 62)

மேற்கூறிய கவிதை வரிகளிலும் இவரது தொகுப்புகளில் உள்ள கவிதைகளிலும் உள்ள ஒரு பொதுப்பண்பு வாழ்க்கை வாழ்ந்து களிப்பதற்கு என்பதாய் அமைகிறது. கிராமத்து இயற்கையும் சாதிய முரண்பாடுகளும், நகரத்து நாகரிக வாழ்க்கையின் செழிப்பும் அது மனிதனது ஆன்மாவை ஈவு இரக்கமில்லாது வதைப்பதும் தாங்க முடியாது போகும் நிலையிலும் இந்த இடிபாடுகளுக்கிடையில் மனிதனைக் கண்டு உருவாக்கும் பண்பு இவரிடம் காணப்படுகிறது. இதுவே கலைஞர்களின் பொதுப் பண்பும் எனலாம்.

தமிழ்க் கவிதை உலகின் நம்பிக்கைக்கு உரியவரென இவரை உறுதியாகக் கூறலாம். எனினும் இவரது கவிதைகளின் பொதுப்பண்பாக அமைந்திருப்பது உருவகப் படிமங்கள். இது வாசகரின் உணர்வை தொடுவதற்குப் பதிலாகத் தனிப்பட்டுப் போகிறது. கவிஞரின் சமூகப் பிடிப்பும் இலட்சிய இலக்கும் எட்டும் முயற்சியில் கவிதைகள் நெஞ்சையும் மீறி நிமிர்ந்து நிற்கின்றன. இது காலப்போக்கில் எல்லாச் சமூக மக்கள் மனத்திலும் கரைந்து இக்காலத்துக்கு உரிய கவிஞர் எனப் பாராட்டுப் பெறுவார் கவிஞர் பச்சியப்பன் என உறுதியாகக் கூறலாம்.

## முதன்மை நூல்

உனக்குப் பிறகான நாட்களில், பொன்னி, சென்னை, டிசம்பர், 1998.

# வீரமுத்து

## கவிஞர் அறிமுகம்

சென்னை ஓட்டேரியில் கவிஞர் வீரமுத்து 30-9-69இல் பிறந்தார். தந்தை நா. முனியாண்டி. தாய் கருப்பாயி. இவர்கள் பர்மாவிலிருந்து தாயகம் திரும்பி வந்தவர்கள். 12ஆம் வயதில் 'சிலம்பொலி திறந்தவெளிக் கடற்கரைக் கவியரங்க அமைப்பில்' செ. கதிரவன் மூலம் முதல் கவிதை அரங்கேற்றத்தை வீரமுத்து செய்தார். இதற்கு உறுதுணையாக இருந்தவர் கவிஞரின் சித்தப்பா நா. காளியப்பன். கவிஞர் ஆங்கிலத் தட்டச்சு, சுருக்கெழுத்துப் பயின்றவர். புலவர் பட்டம் பெற்றவர். நா. காமராசனின் உதவியாளராகச் சில காலம் பணியாற்றினார். இவரது கவிதைத் தொகுப்பு **ஏவுகணைக் கவிதைகள்** என வெளியிடப்பட்டுள்ளது.

**ஏவுகணைக் கவிஞர், விஞ்ஞானக் கவிஞர்** என்று நா.காமராசனால் அழைக்கப்படுவதைப் பெருமையாகக் கருதுகிறார். **தெய்வத் தமிழ், தமிழ்ப்பணி, முகம், நெய்தல் நிலா, வண்ணப்பூங்கா, மகாகவி, கவிதை உறவு, முல்லைச்சரம், நவீன கண்ணகி** ஆகிய இதழ்களில் கவிஞரின் கவிதைகள் வெளிவருகின்றன. காதல் செயற்கைக்கோள் (கவிதைத் தொகுப்பு), தாவணியில் ஓர் சினிமா (பாடல் தொகுப்பு) இரண்டும் விரைவில் வெளிவரவிருக்கும் கவிதைத் தொகுப்புகள். சங்கத் தமிழ் மன்றம் கவிஞரின் தமிழ்ப் பணிக்காக 1990இல் தமிழ்த் தேனி விருதளித்துச் சிறப்பித்துள்ளது. இவர் திரைப்படத் துறையிலும் தொலைக்காட்சி தொடர்களிலும் இணை இயக்குநராகப் பணியாற்றுகிறார் (நேர்காணல், 03-04-05).

சிலைக் கவியரங்கம், வான்கோள்கள் பற்றிய அறிவியல் ஏவுகணைக் கவியரங்கம், கடற்கரைக் கவியரங்கம், விநாயகர் சதுர்த்தி கவியரங்கம், படகுக் கவியரங்கம், குதிரைக் கவியரங்கம் முதலான கவியரங்கங்களில் படைக்கப் பெற்ற கவிதைகள், ராணி, தாய் வார இதழ்கள். . . . , வானொலியில் வெளிவந்த கவிதைகள் முதலானவை தொகுக்கப்பட்டு, சென்னை பாலகிருஷ்ணன் பதிப்பகத்தால் அக்டோபர் 1997இல் **'ஏவுகணைக் கவிதைகள்'** நூலாக வெளியிடப்பட்டது. இந்நூலுக்குச் **சுரதா, வா.மு. சேது**

ராமன், கானவன் ஆகியோர் அணிந்துரை அளித்துள்ளனர். வீரமுத்துவின் ஏவுகணைக் கவிதைகள் அறிவியல் தமிழுக்கு ஒளிச்சேர்க்கை செய்கின்றன. 'ஏவுகணைக் கவிதைகள்' அறிவியல் தலைப்பில் தமிழகத்திலேயே முதன் முறையாக வருகின்றது. நிலவில் காலடி வைத்த நீல்ஆம்ஸ்டிராங் இல்லத்திலோ அல்லது அவர் ஊரிலோ நூல் வெளியீடு நடந்தால் சிறப்பாக இருக்கும் என்று இக்கவிதைத் தொகுப்பின் முதல் திறனாய்வாளர் சுரதா (**ஏவுகணைக் கவிதைகள்**, 1997:4) தெரிவித்துள்ளார். ஈரோட்டில் உலகின் முதல் இளம் அறிவியல் பாவலர் இவரே. மக்கள் விடுதலைக்காக ஏவுகணை வீசும் இலக்கியப் போராளி. உலக அமைதிப் புரட்சியாளன். இவர் காலம் தமிழகத்தின் அறிவியல் தமிழ் வளர்ச்சிப் பொற்காலம் எனக் கானவன் (**ஏவுகணைக் கவிதைகள்**, 1997:7) குறிப்பிட்டுள்ளார். இந்நூல் 94 பக்கங்களில் 56 கவிதைகளை உள்ளடக்கியதாக உள்ளது. இத்தொகுப்பு நீண்ட கவிதைகளையும், குறுங்கவிதைகளையும் கொண்டதாக அமைந்துள்ளது.

### கவிஞனும் கவிதைகளும்

மனித நாகரிகத்தின் முதிர்ச்சியையும் மனித அறிவின் நுண்மையையும் ஆற்றலையும் காட்டக் கூடியதாக அமைவது கவிதை (மேலது, 1991: 886). இதற்கிணங்க, மனித இனத்தின் அறிவியல் சாதனைகள் வீரமுத்துவின் கவிதைகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. தொழில்நுட்பச் சாதனைகள், செயற்கைக் கோள்கள், செயற்கைக் கோளின் நிகழ்வுகள், விண்கலங்கள், மரபணுச் சோதனைகள் என அறிவியல் பார்வையில் கவிதைகள் அமைந்துள்ளன. இதுவரை வீசிய வீசும் உலக (அணு) ஏவுகணை களை விட என் ஏவுகணைக் கவிதைகள் விழிப்புணர்வுடன் பாதுகாப்பாக அணிவகுக்கும் எனத் தனது கவிதைகளைப் பெருமையுடன் குறிப்பிடுகிறார் கவிஞர் (**ஏவுகணைக் கவிதைகள்**, 1997:9).

சுற்றுப்புறச்சூழல், வறுமை ஒழிப்பு, பாபர் மசூதி தீர்வு, திரைப்படத்துறை, திரைப்பட ஆய்வு, தேசிய நதிகளின் இணைப்பு, இந்திய விடுதலை, சான்றோர் அன்பு, காற்று, மழை, விவசாயி, நாட்டுப்புறப் பாடல் . . . எனப் பல கோணங்களில் வீரமுத்துவின் கவிதைகள் அமைந்துள்ளன.

### உயிரினத்தின் நகல்கள்

உலக உயிர்கள் அனைத்தும் இறைவனின் படைப்புகள் என்றும், பரிணாம வளர்ச்சி என்றும் இருவிதக் கருத்துகள்

உள்ளன. ஆனால், இவ்வியல்பு மீறப்பட்டு நவீன உயிரணுக்களால் புதியதொரு பிறப்பை அறிவியல் வல்லுநர்கள் படைத்துள்ளனர். செயற்கை முறையில் உருவாக்கப்பட்ட ஆடுகளை 'டோலி ஆடுகள் நனைகின்றன' என்ற கவிதையில் வெளிப்படுத்துகிறார்.

***டோலி ஆடுகள்?***<br>
***கால தேவனின்***<br>
***வேலி தாண்டிய***<br>
***நவீன உயிரணுக்களின் கூட்டணிகள்!***<br>
***(ஏவுகணைக் கவிதைகள் , ப.14)***

செயற்கை முறையில் உருவான இவ்வாடுகளைக் கண்டு சாதாரண ஆடுகளும் வணக்கம் செலுத்தும் என்கிறார்.

வானியல் ஆராய்ச்சிகளுக்கு உயிரினங்கள் பயன்படுத்தப் பட்டு வருகின்றன. அதுபோல் டோலி ஆடுகளும் பயன்படுத்தப்படும் எனக் கூறுகிறார். புகழ் மழையில் நனையும் டோலி ஆடுகளுக்கு மரபணு சாதகத் திருமணங்கள், பெயர்சூட்டு விழாக்கள் நடைபெறும் என்கிறார். இவ்வாடுகளுக்கு மனித குலம் வணக்கம் செலுத்தும் என்கிறார்.

***அதோ . . . .***<br>
***செவ்வாய்க் கோளுக்குப் பயணமாகும்***<br>
***'பாத்பைண்டர் விண்கலத்தில்' –***<br>
***டோலியும் புறப்பட காத்திருக்கின்றன!***<br>
***உலகப் பத்திரிகைக்காரர்களின்***<br>
***மின்மினி புகைப்பட ஒளிமழையில்***<br>
***பூரித்து நனைகின்றன!*** *(ஏ.க. ப.14)*

***. . . . இறப்பில்லாத***<br>
***விஞ்ஞான மனிதன் – நாளை***<br>
***'டோலி ஆட்டினையே'***<br>
***கடவுளாக்கி கும்பிடுவான்!*** ***(ஏ.க. ப. 15)***

**வால் நட்சத்திரம்**

பனிப்பாறைகளாலாகிய லெவி - ஷூமேக்கர் வால் நட்சத்திரம் 2 இலட்சம் கி.மீ. நீளமுடையது. இவ்வால் நட்சத்திரம் சூரிய குடும்பத்திலுள்ள கோள்களில் மிகப் பெரிய கோளான வியாழன் கோளில் மோதியது. மோதியதால் ஏற்பட்ட பாதிப்பை 'லெவி - ஷூமேக்கர் வால் நட்சத்திரம்' என்ற தலைப்பின்கீழ் விளக்குகிறார்.

பனிப்பாறைகளுடைய
லெவி – ஷூமேக்கர் வால் நட்சத்திரம்
2 இலட்சம் கி.மீ. நீளம்
இதன் இராஜ வேகம்
வானில்! . . . .
கொடூர சப்தமுடன்
கறுப்பு ஒளிப் புயலை வீசி – அன்று
வியாழன் கோளினை
ஆப்பிளாய் நறுக்கிய 'அணுக்கத்தி'
அண்டங்களைக் கலக்கிய 'கதிர்ச்சக்தி'
இவ் வால்நட்சத்திரப் படையலே!
கதிரலைப் பட . . . .
சுழன்றப் பூமி அந்நேரம்
விநாடியில் ஒரு பங்கு நின்று
கிரீன் வீச் நேரமாறி – பின்பு
சுழன்றதாக
அறிவியல் கணக்கு! . . . . (ஏ.க. ப. 53)

ஆக்கிரமிப்பின் அடிப்படையிலும், அதிகாரம் செலுத்துவதின் அடிப்படையிலும் நாடுகளுக்கிடையே ஏற்படும் மோதலில் உயிரிழப்பும், பொருளிழப்பும் ஏற்படுகின்றன. இதன் தாக்கம், விண்ணில் ஏற்பட்ட கோள்களின் மோதலால் கவிதையாக வெளிப்பட்டுள்ளது. மோதல் காரணமாக, இழப்பு அல்லது அழிவு ஏற்படுவது இயல்பு. கோள்களின் மோதலால் கிரின்வீச் நேரமே வினாடியில் ஒரு பங்கு மாறிவிட்டதாகக் கவிஞர் குறிப்பிட்டுள்ளார். மழையால், தீயால், நிலநடுக்கத்தால் பாதிக்கப் பட்ட மக்களுக்கு அரசாங்கம் நிதி உதவியளித்து அவர்களின் வாழ்க்கையைச் சீர்படுத்துகிறது. ஆனால், கவிஞர், நட்சத்திரப் புயலால் பாதிக்கப்பட்ட வியாழன் கோளுக்கு நிதி உதவி கோருகிறார்.

மாண்புமிகு இந்தியப் பிரதமரே!
லெவி ஷூமேக்கர் நட்சத்திரப் புயலால்
பாதித்த
வியாழனுக்கு . . . . (ஏ.க. ப. 54)
நிவாரண நிதி வழங்குக!

ஊதியம் வாங்கியும் தன் முழு உழைப்பைப் பயன்படுத்தத் தயங்கும் இச்சமூகத்தில் ஊதியமில்லாது உழைக்கும் வானரசு ஊழியர்களாகச் சூரியன், சந்திரன், காற்று ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார்.

**சம்பளமில்லாமல் உழைக்கின்ற**
**வான் அரசு ஊழியர்களாம்**
**சூரியன், சந்திரன், காற்றும்**
**முப்படைக் கலன்களே!** (ஏ.க., ப. 55)

திரைப்படத் துறையில் இணை இயக்குநராகப் பணியாற்றும் கவிஞர் இரவு, பகல் பாராது உழைக்கும் திறனுடையவர். பாடலாசிரியர், இசையமைப்பாளர், துணை நடிகர், துணை நடிகைகள்...... எனப் பலரையும் திரைப்படங்களில் இணைக்கும், இணைப்புப் பாலமாகக் கவிஞர் செயலாற்றுவதன் மூலம் கடின உழைப்பாளி என்பது புலப்படும். எனவே, உழைப்பின் அருமை தெரிந்த கவிஞர் உழைப்பின் சிறப்புத் தன்மையை இக்கவிதையில் காட்டியுள்ளார்.

## நட்சத்திர ஒப்புமை

அமெரிக்க விண்கலத்தின் கண்டுபிடிப்பான M-100 புதிய நட்சத்திரம், நட்சத்திர மண்டலங்களுக்கு மேல், கோடி நட்சத்திரங்களுக்கு மேல், கோள்களின் நிழல் படாமல் வாழ்கின்றது என்ற அறிவியல் தகவல்களை M-100 புதிய நட்சத்திரம் என்னும் தலைப்பில் கவிதையாக்குகிறார்.

**எம்-100 புதிய நட்சத்திரத் தொகுப்பு.**
**மனிதர்களுக்கு மேல்**
**நட்சத்திர மண்டலங்களை விட**
**கோடி நட்சத்திரங்களுக்கப்பால்**
**எம்-100!** (ஏ.க. ப. 16)

கவிஞர் அறிவியல் தன்மையைக் கூற முற்பட்டாலும் அதன்வழி அரசியலையும், அரசியல்வாதிகளையும் ஒப்பு நோக்கியுள்ள தன்மை வியப்புக்குரியது.

**எம்-100 சொல்லுகிறது**
**அரசியல்வாதிகளின் கட் - அவுட்**
**என்னைத் தொட முடியாது!**
**'தேர்தலில்'**
**என் பெயரைச் சொல்லி**
**'கள்ள ஓட்டுப்' போட முடியாது!?** (ஏ.க. ப. 17)

ஆட்சி அமைக்க வேண்டும் என்ற எண்ணத்தினால் இனம், சமயம், தலைவர்கள் பெயர்களைச் சொல்லி வாக்குகள் வாங்கும் அரசியலமைப்பின் அவலமும், தேர்தலில் வெற்றி பெற்றே தீர வேண்டும் என்பதற்காகக் கள்ள வாக்குகள் போட்டு அரசியல் நடத்தும் அரசியல்வாதிகளின் நடத்தையும் வெளிப்படுத்தப் பட்டுள்ளன.

செயற்கைக் காற்றுப் பையுடன் நட்சத்திரக் கோலிகள் விளையாடச் சிறுவர்களுக்கு அழைப்பு விடுக்கும் முறையிலும் கவிதை அமைக்கப்பட்டுள்ளது.

> **அம்புலி மாமா சிறுவர்களே**
> **ஆகாயத்தில் விளையாட வாருங்களேன்!**
> **நட்சத்திரக் கோலிகள் இருக்கு.**
> **செயற்கைக் காற்றுப் பையுடன்**
> **வருக.**
> **பயமில்லாமல் மிதக்கலாம்!** *(ஏ.க., ப. 17)*

விண்வெளியில் காற்றுப் பையுடன் பயமின்றிப் பயணம் செய்வதைக் கவிஞர் குறிப்பிடுகிறார். இந்நாளில் காடுகள் அழிப்பு, நச்சுப் புகை, குடியிருப்புகள் மற்றும் தொழிற்சாலைகள் பெருக்கம் ஆகியவற்றால் காற்று மாசுபடுகிறது. எனவே, விண்வெளியில் மட்டுமல்லாமல் புவியிலும் காற்றுப்பையுடன் தான் பயணம் செய்ய முடியும் என்ற நிலை விரைவில் ஏற்படலாம்.

1000 கோடி ஆண்டுகளுக்கு முன் ஒரு வாயுக் கூட்டத்தினால் சூரியனும், துணைக்கோள்களும் உருவாயின என்று அறிவியல் தகவல் தரும் கவிஞர், பழங்கதையையும் கூறி ஒப்பு நோக்கியுள்ளது பாராட்டுதற்குரியது. நிலாவில் வடை சுட்ட கதையை நம்பாட்டி நமக்குச் சொல்லியிருக்கிறாள். ஆனால் கவிஞருடைய நட்சத்திரப் பாட்டி சொல்லும் கதை வியப்பில் ஆழ்த்தும் தன்மையுடையது.

> **எம்-100 தலையசைத்து விட்டு**
> **எதிரொலிக்கும் குரலில், (எக்கோ)**
> **"கவிஞர்கள் (21-11-1994)**
> **கோள் கவியரங்கில் பாடினார்களென**
> **நாளை,**
> **என் நட்சத்திரப் பாட்டி**
> **பேரக் குழந்தைகளுக்கு**
> **கதையைச் சொல்வாள் அப்பனே!"** *(ஏ.க.. ப.18)*

தான் வாழும் அறிவியல் உலகின் சிறப்பை மற்றவரும் உணர வேண்டும் என்ற கவிஞரின் ஆவல் இக்கவிதையில் புலப்படுகிறது.

## இன்றைய தேவைகள்

இந்திய நாட்டில் அறிவியல் வல்லுநர்கள் உருவாகி, வளர்வதற்குத் தடைக்கல்லாய் இருக்கும் 'இட ஒதுக்கீடு' கண்டு வேதனைப்படும் கவிஞருடைய மனப்பாங்கு கவிதையில் உணரப்படுகின்றது. 'இறைவனுக்கோர் விண்ணப்பம் - விஞ்ஞானி' என்ற தலைப்பில் அமைந்துள்ள கவிதை:

*இந்திய நாட்டுல விஞ்ஞானி நானுங்க*
*ஏழை சாதிங்க இடஒதுக்கீடு வேணுங்க.*
*சந்திர மண்டலமும், ஏழேழு உலகமும்*
*சூரிய விஞ்ஞானத்தில் சாதிக்க இருக்கேங்க! (ஏ.க. ப. 57)*

இக்கவிதையில் நமது சமுதாயம் இன வேறுபாடுகளாலும், சமய வேறுபாடுகளாலும் முன்னேற முடியாமல் தவிக்கும் பரிதாப நிலையைக் கண்டு கவிஞரின் மனம் பரிதாபப் படும் நிலையைக் காணலாம். தொழில் நுட்ப வளர்ச்சி மற்றும் அறிவியல் வளர்ச்சிக்கு அடிப்படைக் காரணமாக இருந்தவர்கள் அறிவியல் வல்லுநர்கள். இவர்களின் கண்டுபிடிப்புகள், கருவிகளின் பயன்கள் எனக் கவிஞரின் வகைப்படுத்தும் திறன் பாராட்டுக்குரியது.

*ஆப்பிள் மரத்தில் பழம்கீழ் விழுந்தது.*
*அண்ணாந்து படுத்திருந்த சர் ஐசக் நியூட்டன்*
*தோப்பிலே பேயா? என விஞ்ஞானி ஓடாமல்*
*தினமும் சோதிச்சான், புவிசர்ப்பு கூறினான்!*

*இட்டலியைச் சட்டியிலே வேக வச்சோம்.*
*இந்தியர் நாம கூட சட்டினிய அரைச்சோம்.*
*சட்டியிலே சூடேற, நீராவி வெளியேற*
*'சட்'டெனப் பார்த்த ஆங்கிலேயன் சிந்திச்சான்!*

*நீராவி புகைவண்டி கண்டு பிடிச்சான்.*
*நிலக்கரி, மின்சாரம், காந்தமாய் அந்தரத்தில்*
*யாராலும் தள்ளாத இரயிலு விட்டானே!*
*யோசித்தா கடவுளுக்கும் கடவுள் படைப்பானே!*
*(ஏ.க, ப. 57)*

*. . . தாமஸ் ஆல்வா எடிசனின் மூளையிலே*
*கிராமபோன் தட்டுகள் ஒலிகளின் சீர்வரிசைகள்*
*கிறிஸ்துமஸ் தாத்தாவாக சாய்வு நாற்காலியில் இன்று*
*கவர்ச்சிப் பாடல்களைக் கேட்டு மகிழ்கிறோம்!*

*சான்யோ, தொலைக்காட்சி, டேப்ரிக்கார்டு*
*சரித்திரப் பெட்டிகள் விசித்திர பொழுதுப் போக்கி*

*வானிலே மின்னல், மண்ணிலே மின்சாரம்*
*டங்ஸ்டன் ஒலியிழை மின்விளக்கு! பொன்னுலகு!*
*நூற்றி எட்டு விஞ்ஞானக் கருவிகளை*
*நமக்குத் தந்த 'எடிசனும்' கடவுளே! – சுருதியில்*
*ஏற்றி, இறக்கி பாடலை வானொலியில்*
*கேட்டு மகிழ்ந்திட 'மார்கோனி' தந்தான்! . . .*
*எலட்ரான், புரோட்டான், நியூட்ரான் துகள்களே*
*'அணு'வின் துகள்கள் என ஜான்டால்டன்*
*தொடரும் தாம்சன், பாபா விஞ்ஞானிகள்*
*உலகை ஆக்கும், அழிக்கும் அணு தந்தனர்! (ஏ.க.ப58)*

இக்கண்டுபிடிப்புகள் இல்லையென்றால் நாட்டில் தொழிற்புரட்சி, அறிவியல் புரட்சி தோன்றியிருக்க வாய்ப்பில்லை. இறைவனிடம், அறிவியல் வல்லுநர்கள் உருவாக்கிய கருவிகளை வாங்க வேண்டுமென வேண்டுகோள் விடுக்கும் வகையில் ஒரு கவிதை அமைந்துள்ளது.

> **கடவுளே! கடவுளே! நீயும் கேட்டுப்பார்**
> **பர்மா பஜாரில் 'வாக்மென்' வாங்கு!** *(ஏ.க. ப.58)*

பொருளின் தேவையை உணர்ந்து பயன்படுத்திய பிறகு அதனைக் கைவிடல் என்பது இயலாத செயலாகும். இதன் மூலம் அறிவியல் செயல்பாடுகளின்றி வாழ இயலாத சூழ்நிலையில் இவ்வுலகம் உள்ளது என்பதை ஒப்புக் கொள்ள வேண்டியிருக்கிறது.

## உலக அமைதி

அறிவியல் சிறப்புகள், அறிவியல் தேவைகள் என அறிவியல் சார்ந்த கருத்துகள் வெளிப்பட்டாலும் கவிஞருடைய மனம் உலக அமைதியை நோக்கியே செல்கின்றது. நன்மை, தீமை என்பது நாம் பார்க்கும் பார்வையில் அமைகிறது. அறிவியல் என்பது ஆக்கம், அழிவு என இரண்டிற்கும் பயன்படுகிறது. அணு, அனல், நிலம், நீர் எதுவாயினும் அதனதன் தன்மைக்கேற்பப் பகுத்தறிந்து பயன்படுத்துவதே மனித அறிவின் ஆற்றல். அந்த ஆற்றல் ஆக்கப் பூர்வமானவற்றுக்கு அணுக்கமாகும் போது தான் மாண்புறுகிறது மதிக்கப்படுவதாகிறது (அறிக அறிவியல், அக்டோபர் 2004: 10). அறிவியலை ஆக்க முறையில் பயன்படுத்தி மனித உயிர்கள் இன்பமுடன் வாழ்க்கையை நடத்துதல் வேண்டும் என்ற கவிஞரின் விருப்பத்தைக் கண்டு கொள்ள முடிகிறது.

> **'போர்' – என்போர்**
> **பூவாக மாற வேண்டும்! . . .**
> **'உலகமைதி நீச்சலிலே'**
> **இவ்வுலகம் மீள முடியும்!** *(ஏ.க. ப.75, 76)*

வன்முறைகளும், தீவிரவாதமும் அதிகரித்து வரும் உலகில் அமைதி நிகழ்வதற்கு, உலக மக்கள் அனைவரும் அன்பு கொண்டு வாழுமாறு அறிவுறுத்துகிறார். எவ்விடத்தில் அன்பு உள்ளதோ அவ்விடத்தில் பொறாமை, வெறுப்பு, பகை, பழிவாங்கும் உணர்வு முதலான இழி பண்புகள் இல்லாமல் போகும்.

## பசி

அறிவியல், மனித வாழ்வை முன்னேற்றப் பாதையில் கொண்டு செல்லும் கருத்தைக் கவிஞர் வலியுறுத்தினாலும், மனித

வாழ்வின் மறுபக்கமான வறுமையின் தன்மையையும் விளக்கி யுள்ளார். உலகின் ஒரு பகுதியில் இயற்கைப் பேரழிவும் பஞ்சம் காரணமாக வறுமையும் மக்களை அச்சுறுத்துகிறது. ஒரே நாட்டில் வளமான வாழ்க்கை வாழும் மக்களும் வறுமையில் வாழும் மக்களும் உள்ளனர். இந்த ஏற்றத்தாழ்வான இழிநிலையைக் கண்டு கவிஞரின் மனம் வெகுள்கிறது.

*ஏழையின் ஈரத்துணியில்*
*பசி படுத்துறங்கும்.*
*பணக்காரனின் கறுப்புப் பணத்தில்*
*காற்று வாங்க வரும்?* (ஏ.க.,ப.82, 83)

உலக நாடுகளில் எல்லைப்போர், ஆளுரிமைப் போர், அதிகார வர்க்கப் போர் எனப் போர்களைக் கண்ட நமக்குப் பசிப்போரில் எத்தியோப்பியாவும் ஆப்பிரிக்காவும் ஒரு ரொட்டித் துண்டுக்கே போராடும் வறுமைநிலை படம் பிடிக்கப்பட்டுள்ளது.

*உலக நாடுகளில்*
*'எத்தியோப்பியா, ஆப்பிரிக்கா' நாடுகளின்*
*பசிப்போரில்*
*'மனித வரைபடங்கள்' கிழிக்கின்றதே?*
*ஒரு ரொட்டித் துண்டுக்கே*
*அடிபிடி சண்டைகள்?*
*தம் 'இதயங்களையே' – மூலவர்கள்*
*ரொட்டிகளாக்கிச் சாப்பிடும் உலகம்?* (ஏ.க. ப.83)

இக்கவிதையில், மக்களின் வறுமையை மூலதனமாக்கிக் கொண்டு பிழைக்கும் சமூக இழிநிலையாளர்களைச் சாடுகிறார்.

ஒரே சமூகத்தைச் சார்ந்த மக்களின் இருவேறுபட்ட நிலையைக் கவிஞர் விளக்கியுள்ளார். வறுமையுற்றவர்கள் தம் அன்றாடப் பிழைப்பிற்காகப் பிறந்த இடங்களைவிட்டு நாடோடி யாகச் செல்லும்போது பசியுடன் பயணம் செய்கின்றனர். அறிவியல் வல்லுநர்கள் ஆய்விற்காக விண்கலங்களில் பயணம் செய்யும்போது உணவை மாத்திரைகளாக்கிக் கொண்டு பயணம் செய்கின்றனர். இந்த முரண்பாடான நிலையைச் சாடுகிறார் கவிஞர்.

*விண்கலங்களில் செல்லும்*
*விஞ்ஞானிகள்*
*'உணவை'*
*மாத்திரைகளாக்கி விட்டனர்*
*மனித குலம்*
*பசியுடன் பாத யாத்திரை?*
*'பசியற்ற உலகம்'*

**21–ஆம் நூற்றாண்டிலாவது**
**காண்போமா?** (ஏ.க. ப.84)

பசியின் அவலத்தைக் காட்டிய கவிஞர் 21ஆம் நூற்றாண்டின் வருகை, பசியற்ற உலகைப் படைக்க வேண்டும் என்று தன் பெரும் விருப்பத்தை வெளிப்படுத்துகிறார்.

**பாபர் மசூதி**

இதன் தலைப்பே சிந்திக்கத் தூண்டுவதாகும். அமைதிப் பூமி, இன்று மதவெறி தீ கொண்டு கலவரப் பூமியாகி வரும் நிலையை உணரச் செய்கிறது. சமயம் என்பது மக்களுடைய மனத்தைப் பண்படுத்த வேண்டும். மனித நேயத்தை வளர்க்க வேண்டும். ஆனால், சமயங்களையே ஆயுதங்களாகக் கொண்டு போரிடும் வன்முறைச் சமுதாயத்தைச் சாடுகிறார் கவிஞர். அயோத்தியில் மசூதி இடிப்பால் ஏற்பட்ட உயிரிழப்புகளைக் கண்டு வேதனைப் படுகின்ற நிலையைக் கவிதை வரிகளில் உணரலாம். அயோத்தியில் இராமரும் பாபரும் இருக்கின்றனரா அல்லது நம் இந்தியச் சகோதரர்கள் இருக்கின்றனரா என்று கேட்டு, பிரச்சினை இராமருக்கும் பாபருக்குமா? அல்லது அவர்களின் மதத்தொண்டர்களுக்கா? என்று வினா எழுப்பி நம்மைச் சிந்திக்க வைக்கும் திறன் போற்றுதற்குரியது.

**அயோத்தியில்**
**இராமனும், பாபரும் உண்டா?**
**நம் மாநில சகோதரர்கள்**
**வாழ்கிறார்கள்!** (ஏ.க. ப.33)

வட்டாட்சியர் தீர்க்க வேண்டிய இவ்விடப் பிரச்சினையை இன்று மதத்தொண்டர்கள் தீர்த்து வைக்க முயலுவதை எண்ணி வேதனைப்படுகிறார்.

**தாசில்தார் தீர்க்க வேண்டிய**
**இவ்விடப் பிரச்சினையை**
**'கரச்சேவைக் காதலர்கள்'**
**தூபம் போடும் மந்திரமென்ன?** (ஏ.க. ப.33)

இந்தியாவில் வேலைவாய்ப்பின்மை அதிகமாக உள்ளது. ஆனால், இன வெறியர்களால் மயானக் காட்டிற்குத் தொடர்ந்து வேலை வாய்ப்பு கிட்டும் என்று எண்ணிலா உயிர்களின் இழப்பைக் குறிப்பிடுகிறார்.

**மதவெறிகளால்**
**மயானக் காட்டிற்கு வேலைவாய்ப்பு!?** (ஏ.க. ப.33)

வேற்றுமையில் ஒற்றுமை காணும் பாரதம் இன்று ஒற்றுமை இழந்து பூசல்கள், கலவரங்கள், கொலைகள் என வேறுபட்டு நிற்கிறது. புத்தர் பிறந்த இப்புண்ணிய பூமி வன்முறைப் பூமியாக, உயிர்ப்பலி பூமியாக மாறிவரும் அவலத்தைக் கண்டு கவிஞரின் கோபம் கொள்கிற மனநிலையைக் காணமுடிகிறது.

**சர்வமத இறையாண்மை**
**எங்கோ –**
**காற்று வாங்கப் புறப்பட்டது ஏன்?**
**புத்தரின் பூமியில் – தொடரும்**
**திருப்பலிப் பூஜைகளா?** (ஏ.க. ப.33)

இக்கேடுகள் நீங்கச் சமயங்களை ஒன்றுபடுத்தி அதன்வழி, சமய வெறிகளற்ற சமுதாயத்தைக் காண விழைகிறார்.

**ஏ! மனிதா கேள்**
**உன் மதமும் – என் மதமும்**
**ஒரே மதம்!** (ஏ.க ப.33)

என்பதன் மூலம் சமயச் சார்பற்ற இந்தியாவை உருவாக்கும் ஆர்வம் புலப்படுகிறது. கோயில் கட்டுவதால் அதனைப் பாதுகாக்க எண்ணற்ற காவலர்களும், காவல் அதிகாரிகளும் தேவை. இது நிரந்தரத் தீர்வாக அமையாது. இதற்கு ஒரு நிரந்தரத் தீர்வாக மருத்துவக் கல்லூரிகளும் மருத்துவமனைகளும் அமைக்க வேண்டும். இதனால் அனைத்துச் சமயத்தினரும் படிப்பும் மருத்துவ வசதியும் பெற முடியும். உலக நாடுகளுடன் ஒப்பிடும் போது இந்தியாவில் மருத்துவர்களும், மருத்துவமனைகளும் குறைவாக உள்ளன. எனவே சேவை மனப்பான்மையுடன் செயல்படும் மருத்துவமனைகளை அமைப்பதே இதன் தீர்வாகும் என்று கவிஞர் எண்ணுகிறார்.

**'பாபர் மசூதி' இடத்தில்**
**மருத்துவக் கல்லூரிகள் கட்டுவோம்!**
**பணமில்லாமல் . . .**
**அனைவரையும் படிக்க வைப்போம்!**
**மாணவர்களே வருக!**
**பேராசிரியராகுங்கள்!**
**தடைகளைத் தகர்த்தெறியுங்கள்!** (ஏ.க. ப.34)

இன்றைய மாணவர்கள் நாளைய தலைவர்கள் என்ற நிலையைச் சற்று மாற்றி, சமுதாயத் தொண்டு செய்யும் தோழர்களாக மாணவர் சமுதாயத்தை நோக்குகிறார். பாபர் மசூதி பிரச்சினைக்குக் கவிஞர் தீர்வு காண முற்படுதல் பாராட்டுதற்குரியது.

**சுற்றுப்புறச்சூழல்**

நோயற்ற வாழ்வே நல்வாழ்வாகும். மனித நல்வாழ்விற்கு மாசற்ற காற்று, நீர், வாழ்விடம் ஆகியன மிகவும் இன்றியமை யாதன. தொழில் நுட்ப யுகமான இக்காலத்தில் இம்மூன்றும் தூய்மையாக இருக்கின்றனவா அல்லது பாதுகாக்கப்படு கின்றனவா என்பது கேள்விக்குறி? மனிதவள மேம்பாட்டிற்கு அடிப்படையாக அமைவது சுற்றுச்சூழல். அறிவியல் வளர்ச்சியின் பயனாகத் தோன்றிய வாகனங்கள், தொழிற்சாலைகள் வெளி யேற்றும் புகை மற்றும் சோதனைச் சாலைகளின் கழிவுகளால் சுற்றுப்புறம் மாசடைந்துள்ளது. இம்மாசடைந்த சூழலில் வாழ்கிற மனிதர்களின் நிலையை 'ஓசோன் நதி' என்ற தலைப்பில் கவிதையாக்கியுள்ளார்.

> **விஞ்ஞான விளைச்சலில் – வாகனக்**
> **குப்பைகள் கோடி!**
> **குப்பைகளைப் பொறுக்குவோர்களும். . .**
> **'குடும்ப அட்டைத் தேடி'!** *(ஏ.க. ப. 24)*

தூய்மையற்ற சூழலைத் தூய்மையானதாக மாற்றி வாழாமல் வாழும் மனிதர்களைச் சாடுகிறார். சூரியனின் புறஊதாக்கதிர்கள் பூமியில் நேரடியாகப் படாவண்ணம் வடிகட்டி உலக உயிர்களை ஓசோன் படலம் பாதுகாக்கிறது. புறஊதாக்கதிர்கள் நேரடியாகப் பூமியின்மேல் விழுந்தால் பலவிதத் தோல் வியாதிகள் ஏற்படுவ தோடு பூமியின் வெப்பநிலை அதிகரித்தல், கடல் நீர் மட்டத்தின் அளவு குறைதல் போன்ற இயற்கை மாறுபாடுகள் நிகழக்கூடும். பூமியில் நலமுடன் வாழ்வது என்பது கடினமாகிவிடும். செயற்கைக்கோள் ஆய்வுகள், ஏவுகணை ஆய்வுகள், நச்சுப் புகை இவற்றால் ஓசோன் படலத்தில் துளை விழுந்துள்ளது. இத்துளை நாளுக்கு நாள் பெரிதாகிக் கொண்டு போனால் பூமிக்கு, பல கேடுகள் நிகழும் என அறிவியல் வல்லுநர்கள் குறிப்பிடுகிறார்கள்.

ஓசோன் என்பது 1½ பங்கு ஆக்சிஜனுடையது (**கலைக் களஞ்சியம்**, தொகுதி 2 : 716). இது $O^3$ என்று குறிப்பிடப்படுகிறது. இதில் ஏற்படும் பாதிப்பு உயிரினங்களைப் பாதிக்கும். இதனையே 'ஓசோன்நதி' என்ற தலைப்பில் குறிப்பிடுகிறார் கவிஞர்.

> **'ஓஸோன் மண்டலம்'**
> **நதியானால்**
> **மீனைக் கொத்தும் கொக்குகள்?!** *(ஏ.க.ப.24)*

உலகம் எப்படிப்பட்ட சூழலில் இருந்தாலும் கவலைப்படாமல் தம் சுரண்டலை மட்டுமே எண்ணித் தன்னல வாழ்க்கை

வாழ்கின்ற அரசியல்வாதிகளின் நிலையைச் சாடுகிறார். அரசாங்கமும் தன்னார்வத் தொண்டு நிறுவனங்களும் இணைந்து சுற்றுப்புறச் சூழல் பற்றிய விழிப்புணர்வை மக்களிடையே ஏற்படுத்தி வருகின்றன. மக்களும் விழிப்புணர்வுடன் தங்கள் பகுதியில் காற்று மற்றும் குடிநீர் மாசடைந்தால் அதற்குக் காரண மானவர்களை எதிர்த்துப் போராடுகிற நிலையை ஆங்காங்கே காணமுடிகிறது.

தோல் பதனிடும் தொழிற்சாலைகள் அதிகமுள்ள பகுதிகளில் கழிவுநீர் மக்களைப் பாதிக்காமல் இருப்பதற்கான அமைப்புகளை அமைக்கும்படி வலியுறுத்தப்பட்டுள்ளது. உலக அதிசயமான தாஜ்மகால் அப்பகுதியிலுள்ள தொழிற்சாலைகளின் புகையினால் பாதிக்கப்பட்டுள்ளது. இந்நிலை நீடித்தால் வரலாற்றுச் சிறப்புமிக்க ஒரு சின்னத்தை இழந்து விடுவோம் என்று கருதிச் சமூக ஆர்வலர்கள் எதிர்ப்புத் தெரிவித்துள்ளனர். எனவே சுற்றுப்புறம் தூய்மையாக இருப்பதும் இருக்க வைப்பதும் நம்மிடம் தான் உள்ளது.

## நதிநீர் இணைப்பு

தண்ணீர் தட்டுப்பாடு நமது இந்திய நாட்டில் முக்கிய பிரச்சினையாக இருந்து வருகிறது. கோடையில் குடிநீருக்காக மக்கள் குடத்துடன் தண்ணீர் ஊர்தியை எதிர்பார்த்து இருப்பதே இதற்குச் சான்று. குடிநீர்க் குழாய்கள் அமைக்கும் அரசாங்கம் அக்குழாய்களில் நீரையும் வழங்குதல் வேண்டும் என்று 'தேசிய நதிகளுக்குக் கல்யாணம்' என்ற தலைப்பில் கவியாக்கியிருக்கிறார்.

**எம்.எல்.ஏ.விடம்**
**குழாய் போட மனு கொடுத்தோம். . .**
**குடிநீருக்காக மனு கொடுத்தோம்?** (ஏ.க. ப.59)

என்று எள்ளல் தன்மையில் காட்டுகிறார். பணி செய்ததற்குக் கூலியாக ஊதியத்தைப் பெற்ற மக்கள், இன்று தங்களின் தாகத்தைத் தீர்க்கத் தங்கத்தை விட மதிப்புமிக்க தண்ணீரைக் கேட்கும் பரிதாப நிலையைச் சுட்டுகிறார். பாலை விடத் தண்ணீரின் விலை அதிகமாக இருப்பதையும் காணமுடிகிறது.

**மனிதர்களில் சம்பளப் போட்டிகளில் – இன்று**
**தாகத்தின்**
**சம்பளத்தைக் கேட்கிறோம்.**
**'தங்கத்தைவிட**
**தண்ணீரைக் கேட்கிறோம்?'**
**இந்தியாவின் தாகத்தைத் தீர்ப்போம்!** (ஏ.க. ப.59)

தண்ணீர் வளம் மிகுந்து இருந்த தமிழகத்தில் இன்று குடிநீரை விலைக்கு வாங்கும் அவலநிலை! நம் அன்றாடச் செலவுகளில் தண்ணீருக்கான செலவும் ஒன்றாகிவிட்டது. சென்னையில் குடிதண்ணீருக்குப் பொதுமக்கள் மட்டும் நாளொன்றுக்கு ஐம்பது இலட்சம் ரூபாய் செலவிடுவதாகப் பத்திரிகைச் செய்தி தெரிவிக்கிறது (தி இந்து, மார்ச் 31, 2005).

பொய்த்துப்போன மழையைச் செயற்கை உத்திகளால் பொழியச் செய்து மக்கள் பயனடைய வேண்டும் என்ற ஏக்கம், ஆதங்கம் கவிஞரிடம் காணப்படுகிறது. சில இரசாயனப் பொருட்களை மேகத்தில் தூவுவதன் மூலம் மழை பொழிவது சில இடங்களில் நிரூபிக்கப்பட்டுள்ளது. இன்று பருவகாலமல்லாத நேரத்திலும் காற்றழுத்தத் தாழ்வு மண்டலத்தின் காரணமாக மழை பொழிவதைக் காணமுடிகிறது. எனவே குண்டு வெடிப்பதன் மூலம் காற்றழுத்தத் தாழ்வு மண்டலத்தை உருவாக்கி மழை பெய்விக்க முடியும் எனக் கவிஞர் கருதுகிறாரோ எனத் தோன்றுகிறது.

**மும்பாயில் குண்டு வைத்தவர்களே . . .**<br>
**கருக்காத**<br>
**மேகத் தேசத்திற்கும்**<br>
**ஒன்று வையுங்களேன்!**<br>
**உருஷ்யாவைப் போல – விஞ்ஞானிகளே**<br>
**ஏவுகணையில்**<br>
**'மழை மருந்து' தூவுங்களேன்!**<br>
**'மழைப்பெண்' வருவாள்**<br>
**'இலவச நீர்ப்பாலே' தருவாள்.** (ஏ.க.,ப.59)

தண்ணீருக்காகத் தத்தளிக்கும் மக்களின் நிலை கண்டு வருந்துகிற தன்மை கவிஞரிடம் உள்ளது. நாடெங்கிலும் மக்கள் குடிநீருக்காக அவதிப்படுவது, விவசாயத்திற்கு நீர் இன்றித் துன்பப்படுவது நாம் காண்கின்ற காணப்போகின்ற அவல நிலையாகும். இரு உலகப் போர்கள் பொருளாதார ஆதிக்கப் போட்டிக்காக நடைபெற்றதைப் போல், நீருக்காக மற்றொரு உலகப்போர் ஏற்பட வாய்ப்புள்ளது. மக்களின் தண்ணீர் பிரச்சினையைத் தீர்ப்பது என்பது அரசின் முதல் கடமையாக இருக்கவேண்டும்.

**அதோ–**<br>
**அந்த நடுஇராத்திரியில்**<br>
**தவமிருக்கின்ற**<br>
**ஆயிரங்குடங்களுக்கு**<br>
**நீர்ச்சிறை வேண்டும்!** (ஏ.க. ப.60)

கண் உறக்கமின்றி இரவுப்பொழுதிலும் தண்ணீருக்காகக் குடங்களுடன் காத்திருக்கும் மக்களின் பரிதாப நிலையை வெளிப்படுத்துகிறார் கவிஞர்.

நதிநீர் இணைப்பு என்பது அரசாங்கத்தின் நல்ல திட்டமாகும். மாநிலங்களிடையே நீரைப் பகிர்ந்து கொள்வதில் பிரச்சினைகள் உள்ளன. காவிரி நதிநீர் இணைப்பு, பரம்பிக்குளம் ஆழியாறு திட்டம், தெலுங்கு கங்கை திட்டம் போன்றவை தமிழகத்திற்கு முழு அளவில் பயன் தருகின்றனவா? அரசியல்வாதிகள் கட்சி வேறுபாடின்றி, அரசியல் உள்நோக்கமின்றி இந்தியாவின் முன்னேற்றத்திற்காகச் செயலாற்றினால் இப்பிரச்சினைகள் ஓரளவு குறையலாம். ஆனால், வேளாண் நிலப்பரப்பின் விரிவாக்கம், பெருகி வரும் மக்கள் தொகை மற்றும் தொழிற் சாலைகள் ஆகியவற்றால் அரவரவர் மாநிலங்களுக்கே நீர்ப் பற்றாக்குறை உள்ளது. இந்நிலையில் தேசிய நதிகளை ஒன்றாக இணைத்தால் அனைத்து வளம்மிக்க ஒரு செல்வ நாடாக இந்தியா திகழும் என்பதில் ஐயமில்லை. ஐந்தாண்டுத் திட்டங்களில் கொண்டு வரப்பட்ட நதிநீர் இணைப்பு இன்றளவும் செயல்படாமல் பேச்சளவில் இருக்கிறது. இந்நிலைமாறி, தேசிய நதிகளை இணைத்து மக்கள் பயன்பெற வேண்டுமென விழைகிறார் கவிஞர்.

**தண்ணீர் முதலாளிக்கு – இனி**
**இறந்தகாலம் இல்லையென**
**தேசிய நதிகளை உடனே (திருமணத்தில்)**
**இணைப்போம்!**
**'வருண பகவானை'**
**வாக்காளனாக மாற்றுவோம்!** *(ஏ.க. ப.60)*

தேசிய நதிகளை இணைத்து ஆக்கப்பூர்வமான இந்தியாவை உருவாக்குவதே கவிஞரின் விருப்பமாக இருந்தாலும், இத்திட்டம் நிறைவேறினால் தமிழகத்திற்கு முழு அளவில் பயன் கிடைக்குமா என்பது சிந்திக்கத்தக்கது. மாசுக் கட்டுப்பாடு வாரியத்தால் தூய்மைப்படுத்தப்பட இருக்கும் கங்கையைப் பிற நதிகளுடன் இணைத்தோம் என்றால் சில எதிர் விளைவுகள் ஏற்பட வாய்ப்புண்டு. பெருகி வரும் மக்கள் தொகைக்கேற்ப நீரின் பயன் பாடும் அனைத்து நிலைகளிலும் பெருகும். பனிமலைகளிலிருந்து உற்பத்தியானாலும் கங்கையின் நீர்ப்பரப்பு நாளடைவில் குறைந்து போகலாம். நதிகளின் கலப்பு இல்லையென்றால் கடலும் சுருங்கி விடும். சாக்கடல் (அருங்கலைச்சொல் அகர முதல், 2002: 223), உப்புக் கடல் (Encyclopaedia Britannica, Vol. 7: 117), சவக்கடல்

(Riseup & Build, Vol:6,2005: 10) என்ற பெயர்களில் அழைக்கப் படுகிற கடலுக்கு ஜோர்டான் நதியிலிருந்து வரும் நீரின் அளவு குறைந்துவிட்டது. அதனால் அக்கடல் சுருங்கி வருகிறது. தற்போது பல்வேறு திட்டங்களின் மூலம் சென்னை மக்களின் குடிநீர்ப் பிரச்சினை ஓரளவு சரிசெய்யப்பட்டுள்ளது என்றாலும் கடல் நீரைக் குடிநீராக்கும் திட்டம் செயல்படுத்துவது பற்றி மைய, மாநில அரசுகள் முடிவு மேற்கொண்டுள்ளன. எங்கு, எப்படி, யாரால் திட்டங்கள் தீட்டப்பட வேண்டும் என்பதற்குப் பதிலாக மானுடம் முழுமைக்கும் அத்திட்டம் உண்மையாகப் பயன் தரும் வகையில் அமைதல் வேண்டும்.

## ஆட்டுத் தொட்டி

எந்த ஊரில், எந்த நாட்டில், எந்தச் சூழலில் ஒருவர் வாழ்ந்தாலும் தான் பிறந்து வளர்ந்த ஊரின் மண்ணின் மணம் அவர் மனத்தை விட்டு நீங்காது. கவிஞர் தான் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து வரும் இடத்தின் சூழலை வெளிப்படையாக ‘ஆட்டுத்தொட்டி’ என்னும் தலைப்பில் குறிப்பிடுகிறார்.

இந்த இடம் பெயர் சொல்லும்.
பணம் தந்தப் பைகளில் - செங்கை
இரத்தக் கறிகளை அள்ளும்.
வெந்து தின்னும் - சப்புப்பொட்டும்
நெருப்புக் கூட்டம்!
வெறும் கழிவுகளோ. . .
கழுகுகள் போல், போடும் வட்டம்!?
பெரம்பூரிலுள்ள
தலைமைக் கசாப்புக் கடை ஆட்டுத்தொட்டி!
சைவக் கனவுகளின் அந்தப்புரம்.
பிரியாணி மூட்டைகளின் சொந்தப்புரம் (ஏ.க. ப.31)

‘அமைதிப் புறா!’
தலைக்கு மேலே பறந்தால்
அது கூட கறியாகும்?
கலி கால உணவாகும்!
காவல் நிலையம் அருகிலிருந்தும்,
தொடர் கொலைகள் வீழும்
அதிசய இடம்!
புகார் கொடுக்கத் தெரியாத
குட்டி ஆடும் - இறந்த
தாயின் இரத்தச் சகதியில்,
முகத்தைப் புதைத்து அழும்!?

சிறிது நேரத்தில்
ஒரு காவல்காரன் வந்து
தன் மீசையை முறுக்க. . .
பாவம். . . .
அந்தக் குட்டி ஆடும்
வெட்டப்பட்டு,
கடைசி இரத்தச் சொட்டு விழ . . .
'சில்லறைக் கறிகள்' ஊமையாகி
அவன்,
வயிற்றுச் சவப்பெட்டிக்குப் போகும்!
நாளை
நாமும் போவோம் உறுதி!!
ஆட்டுத் தொட்டி! – மரண
அஞ்சல் பெட்டி!? . . . . உஷார்! (ஏ.க.,ப.32)

பல இடங்களுக்கு ஆட்டிறைச்சியை விற்பனை செய்யும் முக்கிய இடமாக ஆட்டுத்தொட்டி காட்டப்பட்டுள்ளது. ஆட்டின் மரணத்தைக் கண்டு வேதனைப்படும் கவிஞரின் உள்ளம் மனித நேயம் மிக்கதாக அமைந்துள்ளது. சமூகத்தைப் பாதுகாக்கும் பாதுகாவலர்கள் முன்னிலையில் சமூக விரோதச் செயல்கள் நடப்பது கண்டிக்கத்தக்கது. தன்னைச் சார்ந்த சமுதாயத்தின் சீர்கேடுகளை விளக்குவதும் கவிஞரின் கடமையாகத் தெரிகிறது.

கவிஞர்கள் பெரும்பாலும் சமுதாயத்தைப் பற்றிப் பாடுகிறார்கள். ஆனால் **ஏவுகணைக் கவிதைகள்** அறிவியலைப் பாடுபொருளாகக் கொண்டுள்ளது. அறிவியல் சிந்தனை கொண்ட கவிஞரின் பார்வை நிலவுலகம் மட்டுமல்லாது, விண்ணுலகையும் நோக்கியுள்ளது. வறுமை, இனம், சமயம், அரசியல் எனப் போராட்டங்களிடையே வாழும் மக்களின் வாழ்க்கை நிலை ஒப்பு நோக்கப்பட்டுள்ளது. மனிதநேயம், சமுதாய நலன், நாட்டு ஒற்றுமை, உலக அமைதி என்பவை கவிஞரின் பொதுநலக் கொள்கைகளாக அமைந்துள்ளன. சில கவிதைகளில் சிக்கலுக்கான தீர்வையும் குறிப்பிட்டுள்ள பாங்கு சிறப்பாக அமைந்துள்ளது.

### முதன்மை நூல்

வீரமுத்து, **ஏவுகணைக் கவிதைகள்**, பாலகிருஷ்ணன் பதிப்பகம், 1997.

# கோவி. லெனின்

## வாழ்க்கைச் சுருக்கம்

திருவாரூரில் 10-04-1969ல் கோவிந்தராஜ் - ருக்குமணி என்பவர்களுக்கு மகனாய்ப் பிறந்தார். தந்தையார் திருவாரூரில் நூல்களை விற்பனை செய்யும் கடை வைத்துள்ளார். தாயார் தலைமைச் செவிலியராக மருத்துவத் துறையில் பணியாற்றுகிறார். லெனின் என்ற பெயர் சூட்டப்பெற்ற இக்கவிஞருக்குச் சிறு வயதிலேயே பொதுக் காரியங்களில் ஈடுபடும் ஈடுபாட்டைப் பெற்றோர்கள் ஊக்கப்படுத்தியுள்ளனர். எட்டு வயதில் நற்பணி மன்றம் ஒன்றைச் சிறிய அளவில் செயல்படுத்தியுள்ளார். இது இன்று வளர்ந்து 'பாரதி மக்கள் மன்றம்' என்ற பெயரில் செயல்பட்டு வருகிறது.

தஞ்சை மாவட்டம் பூண்டியில் உள்ள 'புஷ்பம்' கல்லூரியில் பி.எஸ்சி. கணினி பட்டம் பெற்றுள்ளார். கல்லூரியில் படிக்கும் காலத்தில் இலக்கியக் கல்வியைச் சொந்த விருப்பத்தில் கற்றுள்ளார். அந்தக் காலங்களில் கல்லூரியில் நடக்கும் இலக்கியம் தொடர்பான செயல்பாடுகளில் (1987) கலந்து கொண்டு கவிதை படைத்துள்ளார். அக்கவிதைகள் இத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. புலனாய்வுப் பத்திரிகையான **நக்கீரனில்** முதன்மைத் துணைஆசிரியராகப் பணிபுரிந்துள்ளார். திரைப்படத்தில் பாடல் எழுதுகிறார். அண்மையில் வெளிவந்த 'மூவேந்தர்' என்னும் படத்தில் அனைத்துப் பத்திரிகையின் பெயரையும் பயன்படுத்தி எழுதப்பட்ட பாடல் இவருடையது. இதற்கு அடிப்படையாக அமைந்த கவிதை இந்நூலில் இடம் பெற்றுள்ளது.

## கவிஞரைப் பற்றிய அறிமுகம்

அறிமுக உரையில் திருவாரூர் தமிழ்நாடன் பின்வருமாறு கூறுகிறார்:

> நினைத்ததை நினைத்தபடி எழுதும் நேர்மையும், இரவு பகல் பாராது இவன் சிந்தும் வேர்வையும், இந்தக் கவிஞனை 'எவரெஸ்ட்' ஆக்கும். இது சத்தியமடித்துச் சொல்ல வேண்டிய சங்கதி. இந்தக் கவிஞன் யுகங்களை ஜெயிப்பான்

என்று கூறியுள்ளார்.

மு. கருணாநிதி (முதலமைச்சர் - 1997) கவிஞரின் கவித் திறனை வாழ்த்தியும் சுவைஞர்களின் இதயங்களை வெல்ல வேண்டும் என்றும் தம் அணிந்துரையில் கூறியுள்ளார். கவிஞரின் முதல் நூலாக இருப்பதால் அவையடக்கம்போல ஒரு கவிதையைத் தருகிறார். கவிதை கீழ்வருமாறு:

> என்
> கவிதைக் குழந்தை;
> கற்பனையில்
> கருவாகி
> பேனா முனையில்
> பிரசவித்து
> காகிதத் தொட்டிலில்
> தாலாட்டப் படுகிறது!
>
> நான்
> பெற்றெடுத்த குழந்தை
> ஆணா? பெண்ணா?
> அது பற்றி
> எனக்குக் கவலையில்லை
> தலைப்பிரசவம்
> முடிந்தது
> தைரியமாகச்
> சொல்வேன்
> நான்
> மலடியல்ல (தலைப்பிரசவம், ப.112)

உழவனுக்கு அறுவடையின்போது ஏற்படும் மகிழ்ச்சியைப் போலக் கவிஞனுக்கும் தன்னுடைய சிந்தனையை, மன உணர்வைக் கவிதையாக மாற்றும் திறன் பெற்றவுடன் கிடைக்கும் மகிழ்ச்சியில் கவிதை படைக்கப்பட்டுள்ளது. பொருட்கள் நுகர்வோனைக் குறித்துப் படைக்கப்படுகின்றன. அதுபோல் நவீனக் காலக் கலையும் மக்களுக்காகவே படைக்கப்படுகிறது. பாரதியார் பாஞ்சாலி சபத முன்னுரையில் 'பொதுமக்கள் விரும்பும் மெட்டில் காப்பியம் எழுதுவதாகக் குறிப்பிட்டார். இதுவே தமிழுக்குச் செய்யும் தொண்டு என்பது அவரது கருத்தாக இருந்தது. அது போலவே இவரும் ஒரு கவிதையில் தன்னுடைய வாசகர் யார் என்பதைத் திட்டவட்டமாகக் குறிப்பிடுகிறார். கவிதை கீழ் வருமாறு:

> வணக்கத்துடன் வருகிறேன்! என்
> கவிதை சாம்ராஜ்யத்தில்
> மக்கள் தான் மன்னர்கள்? அவர்களின்
> உள்ளம் நினைப்பதை
> உத்தரவாக ஏற்றுப் பாடி வருகிறேன்.

*என் கவிதைகள்;*
*இருள் சூழும் நேரத்தில்*
*விளக்கின் திரி!*
*பகை சூழும் நேரத்தில்*
*வெடிகுண்டின் திரி! நான்*
*சாதாரண*
*மனிதர்களுக்காகப் பாடி வருகிறேன்*
*ஜனங்களின் ஆதரவை*
*நாடி வருகிறேன்!* (உங்களின் ஆதரவுடன், ப.9)

மேல் சொல்லப்பட்ட கவிதை, கூத்தில் வரும் கட்டியங்காரனின் அறிவிப்புச் செயலைப்போல உள்ளது. கட்டியங்காரன் கதை நடக்கும் சூழலையும் அதில் பங்கேற்கும் பாத்திரத்தையும் பார்வை யாளர்களுக்கு அறிமுகம் செய்து வைப்பான். அதுபோல இவரும் தன்னுடைய கவிதை யாருக்காக எழுதப்பட்டது; எப்படிப் பயன்படும் என்பதெல்லாம் கவிஞரின் எண்ணவோட்டத்தில் விளக்கப்படுகிறது.

மனித மனம் விநாடிக்கு ஓர் ஆசையை உருவாக்கிக் கொண்டு, அப்படி உருவாக்கிக் கொள்ளப்பட்ட ஆசை நடந்தே தீர வேண்டும் என்ற எதிர்பார்ப்போடு நிற்கும். எண்ணுகின்ற நோக்கம் வலுவானதாகவும், செய்யக் கூடியதாகவும் அமையாவிட்டால் அவ்வகையான எதிர்பார்ப்புகள் ஏமாற்றத்தில் முடியும். ஏமாற்றம் இல்லாத எதிர்பார்ப்புகள் அமைந்தால்தான் மனித வாழ்க்கையில் அமைதி, நிம்மதி ஆகியன கிட்டும். குறிக்கோள் இல்லாத எதிர்பார்ப்புகள், கிடைத்த வரை இலாபம் என்ற எதிர்பார்ப்புகள் போன்றன முடிவில் ஏமாற்றத்தைத் தரும்.

மேலும் அவ்வாறான எதிர்பார்ப்புகள் முடிவில் அழிந்து போகும் தன்மையன என்பதை, அழகிய உவமையோடு கீழ்வரும் கவிதை விளக்குகிறது:

*நாமும் ஒரு நாள்*
*சூரியன் ஆவோமென*
*எதிர்பார்க்கும் நட்சத்திரங்கள்*
*பொழுது விடிந்தபின்*
*பூமியைக் கூட*
*பார்க்க முடியாமல்*
*ஏமாந்து போகும்* (எதிர்பார்ப்புகள் ஏமாற்றங்கள், ப.10)

கருத்தாழமற்ற, கொள்கைப் பிடிப்பற்ற எதிர்பார்ப்புகள் போன்றன நன்மைக்குப் பதிலாகத் தீமையைக் கூட விளைவித்து விடலாம். இதனைக் கீழ்வரும் அடிகள் விளக்குகின்றன.

பூக்கள் புன்னகைப்பதை
காதல் என்று
எதிர்பார்த்தால்
காம்புகள்
ஏமாந்து போகின்றன

மலர்கள்
அடுத்தவர்களின் கழுத்திற்கு
மாலையாக மாறும் போது
காம்புகளின் கழுத்துதானே
நெரிக்கப்படுகின்றது. காயங்கள்
காம்புகளுக்குத்தான்! (ப.11)

எதிர்பார்ப்புக் கொள்வது மனித இயல்பு. அதனை ஆக்கம் பெறச் செய்வது மனித முயற்சி. இம்மனித முயற்சியில் தோல்வி கண்டால் துவண்டுவிடத் தேவையில்லை. அந்த ஏமாற்றத்தைத் தாங்கிக் கொள்ளும் பக்குவத்தை வளர்த்துக் கொண்டால் எதிர்பார்ப்புகள் இதயத்தின் இராகங்களாகி விடும். ஏமாற்றங்கள் இடறி விழுந்த தடயங்களாக நின்று விடும். இதனைக் கீழ்வரும் வரிகள் சுட்டுகின்றன:

எதிர்பார்ப்புகள்;
இதயத்தின் ராகங்கள்
ஏமாற்றங்கள்;
இடறி விழுந்த தடயங்கள் (ப.10)

கூவம் ஆறு சென்னை நகரின் முதுகுத் தண்டாக ஒரு காலத்தில் விளங்கியது. இன்றைய நிலையில் கவிஞர் எண்ணிப் பார்க்கிறார். சமூகம் எந்த அளவிற்கு அந்த ஆற்றைப் புறக்கணித்துக் கேடு செய்துள்ளது என்பதைக் கவிஞர் அங்கதச் சுவை மிளிரக் கவிதை ஒன்று படைத்துள்ளார். அது, கீழ் வருமாறு:

நான்
பாவங்களைச்
சுமந்து செல்லும் ஆறு
கூவம் என்று
எனக்குப் பேரு

நதிகளெல்லாம்
பெண் என்றால்
நான்
கற்பு கெட்ட பெண்

காவிரியே வறண்டுவிடும்
கலிகாலத்தில்
நான் வறண்டதாக
வரலாறே இல்லை.

*அப்படியிருந்தும்*
*என் பெயரை*
*ஜீவநதிகளின் பட்டியலில்*
*ஏன் சேர்க்கவில்லை?* *(கூவத்தின் கோபம், ப. 17)*

*நைல்நதியின் கரைகளில்*
*நாகரீகம் மட்டுமே வளர்ந்தது*
*கூவமாம் என்கரையில்*
*குடிசைகளும் வளர்கின்றன . . .*
*கொசுக்களும் வளர்கின்றன . . .*

*படகுகள் போனது*
*ஒரு காலத்தில்*
*இப்போது*
*சடலங்கள் போகின்றன*
*சில நேரத்தில்!*

*சாட்சியில்லாத கொலைகளுக்கு*
*சத்தம் போட இயலாத*
*சாட்சியம் நான்! . . .*

*சென்னைத் தமிழை விடவா*
*நான் நாறுகிறேன்*
*இன்னா நயினா சொல்றே. . .* *(ப. 18)*

நதிகள் நாகரிகத்தின் தொட்டில்களாக விளங்கின பண்டை நாள்களில். இன்று இந்தியா போன்ற நாடுகளில் நதிகள் மாசுபட்டு நாகரிகத்தின் பண்புகளை இழந்து வருகின்றன. இதனைக் கூவத்தின் கோபம் என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார். இக் கவிதையில் நாகரிகத்தின் வளர்ச்சி என்பது முழுமையாக அமைய வில்லை என்பது போன்ற கருத்தைக் கவிஞர் முன்வைக்கிறார் - எனலாம்.

மேற்குறிப்பிட்ட பண்புகளைக் கொண்டதாக 'யமுனை' நதியும் மாறிவிட்டதாகக் கூறுகிறார். இதனால் 'தாஜ்மஹால்' என்கின்ற 'காதல் வரலாற்றுச் சின்னம்' சமூகச் சீர்கேடுகளினால் எவ்வாறு பாதிப்படைந்துள்ளது என்பதனைக் கவிதையாக்கி யுள்ளார். இனிவரும் தலைமுறையினரின் நலனுக்காகப் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் வேண்டும் என்ற அறிவுரையையும் கூறுகிறார்.

*அதோ அந்த*
*தாஜ்மஹால்*
*அமைதியாக அழுவதை*
*பார்க்கிறேன் . . .*

மோனத் தவமிருக்கும்
மும்தாஜின் ஆன்மா
மூச்சுத் திணறிக் கொண்டிருப்பதை
யாரறிவார்?

யமுனை நதிக்கரை
தென்றல் கூட
அமிலத்தை பூசிக்கொண்டு
அழுக்கு வாடையோடுதான்
ஆக்ராவின் அதிசயத்தை
தழுவுகிறது

அந்தக் காதல் சின்னம்
இப்போது
கண்ணீர் வெள்ளத்தில்
ஷாஜஹான் சாம்ராஜ்யத்திலிருந்து
ராஜராஜன் தேசம்வரை
சுத்தக் காற்றை
தடை செய்து விட்டு
சொர்க்கத்துக்கு
பயணச்சீட்டு
தந்து கொண்டிருக்கிறார்கள்

சிறைப்பட்டிருக்கும்
தூய்மையை மீட்போம்!
வரும் தலைமுறையின்
நலனுக்காக
தரையெங்கும்
தாவர தாஜ்மஹால்களை
வளர்ப்போம்!

பசுமை போர்த்திய பூமியில்
அசுத்தங்களுக்கு அனுமதியில்லை!

(மூச்சு திணறுகிறாள் மும்தாஜ், ப. 28, 29).

இக்கவிதையின் வாயிலாகச் சுற்றுப்புறச்சூழலில் கவிஞருக்கு ஈடுபாடு இருக்கிறது என்பதையும் அறியமுடிகிறது.

மனிதனைக் கொன்று அழிக்கும் வல்லமை கவலைகளுக்கு உண்டு. கவலைகளைச் சாகடிக்கும் போதுதான் மனிதன் சாதனைகளைப் படைக்க முடியும் என்பது கவிஞரின் கருத்து. இதனைக் கவிதையாக்குகிறார். உடன் கவிதைக்குரிய இலக்கணம் மக்களுக்கு வேண்டிய வளமையான கருத்தைத் தருவதுதான் என்பதனைக் குறிப்பால் உணர்த்துகிறார். கவிதை கீழ்வருமாறு:

*கவலைகளை*
*கசக்கி எறி!*
*புன்னகையை விழுங்கி*
*முகத்தில் பிரதிபலி*

*வாழ்க்கைப் பறவையின்*
*வண்ணச் சிறகுகளை*
*சிறைவைக்கும் வலைகளே*
*கவலைகள்*

*கவலையை நினைத்து*
*கவலைப்படுவோரின்*
*எண்ணிக்கை*
*வலைப்படுமளவு*
*உயர்ந்து விட்டது.....*

*கவலைகளை*
*கசக்கி எறி!*
*கருத்தற்ற*
*வார்த்தைகளாலான*
*கவிதை காகிதம் போல்*
*கவலைகளை கசக்கி எறி* (வலை - ப: 20)

'சாதிகள் சேருது சண்டைகள் குறையுது' எனப் பாரதியார் பாடினார். எனினும் இன்றும் சாதிகளின் சண்டை குறைய வில்லை. அதனைப் பற்றி இக்கவிஞர் கீழ்வருமாறு பாடுகிறார்:

*தொழிலின் அடையாளமாக*
*சாதி இருந்த போது*
*வீடுகளில்*
*அடுப்பெரிந்தன!*

*சாதிகளே மனிதர்களின்*
*அடையாளமான பிறகு*
*வீடுகளே*
*எரியத் தொடங்கின.*

*இந்த தீ தான்*
*நந்தனை*
*தியாகி யாக்கியது*
*வள்ளலாரை*
*'ஜோதி' யாக்கியது*
*கொடியங்குளத்தில்*
*குடிசைகளை எரித்தது*
*கண்டமனூரில்*
*கலவரம் வளர்த்தது*

*சாதிகளை வளர்க்க*
*சங்கங்கள் தோன்றியதால்*
*தென் மாவட்டங்கள்*
*தீயின் தேசங்களாகிவிட்டது* *(சாதீ – ப: 86)*

சாதியின் வரலாறு; அதனால் பாதிக்கப்பட்டவர்கள்; இன்று அதனின் தீய விளைவுகள் என்பன கவிதையில் பதிவு செய்யப் பட்டுள்ளன. காதல் சாதி மதங்களைத் தகர்க்கும் ஆற்றலுள்ளதாக இருக்கிறது. அப்படிப்பட்ட காதலைக் கவிஞர் கீழ்வருமாறு கவிதையில் படைக்கிறார்.

*மனிதர்கள்*
*மதம் பூசிக் கொள்கிறார்கள்*
*மதங்களோ*
*நிறம் பூசிக் கொள்கின்றன*
*('காவி'யும் 'பச்சை'யும் காதலிக்கின்றன – ப: 15)*

நிறம் மனிதனைப் பிரிக்கிறது. மேல் கீழ் எனத் தரம் வகுக்கிறது. எனினும், காதல் அதனை என்ன செய்கிறது என்பதனைக் கீழ்வரும் கவிதை அடிகள் கூறுகின்றன:

*அவன்*
*காவிக்காரன்! அவள்*
*பச்சைக் காரி . . .*
*நிறங்கள் எங்களுக்கு*
*தடையில்லை*
*சாயங்களுக்காக*
*எங்கள் காதலை*
*சாகவிடமாட்டோம்*

*காவியோ பச்சையோ*
*எங்கள் இதயத்தை*
*கறைப்படுத்த முடியாது*
*ஒன்றிய உள்ளங்கள்*
*உறுதியாக உரைத்தபின்*
*காலதேவன்*
*தீர்ப்பெழுதினான்*

*காதலுக்கு நிறமுமில்லை*
*காதலிப்பது*
*குற்றமுமில்லை*
*காதல் குற்றமென்றால்*
*குற்றங்கள் பெருகட்டும்*
*காவியும் பச்சையும்*
*காதலிக்கின்றன* *(ப. 16)*

இலக்கியம் குறிப்பால் உணர்த்துவது. அதுபோலக் கவிஞர் நிறத்தைக் கூறி மத ஒற்றுமையை வலியுறுத்துகிறார். காவி, இந்து மதத்தையும் பச்சை, இசுலாமிய மதத்தையும் குறிக்கின்றன என்பதை, கவிதையை வாசித்தவுடனே வாசகருக்குப் புரியவைத்து விடுகிறார்.

கவிஞர் இலக்கிய இதழ்கள் மற்றும் பிற இதழ்களின் பெயரை வைத்துக்கொண்டு ஒரு கவிதையாக்கியுள்ளார். அதில் கவிஞரின் மனஉணர்வு எத்தகையது என்பதைத் தெளிவாகப் புலப்படுத்துகிறார். மேலும் இக்கவிதையை அடிப்படையாகக் கொண்டு 'மூவேந்தர்' படத்தில் இடம்பெற்ற பாடலும் அமைந்தது. கவிதை கீழே:

*காலைவேளை*
*கடையை திறந்தேன்*
*'தந்தி' தாங்க*
*'குமுதம்' கொடுங்க*
*'கல்கண்டு' இருக்கா?*
*வாசகர் வருகையால்*
*பத்திரிகைகள் பறந்தது*
*கல்லா நிறைந்தது*
*மனது மட்டும்*
*வறண்டே*
*இருந்தது*
*மாலை வந்தது*
*உடன் ஒரு*
*மழலை வந்தது*
*படித்துப்*
*பழக*
*'பாரதி' கேட்டது*
*என் மனது*
*மகிழ்ச்சியால்*
*'தந்தி' அடித்தது*
*முகம்*
*'குமுதமாய்'*
*மலர்ந்தது*
*'இதயம்' கல்கண்டாய்*
*இனித்தது*
*வளர்பிறையே . . .*
*நீ வயதில்*
*சிறியவனாயினும்*
*உன்னை*
*வணங்குகிறேன்!* *(பிஞ்சால் குளிந்த நெஞ்சு ப: 50)*

இன்றைய சமூக அரசியல் நிலையைக் காட்டும் படியாக அமைந்த 'ஆத்திசூடி' கீழே:

*அடுத்தவனைக் கெடு*
*ஆட்சியைப் பிடி*
*இயன்றவரை சுருட்டு*
*ஈயை யானையாக்கு*
*உண்மை பேசாதே*
*ஊழலுக்கு ஜே*
*எதிரியைக் கொல்*
*ஏமாற்று*
*ஐயா எனக் கும்பிடு*
*ஒற்றுமை ஒழி*
*ஓட்டுப் பொறுக்கு*
*ஔவைக்கும் கட்-அவுட் வை! (அரசியல் ஆத்திசூடி ப.108)*

துளிப்பா (ஹைக்கூ) போன்று முரண் பொருளை விளக்குகின்ற கவிஞரின் கவிதைகள் இத்தொகுப்பில் உள்ளன. கவிதைகள் கீழ்வருமாறு.

*தலைவர்களே*
*எங்களுக்கெல்லாம்*
*இலவச ஆடை*
*கொடுத்தீர்கள்*
*உங்கள்*
*அரசியல் மட்டும்*
*ஏன்*
*அம்மணமாய் நிற்கிறது? (ப.110)*

*சிறந்த நடிகர் விருது*
*இந்த வருடம் கிடைத்தது*
*எங்க ஊர் அரசியல் வாதிக்கு (ப.111)*

*மூட நம்பிக்கை பற்றி*
*எழுதத் தொடங்கியவன்*
*முதல் பக்கத்தில் போட்டான்*
*பிள்ளையார் சுழி! (ப.110*

*50 சதவீதமோ*
*60 சதவீதமோ*
*எனக்கு தேவை இட*
*ஒதுக்கீடு*
*உன் இதயத்தில்! (ப.111)*

யாமிருக்க பயமேன்
தைரியமாகக் கடத்தினார்கள்
முருகன் சிலையை! (ப.111)

தண்ணீருக்காக
தவம் இருந்தனர்
தஞ்சை விவசாயிகள்
மழை பெய்தது
மவுண்ட் ரோட்டில்! (ப.110)

## முடிவுரை

நவீன வாழ்க்கையின் பல அமிசங்களையும் கவிதையாக்கி யுள்ளார். சாதி மதமற்ற சமூகம் அமைய வேண்டும்; ஏற்றத் தாழ்வற்ற வாழ்க்கையை மனிதன் வாழவேண்டும் என்பதும் கவிஞரின் விருப்பமாக அமைகிறது. இவை கவிதை எழுது வதற்கான உந்து சக்தியைக் கவிஞருக்குத் தந்திருக்கின்றன.

### முதன்மை நூல்

**தலைப் பிரசவம்**, கோவி. லெனின், நர்மதா பதிப்பகம், 1997, சென்னை.

# இரா. காமராசு

## கவிஞர் அறிமுகம்

இரா. காமராசு 1970ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் 21ஆம் நாள் மன்னார்குடியிலுள்ள மேலவாசல் எனும் கிராமத்தில் பிறந்தார். இவரது பெற்றோர் இராமசாமி - அருமைக்கண்ணு ஆகியோராவர். 'வழக்கமான வாழ்க்கை நெருக்கடிகளில் இருந்து மீண்டு இலக்கிய வாழ்வு வாழச் சொந்த நலன்கள் ஒதுக்கித் தோள் கொடுத்திடும் வாழ்க்கைத் தோழி' என இவர் சுட்டும் மனைவியின் பெயர் இராதா. ஞானக்குயில், சித்தார்த்தி ஆகியோர் பிள்ளைச் செல்வங்கள். முதுகலைப் பட்டமும் ஆசிரியர் பயிற்சிப் பட்டமும் பெற்றுப் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றும் இவர், '**நா. வானமாமலையின் தமிழியல் பங்களிப்பு**' குறித்து முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்டு வருகிறார். **கணவனான போதும்** (1997), **நப்போல் வளை** (2003) ஆகிய கவிதைத் தொகுப்பு களையும், **மகளுக்குச் சொல்ல** (2000) எனும் சிறுகதைத் தொகுப்பினையும், **நூல்முகங்கள்** (2004) எனும் விமர்சனத் தொகுப்பினையும் வெளியிட்டுள்ள இவர் நாள், வார, திங்கள் இதழ்களில் எழுதி வருகின்றார்.

பாரத ஸ்டேட் வங்கி இலக்கியப் பரிசு, திருப்பூர்த் தமிழ்ச்சங்க இலக்கியப் பரிசு, எட்டயபுரம் பாரதிவிழாப் பரிசு முதலான பாராட்டுகளைப் பெற்றுள்ள கவிஞர், தமிழ்நாடு கலை, இலக்கியப் பெருமன்ற மாநிலச் செயலாளராகவும் இயங்குகிறார் என்பது குறிப்பிடத்தக்கது. கவிஞர் தம்மைப் பற்றிக் கூறுமிடத்து,

> கவிதை வரிவடிவில் உள்ள மனிதன் - என்ற சிவத்தம்பியின் கருத்துதான் என் கருத்தும். எனது பெற்றோர்கள் எழுத்தறிவற்றவர்கள். நான் முதல் தலைமுறையாகப் படிக்க வந்தவன். சமூக நடப்புகள், அநீதிகள், வஞ்சிக்கப்படும் மக்கள் மீதான அக்கறை, இயல்பாய் என்னுள் இருந்த மென்மை, இரக்க உணர்வு ஆகியவை மார்க்சிய இயக்கம்பால் ஈர்த்தன. கொஞ்ச காலமாக இயக்கங்களுக்கு வெளியே இருந்தவனைக் கலை, இலக்கியப் பெருமன்றம் ஈர்த்தது. தொடர்ந்து 17 ஆண்டுகளாக இலக்கியப்பணி. நிறைய தோழர்கள். நிறைய நூல்கள். வாசிப்பும் நேசிப்பும் வாழ்க்கையானது.

சமூக நெருக்கடி, மன நெருக்கடி இவற்றைப் பதிவு செய்யும் உந்துதலால் கவிதை, சிறுகதை, கட்டுரை எழுதத் தொடங்கினேன். நிறைவாக எழுதுவதாக எண்ணம் இல்லை. என் எழுத்துகள் எனது / மக்களது வாழ்க்கை அவ்வளவுதான்.

மண் - மக்கள் - நேயம் - விடுதலை என்பதான திசைவழியில் எழுதுவதே என் இலட்சியம்.

பொத்தாம் பொதுவாகப் பார்ப்பதைக் காட்டிலும் குறிப்பாகப் பார்ப்பது சிறந்தது. பெரும்பகுதி எழுத்தறிவற்ற மக்களுக்கு இந்த எழுத்துகளால் என்ன நன்மை? என்ற குடைச்சல் இருந்து கொண்டே இருக்கிறது.

மனித உறவுகளை வளப்படுத்துவதே இன்றைய முக்கியமாகப் படுகிறது. பேராசிரியர் தொ. பரமசிவன் சொல்வது போல் என் படைப்புகளில் 'நெஞ்சு கொள்ளா மனிதநேயம்' நிரம்பி வழிவதையே விரும்புகிறேன்.

நிறைய வாசிப்பது, எல்லாக் கொள்கைப் போக்குகளையும் (மரபையும் தான்) புரிந்து, அறிந்து, நமக்கான திசைவழியில் பயணிப்பது, உண்மை, நேர்மை, ஈகை உணர்வுகளை வளர்த்தெடுப்பது இவை படைப்புக்கும், வெளியேயும் என் பாதைகள்.

என்று அறிமுகப்படுத்திக்கொள்கிறார்.

## கவிதை பற்றிக் கவிஞர்

இன்றைய கவிதைச் சூழலில் பேசாத மனிதர்கள் பேசுவதைக் காணமுடிகிறது. எழுதப் படிக்கத் தெரியாத பெற்றோரைக் கொண்ட நாங்களும் எழுதுகின்றோம். சமுதாயத்தில் கீழ்நிலையில் உள்ள தொழிலாளர் மகன்களும் இன்று வீச்சான கவிதைகள் படைக்கின்றனர். தலித், இஸ்லாமிய சிறுபான்மையினம் சார்ந்தவர்களும் எழுதிக் கொண்டிருக்கிறார்கள். எங்களுக்கு எந்தப் பின்புலமும் இல்லை. மண்ணின் இயல்பான அறிவாற்றலோடு எங்களுக்குப் பரிச்சயமான வாழ்க்கையைப் படைத்து வருகிறோம். மக்களுடன் மக்களாகச் செயல்படும் வாழ்க்கை இயக்கத்தில் சிறுதுளியாக இந்தப் படைப்புகளைப் பார்க்கின்றோம்
(தினமணி, மார்ச்சு 1, 2005)

என்கிறார்.

## பாடுபொருள்

கவிஞரின் படைப்புகளில் சாதி, மதங்களை எதிர்த்தல், மூடநம்பிக்கைகளைச் சாடல், பெண்ணியத்திற்குக் குரல்

கொடுத்தல் முதலான முற்போக்குச் சிந்தனைகளும், காதல், அன்பு, நட்பு, மனிதம், நடுத்தர மக்களின் நிலை, கிராமியம் முதலான வாழ்வியல்சார் கருத்துகளும் பாடுபொருட்களாகத் திகழ்கின்றன.

## முற்போக்கு எண்ணங்கள்

கவிஞர் முற்போக்குச் சிந்தனைகளில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். இவரது படைப்பின் பல பக்கங்கள் இதற்குச் சான்று பகர்கின்றன.

***சாதிக்கும்***
***சாதிக்கும் கைகலப்பில்***
***உடைந்த தலைகள்***
***எங்கள் தலைகளே!. . .***
***எங்களை உசுப்பிய***
***எங்களை மறைத்த***
***எங்களை மீறிய எங்கள் சாதிகளே!***
***அரை, கால்***
***பட்டினியானாலும்***
***எங்கள் பழைய வாழ்வை***
***உங்களால்***
***திருப்பித்தர முடியுமா?*** **(கணவனான போதும், ப. 30)**

என்ற அடிகளில், சாதிக்கலவரத்தினால் துன்பமுற்ற இளைஞனின் வழி, சாதிப்பிரிவினைகளைச் சாடும் கவிஞரின் நோக்கு வெளிப்படுகின்றது.

**மகன் திருமணத்தின்**
**மறுநாளே**
**கணபதி காலமானார்**
**அவருக்கு இருந்த**
**மாரடைப்பு நோயும்**
**அன்று தின்ற**
**ஆட்டுக்கறியும்**
**காலன் வீசிய**
**பாசக்கயிறுகள் என்ற**
**யதார்த்தம் செத்துப் போனது.**
**செவ்வாய் தோஷம்**
**மூல நட்சத்திரம் . . .**
**மாமனாரை விழுங்க வந்த எமன்**
**வித்தியாசமின்றி**
**எல்லா வாய்களும்**
**கடித்துக் கடித்து**
**தூர துப்புகின்றன அவளை** *(ப. 31)*

என்ற அடிகளில், மூடநம்பிக்கைகளால் முடங்கிக் கிடப்போரின் இழிநிலையை எண்ணும் கவிஞர், பெண்ணிற்குப் பெண்ணே எதிரியாகும் நிலையை மறைமுகமாகச் சாடுகிறார்.

*மனிதன்*
*மதங்களுக்கு*
*மாலை போடுகிறான்*
*மதமோ*
*சடலங்களுக்கு*
*சந்தனம் பூசமட்டுமே!*
*மதங்கள் கடந்த*
*மனிதம்*
*வாழ்க்கையாகும்*
*காலம் வருமா?* *(ப. 12)*

என்பதால், மனிதன் மதம் (இனவெறி) கொள்ளும் போது, மனிதம் அழிந்துபோகும் நிலையைச் சாடும் கவிஞரின் உளப்பாங்கு அறியப்படுகின்றது.

*காவல் நிலையம்*
*உள்ளே காந்தி*
*வெளியே தேடப்படும் திருடர்கள்*
*உள்ளும் வெளியும் ஒன்றாக்கி*
*பாராளுமன்றம் ரசித்தது*
*தடியூன்றி*
*காந்தி சிரிக்கிறார்* *(நுப்போல் வளை, ப. 30)*

என்பதில், இக்கால அரசியல் போக்கினை விமரிசிக்கும் கவிஞரின் எண்ணம் வெளிப்படுகின்றது.

## வாழ்வியல் சிந்தனைகள்

வாழ்க்கை அனுபவங்களே படைப்புகளாகின்றன. கவிஞரது படைப்புகளிலும் வாழ்வியல் சிந்தனைகள் இடம்பெறுகின்றன. அவற்றிலும் குறிப்பாகத் தமது இளம்பருவ நிகழ்வுகளைக் கவிஞர் கூறியுள்ள திறம் வாசிப்போரைப் பின்னோக்கிப் பார்க்க வைக்கும் முயற்சி எனக் கொள்ளலாம்.

*படுக்கையில் கிடக்கும் அஞ்சு*
*இடம்மாறும் ஆறும் ஒன்பதும்*
*திசைமாறி சுழிபடும் எட்டு*
*வரமறுக்கும் 'ஐ'யும் 'ஓ'வும்*
*வாயில் வதைபடும் 'ல' 'ள'* *(நுப். வ., ப. 68)*

என்ற வரிகள், இளம்பருவ வாழ்வைப் படம்பிடிக்கின்றன. காதலைப் பாடாத கவிஞரே இல்லை எனலாம். பொதுவாக இக்காலக் கவிஞர்கள் காதலைப் பாடுபொருளாக்கும்போது காதலியின் எழிலையோ, காதல் தோல்வியையோ கூறுகளாக அமைக்கின்றனர். ஆனால், மாறாக இக்கவிஞர் காதலின் மேன்மையை, உன்னத நிலையைப் பாடுபொருளாக்குகிறார்.

> **காதலர்கள்**
> **இந்தத் தேசத்தின்**
> ***பண்பாட்டுத் தூதுவர்கள்! . . .***
> **வழிவிடுங்கள்**
> **வாலிப நெஞ்சங்கள்**
> **வாசிக்கப்படட்டும் . . .**
> **அந்த வாசித்தலின்**
> **புதிய அர்த்தம்**
> **அந்த பூமியைக் கூடப்**
> **புரட்டிப் போடும்** *(கண. போ., ப. 11)*

என்ற வரிகள், காதலைப் பற்றிய கவிஞரது உயர்ந்த நோக்கினை வெளிப்படுத்துகின்றன. 'மூத்தோர் சொற்கேள்' எனும் சான்றோர் வாக்கைப் போற்றுவோரைக் காணல், இன்று அரிதான ஒன்றாகிப் போய்விட்டது. விரைவான உலகில் முதியோரைப் பேணும் பொறுமை பலருக்கு இருப்பதில்லை. வெளிவேடம் போடுவோரே பலர் என்பதை,

> **வருமான**
> **வருகைகளில்**
> **வசந்த நடத்தல்கள் . . .**
> **வயோதிக**
> **இருத்தல்களில்**
> **மனக் குமுறல்கள் . . .**
> **குழிக்குள்**
> **போன பின்னால்**
> **வெளி அலறல்கள்!** *(கண. போ., ப. 25)*

என்ற வரிகளில் உணர்த்துகின்றார் கவிஞர். கவிஞர் கிராமியச் சூழலில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் என்பதை இவரது படைப்பின் பல பகுதிகள் பறைசாற்றுகின்றன.

> **விடுமுறை நாள் இரவுகளில்**
> **வயல், குளம், ஆறு**
> **நுனாக்காய்த் தேர்**
> **ஓலைக் கடிகாரம்**

**பூவரசம்பூ மோதிரம்**
**வெடி தேங்காய்**
**காக்காய்க்கடி மாங்காய்**
**தட்டான்பூச்சி, சில்லுக்கோடு**
**திருடன் போலீஸ், நாவல்பழங்கள்**
**கைகொட்டிச் சிரிப்பு** *(நப். வ., ப. 73)*

என்ற வரிகள், மேற்கண்ட கூற்றிற்குச் சான்றாய் அமைவன.

> *பச்சை அறுகம்புல்லில் ஒரு பரவசமான மணம் இருக்குமே, அதை நுகர வைக்கிறது கவிதை ஒவ்வொன்றும். மனித வாழ்வோடும், சொந்த மண்ணோடும் அகலாத பாசம் இளநீரைப்போல் ஒவ்வொரு கவிதையிலும் நிரம்பி ஆத்ம சுகத்தை வழங்குகிறது" (நப்போல் வளை, மதிப்புரை),*

என்ற கவிஞர் சிற்பியின் கூற்றும் இவண் நினைக்கத்தக்கது.

கவிஞர் எடுத்துக்கொண்ட வாழ்வியல் சார்ந்த பாடுபொருட்களில் 'மனிதம்' இன்றியமையா இடம்பெறுகின்றது. கவிஞர் பாலா

> *பொதுவாகக் காமராசுவின் கவிதைகளில் பரிவுணர்வும் மனிதாபிமானமும் நிகழ்வாழ்வு பற்றிய வருத்தம் கலந்த எதிர்ப்புணர்வும் இழையோடுகின்றன (கணவனான போதும், மதிப்புரை)*

என்றும், சோலை. சுந்தரபெருமாள் குறிப்பிடுமிடத்து,

> *உள்ளடக்கத்தில் மானுடத்தை முன்வைத்த படைப்பாளர்கள் வரிசையில் வந்துள்ளார் இரா. காமராசு (புத்தகம் பேசுது, மார்ச்சு 04)*

என்றும் குறிப்பிடுகின்றனர். இவை மனிதத்தின்மீது கவிஞர் கொண்ட ஈடுபாட்டினை விளக்கும் புறச்சான்றுகள்.

**நம் வீட்டிலென்றால்**
**செய்ய மாட்டோமா?**
**தெருவில் உள்ளோர்**
**திரண்டு வந்தனர்**
**காரியங்கள் செய்து தீர்த்தனர்**
**பிணத்துக்கான மரியாதையில்**
**உயிர்த்தெழுந்தது மனிதம்** *(நப். வ., ப. 33)*

என்ற வரிகள், அகச்சான்றாய் அமைவன. அறிவியல் முதலான பல துறைகளின் முன்னேற்றத்தினால் வெற்றிகளும் சாதனைகளும்

பெருகப் பெருக, காலச்சக்கரத்தின் சுழற்சி வேகத்தால் மனிதம் நசுக்கப்படும் காலச்சூழலிலும் இழப்பிலாவது (இறப்பு) மனிதம் வெளிப்படுவதை எண்ணிக் கவிஞர் ஆறுதல் கொள்கிறார்.

## பெண்ணியம்

கவிஞர் பெண்முன்னேற்றம், விதவை நிலை முதலான கூறுகள் சார்ந்த கவிதைகளையும் படைத்துள்ளார்.

***வீதியில்***
***பெண் நடந்தால்***
***இரை கிடைத்த***
***வல்லூறாய்***
***வட்டமிடும் ஆண்கள்***
***முதுகுத் தண்டை***
***மோதி மிதிக்கணும்! . . .***
***பெண்களைத்***
***தெய்வங்களாக்க வேண்டாம்***
***மனித ஜீவனாக***
***மரியாதைக் கொடுப்போம்*** ***(கண. போ., ப. 39)***

என்ற அடிகளில், பெண்களை இழிவுபடுத்தும் ஆண்களைச் சாடுவதன்வழி, பெண்மை பற்றிய கவிஞரது நன்னோக்கு வெளிப்படுகின்றது.

***கிளைகள் இழந்த***
***ஒட்டு மரம்***
***மழை பெய்ய***
***வந்து விட்டது***
***நான் மட்டும்***
***நான் மட்டும் . . .*** ***(கண. போ., ப. 73)***

என்ற அடிகளில், மரங்களுக்குச் சாத்தியமாகும் மறுவாழ்வு, மகளிர்க்கு இல்லாமல் போவதை எண்ணி வருந்தும் கவிஞரது பெண்ணியச் சிந்தனையும் சமூக அக்கறையும் வெளிப்படுகின்றது.

***கூட்டமாயிருந்தும்***
***தனித்தனியாக***
***பேசாதே***
***சிரிக்காதே***
***அழாதே***
***விளையாடாதே . . .***
***எல்லா 'தே'க்களும் சேர்ந்து***
***நட்டக் கற்களாய்***

**பல மணி நேரங்கள்**
**ஆடாமல் அசையாமல்**
**உட்கார்ந்துப் பழகி**
**எழ முடியவில்லை**
**படிப்பு முடிந்தும்** *(நுப். வ., ப. 70)*

என்ற அடிகளில் வெளிப்படையாகக் காணுமிடத்து, சிறுவர் கல்விச்சாலைகளில் நடத்தப்படும் முறையினைக் கவிஞர் சாடு வதாகத் தோன்றினும், குறிப்பாக நோக்குமிடத்து பெண்களின் நிலையைச் சுட்டுவதை உணரலாம். பெண்கள் அடக்குமுறைக்கு ஆளாவதை எண்ணி வருந்தும் கவிஞரின் பெண்ணிய நோக்கு இவண் வெளிப்படுவதாகக் கொள்ளலாம்.

கவிஞர் ஒரு சமூகச் சிந்தனையாளர் என்பதை உணர்த்தும்வண்ணம் தனுஷ்கோடி ராமசாமி குறிப்பிட்டுள்ள செய்தி இவண் சுட்டத்தக்கது.

> அடுத்தவரின் துயரை உணர்ந்து அதை நீக்குவதும் நீக்கும் முயற்சியும்தான் உன்னதமான வாழ்க்கையாக இருக்க முடியும். கவிஞர் காமராசு ஒரு நல்ல சமூக அமைப்புக்காக முயற்சி செய்கிறார் என்பதை அவர் கவிதைகள் காட்டுகின்றன
> *(தினமணி, மார்ச்சு 1, 2005)*

### அறிவுரை

இக்கவிஞர் அறிவுறுத்தும்போக்கில் சில கவிதைகளைப் படைத்துள்ளார்.

**காதல் போயின்**
**சாதல் கூடாது**
**வாழ்ந்து காட்டலே**
**காதலை**
**கௌரவப்படுத்தும் . . .**
**காதல்**
**வாழ்க்கையின்**
**முற்றுப்புள்ளி அல்ல** *(கண. போ., ப. 47)*

என்ற அடிகளில், காதல் தோல்வியால் துவளும் இளைஞர்களுக்கு வாழ்க்கைத் தத்துவத்தை விளங்க வைக்கிறார். மூடநம்பிக்கை களைச் சாடுமிடத்து,

**கடமை ஆற்றும்**
**ரோபாட்டும்**
**கணிப்பொறியும்**
**கையில் இருக்கையில்**

**கூண்டுக்கிளியிடம்**
**கைவிரல் நீட்டி**
**சாதகம் கேட்டிடும்**
**பாதகம் ஒழியவில்லை . . .**
**இனியாவது**
**அறிவும்**
**உழைப்பும்**
**எல்லாம் செய்யும்**
**வித்தை கற்கலாம்** *(கண. போ., பக். 26–27)*

என்கிறார். அறிவியல் முன்னேற்றங்கள் ஆயிரக்கணக்கில் ஒருபுறம் பெருகிக்கொண்டே போகின்ற போதிலும், மூடநம்பிக்கைகள் எவ்வித இடர்ப்பாடுமின்றி வாழ்வதையும், வளர்வதையும் சாடி, அறிவையும் உழைப்பையும் மூலதனமாகக் கொள்ளும்படி அறிவுறுத்துகிறார்.

## வெளியீடு

இக்காலக் கவிதைகளில் பெரும்பாலானவற்றில் ஆங்கிலச் சொல்லாதிக்கத்தைக் காண்கின்றோம். பண்டு வடசொல் பெற்றிருந்த ஆதிக்கத்தை இன்று ஆங்கிலச்சொற்கள் பெறுகின்றன. இக்கவிஞரது படைப்புகளிலும் ஆங்கிலச் சொற்கள் கையாளப் பட்டுள்ளபோதிலும், அவை ஆங்கிலமோகம் கொண்டோரை எள்ளும் போக்கிலேயே அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. கிராமிய மணத்தோடு எழுதும் இவர்தம் படைப்புகளில் பேச்சு வழக்குச் சொற்கள் மிகுதியாக இடம்பெறுவதில் வியப்பேதும் இல்லை. தம் கருத்தை வெளியிடக் குறியீட்டு உத்தியையும் கவிஞர் பயன்படுத்துகிறார்.

**பூக்களில் கரப்பான் பூச்சிகளும்**
**சுவரோரங்களில் வண்ணத்துப் பூச்சிகளும்**
**இடம்மாறி வாழ்ந்து தொலைக்கும் அதிசயம்**
**மனிதச் சுற்றத்தில் காண்** *(நுப். வ., ப. 31)*

என்ற வரிகளில், மலர்களுக்குக் கிட்ட வேண்டிய வண்ணத்துப் பூச்சி எனும் பாராட்டு சுவர்களுக்குக் கிட்டியும், தடுப்புகளாகிய சுவர்களுக்குக் கிட்ட வேண்டிய அருவருக்கத்தக்க கரப்பான் பூச்சியின் நேசம் மலர்களுக்குக் கிட்டியும் அமையும் நிலைவழி, தகுதிக்குத் தகுந்த பாராட்டுகள் பல நேரங்களில் கிடைப்பதில்லை என்பதைக் குறிப்பாக்குகிறார்.

**உதிர்ந்த நரைத்த**
**தாடியும் மீசையும்**

**வெடித்த சுருங்கிய**
**எலும்பும் தோலுமான**
**கிழங்களைப் போல**
**இலைகள் தீய்ந்தும்**
**கிளைகள் உதிர்ந்தும்**
**புரைகள் விழுந்தும்**
**வேர்கள் பெயர்ந்தும்**
**ஆடி அடங்கி**
**மூச்சுத்திணறி நிற்கிறது ஆலமரம்** (கண. போ., ப. 7)

உவமைத் தோற்றத்திற்கு அடிப்படையானவையாகத் தொல்காப்பியர் சுட்டும் (தொல். உவமை. 1) நான்கனுள், 'மெய்' என்ற தோற்ற வகையே இங்கு அமைந்துள்ளது. மரத்தின் வடிவிற்கு முதியவரின் வடிவினை உவமையாக்கியமையால் இதனைத் தெளியலாம். தொல்காப்பியரால் உருவிற்குரியதாகக் கூறப்படும் (தொல். உவமை. 16) 'போல' உருபு, இவண் மெய்யிற்கு வந்துள்ளது.

கவிஞரைப் பற்றிய மதிப்புரையில் சிற்பி கூறுவதாவது:

> அன்புத்தோழர் இரா. காமராசுவின் கவிதைகளிலும் கதைகளிலும் அங்கிங்கெனாதபடி மனித வாழ்க்கை கொலு விருக்கிறது. . . படாடோபமான வார்த்தைகளைப் பயங்கர முயற்சியில் பிரசவிக்காமல் கட்டுடல் கொண்ட கிராமத்துப் பெண்ணின் இயல்பான பிள்ளைப்பேறு போல் இரா. காமராசுவின் கவிதைகள். இதனால் வித்தைகள் காட்டாமல் வாழ்வின் தரிசனங்களுக்குள் வாய்க்கால் நீரில் பாய்ந்து மூழ்கி எழும் நாட்டுப்புறச் சிறுவனைப் போல் லாவகமாக எழ இவரால் முடிகிறது (நப்போல் வளை, மதிப்புரை)

என்கிறார். அ. குணசேகரன், கவிஞரைப் பற்றிச் சுட்டுமிடத்து,

> இவர்தன் கண்முன் விரிந்து கிடக்கின்ற சமகால வாழ்வு நிலைகளைச் சித்திரிக்கும் வகையில் எதார்த்தம் பற்றிய முரணான முன்வைப்புகளைச் சட்டை செய்யாமல் அதன் தேவையை முன்னிறுத்திச் செயல்படுவதில் தளராத உறுதியோடு விளங்குபவர். தேர்ந்த வாசகனையும் அல்லாட விடுகின்ற நவீன கவிதைப் போக்குகளுக்கிடையில் வாசிப்பவன் மட்டுமின்றி, வாசிக்கக் கேட்பவனும் ஒன்றி உணரும் வார்த்தைகளைப் பெய்து உருவாக்கப்பட்ட கவிதைகளின் தொகுப்பாக 'நப்போல் வளை' வெளிவந்துள்ளது
> (கவிதாசரண், ஜூலை - செப்., 2004)

என்கிறார். மேற்கண்ட கூற்றுகள், கவிஞர்தம் படைப்பின் எளிமையை நிறுவும்.

## நிறைவுரை

முற்போக்குச் சிந்தனைகளிலும் வாழ்வியல்சார் கூறுகளிலும் ஈடுபாடு செலுத்தும் கவிஞர், கிராமிய மணம் 1பொங்கப் படைப்பதை விழைகிறார். அறிவுறுத்தும் போக்கிலும், சில வேளைகளில் சாடும் நிலையிலும் இவரது வெளியீட்டுத் தன்மை அமைகின்றது. குறியீடு முதலான உத்திகளைப் பயன்படுத்தினும், எளிமை இவர்தம் வெளியீட்டு வடிவாக அமைகின்றது. தொல்காப்பியர் சுட்டும் கூறுகளுள் சிலவற்றை இவரது படைப்பில் பொருத்திப் பார்க்க இயல்கிறது. சமூக அவலங்களை எவ்வித அச்சமுமின்றிச் சாடும் போக்கு, இவரிடம் காணப்படுகின்றமை குறிப்பிடத்தக்கது.

# சேவியர் - புகாரி

## கவிஞரும் கவிதையும்

தமிழ் வளர்க்கும் சங்கமாக இன்று உலகத் தமிழர்களை ஒன்றிணைக்கும் இணையத்தில் கவிபாடும் இரு கவிஞர்களை அறிமுகப்படுத்துவதாக இக்கட்டுரை அமைகிறது. இணைய இதழ்களில் கவிஞர்களாக அறிமுகமாகி, தம்மை நிலைப்படுத்தி, வெளிப்படுத்தி, தமிழையும் இணையத்தில் பரப்பி வரும் பல கவிஞர்களில், கவிதையால் தமிழையும், தமிழால் தம்மையும் பெருமைப்படுத்தி வளர்ந்து வருபவர் சேவியர் மற்றும் புகாரி என்ற இரு கவிஞர்கள் ஆவர். இருவரும் **'தமிழ் செய்து பிழைக்கும்'** கவிஞர்கள்(!) அல்ல. அடிப்படையில் இவர்கள் மென்பொருள் வல்லுநர்கள். இருவரில் சேவியருக்கு அமெரிக்காவும், புகாரிக்குக் கனடாவும் புக்ககங்களாக உள்ளன. இருவரும் கணினியோடு உறவாடி, தமிழோடு காதல் செய்யும் கவிஞர்கள். **வெளிச்ச அழைப்புகள், அன்புடன் இதயம்** என்ற இரு கவிதைத் தொகுப்புகளுக்குப் புகாரியும், **மன விளிம்புகளில், ஒரு மழை இரவும் ஓராயிரம் ஈசல்களும்** என்ற இரு கவிதைத் தொகுப்புகள் மற்றும் இவ்விரு தொகுப்புகளோடு ஏனைய கவிதைகளையும் ஒன்றாகத் தொகுத்து வெளிவந்துள்ள **சேவியர் கவிதைகள் காவியங்கள்** என்ற மாபெரும் தொகுப்பிற்குச் (960 பக்கங்கள்) சேவியரும் உரிமையாளராய் உள்ளனர். இருவரும் இணைய இதழ்கள் பலவற்றில் தொடர்ந்து எழுதி வருவதோடு, இணையக்குழுமம் பலவற்றில் உறுப்பினர்களாகவும் உள்ளனர். கவிஞர் புகாரி **'புத்தகப் புழு'** இணையக் குழுவில் மட்டுநராக (Moderator) இருந்தும் **'உயிரெழுத்து'** இணையக் குழுவின் உரிமையாளராகவும் மட்டுநராகவும் சிறப்புச் சேர்த்தும் வருகிறார்.

சேவியர் கவிதைகள் காவியங்கள் - குடும்பம், இயற்கை, காதல், சமுதாயம், மனிதநேயம், நட்பு, மதம் என்பன போன்ற பதினெட்டுத் தலைப்புகளையும் ஒவ்வொன்றிலும் பல கவிதைகளையும் கொண்டுள்ளது. அதோடு காவியங்கள் என்ற தலைப்பில், என்ன செய்யப் போகிறாய்?, கதையெழுதும் நேரம்,

சலனம் என்ற மூன்று கதைகளையும் கொண்டுள்ளது. புகாரியின் இரு நூல்களும் தலா முப்பது முப்பது கவிதைகளைத் தன்னுள்ளே கொண்டுள்ளன. இருவரின் கவிதைகளும் வேளாண்மை தொட்டு விண்வெளி வரை அலசுகின்றன. கவிதை பற்றிக் குறிப்பிடும்பொழுது, 'தமிழ் - உலகம்' மின் குழுமத்தின் ஆஸ்தான கவிஞராக அறிவிக்கப்பட்டிருக்கும் புகாரி,

**உணர்வுகளை**
**மொழியாய்**
**மொழி பெயர்க்கும்**
**ஓர் அழியா கலை!**
**மொழியின் உயிர்!**
**உயிரின் மொழி!** *(வெ.அ.ப. 12)*

என்கிறார். இதையே முன்மொழிவதாய்,

**கவிதைகள் உணர்வுகளை உணர்வுகளாய் மொழி பெயர்த்துத் தரவேண்டும். அது அலங்காரமானாலும் சரி, சாதாரணமானாலும் சரி, கவிஞனின் உணர்வை வாசகனுக்குள் ஊற்ற வேண்டும்** *(க.கா. ப. 17)*

என்கிறார் சேவியரும். மேலும்,

**கவிதைகளில் கருத்துச் சொல்வது இலக்கியக் குற்றம் என்பவர்கள் சமுதாயக் குற்றம் செய்கிறார்கள். கவிதைகளில் கவித்துவம் சொல்லாதவர்களே இலக்கியக் குற்றம் செய்கிறார்கள்** *(க.கா. ப. 17)*

என்பது சேவியரின் வாதமாக அமைகிறது. இவர்களின் கவிதை களில் அணிகள் பல அழகு செய்கின்றன. ஒப்புமை, உவமை, உருவகம் என்று பலவற்றைக் கையாண்டுள்ளனர். சேவியருக்கு எப்போதுமே கிராமத்துக் காட்சிகள்தான் உவமைகளாக வந்து விழுகின்றன.

**ஆட்டுக் கூட்டம் புகுந்த**
**தொட்டாச்சிணுங்கித்**
**தோட்டமாய்**
**உள்ளம் விரிய மறுத்து**
**சுருண்டு கிடந்தது** *(சே.க.கா. ப. 862)*

என்று உள்ளத்தின் வருத்தத்திற்குத் தொட்டால்சிணுங்கித் தோட்டத்தை உவமையாக்குகிறார். புகாரி மட்டுமென்ன, கனடாவில் இருந்தாலும் கண்ணுக்குள் விரிவதெல்லாம் கால் பதித்து நடந்த தஞ்சாவூர் அருகிலுள்ள ஒரத்தநாடுதானே! இதோ அவரும்,

*மார்கழிப் பிஞ்சுப்புல்*
*வைகறைப் பொழுதுகளில்*
*பனிப் பன்னீர்க் குடங்களைக் கர்வமாய்ச் சுமக்கும் . . .*
*அப்படித்தான்*
*என்*
*உட்கிளியும்*
*உன் மௌனத்தைச் சுமக்கிறது. . . .* *(வெ.அ. ப. 19)*

என்று உவமையை உதிர்க்கிறார். கவிதைகளில் மட்டுமல்ல காவியத்திலும் சேவியர் உவமைகள் பலவற்றை இட்டுச் செல்கிறார்.

போர்க்களத்தில் தொலைந்த
கத்தியைத் தேடுவதாய்,
பணியாளர் கூட்டத்தில்
துணையாளனைத் தேடினாள் *(சே.க.கா. ப. 864)*

என்பதிலும்,

*கைத்தடி உடைந்த குருட்டுக்*
*கிழவன்போல*
*தடுமாறி நகரும்*
*கும்மிருட்டு* *(சே.க.கா. 46)*

என்பதிலும் அவர்தம் உவமைச் சிறப்பு உள்ளத்தை அள்ளுகிறது. இதேபோல ஒப்புமை செய்வதிலும் புகாரி வல்லவராய்த் திகழ்கிறார்.

*அடியே*
*உன் மௌனமென்ன*
*என் உயிரைக் கிள்ளிவிடும் பவள நகங்களா?*
*என் உறக்கத்தைத்*
*தின்றுதீர்க்கும் பசிப்பற்களா?* *(வெ.அ. ப. 19)*

என்று மௌனத்தை நகங்களாகவும் பற்களாகவும் ஒப்பிட்டு மகிழ்கிறார்.

*என் பொருளாதாரப் பல் பறித்து*
*காதலுக்கு*
*காதணி நெய்ததில்*
*என் முதுகெலும்பு முறித்தே*
*கைத்தடி செய்ய வேண்டிய*
*கட்டாயம் எனக்கு* *(ம.வி. ப. 85)*

என்ற வருத்தத்தில் சேவியரின் ஒப்புமை உயிர்பெறுகிறது.

உற்றதை உணரவைக்கும் கலை கவிஞர்களுக்குக் கைவரப்படுதல், கவிதைகளின் நிலைப்புத்தன்மைக்கு உகந்ததாகும். அவ்வகையில் விமானப் பயணம் முதல் அமெரிக்கக் குளிர், கனடா தெருக்கள் என, கண்ட காட்சிகள், அனுபவங்கள் அத்தனையும் வாசகர்களோடு பகிர்ந்து கொள்கின்றனர் இருவரும். இதோ குற்றாலத்தில் ஒருவர் கும்மாளமடிக்க நயாகராவில் ஒருவர் மனம் மயங்குகிறார்.

**அப்பப்பா. . .**
**இத்தனை பேரையும்**
**மொத்தமாய் முத்தமிட உனக்கே சாத்தியம் (வெ.அ. ப. 52)**

என்று புகாரி குற்றாலத்தையும்,

**நயாகரா**
**இது ஒரு காவியத்துக்கான கனத்தின்**
**ஒரு வார்த்தைக் கவிதை (சே.க.கா. ப. 91)**

என்று நயாகராவைச் சேவியரும் நம்முன் காட்டுகின்றனர். நட்புகளில் போலியைத் தலைதட்ட இருவரும் தயக்கம் காட்டவில்லை. பொன்னில் போலியிருக்கலாம்! பொருளில் போலி இருக்கலாம்! நட்பில் போலி இருக்குமா? போலியாக இருந்தால் அது நட்பாக இருக்குமா? இதோ,

**'நான் உன்**
**மனப் புத்தகத்தைப்**
**புரட்டுகிறேன் என்பதற்காக**
**நீயதில்**
**சில பக்கங்களை**
**அவசர அவசரமாய் மறைத்துக் கொண்டு**
**இல்லாத பக்கங்களை**
**இருப்பதாய் காட்டிக்கொண்டாய் (வெ.அ. ப. 22)**

என்று நண்பர்களிடம் நல்ல பெயரெடுக்க நல்லதை மட்டுமே நடத்தியதாகக் காட்டிக்கொள்ளும் நட்புப்போலிகளைப் புகாரியும்,

**எதற்காகச் சொல்கிறாயோ**
**'அதற்காக இல்லை'**
**என்றே**
**அமைதியாய் ஆரம்பிக்கிறாய்' (சே.க.கா ப. 208)**

என்று நட்பில் நேர்மையை நினைவிற்கும் கலந்துவிடாத நண்பர்களைச் சேவியரும் இனம் காட்டுகின்றனர். கவிதையில் நாட்டுப்புற நடையினைப் புகுத்துவதில் இருவரும் கைதேர்ந்தவர்களாகவே காணப்படுகின்றனர்.

நேத்துவர எம்மனச
நெலப்படுத்தி நானிருந்தேன்
பாத்துவச்ச தாய்தம்பி
பருசமுன்னு சொன்னாங்க
ஊத்தாட்டம் எம்மனசு
ஒன்னெனப்பா பொங்குதிப்போ (வெ.அ. ப. 89)

என்று புகாரியும்,

முல்லைப்பூஞ் சிரிப்பினிலே
முள்தைத்துப் போனவளே
பிச்சிப்பூஞ் சிரிப்பாலே
பிடுங்கிடவே மாட்டாயோ? (சே.க.கா. ப. 331)

என்று சேவியரும் நாட்டுப்புற நடை பயில்கின்றனர். இவர்களில், புகாரி, கனடா உதயனின் தங்கப்பதக்கக் கவிதைத் தேர்வுக்குழுவில் கவிநாயகர் கந்தவனம் அவர்களோடு நடுவராகத் தொடர்ந்து இருந்தும், சேவியர், குடியரசுத் தலைவர் ஏ.பி.ஜே. அப்துல் கலாமின் பாராட்டைப் பெற்றும் சிறப்புறுகின்றனர்.

பிரிவுத்துயருக்கு மனிதன் ஆளாவது தொல்காப்பியர் காலந்தொட்டே தொடர்ந்துவரும் ஒன்றாயினும், பிரிவுத் துயரை இலக்கியங்களாக மொழிபெயர்ப்பவர்கள் எங்கோ சிலரே. அவ்வகையில்,

பனிமலரே புது நிலவே
பருவமழைத் தேன் துளியே
தனிமரமாய் நீ நின்று
தவிப்புடனே எனை நோக்க
கனிவான உன் முகத்தைக்
கண்ணீரில் மூழ்கவிட்டே
வெந்நீரில் விழும் புழுவாய்
வெளிநாடு புறப்பட்டேன். . . (அ.இ. ப. 84)

என்று அன்பு மனைவியைப் பிரியும் போதும்,

என்னில் கலந்தவள் எங்கு மறைந்தாள்
எழுதி உயிர்தர எப்படி மறந்தாள்
சென்றுவா மூச்சே என்நிலை சொல்லிவா
சிந்தை சிதறுமுன் அஞ்சலைக் கொண்டுவா! (வெ.அ. ப. 24)

என்று மனைவியின் மடல் காண மயக்கத்திலும் தன்னுணர்ச்சியைப் பதிவு செய்கிறார். தஞ்சாவூர் அருகே உள்ள ஒரத்தநாட்டில் பிறந்து, 1981இல் இருந்து 18 ஆண்டுகள் சவுதியிலும் 1999 முதல் கனடாவிலும் வாழ்ந்து வரும் புகாரி, இதேபோல,

**வங்கியின் வயிற்றை நிரப்பும் வேகத்தில்**
**எங்கள் மனசை பட்டினியிடாதே**
**நான் வேண்டுவதெல்லாம்**
**ஐந்திலக்க அமெரிக்க டாலர்களைவிட**
**நலமென உன் கரம் எழுதும் - ஒரு**
**நான்கு வரிக் கடிதம்தான்** ***(சே.க. கா. ப. 38)***

என்று தாய் தந்தையின் ஏக்கத்தை, கன்னியாகுமரியின் பரக்குன்றில் பிறந்து அமெரிக்காவில் பணியாற்றிவரும் சேவியரும் பதிவு செய்கின்றனர். அரசியல், வறுமைநிலை, குழந்தைத் தொழிலாளர், வேளாண்மை, மதக் கலவரம், தீவிரவாதம், பூகம்பம், வரலாற்று மனிதர்கள், வரலாற்று நிகழ்வுகள், இயற்கை, விதவைப் பெண், தெருவோர மக்கள், ஐம்பூதங்கள் எனப் பலவற்றையும் தம் கவிதைகளில் கருவாக்குகின்றனர் இவர்கள்.

ஒவ்வொரு உயிரின் வாழ்விற்கும் ஆதாரமாக அமைவது தேடலும், நம்பிக்கையுமே. முடியவில்லை என்ற காரணம் காட்டி வாழ்வை முடித்துக் கொள்வது மனித இனம் மட்டுமே. இதை,

**நம்பிக்கை**
**கூடு கலைந்துபோனதால்**
**தூக்கிலிட்டுக் கொண்ட**
**தூக்கணாங்குருவியை**
**நீ**
**தவமிருந்தாலும் பார்க்க இயலுமா?** ***(சே.க.கா. ப. 260)***

என்று சுட்டிக்காட்டி வாழ்வில் நம்பிக்கை கொள்ளச் சொல்கிறார் சேவியர். எப்போதுமே ஆறறிவு மனிதனுக்கு ஐந்துக்குக் குறைவான அறிவுள்ளவைதான் வழி நடத்தியிருக்கின்றன. அந்த வகையில் தூக்கணாங்குருவியும் ஒன்று. அரசியலைப் பாடாத கவிஞர் இல்லை. அரசியலை நல்ல விதமாகப் பாடும் கவிஞரோ இல்லவே இல்லை. இலட்சங்களையே இலட்சியங்களாகக் கொண்டிருக்கும் அரசியல்வாதிகளை,

**நம் அரசியல் வயல்களில்**
**அழுகிய விதைகளுக்கே**
**அமோக விளைச்சல்** ***(வெ.அ. ப. 59)***

என்று அழுகிய விதைகளாக அரசியல்வாதிகளைப் புகாரி கேலி பேச, குழந்தைத் தொழிலாளர் நிலையினைச் சுட்டி,

**இன்னும் எத்தனை காலம்தான்**
**சருகு தேவையென்று**
**வண்ணத்துப்பூச்சிகளை உலர்த்துவாய்?** ***(சே.க.கா. ப. 402)***

என்று சண்டை போடுகிறார் சேவியர். ஊர்ப் பெருமை பேசுவதென்பது எப்போதுமே மகிழ்ச்சியான ஒன்றுதான். வட்டம் விரியும் போது ஊர் மாவட்டமாகும், மாவட்டம் நாடாகும். என்னதான் வட்டம் விரிந்தாலும் மண்ணின் மணம் மனத்துள் இருக்கத்தானே செய்யும்!

> வானூறி மழைபொழியும்
> வயலூறிக் கதிர்வளையும்
> தேனூறிப் பூவசையும்
> தினம்பாடி வண்டாடும்
> காலூறி அழகுநதி
> கவிபாடிக் கரையேறும்
> பாலூறி நிலம்கூட
> பசியாறும் தஞ்சையில் (வெ.அ. ப. 93)

என்று என்றோ இருந்த நிலையினைப் புகாரி நினைவுகூர, வேளாண்தொழில் கொஞ்சம் கொஞ்சமாய் வேரறுக்கப்பட்டு வருவதால், எதிர்காலம் இன்றைய உணவினைக் காட்சிப் பொருளாக்குமோ? என்று இன்று இருக்கும் நிலையினை,

> சலசலக்கும் சிறு குருவிகள்
> சருகு மிதிக்கும் அணில் குஞ்சுகள்
> சேறு மிதித்து நடக்கும் தவளைகள்
> எதுவும் இன்று காணவில்லை
> நான் மட்டும்
> வடக்குப் புறத்தின்
> விறகுக் கூட்டுக்கிடையில் . . . (ஓ.ம.இ.ஓ.ஈ. ப. 52)

என்கிறார். இதில், கலப்பையின் புலம்பலாய் வேளாண்மையின் வீழ்ச்சியை முன்னிறுத்துகிறார் சேவியர். உலகில் வறுமை இல்லாத நாட்டினைக் காட்டலாம். கொலை-கொள்ளை இல்லாத நாட்டினையும் காட்டலாம். ஆனால் தீவிரவாதம் இல்லாத் திருநாடு என்று காட்ட எந்நாடும் இங்கு இல்லை. தீவிரவாதத்தின் வெறிச்செயல் நாளுக்குநாள் அதிகரித்த வண்ணம்தான் உள்ளது. இந்நிலையில் தீவிரவாதத்தைத் திட்டாத கவிதையா? இதோ, புகாரி,

> நாடு நிறம் மதம் ஜாதி என்று
> வேறுபட்ட பறவைகள்
> கூடிப் பணிபுரிந்த
> வணிக வேடந்தாங்கலில்
> வக்கிர வல்லூறுகளின்
> வஞ்சகச் சதி நெருப்பு (வெ.அ. 68)

என்று அமெரிக்க வர்த்தகக் கட்டடத்தில் நடந்த தீவிரவாதத் தாக்குதலில் அப்பாவிப் பொதுமக்கள் உயிரிழந்த வேதனையைச் சுட்டுகிறார். தீவிரவாதத்துக்குப் பெரும்பாலும் மதங்களே காரணமாக அமைகின்றன. மனங்கள் மலர்ந்தால்தான் மதங்கள் உதிரும். கடவுளின் பெயரால் நடக்கும் காட்டுமிராண்டிச் செயல்களை,

> **ஏன்**
> **கடவுளைக் கொளுத்தி**
> **மதத்தை வெளிச்சப்படுத்துகிறீர்கள்?**
> **ஆண்டவனை**
> **கொன்றுவிட்டுக்**
> **கோயில் கட்டுகிறீர்கள்?** *(சே.க.கா. ப. 752)*

என்று காட்டமாகத் திட்டுகிறார் சேவியர். செய்யவேண்டியதைச் செய்யவேண்டிய நேரத்தில் செய்தலே சிறந்த பலனைத் தரும். நரையும் திரையும் நலம் கேட்கும் நாளில் நாமும் கூட நன்றாகச் செய்திருக்கலாமே என்று மனத்துக்குள் மறுகுதல் என்ன பயனைத் தரும்? இதைத்தான்,

> **அறுவடைக் காலத்தில்**
> **நண்டு பிடிப்பதைவிட**
> **கதிர் அறுப்பதல்லவா**
> **அவசியம்** *(க.கா. ப. 459)*

என்று கிராமிய மனத்தோடு சுட்டுகிறார் சேவியர். காலத்தே செய்யாத செயல்கள் மட்டுமல்ல,

> **'மண்மீது பொழியாத**
> **மழைமேகம் மேகமல்ல**
> **தென்னையினைத் தழுவாத**
> **தென்றலுமோர் தென்றலல்ல** *(வெ.அ. 39)*

என்று தம்பட்டியலைத் தொடர்கிறார். புலம்பெயர்ந்த தமிழர்கள் தாய்மண் தமிழர்களின் கவனத்தில் கல்லெறிதலில் காரணம் இல்லாமல் இல்லை. அவர்கள் தம் தாய்மண்ணில் தாகமும், தமிழில் மோகமும் கொண்டிருக்கின்றனர். இதனை,

> **இதயத்தில் இனிக்கின்ற**
> **மொழி – தமிழ்**
> **மொழியினுள் துடிக்கின்ற**
> **இதயம்**
> **மூச்சுக்குள் உள்ளாடும்**
> **தாகம் – தமிழ்**
> **தாகத்தில் தீயாகும்**
> **மூச்சு!** *(அ.இ. ப. 17)*

என்ற புகாரியின் கவிதை வரிகள் வெளிப்படுத்துகின்றன. அதோடு, 'வறுமை கிழித்துப்போட்ட குடும்பத்தின் கடைசி ஆடையையேனும் தைத்தெடுத்து விடலாம் என்ற பதற்ற உணர்வுகளோடு மண்ணைப் பிரிந்த தமிழர்கள், தமிழோடு சேர்ந்திருக்கிறார்கள்' (**அன்புடன், இதயம்,** ப.12) என்று கூறும் புகாரி, தமிழ்நாட்டிலிருந்து கனடாவில் சென்று குடியேறிய தமிழர்களுள் 'தமிழ்ப்புத்தகம்' வெளியிட்ட முதல் தமிழர் என்ற பெருமையையும் பெறுகிறார்.

நிலவைத் தொட்டோம், நீர்மூழ்கி படைத்தோம், அண்டம் அளந்தோம், ஆகாயம் கடந்தோம், உயிரை உயிராய் நகலெடுத்தோம், உணர்வுகளின் மொழி படித்தோம் என்று அறிவியல் வளர்ச்சியில் நாம் அகமகிழ்ந்து போனாலும், உண்மை என்ன? இதோ உரைக்கிறார் புகாரி.

**இருந்தது இல்லாமல்**
**போனதைத் தவிர**
**மற்ற எல்லாம்தான்**
**இருக்கிறது**
**மனிதர்களைத்**
**தனிமைப் படுத்தும்**
**விஞ்ஞான வளர்ச்சி** (அ.இ. ப. 77)

வாழ்க்கையில் நல்லவனாக இருந்தால் மட்டும் போதாது. பொருளீட்டும் வல்லவனாகவும் இருத்தல் அவசியம். இவ்வுலகில் நாம் இருப்பதை இனம் காட்டுவது பொருள்தான். சீதையே இன்றிருந்தாலும் பொருளில்லாத இராமனை ஒரு பொருட்டாக எண்ணமாட்டாள் என்கிறார் சேவியர். வில்லொடிக்க வந்த ஒரு இராமன் சீதையைக்காட்டிலும் தோழி அழகென்று சொல்லாமல் செல்கிறான். வந்த வேறு சிலரும் வெற்றி காரணங்களால் வேற்றிடம் சென்றனர். கடைசியில் வந்தவன் கறைபடா இராமன்; சீதையை மணந்தான். சில நாளில் சீதை சினந்தாள். காரண மென்ன? கண்டுபிடிக்கிறார் சேவியர்.

**சில வருடங்கள் சென்ற பின்**
**ஓர் அதிகாலை அவசரத்தில்**
**சீதை சினந்தாள்**
**இராவணனிடம்கூட**
**புஷ்பகவிமானம் இருந்தது** (ம.வி. ப. 28)

இக்கவிதையில் நகைச்சுவை உணர்வு மேலிட்டாலும், பொருளின் தேவையை வலியுறுத்துவதாய் உள்ளது. கவிஞர்கள் உணர்ச்சி வசப்படுபவர்கள். உள்ளத்தை மறைத்து வைக்கத் தெரியாதவர்கள். பிறர் துன்பத்தையும் தன் துன்பமாக எண்ணி வருந்தும்போது

அவர்களின் இளகும் மனத்திலிருந்து எழுந்து வருகிறது கவிதை. தமக்கு இழப்புகள் ஏற்பட்டாலும் நன்மையையே செய்வேன் என்று தம் மனிதநேயத்தை,

**என் கிளைகள் எல்லாம்**
**காய்ந்தாலும்**
**இன்னும்**
**மிச்சமிருக்கிறது என்னிடம்**
**மூன்று தலைமுறைக்கான**
**விதைகள்** *(மு.வி. 81)*

என்ற கவிதையில் வெளிப்படுத்துகிறார் சேவியர். போதி மரங்கள் எல்லோரையும் புத்தனாக்கிவிடுவதில்லை. புத்தனாக முடிவு செய்துவிட்டால் போதிமரங்கள் தேவையில்லை. பிறரை அறிந்து கொள்ள ஆர்வம் காட்டும் நாம் தன்னை உணர்வதில் தயக்கம் காட்டுவது ஏன்? நம்மை நாம் அறிதலின் தேவையை,

**உனக்கும் எனக்கும்**
**அவசரத்தேவை**
**ஒரு புனிதப் பயணம்**
**புனிதப்பயணம் என்பது**
**நாம் செல்வதல்ல**
**நமக்குள் செல்வது** *(சே.க.கா. ப. 462)*

என்கிறார் கவிஞர் சேவியர். தன்னை அறிதல் என்பது தன்னை உருவாக்கிக் கொள்வதின் அடிப்படை என்பதை நாம் உணர்தல் அவசியம். படைப்புகளால் புகழ்பெறுவோர் பலர். படைப்புகளில் உடைப்புகளைக் காட்டியே உலகப் புகழ்பெற எண்ணுவோர் சிலர். ஆனால் ஒரு திறனாய்வாளன் எப்படி இருக்க வேண்டும் என்பதை மனசாட்சியின் குரலாய் ஒலிக்கிறார் சேவியர்.

**உன்னைப் பிடிக்கும்**
**என்பதற்காய்**
**உன் கவிதைகளைப் படிப்பதில்லை**
**உன்னைப்**
**பிடிக்கவில்லையென்பதால்**
**உன் கவிதைகளை**
**பிரேதப் பரிசோதனை செய்வதும்**
**பழக்கமில்லை எனக்கு** *(க.கா. ப. 257)*

இப்பண்பைப் பெற்றுவிட்டால், இலக்கியவாதிகளின் சண்டைகளில் இலக்கியங்கள் காயப்படாமல் காப்பாற்றப்படும் அல்லவா? நாம் ஒருவரின் முதுகைச் சுட்டும்போது பலர் நம்முதுகைச்

சுட்டுகிறார்கள் என்பதை நாம் மறந்துவிடலாகாது. இதை இப்படி மென்மையாகவும் சொல்லலாம். ஆனால், புரிந்தும் புரியாதது போல் பிதற்றுவோருக்கு இப்படித்தான் சொல்ல வேண்டும் என்கிறார் சேவியர். எப்படி?

**சட்டைப்பையில் சாக்கடை வைத்துவிட்டு**
**பூதக்கண்ணாடியால் பிறர் முகம்**
**நோக்கி நகைக்கும்**
**கண்ணாமூச்சி வாழ்க்கைதான் நமது** *(க.கா. ப. 461)*

என்பதாக. இன்பம் எவ்வழியே வருகிறது? அவ்வழியை நாமறிந்தால் நாளெல்லாம் நலம்தானே. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதத்தில் மகிழ்ச்சி. தன் தங்கை தாயான செய்திகேட்டு அண்ணன் சேவியர் எப்படி அகமகிழ்கிறார் பாருங்கள்.

**கிளைகளுக்குப் பூக்கிரீடம் சூட்டும் போது**
**வேர்களுக்குள் விழா நடக்குமென்று**
**இன்றுதான்**
**விளங்கிக் கொண்டேன்** *(ஓ.ம.இ.ஓ.ஈ. ப. 27)*

மகிழ்ச்சியின் உச்சத்தை இதைவிடவும் சிறப்பாக வெளிப்படுத்தும் வார்த்தைகள் ஏது? உலகில் ஒவ்வொரு உறவிற்கும் ஒவ்வொரு காரணமிருக்கும். தேடினால் உறவால் விளையும் காரியமே மீதமிருக்கும். அதில் ஏக்கங்களும், எதிர்பார்ப்புகளும் ஏராளம் பொதிந்திருக்கும். அதிக ஏமாற்றங்கள் அதிக எதிர்பார்ப்புக்களால் தானே. எதிர்பார்ப்பு ஏதுமின்றி, எதிர்காலக் கனவுமின்றி எப்போதும் நிலைத்திருப்பது நட்பு ஒன்றுதான். நட்பில் ஆணென்ன? பெண்ணென்ன? ஊர் என்ன பேசினாலும் தங்களுக்குள் உண்மையாய் இருக்கும் ஆண்-பெண் நட்பிற்கு,

**இல்லை என்று நாம் சொன்னதற்கு**
**ஆம் என்று அர்த்தம் இருந்ததில்லை**
**மொழி பெயர்ப்பிலோ – பேசும்**
**விழி பெயர்ப்பிலோ**
**பொருள் குற்றங்கள் புரிந்ததில்லை நாம்**
*(ஓ.ம.இ.ஓ.ஈ. ப. 39)*

என்று பூமாலை சூட்டுகிறார் சேவியர். வெறும் வறட்டு வார்த்தைகளில் பிரச்சினைகளை மட்டுமே பட்டியலிட்டுக் காட்டும் கவிதைகள் பாலையில் பெய்த மழையாய். . . வரிகளை மடக்கிப்போட்டு, வார்த்தைகளை அடுக்கிவைத்துக் கவித்துவம் மட்டுமே பேசுபவை. கடலில் பெய்த மழையாய்க் காணாமல் போகும். அணியழகும், சொற்செட்டும், கவியழகும், கற்பனை

வளமும் இழையோட, அகத்தையும் புறத்தையும் அளவே கொடுப்பவை. நன்னிலத்தில் பெய்த மழையாய் நாளும் பயன் தரும் புகாரி மற்றும் சேவியரின் கவிதைகளில் இத்தன்மைகள் இயைந்திருப்பதால்தான், தினம் ஒரு கவிதை, திண்ணை, அம்பலம், நிலாச்சாரல், குவியம், தமிழோவியம், சிங்கை இணையம், காதல். காம், ராயர் காபி கிளப், சந்தவசந்தம், புத்தகப்புழு, தமிழ் உலகம், குமுதம், கல்வி, எழில்நிலா, அகத்தியர் போன்ற இணைய இதழ்கள் தொடர்ந்து இவர்களின் கவிதைகளுக்கு இருக்கை அமைக்கின்றன.

கவிஞனின் பெருமை கற்பனையால் சிறக்கிறது. முரட்டுத்தனமாக எழுதும் வறட்டுக் கவிதைகள் வாசிப்பிற்கு உதவாது. காற்றில் அசையும் பயிர்களைக் கண்டு,

***காலையில் பெய்த மழையில்***
***தலைக்குளித்து***
***மாலை வெயிலில் மஞ்சள் பூசி***
***கறுப்புக் கரைத்த காற்றுடன்***
***தலையசைத்துப் பேசிக்கொண்டிருக்கும்***
***அந்த நீள வயல்*** ***(சே.க.கா. ப. 46)***

என்று நிகழ்வைக் கற்பனையோடு கவியாக்குவதிலும் சரி,

***நடந்து. . விரைந்து .... ஓடி***
***சட்டென்று கிடைத்த***
***சலுகைச் சந்தர்ப்பத்தில்***
***காற்றைப் பிடித்து***
***ஆகாயம் தொட்டது வெள்ளை விமானம் (க.கா. ப. 430)***

என்று வாசகனுக்கு உற்றதை, உருச் சிதையாமல் உரைப்பதிலும் சரி, சேவியர் கைதேர்ந்தவராகவே திகழ்கிறார். கவிஞர்கள் எப்போதும் தம் பயணத்தைத் தப்பாமல் நிலவிடமிருந்து தொடங்குவதை மரபாகக் கொண்டிருக்கின்றனர். பெண்ணிலிருந்து, இட்லி வரை ஏதேதோ பரிமாணங்களை நிலவு எடுத்துள்ளது. சேவியரும் தன்பங்கிற்கு,

**எத்தனை முறை**
**போர்த்தி முடித்தாலும்**
**முரண்டு பிடித்து**
**புரண்டு படுத்து**
**மேகப் போர்வைக்கு வெளியே**
**நழுவி விழுகிறது**
**அந்த**
**நிலாக் குழந்தை** ***(க.கா. ப. 107)***

என்று நிலவினைக் குழந்தையாக்கிக் கொஞ்சி மகிழ்கிறார். மழையில்லையேல் உலகில் எவ்வுயிருமில்லை. மழைக்கு மாற்று இதுவரை ஏதுமில்லை. மாற்று ஏதும் இல்லையென்பதால் மழையும் தாயும் வேறில்லை. என்ன செய்ய இந்த மழையையும் வேண்டாமென்று வெறுப்போரும் இல்லாமல் இல்லை. அவரவர் பிழைப்பு அவரவர்க்கு. பார்த்ததைப் பிறர் பார்வையில் பதிகிறார் சேவியர்.

**காத்தால வானத்துல**
**கறுக்கயிலே கவலப்பட்டேன்**
**பொத்துகிட்டு விழுந்ததய்யா வானம்**
**வீதியில ஆனேன் நானும்** *(க.கா. ப. 574)*

என்று தான் ஒண்டியிருந்த ஓலைக்குடிசை மழைநீரோடு மல்லுக் கட்ட முடியாமல் மாண்டுபோனதில் புலம்பும் பெண்ணையும்,

**கதகதப்புத் தேநீரில் குளிர் புதைத்து**
**கம்பளிக் குவியலில் உடல் மிதித்து**
**கண்ணாடி ஜன்னலில்**
**மழை ரசிக்கும் சில புண்ணிய ஜென்மங்கள்!**
**நாளையேனும் மழை நிற்குமெனும் நம்பிக்கையில்**
**ஈரக்குடிசை ஓரம் அமர்ந்து**
**வலைக்குச் சொடுக்கெடுத்துக் காத்திருக்கும்**
**ஓர் வறுமைப்பட்டாளம்** *(சே.க.கா. பக். 415-416)*

என்று வலையில் வாழ்க்கையைப் பின்னியிருப்போரையும் காட்டு கிறார். இக்கவிதை சமுதாயத்தின் ஏற்றத்தாழ்வுகளை இயம்புகிறது. இயற்கையின் ஒரே செயல் ஒருவருக்கு இன்பமாகவும் ஒருவருக்குத் துன்பமாகவும் அமைவது இயற்கையின் குற்றமன்றே! காதல் கண் மறைக்கும்போதும் கவிதை. காதல் கண்ணீர் நிறைக்கும்போதும் கவிதை. காதலித்துத் தோற்பது கவிஞனுக்கான தேர்வில் வெற்றி என்று எடுத்துக் கொள்வோருமுண்டு. வேதனையில் வீழ்ந்து போவோருமுண்டு. இதோ,

**வெப்பம் விற்கும் பாலை வெளியில்**
**கண்ணீர் இறக்குமதிக்காய்**
**என் கண்களைக்**
**களவுசெய்தவனே** *(சே.க.கா. ப. 364)*

என்று காதல் களவுபோன கண்ணீரோடு கதைபடிக்கிறாள் சேவியரின் கனவுக் (!) காதலி. இங்குப் பாலையை, 'வெப்பம் விற்கும் பாலை வெளி' என்று வருணித்திருப்பது அழகு.

## கவிதையிலிருந்து

கவிதையைக் காட்டிலும், 'கவிதையா?' என்னும் வாதங்களே மிகுந்துள்ள இன்றைய சூழலில், கலங்கரை விளக்கம் படுத்துக்கிடப்பதால் பயனென்ன? என்ற கேள்வியோடு தம் பயணத்தைத் தொடரும் சேவியரும், படரும் மனவலிக்குக் கவிதையால் மருந்து போடும் புகாரியும் தம் சமூகப் பொறுப்பைத் தட்டிக்கழிக்காத கவிஞர்களாகவே படுகின்றனர்.

இவர்களின் கவிதைகள், சமுதாயத்தோடு சண்டை போடுகின்றன. சாதி, மத பேதம் வேண்டாமென வாதம் செய்கின்றன. ஏரில்லையேல் எவையுமில்லை என எடுத்தியம்புகின்றன. ஐம்பூதங்களின் ஆற்றலைப் போற்றி, அவை அழிவதைத் தடுக்கச் சொல்கின்றன. விஞ்ஞானத்தின் விந்தையைக் காட்டும்போதும் விதவையின் நிலையைச் சுட்டத் தவறவில்லை இவை. பிரிவில் கண்ணீர் சிந்துகின்றன. நட்பில் உவகை கொள்கின்றன. நம்பிக்கையில் நம்பிக்கை வைக்கச்சொல்லும் இவை கோழைகளை ஏளனம் செய்கின்றன. கிராமத்தைப் பாடுகின்றன. வார்த்தைகளால் வேளாண்மை செய்கின்றன. இருந்தது இல்லையே என ஏங்குகின்றன. இருப்பதைக் காக்கச் சொல்லி இயம்புகின்றன.

கட்டடங்கள் காயப்படுத்தப்பட்டால் காலம் அதன் கறைபோக்கும். உயிர்க்கூடுகள் உடைத்தெறியப்பட்டால். . . வேண்டாம் தீவிரவாதம்.... அன்பு செய்தலே அனைத்திலும் சிறந்ததென்பதை அறிவிக்கின்றன. சண்டையை விட்டுவிடச் சொல்லும் இவை சமாதானப் புறா விடுகின்றன. தமிழ்ப் பற்றில் மட்டற்று மகிழும் இவை 'தம்பற்றில்' தழைத்திருக்கும் அரசியல்வாதிகளைக் கண்டு அருவருக்கின்றன.

இரு கவிஞர்களும் இருப்பது இந்திய எல்லை தாண்டி என்றாலும், இவர்களின் வேர்கள் கிராமத்து மண்ணில் ஆழப் பதிந்திருப்பதைக் கவிதைமணம் காட்டிக் கொடுக்கிறது. இவர்களின் ஆரம்பக்காலக் கவிதைகளில் வசனநடை மிகுந்திருந்த போதிலும் பிற்காலக் கவிதைகளில் சொற்செட்டும், வார்த்தைக் கூர்மையும் இவர்கள் தங்களைத் தாங்களே பட்டைதீட்டிக் கொண்டிருப்பதைப் பறைசாற்றுவதாக அமைகின்றன. வெறும் கவிதை என்ற நிலையில் இருந்து கவிதை நடையில் கதைகளைக் காவியங்களாக்க முயன்றிருக்கும் சேவியரின் முயற்சி போற்றுதலுக்குரியதாகும். இதில் வரும் உவமைகளும், வருணனைகளும், சொல் விளையாட்டுகளும், வாசகனைப் பிடித்து நிறுத்தும் கதைப் போக்குகளும் இவரை இம்முயற்சியில் தொடர வழிவகுக்கின்றன. எதிர்காலத்தில் இன்னும் பல காவியங்களைத் தருவார் இவர் என எதிர்பார்க்கலாம்.

மொத்தத்தில், இவர்களின் கவிதைகள், வாசிப்போரைக் கிராமத்தின் மணத்தோடு உலகை வலம் வரச் செய்கின்றன.

இவர்களைப் போன்று இன்னும் இனங்காணப்படாத இலக்கியவாதிகள் பலர் இணையத்தில் இருக்கின்றனர். உலகத் தமிழர்க்கு இவர்கள் நன்கு அறிமுகமாகியிருந்தும் தமிழ்நாட்டில் இவர்களின் முகங்களுக்கு ஏனோ இன்னும் முகவரி எழுதப் படவில்லை. இவர்களைப் போன்றவர்களை அடையாளம் கண்டு ஊக்குவிப்பது தமிழின் வேருக்கு நீரூற்றுவது போலாகும். கவிதை மட்டுமின்றி இலக்கியத்தின் அத்தனைக் கூறுகளையும் இவர்கள் ஆட்கொள்கின்றனர். ஆனால், அதன் பயன் இணையத்தோடு இயங்குபவர்களுக்கு மட்டுமே என்பது ஒரு குறையாகவே உள்ளது. இதற்கு, இணையத்தில் வெளிவரும் சிறந்த கவிதைகள், கதைகள், கட்டுரைகள், விமர்சனங்கள் மற்றும் கலந்துரையாடல்கள் போன்றவற்றை நூல் வடிவிலேற்றி அனைவருக்கும் எட்டச் செய்தல் இன்றைய அவசர அவசியத் தேவையாகிறது.

## பின்குறிப்பு

அச்சில் இவர்களின் படைப்புகள்

**இறவாக் காவியம்** (புதுக்கவிதை வடிவில் ஏசுவின் வாழ்க்கை) - சேவியர்

**நில்... கவனி... காதலி...** (காதல் குறுங்கவிதைகளின் தொகுப்பு) - சேவியர்

**மனசே லவ் ப்ளீஸ்** (கவிதைக் குறு நாவல்) - சேவியர்

**சரணமென்றேன்** - புகாரி

**பெயரிடப்படாத இரண்டு நூல்கள்** - புகாரி

## முதன்மை நூல்கள்


1. **அன்புடன் இதயம்**, புகாரி, சபரி பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2003.
2. **ஒரு மழை இரவும் ஓராயிரம் ஈசல்களும்**, சேவியர், ரிஷபம் பதிப்பகம், சென்னை, 2001.
3. **சேவியர் கவிதைகள் காவியங்கள்**, சேவியர், உலகத் தமிழ்மொழி அறக்கட்டளை வெளியீடு, நூலாக்கம்: சபரி பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2003.
4. **மனவிளிம்புகளில்**, **சேவியர்**, சபரி பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2003.
5. **வெளிச்ச அழைப்புகள்**, புகாரி, மணிமேகலைப் பிரசுரம், சென்னை, 2002.

# யுகபாரதி

## அறிமுகம்

2-12-1976இல் தஞ்சையில் விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர். இயற்பெயர் பிரேம்குமார். தந்தை த.க. பரமசிவம், தாய் ப. வசந்த குமாரி. ஆரம்பக்கல்வி முதல் இயந்திரப் பொறியியல் படிப்புவரை தஞ்சையில் படித்தார். தான் ஏழாம் வகுப்பு படிக்கும்போது எழுத வேண்டும் என்கிற ஆவலால் உந்தப்பட்டு கவிதைகள் எழுதத் துவங்கி, ஆசிரியர் செல்ல கணேசன் மூலம் மரபுக்கவிதைகள், யாப்பிலக்கணம் பயின்று அதை உள்வாங்கி, தொடர்ந்து எழுதி வரும் இருபத்தி இரண்டு வயது இளைஞனின் அனுபவப் பதிவுகள் இவை. இந்த வயதுக் கவிஞன் எதிர் கொண்ட அனுபவங்களின் ஒரு பகுதி இங்கே கவிதைகளாகப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. 13 வயதில் 'ஈழ இயக்கம்' என்னும் தலைப்பில் எழுதிய முதல் கவிதை 'தமிழர் கண்ணோட்டம்' எனும் மாத இதழில் வெளி வந்ததாகக் கவிஞர் குறிப்பிடுகிறார்''.[1] இவருடைய கவிதைகளின் பிரசவத் தொட்டில்களாக, குமுதம், குங்குமம், கல்கி, தினமணி கதிர், தாமரை, கணையாழி, தமிழரசி, புதிய பார்வை, உங்கள் ஜூனியர், சூப்பர் நாவல், வான் நிலா, உண்மை, தமிழர் கண்ணோட்டம், பெண்மணி, பல்சுவை நாவல், வாசுகி, கோகுலம் கதிர், நாற்காலி, உதயம், வாரமுரசு, மாலைக் கதிர், வாரமலர் பாக்கியா, ராணி, உஷா, தொடரும், சுகன், நாவல் லீடர், உல்லாச ஊஞ்சல், ராஜரிஷி மற்றும் பல...[2] போன்ற வற்றைக் குறிப்பிடுகிறார்.

## கவிஞரின் கவிதைகள்

தஞ்சையிலிருந்து சென்னை வந்த இவர் ராஜரிஷி என்னும் பத்திரிகையில் உதவி ஆசிரியராக 1½ ஆண்டுக் காலம் பணியாற்றினார். பின்னர்க் கணையாழியில் 5 ஆண்டுக் காலம் உதவி ஆசிரியராகப் பணியாற்றினார். தற்போது படித்துறை என்னும் பத்திரிகையில் ஆசிரியராகப் பணிபுரிகிறார்.

இதற்கிடையில்,

1. 1998இல் மனப்பத்தாயம் என்னும் முதல் கவிதை நூலை வெளியிட்டார்.
2. 1999இல் இரண்டாவது கவிதை நூலான **பஞ்சாரம்** எனும் தலைப்பிலமைந்த கவிதை நூலை வெளியிட்டார்.
3. 2003இல் **தெப்பக்கட்டை** எனும் கவிதை நூலை வெளியிட்டார்.
4. 2003இல் **கண்ணாடி முன்** என்னும் கட்டுரை நூலையும் வெளியிட்டார்.
5. கல்கியில் **காதல் பிசாசு** எனும் தலைப்பில் இருபத்து மூன்று வாரத் தொடர்கதையை எழுதியுள்ளார். "இத்தொடர்கதை புத்தகமாக வெளிவந்துள்ளது."
6. இவர் திரைப்படப் பாடலாசிரியராகவும் இருந்து வருகிறார். இதுவரையில் அறுபத்து ஐந்து திரைப்படப் பாடல்களை எழுதியுள்ளார்.
7. தற்போது ஆனந்தவிகடனில் **தெருவாசகம்** என்ற தலைப்பில் கவிதைகளை எழுதி வருகிறார். இவை வருமாறு:

| | | |
|---|---|---|
| 1. | ரோடு ரோலர் | 16-1-05 |
| 2. | ஏற்பாடு செய்பவன் | 23-1-05 |
| 3. | கரகாட்டக்காரி | 30-1-05 |
| 4 | துணை நடிகை | 6-2-05 |
| 5. | போஸ்டர் ஒட்டுபவன் | 13-2-05 |
| 6. | பூக்காரி | 20-2-05 |
| 7. | உதவி இயக்குநர் | 27-2-05 |
| 8. | மின் கணக்காளன் | 6-3-05 |
| 9. | சைக்கிள் டீக்காரன் | 13-3-05 |
| 10. | பலூன்காரன் | 20-3-05 |
| 11. | போக்குவரத்துக் காவலன் | 27-3-05 |
| 12. | சித்தாள் | 3-4-05 |
| 13. | மேஜை துடைப்பவன் | 10-4-05 |
| 14. | ரயில் பாடகன் | 17-4-05 |

### சிறப்புகள்

**மனப்பத்தாயம்** என்ற நூல் தமிழக அரசு விருதும், திருப்பூர்த் தமிழ்ச் சங்க விருதும் பெற்றது.[3] **பஞ்சாரம்** என்ற நூல் தமிழக அரசு விருதும், குறள்பீடப் பாராட்டுச் சான்றிதழும் பெற்றது. கவிஞரின் அனுபவங்களின் வாயிலாக வெளிப்பட்ட கவிதைகள் பலவற்றுள், உழைப்பாளி மக்களின் நிலை, வறுமை, அரசியலின் இன்றைய நிலை, சமூக அவலம், போன்ற பொருண்மைகளில் அமைந்த ஒருசில கவிதைகள் மட்டும் இங்கு அறிமுகப்படுத்தப்படுகின்றன.

**சோழநாடு சோறுடைத்து** என்ற பழம்பெருமை மக்கி, மண்ணாகிற அவலங்கண்டு ஆதங்கப்படுபவர் இவர். மண்ணும் மனிதர்களுமே என் கவிதையின் ஆன்மா என்று சொல்லாமலே இத்தொகுப்பு முழுக்கத் தன் மனப்பத்தாயத்திலிருந்து தந்திருக்கிறார். தஞ்சை மண்ணிலிருந்து இலக்கிய ஜாம்பவான்கள் நிறையப் பேர் வந்திருக்கின்றனர். கவிதையில் என்கிறபோது, விரல்விட்டே எண்ண வேண்டியிருக்கிறது. யுகபாரதி முதல் கவிதை தொகுப்பின் மூலம் தஞ்சைப்பக்கம் கவனத்தை ஈர்த்திருக்கிறார் எனக் கவிஞர் யுகபாரதியைப் பற்றி வித்யாஷங்கர் குறிப்பிடுகிறார்.

யுகபாரதியின் கவிதைகளில் பெரும்பான்மையும் உழைப்பாளி மக்களின் வறுமையும், அவர்களின் வாழ்க்கை நிலைகளுமே சித்திரிக்கப்பட்டுள்ளன. சமூக அவலங்களும், சொந்த அனுபவங்களும் ஆங்காங்கே மிளிர்கின்றன. கவிஞர் சிறுவயதிலேயே சாராய நெடியின் முத்தத்தை அறிந்தவர் என்பதை, 'நெடி' என்னும் தலைப்பிலமைந்த கவிதையில் குறிப்பிடுகிறார்.

**பால் வீச்சம்**
**அடிக்கிற**
**பருவத்திலேயே**
**சாராய நெடியை**
**சரியாகக்**
**கண்டு கொண்டவன்**
**நான்**
**அன்பு போதையில்**
**அழுத்திக் கொடுத்த**
**அப்பாவின் முத்தம்**

சுர்ரென்று
மூக்கிலேற
எப்போது
நினைத்திடினும்
சுணங்கிடுவேன்
அம்மா யெப்படி
ஆயுள் முழுசும்? (மனப்பத்தயம். ப.13)

இக்கவிதையில் சாராய நெடி வீச அப்பா கொடுத்த முத்தத்தின் மீது கோபம் இல்லை. ஆனால் சாராய நெடியை ஆயுள் முழுதும் தாங்கிக் கொள்ளும் அம்மாவின் மீது ஏற்படும் அனுதாபத்தையும், ஆதங்கத்தையும் இக்கவிதை வழி வெளிப்படுத்துகிறார்.

சமுதாயத்தில் (நல்ல) உயர்ந்த நிலைக்கு வரவேண்டும் என்ற எண்ணத்தினால் பெற்றோர், உற்றார், உறவினர் ஆகியோரை விட்டுச் சென்னைக்கு வந்தவர் கவிஞர். சென்னையில் பல இன்னல் களுக்கிடையில் வாழ்ந்தாலும் ஊரிலிருந்து அம்மா எழுதும் கடிதத்திற்கு நன்றாக இருக்கிறேன் என்று எழுதும் பிள்ளைகளின் நிலையைக் 'கடுதாசி' என்னும் தலைப்பிலமைந்த கவிதையில் குறிப்பிடுகிறார்.

உடம்பு அலசி
டிரங்குப்
பெட்டிக்கடியில்
மடித்து வைத்த
சட்டை மாட்டி
கிடைக்கும்போது
சோறுண்டு
பராரியாய்
நகரத் தெருக்களில்
உலவிக்
கொண்டிருந்தாலும்
ஊரிலிருந்து
அம்மா போடும்
கடுதாசிக்கு
பதில்
சௌகர்ய மென்றுதான்
எழுத வேண்டியிருக்கிறது (மனப். ப.58)

பத்திரிகை ஆசிரியராகவும், திரைப்படப் பாடலாசிரிய ராகவும், கவிஞராகவும் இருந்து வருகின்ற கவிஞர் தொழில் கஷ்டத்தை 'மூன்று குறிப்புகள்' எனும் கவிதைவழிக் கூறுகிறார்.

**எழுதி முடிப்பதற்குள்**
**ஏற்படுகிற**
**இடையூறுகளை**
**எழுதவே முடிவதில்லை**
**சட்டென மறையும்**
**பொறிகளை**
**எத்தனை வெறித்தும்**
**வருவதில்லை**
**மீண்டும்**
**குறிப்பதற்கு**
**காகிதம் தேடும்**
**சந்தர்ப்பத்தில் கூட**
**சிலவரிகளை**
**தொலைத்து**
**விடுகிறேன்** (மனப். ப.31)

வறுமை

பரந்த வயல் வெளிகளைக் கொண்டது தஞ்சை. முப்போகமும் முங்கித் திளைத்த மகசூலால் வைப்பதற்கு இடமற்ற நிறைவான வாழ்வைப் பெற்றிருந்து தஞ்சை. காவிரி வறண்ட தாலும், மழை பொய்த்ததாலும் விவசாயம் செய்ய வழி இல்லை. கவிஞர் தஞ்சையின் தற்போதைய நிலையை 'மனப்பத்தாயம்' எனும் கவிதைவழிக் குறிப்பிடுவது இங்கு எண்ணத்தக்கது.

**. . . . சோறுடைத்த**
**சோழ வளநாடு**
**சோத்துக் கில்லாமல்**
**பக்கத்தூர்**
**பனியன் கம்பெனிகளில்** (மனப். ப.52)

தஞ்சையில் வாழும் விவசாய மக்களில் பெரும்பான்மையோர் விவசாயம் செய்ய வழி இல்லாமல் போனதால் திருப்பூர், ஈரோடு, கோயமுத்தூர் போன்ற நகரங்களை நோக்கிச் செல்கின்றனர் என்பதை இவ்வரிகள் மூலம் வெளிப்படுத்துகிறார்.

கிராமப்புறங்களில் நெல்லைச் சேமித்து வைக்கப் பத்தாயத்தைப் பயன்படுத்துவர். இதற்கு நெற்குதிர் என்றும் பெயருண்டு. இப்பத்தாயம் இன்று வெற்றுப் பத்தாயமாக்க்

காட்சி அளிப்பதையும், இப்பத்தாயத்தின் தற்போதைய பயன்பாட்டையும் இறுதி வரிகளில் குறிப்பிடுகிறார் கவிஞர்.

. . . . ஓரண்டாள்
ஓசரமிருக்கும்
பத்தாயத்தின் மீதேறி
படுத்துறங்கும் பூனை
வெற்றுப் பத்தாயத்தை
விட்டொழித்து
தற்போதவைகள்
அடுப்பில் (மனப். ப.53)

காவிரி நீர்ப்பிரச்சினை குறித்து, நீரின்றிச் சீரழியும் தஞ்சையின் அனைத்துச் சோகங்களையும் படம் பிடித்துக் காட்டுகிறார் கவிஞர். மாடுகட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல். அதனால் யானை கட்டிப் போரடித்த சோழநாடு இன்று,

. . . . எழவு விழுந்தாலும்
எடுத்துப் போட
வழியில்லை
எல்லோரும் பசியாற
படி அளந்த நன்னிலம்
கிழிந்த பையோடு
வரிசையில் நிற்கிறது
இலவச அரிசிக்கு (தெப்பக்கட்டை, ப.33)

கவிஞர் சுட்டிய இவ்வரிகள் தஞ்சையின் தற்போதைய நிலையைப் படம்பிடித்துக் காட்டுவதாய் அமைகின்றன. காவிரி வறண்டதால் விவசாய மக்கள் இலவச அரிசிக்கு வரிசையில் நிற்பதைக் கவிஞர் சுட்டிக் காட்டுவது இங்கு எண்ணத்தக்கது.

இருவர் பையிலும்
பணமில்லை
இப்போதைக்கு
சொல்லிக் கொண்டு
தப்பிப்போம்
தேநீர் பழக்கம்
தேவையற்ற தென. (மனப். ப.72)

கையில் பணமில்லாத காரணத்தால் தேநீர்ப் பழக்கம் கூடத் தற்போதைக்குத் தேவையில்லாத ஒன்று, என வறுமையின் நிலையைக் குறித்துக் கவிதை படைத்துள்ளார்.

அரசியல்

கவிஞரின் குடும்பம் அரசியலோடு தொடர்புடையது. தந்தை பொதுவுடைமைக் கட்சியில் (தஞ்சை மாவட்டத்தில்) பொறுப்பான பதவியில் இருப்பவர். கட்சிக்காக உழைத்தவர். உழைத்துக் கொண்டிருப்பவர். கட்சியில் இருந்ததால் பல நெருக்கடிக்குள்ளான குடும்ப நிலையை, கட்சி வாழ்க்கையில் தந்தையின் பங்கு பற்றி ஏற்பட்ட விரக்தியின் வெளிப்பாடே 'வணக்கம் காம்ரேட்' என்னும் கவிதை.

வணக்கம் காம்ரேட்
வீட்டுக்குள்
நுழையும் போதே
அப்பாவிடம்
சொல்வார்கள்
வசந்தி
வந்தவங்களுக்கு
'காபி' கொடு
அரக்க பரக்க
அம்மா
அடுத்த வீட்டுக்
கதவு தட்டுவாள்
வர்ற
ஆறாம் தேதி
செயற்குழு
மறக்காம வந்திடுங்க
ஐந்தாம் தேதியே
அம்மாவின் நகைகள்
அடகுக் கடையில் (மனப். பக்.28-29)

கவிஞர் இன்றைய அரசியலின் அவலநிலையையும் சுட்டத் தவற வில்லை. அரசியலில் அடிமட்டத் தொண்டர்களின் நிலையினைத் தன் கவிதையின்வழிச் சுட்டிக் காட்டுகிறார். கட்சிக்காக உழைக்கும் தொண்டர்களைத் தலைவர்கள் அவர்களுடைய முன்னேற்றத்திற்குப் பலி கொள்ளும் அவலநிலையை, 'பலி' எனும் கவிதை வழிச் சுட்டுகிறார்.

. . . . அடுத்த
நடவுக்கென்றிருந்த
விதை நெல் விற்று

கட்சி
நிதி கொடுத்தான்
கதிர்வேலு
கல்யாணமாகிய
கொஞ்ச நாளிலேயே
பொஞ்சாதியின்
கைவளையலை கழற்றித்தான்
தலைவருக்கான
பொன்னாடையை
போர்த்த முடிந்தது
பரமேசுவால் . . . .
நன்றியுரையில்
தன் பேரும்
இருந்ததெண்ணி
சொத்தை இழந்தவன்
சுந்தரம். . . .
நெடுந்துயர்ந்த
சவுக்குக்காடுகளை
கொடிக் கம்பமாக்கி விட்டு
அந்தரத்தில் பறக்கும்
அவர்கள்
குடும்பங்கள்
தனக்குப் பிடித்தவரை
கட்சி நீக்கியதால்
தீக்குளித்து
உயிர் நீத்தான்
இடிமழை உதயன்.
பிடித்த நிறமென்பதால்
பேனா தொடங்கி
பீரோவரை
சிவப்பாகவே
நிறைந்தது என் வீட்டில்.... (மனப். பக். 78-74)

என விரிந்து வரும் இக்கவிதையில் எதிர்க்கட்சிக்காரர்களைக் குறிப்பிடும் கவிஞர், இறுதியாக

வருகிற
தேர்தல் வரை
அவனும் இவனும்
பகையாளி
அடுத்த முறை

ஆகக் கூடும்
அண்ணன் தம்பிகள்

எனக் கவிதையை முடிக்கிறார். இக்கவிதையின் வழி அரசியலில் உண்மையாக உழைக்கும் தொண்டர்கள் நிலை பற்றியும், கட்சியில் இருப்பதால் அவர்களின் குடும்ப நிலையையும் குறிப்பிட்டுக் காட்டுகிறார். இன்று பல கட்சிகள் நாட்டில் உள்ளன. தேர்தல் வரும்போது எல்லாக் கட்சிகளும் மக்களுக்காகப் பல திட்டங்களையும் செய்வதாக வாக்குறுதிகளை அள்ளித் தெளித்து விட்டுச் செல்கின்றன. ஆட்சியில் அமர்ந்தவுடன் மக்களையும், வாக்குறுதிகளையும் மறந்துவிடுகின்றன. இதை, 'தேர்தல்' எனும் தலைப்பிலமைந்த கவிதைவழிக் கவிஞர் கூறுவதாவது,

கர்ப்பமுற்றிருப்பவள்
உறங்குதலில்
கொண்டிருக்கும்
எச்சரிக்கையோடு
வந்தது தேர்தல் . . . .
கோரிக்கைகளை
கண்ணில் சிதறவிட்டு
இட்டு வருகிறோம்
வாக்குகளை
பிரசவத்துக்கு
முன்னமே
பின்னத் தொடங்கிய
ஸ்வெட்டர்கள்
எந்தக் குழந்தைக்கு
எப்போது
பொருந்தியிருக்கிறது
திருப்திக்காக வேணும்
செய்யப்படுபவைதான்
சடங்குகள் *(பஞ்சாரம், பக். 59-60)*

இக்கவிதையில் பிரசவம் என்பது தேர்தலையும், ஸ்வெட்டர்கள் என்பது வாக்குறுதிகளையும், குழந்தை என்பது மக்களையும் குறித்துப் பயன்படுத்துகிறார் கவிஞர்.

**சமூக அவலம்**

கவிஞர் மண்ணின் மீதும், மக்களின் மீதும் ஆழ்ந்த பற்றுள்ளவர். சமுதாயத்தில் நிலவி வரும் சீர்கேடுகளை முன்னிறுத்தி வைக்கிறார். சான்றாக,

மூத்திரவாடை
நிரம்பி வழியும்
பேருந்து நிலையத்தில்
முழம் போட்டு
விற்றுக் கொண்டுதான்
இருக்கிறாள் பூக்காரி (மனப். ப.83)

அறிந்த
கழிப்பறைகள்
அத்தனையிலும்
உடைந்தே கிடக்கும்
நீரள்ளும் குவளைகள் (மனப். ப.37)

இவ்இரண்டு கவிதைகளிலும் சமுதாயத்தில் நிலவிவரும் சீர்கேடுகளைச் சுட்டுகிறார். அரசாங்கம் சுற்றுப்புறச் சூழல்குறித்துப் பல நிகழ்ச்சிகளையும், விளம்பரங்களையும் செய்தாலும் மக்கள் அதைக் கண்டுகொள்வதில்லை. இதை முதல் கவிதையில் எடுத்துக் காட்டுகிறார். இரண்டாவது கவிதையில், அரசாங்கம் மக்களுக்குப் பல நிலைகளில் உதவி செய்தாலும் சமூகத்தில் உள்ளவர்கள் அதை உரிய முறையில் பயன்படுத்துவது இல்லை. இது மக்களின் மீதான கோபமா? அரசாங்கத்தின் மீதான கோபமா? தெரிய வில்லை. இங்ஙனம் வாழ்வின் பலதரப்பட்ட அனுபவங்களிலும் ஏற்பட்ட காட்சிகளைப் பதிவு செய்கிறார் கவிஞர். திருமண மாகாத பெண்களின் மனப் புழுக்கத்தை, வேதனையை, ஆதங்கத்தை 'புழுங்கல்' எனும் கவிதையின்வழிக் குறிப்பிடுகிறார்.

முப்பத்தாறு வயசு
முருகேஸ்வரியை
ஐதீகம் சொல்லி
அதட்டுவாள்
பாட்டி.
'அரிசி திங்காத
அடை மழை பெய்யும்
கல்யாணத்தில்
சொல்லியும்
கேட்காது
மேலும்
அதக்குவாள்
அரிசியை
வராத முகூர்த்தம்

மழையோடாவது
வந்து
தொலையட்டு மென (மனப். ப.78)

வரதட்சணை காரணமாகவும், சரியான வரன்கள் அமையாத காரணத்தாலும் பெண்களுக்குத் திருமணம் தடைபட்டுப் போவதால் திருமண வயதையும் தாண்டி நிற்கும் பெண்ணின் மன நிலையை இக்கவிதையில் குறிப்பிடுகிறார். பெண் விடுதலையைப் பற்றிப் பல கவிஞர்கள் பேசியுள்ளனர். பெண்களுக்குச் சமூகத்தில் பல நிலைகளிலும் சுதந்திரம் வேண்டும் என்று போராடும் பெண்கள் பலர். இவர்கள் வீட்டில் உள்ள பெண்களையும் நினைத்துப் பார்க்க வேண்டும். வெளியில் சுதந்திரம் பற்றிப் பேசும் இவர்கள் வீட்டில் அதற்கு நேர்மாறாக நடந்து கொள்கின்றனர். இதைத்தான் கவிஞர்,

வீடு பெருக்குகிறவள்
நகருங்கள் என்பதற்குள்
எழுந்து கொள்ள
மனம் வராத நீதான்
கோஷம் போட்டு
கொடி தூக்குகிறாய்
பெண் விடுதலைக்கு (தெப். ப.29)

எனக் கோடிட்டுக் காட்டுகிறார் கவிஞர். தெருவாசகம் எனும் தலைப்பில் நாம் அன்றாடம் பார்க்கும், பேசும் மக்களின் வாழ்க்கை நிலையை ஒவ்வொரு தலைப்பில் கவிதையாக யாத்துள்ளார். இவர்களைப் பற்றிக் கவிஞர் கூறுவதாவது,

நமக்கு இவர்களைத் தெரியும். நம்மிலும் வசிக்கிறார்கள். கொஞ்சம் நல்லதும், கொஞ்சம் தீதுமாகத் தங்கள் வாழ்வை, காலமெனும் மாயத் தெருவில் தூக்கிக் கொண்டுதான் திரிகிறார்கள் காவடி போல! தோள் வலித்தாலும் தொழிலைச் சுமக்க வேண்டியது காலத்தின் நிர்பந்தம். மிகச் சாதாரண மென்று இலையில் பதிந்த மழைத்துளியை விலக்கிவிடாத மரம்போல, இலக்கிய வேர்களில் இவர்களைப் பதிவு செய்தல் என் விருப்பம்.

எந்தக் காலத்திலும் இவர்கள் மதிக்கப்பட்ட தில்லை. மாறாக, லேசான அலட்சியத்தைத்

> தெரிந்தும் தெரியாமலும் உமிழ்ந் திருக்கிறோம். யாரோ ஒருத்தரல்ல இவர்கள். எல்லோருக் காகவும் உழைக்கிறார்கள். அச்சமூட்டும் கட்டிடங்களில், ஆள் நடமாட்டமில்லாத இரயில் பாலங்களில் நெரிசல் நிரம்பிய பண்டிகை நாட்களில்...எங்கு வேண்டுமானாலும் இவர்களைத் தரிசிக்கலாம். எதுவுமே கிடைத்ததில்லை என்பதற்காகவே எழுதப்பட்டன இக்கவிதைகள்

என்கிறார் கவிஞர்.

ரோடுரோலர், ஏற்பாடு செய்பவன், பூக்காரி, சித்தாள், போஸ்டர் ஒட்டுபவன், மின் கணக்காளன், துணை நடிகை, உதவி இயக்குநர், பலூன்காரன், போக்குவரத்துக் காவலன், சைக்கிள் டீக்காரன், மேஜை துடைப்பவன், ரயில் பாடகன் எனப் பலதரப்பட்ட மக்களைப் பதிவு செய்கிறார். 'பூக்காரி' எனும் தலைப்பில் அமைந்த கவிதை,

**கற்றது கையளவு**
**என்பதிவள் கோட்பாடு**
**வற்றிய முகத்தோடு**
**வாழ்ந்து வரும் பூக்காடு**
**காம்புகிள்ளி காம்புகிள்ளி**
**காய்த்துப் போன கைவிரலை**
**சோம்பல் நாரெடுத்து**
**சொடக்கிற்குள் முடிந்து வைப்பாள்**
**ஆலயவாசல் முன்பே**
**அனுதினம் இருந்தாலும்**
**சாமிகள் இவளுடைய**
**சங்கடத்தைத் தீர்ப்பதில்லை**
**வெகுவான வாசனையை**
**வீடுவீடாக கொடுத்துவிட்டு**
**சாராய நெடியடிக்கும்**
**புருஷனிடம் சரணடைவாள் . . .** (20-2-05)

என வரும் இக்கவிதையின்வழிப் பூ விற்கும் பெண்களின் ஏழ்மையையும், இவர்களுடைய தொழில் அவஸ்தையையும் குறிப்பிடுகிறார் கவிஞர். மண்ணைப்பாடுபவர்; மக்களைப் பாடுபவர்; மக்களுக்காகப் பாடுபவர் கவிஞர் யுகபாரதி. 'போஸ்டர் ஒட்டுபவன்' எனும் கவிதையில் போஸ்டர் ஒட்டுபவனுடைய நிலையை எடுத்துக்கூறுகிறார்.

ஊரடங்கும் நள்ளிரவில்
ஒட்டுகிறான் சுவரொட்டி
தான் மட்டும் உறங்காத
தகவலையும் தெரிவிக்க
நட்டநடு நிசிப் பொழுதில்
நடமாடும் பேய் போல
ஒட்டுகிறான் காகிதத்தை
ஒவ்வொருவரும் பார்ப்பதற்கு
திக்கேதும் தெரியாமல்
திணறுகின்ற தன் வாழ்வை
முக்குச் சந்துகளில்
மூச்சுமுட்ட ஒட்டுகிறான்
ஊரோடு 'ஒட்டி வாழ்தல்'
உயர்வெனும் தத்துவத்தை
ராவோடு ராவாக
நடைமுறைப் படுத்துகிறான்
வெட்டிக் கதைபேச
விழாவெடுக்கும் மனிதர்களின்
கட்டளைக்கு அடிபணிந்து
கஷ்டத்தை ஒட்டுகிறான். . . *(13-7-05)*

*காதல்*

கவிஞர் காதலைப் பற்றியும் பேசுகிறார். எல்லா இளைஞர் களுக்கும் ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தில் காதல் ஏற்படுவதுண்டு. எல்லாக் கவிஞர்களும் காதலைப் பற்றிப் பேசுகின்றனர். ஆனால் இவர் சற்று வித்தியாசமாகக் காதலை அணுகுகிறார்.

வருகை
எப்போதென
வாசலருகே
விழியிரண்டையும்
நட்டு வைத்து
பரிதவிக்கும்
நெஞ்சை
பகல் கனவில்
மேயவிட்டு
வராவிடில்
காரணம் துழாவி
முகம் சோர்ந்து
கவலை கொண்டு
அலுவலை மறந்து

அண்ணாந்தபடியே
ஞாபகம் பேசி
ஏதோவொரு
பிரமையில்
தேகமிழைத்து
என்போல்
நீயுமாகி
விடக்கூடாதென்றுதான்
சொல்லாமல்
வைத்திருக்கிறேன்
உன்னிடம் கூட
என் காதலை (மனப். ப.33)

இக்கவிதையில், தனிமையில் பரிதவிக்கும் இளைஞன் தான் போல அவளும் ஆகிவிடக்கூடாதே என்று தன் காதலை அவளிடம் சொல்லாமல் வைத்திருக்கிறான் எனக் காதலைப் பற்றிப் பேசுகிறார். மேலும், பிறரிடம் பெருமை பொங்கப் பேசுவதற்கேனும் ஒவ்வொருவரிடமும் காதல் ஒளிந்திருக்கிறது என்பதை,

பெருமை பொங்க
பிறரிடம்
பேசுவதற்கேனும்
ஒவ்வொருவரிடமும்
ஒளிந்திருக்கும்
காதல் (மனப். ப. 22)

என்கிறார். காதலைக் குழந்தையின் சிணுங்கலுக்கும், தொலைபேசியின் சிணுங்கலுக்கும் ஒப்பிடுகிறார்.

கைத் தொட்டு தூக்கியதும்
கதறத் தொடங்கும்
குழந்தையைப் போன்றது
உன் காதல்
கை தொட்டு தூக்கும் வரை
கதறி அடங்கும்
தொலைபேசியைப் போன்றது
என் காதல்
எப்போதும் உயிர்ப்போடு
சிணுங்குகிறது நம் காதல் (தெப். ப.32)

எனக் காதலைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

## முடிவுரை

கவிஞருடைய கவிதைகள் அனைத்தும் தான்பெற்ற பல்வேறு அனுபவங்களின் வாயிலாக எழுந்தவை. பல கவிதைகள் பலதரப்பட்ட மக்களின் உணர்வுகளையும், சமூக அவலங் களையும், சீரழிவுகளையும் வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன. உழைக்கும் மக்கள் மீதும், மண்ணின் மீதும் பற்றுள்ளவர் என்பதை இவர் கவிதைகளின்வழி அறிகிறோம். இவருடைய கவிதைகள் பெரும்பான்மையும் சமூகச் சிக்கலை முன்நிறுத்தி வைக்கின்றனவே தவிர இவர் தீர்வுகூற முற்படவில்லை என்பது சுட்டத்தக்கது.

### அடிக்குறிப்புகள்

1. **மனப்பத்தாயம்**, ப. 93.
2. **நேர் காணல்**, 25-3-05.
3. **மனப்பத்தாயம்**, ப.4.

# பா. ஜெயக்குமார்

## கவிஞர் அறிமுகம்

வேலூர் மாவட்டத்தில் காட்பாடி வட்டம் சேர்க்காடு என்னும் கிராமத்தில் 28-12-1981ஆம் ஆண்டு பாலசுப்பிரமணி - கௌரி தம்பதியருக்கு மகனாகப் பிறந்தவர் பா. ஜெயக்குமார். இவரின் உடன்பிறந்த ஒரே சகோதரி அமுதா கவிஞருக்கு மூத்தவர். தன்னுடைய எட்டாம் வகுப்புப் படிக்கும் தறுவாயில் கண் பார்வை இரண்டும் வீழ்ச்சி கொண்டார் கவிஞர். இருப்பினும் நம்பிக்கையைக் கையில் கொண்டு தனது பள்ளிக் கல்வியைச் சேர்க்காடு அரசினர் மேல்நிலைப் பள்ளியில் படித்தார். 12ஆம் வகுப்புப் பொதுத்தேர்வில் வெற்றி பெற்றுப் பள்ளியிலேயே முதல் மாணவனாகத் திகழ்ந்தார். அதன்பின் சென்னை இலயோலா கல்லூரியில் இளங்கலை தமிழ் பயின்றார். அவ்வமயம் முதலாம் ஆண்டில் தங்கப்பதக்கம் பெற்றார். பின் சைதை அரசுக் கல்வியியல் மேம்பாட்டு நிறுவனத்தில் ஆசிரியர் பயிற்சியும் பெற்றார்.

பள்ளிப் பருவம் முதல் பா. ஜெயக்குமார் சிறுசிறு கவிதைகளை எழுதுவது வழக்கம். ஆசிரியர்கள், நண்பர்கள் போன்றோரின் ஊக்குவிப்பால் தன் திறமையை மேன்மேலும் வளர்த்துக் கொண்டார்.

பள்ளி, கல்லூரி விழாக்களில் கவிதை வாசிப்பது கவிஞரின் விருப்பமாகும். மாணவப் பருவத்திலேயே கவிதை நூல் வெளியிட வேண்டும் என்ற இலட்சியத்தைக் கொண்டு வெற்றி அடைந்ததைத் தன் சாதனையாகக் கவிஞர் கருதுகிறார். மேலும் பல நூல்களை வெளியிடும் முகமாகக் கவிதைகளை எழுதி வருகிறார்.

## அன்புநதி – கவிதை நூல் அறிமுகம்

கவிஞர் 1996 முதல் தான் எழுதிய கவிதைகளில் சிறந்த கவிதைகளை எடுத்து நூல் வடிவமாக 2000ஆம் ஆண்டு அச்சேற்றினார். இந்நூல் 40 பக்கங்களில், 49 கவிதைகளை உள்ளடக்கியதாக உள்ளது. இந்நதியின் பயணம் உலகெல்லாம் பாய இருகரைகளாய் அணிந்துரைகள் அமைத்துக் கொடுத்தவர்கள், பிரபல பாடலாசிரியர் பழநிபாரதி மற்றும், இலயோலோ கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் அருணை பாலறாவாயன். மேலும், பேராசிரியர் வின்சன், பேராசிரியர் அமல்ராஜ் மற்றும் செங்கல்பட்டு கலைக்கல்லூரி ஆங்கிலப் பேராசிரியர் சிவராமன் இவர்களுக்கெல்லாம் கடமைப்பட்டிருப்பதாகக் கவிஞர் தெரிவித்துள்ளார்.

1. தமிழ் வளரப்பாடுபட்டோர் பற்றிய பாராட்டுக் கவிதைகள்
2. வாழ்வில் தனக்கு நேர்ந்ததைக் கூறும் கவிதைகள்
3. இயற்கை எழில் கொஞ்சும் கவிதைகள்
4. தென்றலைக் காட்டிலும் மென்மையான காதல் கவிதைகள்
5. சமுதாயச் சீர்கேட்டைப் படம்பிடித்துக் காட்டும் கவிதைகள்
6. வழிமாறிய இளைஞர்களுக்கு விழிப்பூட்டும் கவிதைகள்,
7. துவண்ட இதயங்களைத் தேற்றிப் புத்துணர்ச்சியூட்டும் கவிதைகள்
8. கல்லையும் எழுப்பும் துடிப்பான கவிதைகள்

எனப் பலதரப்பட்ட கவிதைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. நூலின் முதற் கவிதை தமிழறிஞர் மு. வரதராசன் பற்றியதாகும். தொடக்கமே ஆரவாரமற்று அடக்கமாய் உள்ளது.

## நூல்வழி அறிந்தவை

அன்பு நதியின் என்னுரையில் கவிஞர் தன்னுடைய கூற்றை வெளிப்படுத்தியுள்ளார். பாடப்புத்தகங்களில்

அச்சடித்தது போக எஞ்சிய வெள்ளைக் காகிதங்களில் வாசிக்க ஆளின்றியும், வாழ்த்த நாவின்றியும், எழுத்துப் பிழைகளோடும், அடித்தல் திருத்தல்களோடும் தன்னுடைய கவிதைப் பயணம் தொடங்கியதாகக் குறிப்பிட்டுள்ளார். கவிஞரின் பயணம் குதூகலமாய் அமையவும், களைப்பின்றித் தொடரவும் அவர் பேனா அவருக்குத் தோண்டிக் காட்டிய ஜீவநதியின் ஒரு கிளை தான் இந்த "அன்பு நதி".

> வேதனை எரி அமிலத்தில் நான் துவைக்கப் பட்டிருக்கிறேன். துன்பக் கோடாரிகள் என்னைத் துண்டாக்கிப் பசி தீர்த்துக் கொண்ட தினங்கள் என் நாள்காட்டியில் ஏராளம். இப்படி இருந்தும் வாழ்வில் வெற்றிபெற வேண்டும் என்ற எண்ணம் மட்டும் எனக்குள்ளே எப்போதும் இறந்து போனதில்லை'

என்று நம்பிக்கையோடு தெரிவித்துள்ளார். கவிஞரின் உணர்ச்சி களுடைய உயிர் வேலின் கூர்மையை இன்னும் அதிகரிக்க ஓர் உலைக்களம் தேவைப்பட்டது. அதற்கான ஓர் அஸ்திவாரம் தான் இந்த "அன்புநதி".

## கவிதைத் திறனாய்வு

ஜெயக்குமாரின் கவிதை, கற்பனை ஆற்றலையும், தன்னம்பிக்கையையும் நேரிய சிந்தனையையும் (Positive Thinking) எடுத்துரைக்கும் திறனையும் சீரியமுறையில் வெளிப்படுத்துகிறது. வகைப்பாட்டு வரிசைக்கு ஏற்ப இவர் கவிதைகளை 7 வகைப் பொருண்மைக்குள் அடக்க இயலும் அவை:

| | | |
|---|---|---|
| 1. தனிநபர் பற்றிய கவிதைகள் | | 3 |
| 2. தன்னனுபவம் | " | 4 |
| 3. இயற்கை | " | 5 |
| 4. காதல் பற்றிய | " | 8 |
| 5. சமூகச் சிந்தனை | " | 18 |
| 6. தத்துவம் உரைக்கும் | " | 5 |
| 7. தன்னம்பிக்கை ஊட்டும் | " | 6 |

**தனிநபர் பற்றிய கவிதைகள்**

முதல் கவிதை மு.வ. என்னும் தலைப்பில் தலை வணங்கித் தொடங்குகிறது. தமிழ் உலகின் எழில் விளக்காக மு.வ.வைப் போற்றிப் பாராட்டுகிறார்.

*இளகிவிடும் இரும்பும்*
*உன் இலக்கியம் கற்கையில்*
*வளர்ந்தது எங்கள் ஞானம்*
*உன் வரலாறு அறிகையில்*
*உயிரிலும் வைரம் பாயும்*
*உன் உரைகளை உணர்கையில்*
*எல்லாம் புனிதம் ஆகும்*
*உன் புதினங்கள் படிக்கையில்*

*என்றும் உன் புகழ் வாழும் என்றால்*
*நீ வழங்கியஇலக்கியம் மட்டுமல்ல*
*நீ வாழ்ந்த வாழ்க்கை கூடத்தான் மு.வ.!* (ப.5)

என இலக்கியத்தையும் பாராட்டி அவர் வாழ்ந்த வாழ்க்கையையும் புகழ்ந்து பாடுகிறார். "மக்களைக் கவர்ந்த மானுட கவிஞன்" என்னும் தலைப்பில் கண்ணதாசனின் புகழை எடுத்துரைக்கிறார். கண்ணதாசனைப் பூமகன், மானுடக் கவிஞன் என வருணித்துள்ளார்.

*புவித் தாய்க்குக் கணக்கின்றி*
*கவிப் பிள்ளைகள் இருப்பினும்*
*பூமகன் இவன் போல்தான்*
*வந்திடுமா! . . . .*
*மனிதனை மேம்படுத்தும்*
*காதலுக்கு இவன் தந்த*
*விளக்கங்கள்தான்*
*எத்தனை எத்தனை!* (ப. 24)

இத்தகைய பாடல் வரிகளிலிருந்து, காதல் மனிதனை மேம்படுத்துகிறது என்பது கவிஞரின் உளப்பாடாகத் தெரிகிறது. நீயும் உன் மொழியும்' என்னும் தலைப்பில் திருவள்ளுவரைப் பற்றிக் கூறுகிறார்.

*மனமெங்கும் மணம்வீச*
*மனப்பாடம் செய்தோம்*
*உன் மொழியை!*

*இந்த மண்கூட*
*மகிமை பெற*
*சுமக்கச் செய்தோம்*
*உன் சிலையை!*

*நாங்கள் உன்னை*
*தெய்வப் புலவன் என்று*
*அழைப்பது*
*உன் புலமைக்கு தெய்வத்தன்மை*
*தர வேண்டும்*
*என்பதற்கு மட்டுமா?*
*இல்லை இல்லை*
*நீயொரு பத்தினி*
*தெய்வத்துடன் வாழ்ந்தாய்*
*என்பதற்காகத்தான்!*

எனத் திருவள்ளுவரோடு, அவர் மனைவிக்கும் சேர்த்துப் புகழாரம் சூட்டுகிறார் கவிஞர்.

*வள்ளுவனே*
*உன் பொதுமறையை*
*எந்த தலைமுறையானும்*
*தாண்டிச் செல்ல பார்க்குமாயின்*
*அதற்கு இருட்டறைக்குள்*
*வாழவும் தகுதி கிடையாது* (ப. 18)

திருக்குறள் தமிழர்க்குத் தாய்ப்பால். அத்தகு பொதுமறையைத் தாண்டிச் சென்றால் இருட்டிய அறைக்குள்ளும் வாழ்வு கிடைக்காது எனத் தன் முடிவைக் கூறுகிறார். (ப. 18)

## தன்னனுபவம் அல்லது தன்னுணர்ச்சிப் பாடல்கள்

இலயோலா கல்லூரி மாணவராக இருந்த இவர் "எங்கள் விடுதி" என்னும் தலைப்பில் எழுதி உள்ள கவிதைகளில் எள்ளல் நடை துள்ளலிடுகிறது. இந்த நகைச்சுவை, கவிதைக்கும் புதுச்சுவை ஊட்டுகிறது.

*குட்டிக்கடல் என்று*
*சொல்லலாம்*
*எங்கள்*
*விடுதிக் குளியல் அறைகளை*
*பரப்பளவில் அல்ல*
*வரும்*

தண்ணீரின்
உவர்ப்பளவில்

வார்டன் கூட
எங்கள் விடுதியை
பத்து மணி வரைக்குமே
வானம் விடியும் வரை
காவல் காப்பவை
கொசுக்கள் மட்டுமே

அரிசி மில்லில்
தப்பித்த
நெல்மணிகள்
அரசு விடுதி
மாணவர் தட்டில் அடிக்கடி
அணி வகுப்பதைப் பார்க்கலாம்.

அது என்ன தெரியவில்லை
எங்கள் விடுதி மின் விளக்கு மட்டும்
ஒத்துழையாமை இயக்கத்தில்
ஈடுபடுகிறதே!

திறக்கும் போதும், மூடும் போதும்
எங்கள் அறை கதவுகள்
அறைகூவல்
இடுவது உண்டு
ஆம்
தாழ்ப்பாளைப் பிரிந்த
சோகத்தில்
எத்தனை நாள்தான்
அது அமைதியைக் கடைப்பிடிக்கும் (ப. 7)

பார்வையற்ற கவிஞரான இவர், நான் என்னும் தலைப்பில் எழுதி உள்ள கவிதை படிப்போர் மனத்தைப் பாரம் ஆக்குவதாகும்.

அன்பான தம்பதியர்க்கு
அழகான பிள்ளையானேன்!
அழகான பிள்ளை நான்
அன்போடு வளரலானேன்

குறை இல்லா நான்
பிள்ளை நிலவாய்க் காட்சி தந்தேன்

*பிறை வளர பிறை வளர*
*கண் இரண்டில் வீழ்ச்சி கொண்டேன்!*

*வீரம் சொன்ன தந்தை கண்கள்*
*ஈரம் கொள்ள காரணமானேன்!*
*ஆசையோடு ஈன்றவளின்*
*அடிவயிறு எரியக் கண்டேன்*

*அகவை பத்தில் அகம் நொந்து*
*தந்தைக்கு தீ வைத்தேன்!*
*கண்ணீரோடு கைகோர்த்து*
*காலம் முன்னே கேள்வியானேன்!*

*ஊரார் கண்களிலிருந்து*
*அனுதாபம் வழியக் கண்டேன்*
*உறவினர் கால்கள் எல்லாம்*
*எனைக் கண்டு ஒதுங்கக் கண்டேன்!*

*உயிர் கொடுத்தாள் ஒரு பக்கம்*
*உடன் பிறந்தாள் மறுபக்கம்*
*இருவரும் வேலியாக*
*என் வளர்ச்சி, இருக்கக் கண்டேன்!*

*நண்பரெல்லாம் கைகொடுக்க*
*துன்பக் கைகளை நான்              உடைத்தேன்!*
*நம்பிக்கை நெஞ்சில் கொண்டு*
*இன்பத்தோடு கைகொடுத்தேன்!*

*கல்வியோடு உறவு கொள்ள*
*இன்ப உணர்ச்சிக்குத் தடை செய்தேன்*
*கவிதையோடு உறக்கம் கொள்ள*
*என் உள்ளத்தை பண் செய்தேன்!*

இக்கவிதையில் கவிஞரின் வாழ்க்கையும் கவிதை ஆர்வமும் வெளிப்படுகின்றன.

*கல்வி வானில் நான் ஏற*
*ஏணிப்படி ஆனவர்க்கு சுமக்கும் ஓடம் ஆவேன்!*
*நான் முளைத்திடாது, மூடியிடும் சில*
*மூடர்க்கு, அவர் முகம் தீய பாடம் ஆவேன்    (ப. 28)*

இக்கவிதை மூலமாகக் கவிஞரின் விசுவாச உள்ளம் தெரிகிறது. நான் என்கிற கவிதை தந்தையில்லாத, விழிகளில் நிறைவான

பார்வை இல்லாத, சோகமான அவரது சுயம் சுடுகிறது. அதே நேரத்தில் கவிதையின் கண்கொண்டு வாழ்க்கையைப் பார்க்கிற அவரது கம்பீரமான நம்பிக்கை தெரிகிறது. கொடுத்துப் பிடுங்கிக் கொண்ட கொள்ளைக்காரனாய்க் காலம் இவர் கண்களை மறைத்தாலும், "நான்" என்று எழுந்து நிற்கும் எழுத்துகள் இவர் எதிர்காலத்தை இப்போதே காட்டுகின்றன.

கவிஞர் தன் தாயின் மீது அளவற்ற அன்பு கொண்டவர். அவர் தன் படிப்பிற்காகத் தன் தாயைப் பிரிந்து சென்னைக்கு வந்தார். அப்போது அவர் எழுதிய 'அம்மாவுக்கு (ஓதற்பிரிவில்)' கவிதை தாய்ப் பாசத்தைப் புலப்படுத்தும்.

*கனவுகள் இல்லை கண்ணீர்தான்*
*கண்கள் மூடினால்!*
*தூக்கம் இல்லை துக்கம்தான்*
*நெஞ்சம் வாடினால்!*
*உன்னுடன் இருந்த காலத்தில்*
*உள்ளம் தேனாய் இனித்ததுவே!*
*உன்னைப் பிரிந்த நாள் முதலாய்*
*வெல்லம் கூட கசக்கிறதே!* (ப. 10)

மேலும் சோகத்துக்குச் சொந்தக்காரனாகிவிடுவதாகவும் கூறியுள்ளார். கவிஞர், தன்னைப் போன்று விழியில்லாதவரை விழியில்லாதார் விதியில்லாதார் அல்ல. நம்பிக்கை ஒளி இவர்களை வழி நடத்து கின்றது, என்று 'பிழையான பக்கங்கள்' என்னும் தலைப்பில் கூறியுள்ளார்.

*கடவுள் எழுதிய*
*உலக புத்தகத்திலே*
*இவர்கள்*
*பிழையான பக்கங்கள்*

*இவர்கள்*
*விழி இல்லங்களில்*
*பார்வை மின் இணைப்பு*
*இல்லையே தவிர*
*இவர்கள் மனதில்*
*நம்பிக்கை ஒளி விளக்கு*
*அணையாதே இருக்கும்.*

*பார்ப்பதற்கு இவர்கள்*

*சாதாரணமானவர்களாய்த்*
*தெரியலாம்!*
*ஆனால் இவர்களும்*
*சாதிக்கப் பிறந்தோரென*
*ஒரு நாள் புரியலாம்.* (ப. 114)

## இயற்கை பற்றியவை

இயற்கையை அழகாகக் கண்ட கவிஞர்கள், தாம் கண்ட பொருள், தம்மை ஈர்த்த பொருள் ஒவ்வொன்றிலும் அழகின் ஆட்சி எப்படி மாட்சிமை பெற்றுள்ளது என்பதை அவர்கள் வகுத்த கவிதை நெறியிலேயே பதிலாக்கிக் காட்டுவர். கவிஞர்கள் இயற்கை விரும்பிகள் என்ற கருத்தை வலியுறுத்துவது போன்று இயற்கையைப் பாடுபொருளாகக் கொண்ட 5 கவிதைகள் (பக். 15, 16, 25, 26, 34) இந்நூலில் அமைந்துள்ளன.

*யாரால் முடியும்*
*இந்த உதிரிப்பூக்களை*
*மாலையாக்க?* (ப. 16)

என்ற இக்கவிதை மூலம் கவிஞர் மழையின்மீது காதல் கொண்டவர் என்பது புரிகிறது. மேலும் கவிஞர் வானம்மீது காதல் கொண்டவர் போலும், அவர் இயற்கை பற்றி எழுதிய "வானம் போல் மனம் வேண்டும்" என்பதை, "சொல்லமட்டுமா" என்னும் கவிதையில் வானம் பேசுவது போல் கூறியுள்ளார்.

*எல்லாம்*
*உனக்குக் கீழ் இருக்கும்*
*என்னைப் போல் உனக்கு*
*மனம் இருந்தால்* (ப. 25)
*-உரிமை-*

இதே போல் பாராட்டுகிறேன் என்னும் கவிதையில்,

*யார் மறைத்து வைத்தார்?*
*இத்தனை பெரும் நீளக் கம்பிகளை*
*இந்த நீல வானத்துக்குள்*

*கம்பிகள் அடிக்கடி*
*வானத்தை குத்துகின்றன போலும்*
*பாவம்! அதனால்தான்*
*மழையாய்க் கண்ணீர் வடிக்கிறதோ வானம்!* (ப. 15)

கம்பிகள் என மின்னல்களைக் கூறியுள்ளார்.

**காதல் தொடர்பானவை**

காதலைப் பாடாத கவிஞரும் உளரோ? இத்தொகுப்பில் காதல் குறித்து 8 கவிதைகள் (பக். 8, 10, 15, 19, 25, 26, 32, 33) இடம் பெற்றுள்ளன. பொதுவாகக் காதலியின் கூந்தலைக் கார்மேகத்துக்கும், நடையை அன்னத்திற்கும், இதழ்களைக் கோவைப் பழத்திற்கும் ஒப்பிடுவர். ஆனால் கவிஞர் காதல் நங்கையின் எச்சிலால்தான் நட்சத்திரம் உருவானது என்று நட்சத்திரம் என்னும் கவிதையில் கூறியுள்ளார்.

வெயிலின் வெப்பத்தால்
மண்ணை நோக்கி
என்னவள்
உமிழ்ந்த
எச்சில் துளிகளை
யார் கொண்டு சேர்த்தது
வானத்தில். . . . . . . (ப. 8)

மேலும், காதலியின் அழகையும், உயர்வையும் காதல் கவிதையில் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ் எழுத்தைப் படிக்கின்ற சுகம் அவள்
எழில் கழுத்தைப் பார்த்தாலே வரும்!
அமிர்தத்தைக் குடித்திட்ட இதம்
அவள் இதயத்தை நான் அடைந்திட்ட நேரம்!

. . . பாடினேன் பல நூறு கவிதை
தேசத்தை பற்றியும், தலைவர்கள் பற்றியும்,
பாராட்டப்பட்டேனா ஒரு தினம்?
இந்தப் பாவி உலகத்தில்!

எழுதினேன் ஒரு கவிதை – என் மீது
அவள் கொண்ட காதலைப் பற்றி
பாராட்டென்ன! சீராட்டென்ன? தினம் தினம்,
காதல் யோகத்தில்!

விண்மீன்களை எண்ணிவிட்ட கர்வம்
அவள் கண்களுக்குள் எனக்கு இடம் கொடுத்தால்!
என் கரங்களுக்கு மட்டும் கோபம்,
கற்பைச் சொல்லி அவள் மேனியைத் தொட இடம்
கொடுக்காததால் (ப. 8)

கவிஞர் காதலியின்மேல் வைத்துள்ள அன்பும், கற்பனை மனமும் புலப்படுகின்றன. அன்பு நதி என்னும் தலைப்பில் உள்ள

கவிதையில் தான் காதலுக்குத் தகுதியற்றவனா இல்லை காதலிக்கத் தகுதியற்றவனா என வினா எழுப்புகிறார்?

அம்பு பாய்ந்த குருவிக்குஞ்சானது
என் இதயம்
உன் அன்புநதி பாயாததால்
நீயே சொல்!
நான்
காதலுக்கு தகுதியற்றவனா!
இல்லை
உன்னைக்
காதலிக்க தகுதியற்றவனா! (ப. 20)

'பாறை' என்னும் தலைப்பில் உள்ள கவிதை காதல் தோல்வியைப் பறைசாற்றுகின்றது.

எந்தப் பெண்ணை
நீ விரும்பினாய்? அவள்
உன்னை விரும்பாததாலோ
மனதோடு உடலையும்
இறுக்கிக் கொண்டாய் (ப. 10)

பாறை இயற்கையாக இறுகிக் காணப்படும். அது காதல் தோல்வியால்தான் மனத்தோடு உடலையும் இறுக்கிக் கொண்டது என்பதில் கவிஞரின் கற்பனை நயம் புரிகிறது. காதலியின் கையால் பெறுவது என்றால் மரணம் கூட இன்பமே என்பதை அன்புநதி என்னும் கவிதையில்,

தூக்கி விடு
கைக்கொடுத்து
இல்லையென்றால்
தூக்கிலிடு
உன் கூந்தலில் முடித்து.... (ப. 19-22)

"இரண்டும் இன்பமே" என்னும் கவிதையில்,

உன் கையால் பெறுவது என்றால்
உன் பெயர் சொல்லித் தருவது என்றால்
தண்டனை என்ன!
தலையணை என்ன!
இரண்டும் இன்பமே! (ப. 32-33)

என்கிறார்.

**சமூகச் சிந்தனைக் கவிதைகள்**

நூலாசிரியரின் பட்டறிவுப் பனுவலாய், உள்ளுணர்வு உந்துதலால் உலா வந்திருக்கும் இந்தக் கவிதைத் தொகுதியில் இடம்பெற்றிருக்கும் பல கவிதைகள் வாழ்க்கையில் ஒவ்வொரு மனிதனும் சந்திக்கின்ற பல்வேறு சிக்கல்களைப் பாங்குடன் படம்பிடித்துக் காட்டுகின்றன. பென்சிலைத் தொடாமல், பாத்திரம் தேய்க்கும், குழந்தைத் தொழிலாளர் குறித்து வலி என்னும் கவிதையில் குறிப்பிட்டுள்ளார். குழந்தைகளைப் பூவாகவும், சிட்டுக்குருவியாகவும், நிலவாகவும் உருவகப்படுத்தி யுள்ளார்.

பூவின் தலை மேலே
கருங்கல் கட்டடமா?
கண்ணீர் வடிப்பதனால்
நியாயம் கிடைத்திடுமா?

புத்தகப் பைகளை
சுமக்க வேண்டிய
தோள்பட்டை பல்லக்குகள்
மணல் தட்டுக்கும்
சிமெண்ட் மூட்டைக்கும்
சொந்தமாகி போயின!

பென்சில் பேப்பர்களை
தொட்டுத் தழுவ வேண்டிய
பிஞ்சு விரல்கள்
இட்லி கடைகளில்
டபராக்கள் கழுவிச் சிவந்தன!

சுகம் காணும் வயதில்
சுமையேந்தி
கண்ணீர் வடித்து
முகம் கறுத்த
இந்த நிலாக்களின்
சோகங்கள்
எப்போது தீரும்!

வானமேறி
கானம்பாட
இந்த

*சிட்டுக்குருவிகளுக்கு*
*ஆசைதான்*
*என்ன செய்ய*
*இவற்றின் சிறகுகள்*
*குடும்பச் சூழ்நிலை விலங்கால்*
*பூட்டப்பட்டுள்ளதே!*

*பூவின் தலை மேலே*
*கருங்கல் கட்டடம்*
*இறைவனிடம் வேண்டுவோம்*
*நியாயம் கிடைத்திடுமே!*

சிட்டுக்குருவியாகப் பறக்க வேண்டிய குழந்தைகள், வறுமைப் புதை மண்ணில் சிக்கி, குடும்பச் சூழ்நிலைகளால் இட்லிக் கடைகளிலும், கட்டட வேலைகளிலும் ஈடுபடும் கொடுமைகளை விவரித்துள்ளார். இத்தகு கொடுமைகளுக்கு நியாயம் இறைவனிடம் வேண்டுவோம் என்கிறார்.

பள்ளங்கள் என்னும் கவிதையில், சேரி இனத்தவரின் அசையாப் பரம்பரைச் சொத்துக்கள் பள்ளங்கள் என்று குறிப்பிட்டு இத்தகைய பள்ளங்கள் மோட்சம் பெறுவது எப்போது என வினா எழுப்புகிறார். மேலும்,

*வானம் அச்சடிக்கும்*
*மழைச் சில்லறைகளை*
*சேகரிக்க*
*வீதிகள் செய்து கொண்ட*
*உண்டில்கள்*
*தாவும் தவளைகட்கும்*
*பறக்கும் கொசுகட்கும்*
*அடக்கமாய்*
*அடைக்கலம் தரும்*
*"அண்டர் கிரவுண்டு" வீடுகள்* *(ப. 13)*

என்கிறார். கவிஞர் சுற்றுப்புறச் சூழலை விரும்பும் மனம் படைத்தவர் என்பது விதி விலக்கு கவிதையில் புலனாகின்றது.

*தடையும் தண்டனையும்*
*எனக்கு இல்லை*
*நான் புகை குடிப்பது*
*பொது இடத்தில் தான்* *-வாகனம்-(ப. 16)*

சமுதாய வளர்ச்சிக்குக் கவிஞர் நாடுதான் நீ என்னும் கவிதையின் மூலம் வழிகாட்டுகிறார்.

> உழுவதற்கு உழவன் மறந்து விட்டால்
> விழுந்து விடும் நாடு முன்னேற்ற மலையிலிருந்து
> கற்பிக்க ஆசான் மறுத்து விட்டால்
> வேறென்ன ஆகும் நாடு
> வேரறுந்த மரம்தானே நாடு!
> மனிதா!
> வளர்ச்சியும் தளர்ச்சியும் உன்கையில்
> ஏனென்றால்
> நீதான் நாடு
> நாடுதான் நீ!

என்கிறார். சமுதாய அவலநிலையை, அரசியலைக் கவிஞர் 'எதிர்பார்ப்பு' என்னும் கவிதையின் மூலம் நறுக்குத் தெரித்தாற் போன்று கூறியுள்ளார்.

> பாதையில் வீழ்கையில்
> கைகொடுக்கும் சமுதாயம்
> வாழ்க்கையில் கை கொடுக்காது
> பாதையில் கை கொடுப்பதும்
> எதற்காக?
> பயணம் தடைபடுமே
> என்பதற்குதான்
> அரசிடம் கை கேட்டால்
> அது முதலில் பார்ப்பது
> நம் பையைத்தான் (ப. 30)

சடங்குகள் என்னும் சவப்பெட்டிக்குள் அடைந்து கிடப்போர்க்கு உயிர் கொடுப்போம் என்று கூறிச் சாதி - சமயங்கள் ஒழிக்கப்பட வேண்டும் எனப் பொறுத்தது போதும் எனும் கவிதையில் சூளுரைக்கிறார்.

> சாதி சமயங்கள் எனும்
> வட்டங்களைத் தாண்டிடுவோம்!
> மக்களாட்சித் தத்துவத்தை நாளும்
> செல்லரிக்கும் அரசியல்வாதிகட்குப் பாடம் புகட்டிடுவோம்
> அவசியம் வந்தால் அரிசி புழுவாய் அழித்திடுவோம்
> (ப.31)

இளைஞனே ஒரு நிமிடம் என்னும் கவிதையில் இன்றைய இளைஞர் சமுதாயத்திற்கு அறிவுரை வழங்குகிறார்.

புகை குடித்து
உதடுகள் கறுத்து
மனம் வெறுத்து
நகை கலைத்து
இருபது வயதில்
இதயம் வலித்து
வீடுபேறும் அடையும் முன்னே
காடு செல்ல நினைக்கும் இளைஞனே!
தோள் மீதுதான் வளர்த்திட்ட
மகனை மண்ணுக்கு கொடுத்து
உன்னால் பெற வேண்டியதை
உன் தந்தை உனக்கிட்டு
தினம் தினம் சாகாமல்
சாகும் நிலைக்கு
ஏன் தள்ளுகிறாய்
மதுவோ, புகையோ!
குடிப்பதை நிறுத்து!
இல்லையேல் துடிப்பதை
நிறுத்தி விடும்
உன் இதயம்
உன்னை வெறுத்து! (ப. 37)

எனப் புகை நமக்குப் பகை என்று புலப்படுத்துகிறார்.

### தத்துவம் உரைக்கும் கவிதைகள்

தத்துவம் என்பது அதி உன்னதமான சங்கீதம். மனிதா ஒரு நிமிடம் என்னும் தலைப்பில் கவிஞர் எழுதிய கவிதை உறவையும், பிரிவையும் விவரித்துக் காட்டுகின்றது.

மனிதனே
புரிந்து கொள் இனியாவது
உலகில் உறவும் நிரந்தரமில்லை
பிரிவும் நிரந்தரமில்லை —தண்டவாளம்— (ப. 6)

வாழ்க்கையின் உண்மை நிலையினைக் கல்லறை என்னும் கவிதையின் மூலம் விளக்கியுள்ளார்.

வாடகை அல்ல
முன்பணம் இல்லை

*அனைவருக்கும் இலவசம்*
*இந்த "பேச்சிலர் ரூம்"*

பல சொந்தங்களோடும் சொத்துக்களோடும் இருந்தாலும், மரணம் என்று வரும்போது தனியாகத்தான் செல்ல வேண்டும் என்பதைப் "பேச்சிலர் ரூம்" என்று நகைச்சுவையுடன் தெளிவு படுத்தியுள்ளார்.

*கல்லும் பொய், மண்ணும் பொய்*
*கண்ணீரும் கலக்கமுமே*
*இதற்கு அஸ்திவாரம்*
*தீய கனவுகள் இல்லை*
*இனி தீமை செய்வோர் இல்லை*
*நிம்மதி உறக்கமே*
*இதற்குள் நாளும்* *(ப. 10)*

பிரிப்பவன் மனிதன் என்னும் தலைப்பில் கவிஞர், "மனிதன்" பற்றிய கோட்பாடுகளைப் பகர்ந்துரைக்கிறார்.

*உலகத்தை படைத்தான் இறைவன்*
*அதை நாடுகளாகப்பிரித்தான் மனிதன்*
*சுவாசிக்க காற்றைப் படைத்தான் இறைவன்*
*அதை வகை வகையாய்ப் பிரித்தான் மனிதன்*
*பிரிப்பதையே தொழிலாகக்*
*கொண்ட இந்த மனிதன்*
*தன் தொழிலுக்கு*
*ஒத்திகை பார்த்தது*
*இறைவனை பிரித்துதான்*
*படைப்பவன் பிரம்மன்*
*காப்பவன் விஷ்ணு*
*அழிப்பவன் சிவன் – என்றால்*
*பிரிப்பவன் மனிதன்* *(ப. 34)*

இதே மனிதனைப் பற்றி "நூல் பொம்மை" என்னும் தலைப்பில் பின்வருமாறு கூறியுள்ளார்.

*ஆண்டவன் கைகளில்*
*மனிதன் ஒரு*
*நூல் பொம்மை*
*யார் இந்த ஆண்டவன்*
*என்பது தெரியாத*
*ஓர் உண்மை!*

இறைவனைப் பற்றிக் கூறுகையில் கண்டவர் விண்டதில்லை விண்டவர் கண்டதில்லை என்ற கோட்பாட்டின் அடிப்படையில் யார் இந்த ஆண்டவன் என்ற வரி அமைந்துள்ளது.

## தன்னம்பிக்கை ஊட்டும் கவிதைகள்

வெற்றிக்கு வித்தாவது தன்னம்பிக்கை. இது வாழ்வில் வாகை சூடச் சாதனையாளர்கள் கண்டறிந்த உண்மை. கவிஞர் வேதனை எரி அமிலத்தில் துவைக்கப்பட்டபோது தன்னம்பிக்கை என்ற ஒன்றை மட்டுமே நம்பி மேலெழுந்தவர். ஆதலால் தன்னம்பிக்கை ஊட்டும் ஆறு கவிதைகளை இயற்றியுள்ளார். (பக். 9, 23, 337, 30, 36, 38). உயர்ந்தவன் என்னும் கவிதையில்,

இருளை அழிக்க கிழக்கைக் கிழித்து
புறப்படும் கதிரவனாய், உனைச்சுற்றி
தினம் வலம்வரும் தோல்விகளை உடைக்க
பற்றி எரியட்டும் உனக்குள்ளே
"வெற்றி எண்ணம்" அந்தக் கதிரவனாய்!
கொஞ்சம் நம்பிக்கையும்
இருக்கட்டும் உனக்குள்ளே
இவை போதுமே மாறுவாய்
உலகில் நீ உயர்ந்தவனாய். (ப. 9)

மேலும் நம்பிக்கையே நிஜம் என்னும் கவிதையில் முயற்சித்தால் விதி மடியும் என்று கூறி நம்பிக்கையே நிஜம் என்கிறார்.

மனம் சோர்ந்து போகாதே
உனக்குள்ளும் வெற்றி உண்டு!
வரும் தோல்விகளை வேரறுப்பாய்
நம்பிக்கையே நிஜம் என்று! (ப. 23)

'சிகரங்கள் தலைசாய்க்கலாம்' என்னும் கவிதையில்,

நம்பிக்கையை நண்பனாக்கு
தோல்வி உன்னை
நாடாதே! . . .
சோர்ந்து போகாதே
நாளை உன்னை
எறும்பு கூட்டமும் ஏய்க்கலாம்
எழுந்து நில் வீரமாய்
உன்னைப் பார்க்க

சிகரங்கள்
தலை சாய்க்கலாம்!

நம்பிக்கையை நண்பனாக்கினால், சிகரமும் தலை சாய்க்கும் என்கிறார். 'மாற்றம்' என்னும் கவிதையில் அநியாயத்தை மாற்றிட, புரட்சிப்பாதை அமைத்திட வேண்டும் என வலியுறுத்துகிறார்.

இயங்கும் உன் கை கால்கள்
எதிர்நீச்சல் போடட்டும்!
ஒளிரும் உன் விழிகள்
ஒரு சரித்திரம் படைக்கட்டும்!

எழுதும் என்பேனா
உன் பக்கம் குரல் கொடுக்கும்
விடியும் பொழுதெல்லாம்
உன் சிக்கல் தீர்த்து வைக்கும்!

என்னும் கவிதை வரிகளில் ஆசிரியர் எழுத்தின் ஏற்றத்திலும் எழுச்சியிலும் கொண்டிருக்கிற ஆழ்ந்த ஈடுபாடும், நம்பிக்கையும் பளிச்சிடுகின்றன. கவிஞர் அருள் என்னும் கவிதையில் தன்னம்பிக்கையை மேலும் ஊட்டுகிறார்.

வானத்தை பார்த்து
நீ நடந்தால்
முட்கள் ஓடுமா
உன் பாதை விட்டு
வெற்றியை மட்டுமே
நீ தேடினால்
தோல்விகள் ஓடுமா
உன் எண்ணம் கண்டு

சாதனைகள் நீ செய்தால்
உலகம் உன் கீழ்படியும்
உலகம் உன்கீழ் படிந்தால்
அதைவிட சாதனை
வேறென்னவாகும்!

இந்தக் கவிதை, நூலாசிரியரின் வைரவரிகள் என்று வாயாரப் பாராட்டலாம்.

## கவிதைகள் – சில முடிவுகள்

பா. ஜெயக்குமாரின் அன்பு நதி - கவிதைகள் மோனை நயத்தால் கவி ஓசையையும், உருவகத் தன்மை, கற்பனை நயங்களால் கவிச் செறிவையும் பெற்றுக் கவிச்சுவை நல்குவனவாக உள்ளன. சமுதாயச் சிக்கல்கள் கவிக்கருவாகக் காணப்படுகின்றன. சமுதாயச் சிக்கல்களுக்குத் தீர்வு கூறும் முறையிலும், தீர்வு காணத் தூண்டும் நோக்கிலும் கவிதைகள் அமைந்துள்ளன. கவிதைகளில் எள்ளல், துள்ளல் சுவைகள் மிகுந்துள்ளன. மழை, வானம், காதல், வறுமை, வாகனம், விடுதி, தண்டவாளம், கல்லறை, பாறை போன்ற பலவும் பாடுபொருளாகி யுள்ளன. இளைஞர் சமுதாயம், குழந்தைத் தொழிலாளர், அரசியல்வாதி, சேரி குடில்கள், உழவன், மு.வ., கண்ணதாசன், திருவள்ளுவர், பார்வையற்றோர் ஆகிய பலரும் கவிதைப் பாத்திரங்களாகியுள்ளனர். இவை கவிஞரின் பரந்து விரிந்த மனப்பான்மையை வெளிக்காட்டுவனவாக உள்ளன. மானுட சமுதாயத்திற்கு நூலாசிரியர் விடுக்கும் வேண்டுகோள்கள் அனைவரும் நெஞ்சில் பதிய வைத்துச் செயல்படுத்தப்பட வேண்டியவையாகும். முதற் கவிதை முதல் நிறைவுக் கவிதை 'பாழும் பட்டணம்' வரையிலான 49 கவிதைகளும் கருத்துச் செறிவும், கற்பனை வளமும் பொலிந்து அற்புதமாகத் திகழ்கின்றன.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
# சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி. 1300 | 100.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | 180.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்,கலை,பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| தமிழக எல்லைப் போராட்டங்கள் | 60.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - I | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - II | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - III | 80.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| மொழி, சமய, சமுதாயத் தளங்களில் பாவாணர் பங்களிப்பு | 50.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கவிதையியல் | 50.00 |
| பண்பாட்டு நோக்கில் திருமுறைகள் | 30.00 |
| கதைப் பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீ.யும் மேலை அறிஞரும் | 60.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| வா.கீ.ச. கலாநிதி கி.வா.ஜகந்நாதன் | 60.00 |
| நாசுதிராதிக்-ஞாலமுதன்மொழிஆய்வுகளுக்குப்பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| தமிழில் தத்துவ நூல்கள் | 40.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் - முதல் பகுதி | 70.00 |
| இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | 40.00 |
| பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | 30.00 |
| மகளிர் முன்னேற்றத்தில் "அவள் விகடன்" இதழின் பங்களிப்பு | 35.00 |
| திருக்குறள் உரைச் சிந்தனைகள் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 95.00 |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் | 120.00 |
| மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் | 35.00 |
| A Course in Modern Standard Tamil | 65.00 |
| இசை மருத்துவம் | 45.00 |
| கம்பன் களஞ்சியம் | 550.00 |
| குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் | 70.00 |
| மொழியியல் நோக்கில் தொல்காப்பிய, சங்க இலக்கிய ஆய்வுகள் | 40.00 |

---

**597 இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் தொகுதி-2** **100.00**